# முன்னுரை

மீர் அமன் எழுதியதும், நன்கறியப்பட்டதுமான செவ்விய இலக்கியமாகிய பா—கோ—பகார் என்ற ஆக்கத்தை புனைகதை என்ற முறையில் அணுகுவதே சாலச் சிறந்தது என்ற போதிலும், அதில் உருதுப் புனை கதை இலக்கியத்தின் தொடக்க காலக் கருவித்துகள் உள்ளடங்கியிருக்கின்றன என்றே தோன்றுகின்றது. அதில் தெளிவாக வரையறுக்கப்பட்ட, காரண காரியத் தொடர்புடைய அடிப்படைக் கதைக் கருத்தோ, கதை சொல்லிச் செல்லும் வலுவான கட்டமைப்பினுள் இயங்குகின்ற பாத்திரங்களோ இல்லை. அது திட்டவட்டமான கால வரம்போ, அளவு வரம்போ இல்லாத நாவல் வகையைச் சேர்ந்தது. கூறியது கூறுகின்ற சில இடங்களிலும், வலியுறுத்திக் கூறப்படும் கலைப் பண்பு அம்சங்களிலும் இப்புதினத்தின் அடிநிலைக் கூறுகளைக் காணலாம். இவை இப்புதினத்தில் தோன்றுகின்ற பாத்திரங்களோடு பின்னிப் பிணைந்த உளவியல் தன்மைகளைப் பிரதிபலிக்கின்றன.

நன்கறியப்பட்ட பாத்திரங்களைக் கொண்டும், தற்செயல் நிகழ்வு கட்டுக்கோப்பான முறையில் தொடர் வரிசையாகச் சொல்லிச் செல்கின்ற விதிமுறைகளுக்கிணங்கவும் உருது மொழியில் எழுதப்பெற்ற முதல் புதின வகையை மௌல்வி நசீர் அஹமதும், அப்துல் ஹலீம் ஷரரும் தோற்றுவித்தனர். முன்னவர், கிட்டத்தட்ட நேரடியான அறிவுரைகளின் வழியே ஒழுக்கப் பண்புகளை உள்ளத்தில் ஊன்றுவிப்பதையே தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தார். பின்னவரோ, கலைவடிவின் வழியே கடந்த கால வரலாற்று உணர்வை உயிர்ப்பிக்கும் பணியில் பொதுவாகத் தன்னை ஈடுபடுத்த முயன்றவர். அவரது ஃபிர்தௌஸ்-இ-ஃபரீன் என்ற புதினத்தை மிகச் சிறந்த கலைப் படைப்பு என்று கொள்ளலாம். அதில் வரலாறும் கற்பனையும் கலந்து கிடக்கின்றன. முன்னோடிகளாயிருந்த இவ்விருவரும் வரையறைக்குட்பட்ட ஓர் எல்லைக்குள் இயங்கி வந்தனரெனினும், உருது நாவல் வடிவின் மேம்பாட்டு வளர்ச்சியில் பெரிய அளவிற்குத் தமது பங்கைச் செலுத்தி உள்ளனர்.

இருப்பினும் முன்ஷி பிரேம்சந்த்தான் கோதான், மாதன்-இ-அமல் என்ற புதினங்களை எழுதி, புனை கதையை ஒரு கலை வடிவம் என்று நிலை நிறுத்தினார். அவர் கதை வடிவத்தைக் கருவியாகக் கொண்டு சமூகத்தின் கண்கூடான நிதர்சன நிலையை வெளிப்படுத்தினார். முன்ஷி பிரேம் சந்த், மௌல்வி நசீர் அஹமதைப் போன்று ஒழுக்கப் பண்புகளை மேலேற்றிக் காட்டுவதில் தன்னை ஈடுபடுத்தவில்லையெனினும், அவர் கதையையும், ஒழுக்கப் பண்பையும், சமூக பொருளியல் உணர்வுகளையும் தகுந்த முறையில் ஒன்றுபட்டு இணையச் செய்தார். முற்போக்கு எழுத்தாளர் இயக்கம் தொடங்கியதும், (பிரேம் சந்த் அதைத் தோற்றுவித்து, ஆதரித்தவர்களில் ஒருவர்) இலக்கியப் படைப்பாளி என்பவன் மாறிக் கொண்டே வரும் சமூக, பொருளியல் உணர்வை உற்றுநோக்க வேண்டியதும், கலைப் படைப்பை அதற்கு அடங்கிச் செல்லுமாறு செய்வதும் தவிர்க்க முடியாத கடமையெனக் கொள்ள நேர்ந்தது. அதை இலக்கிய வடிவமாக வெளியிடாவிடில், அந்தப் படைப்பு சமூக பொருளியல் பொல்லாங்குகளை வெறுமனே பிரதிபலிப்பதாகவே அமைந்து அரைவேக்காடாகவும், மலட்டுத் தன்மையுடையதாகவும், மனம் ஏற்கத் தகாததுமாகவே தோன்றும். கிஷன் சந்தரையும், பிற எழுத்தாளர்களையும் போன்று முற்போக்குக் கொள்கையை ஆதரித்தவர்களின் புதினங்கள், நிறைவான உருமாறிகளாயும் மிகச் சிறந்த படைப்பின் மாதிரிகள் என்ற நிலையிலிருந்தும் சற்று குன்றியிருப்பதற்குக் காரணம், வெளிப் படையான இலட்சியப் போக்கை வலிந்து வெளிப்படுத்தும் போக்கு இருந்ததே. அஜீஸ் அஹமதின் 'ஐஸி-பலாந்தி-ஐஸி-பன்தி', 'குரைஸ்' என்ற இரு புதினங்களும் சாதாரணமான முற்போக்கு நாவல்களில் உயர் தரமானவை என்று கொள்ளலாம். அவற்றில்முதிர்ச்சி காணப்படுகின்றது. இந்த முதிர்ச்சி பிற வகைப் புதினங்களில் அறவே காணப்படவில்லை.

ஷௌகத் சித்திக்கின் 'குதா-கி-பஸ்தி' என்ற புதினம் சமூக வாழ்க்கையென்னும் இருட்டுக் கிடங்குகளில் வாழும் மாந்தரைப் பற்றித் துருவி ஆராய்கின்றது. எனினும் அதை மிக நேர்த்தியான புதினமெனக் கொள்ள முடியாதவாறு, அது மனவெழுச்சியைத் தூண்டும் பரபரப்பான நாவலாயிருக்கின்றது. பிரிவினைக்குப் பின்னர் நிகழ்ந்தவற்றை மிக இயல்பாக வரைந்து காட்டிய கதீஜா மஸ்தூரின் 'ஆய்கூன்' சின்னஞ்சிறு கலைப்படைப்பாகும். அது அருமையான முறையில் நுட்பமான உணர்ச்சிகளை வெளியிடும் கலைநயமுள்ள புதினமாகும். அதைப் போலவே வியந்து பாராட்டத்தக்கது ஜமீலா ஹாஷிமியின் 'தலாஷ்-இ-பஹாரான்' ஆகும். இது முற்றிலும் கலைநயமிக்கது. கூருணர்வோடு உய்த்துணர்ந்த

சிறப்பியல்புகளோடு கூடிய, சுவையுடைய முழுமையான கலைப் படைப்பாயிருந்தது. ஐம்பதுகளின் இறுதி வாக்கில் குர் அதுல் ஐன் ஹைதரின் 'ஆக்-கா-தரியா' (அக்னி நதி) வெளி வந்தது. அது மனிதனின் கையறு நிலையை ஆழ்ந்து நோக்குவதிலும் வரலாற்றின் செயல்பாடுகளை நன்கு உணர்ந்திருந்ததிலும் தனித் தன்மை கொண்டு விளங்கியது. காலம் பற்றிய கோட்பாட்டை இணைந்துரு வாக்கும் கொள்கையைக் கொண்டிருந்தது. அது உருது வாசகர் களின் உள்ளங்களை முற்றிலும் கவர்ந்துவிட்டது. 1963ஆம் ஆண்டு அப்துல் ஹுசேனின் மாசு மருவற்ற 'உதாஸ் நஸ்லேன்' வெளி வந்தது. இது அக்னிநதியை விட எண்ணங்களை வெளியிடும் நுட்பத்திலும் பரந்துபட்ட உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதிலும் சிறந்து விளங்கிற்று. ஹுசேனின் படைப்பாற்றல் மிக்க உள்ளம் இதில் சிந்தனை செறிந்த உள்ளுயிரென இயங்கி வருகின்றது.

ஜீலானி பானுவின் 'அய்வானே-கஜல்' (கவிதாலயம்) 1963இல் வெளிவந்தது. அதை குர் அதுல்ஐன் ஹைதர் அல்லது அப்துல்லா ஹுசேன் ஆகியோரின் நாவல்களைப் போன்று உயர்வானதாக மதிப்பிட முடியாது. இருப்பினும் அது கிளர்ச்சியூட்டக் கூடிய, திறமை மிகுந்த கலைப்படைப்பாகும். ஒன்றுக்கொன்று நேர் மாறான அய்வானே-கஜல், அலீப்-லைலா ஆகிய புதினங்கள் இரண்டும், அவை கட்டப்பட்டுள்ள முழு அமைப்பில் இரண்டு முனைகளாக அமைந்துள்ளன. அய்வானே-கஜல், கலைப்பெருமை கொண்டு சீர்கெட்டுப்போன ஒரு சமூகத்தை எடுத்துக் காட்டு கின்றது. அச்சமூகம் வாஹித் ஹுசேன், அஹ்மது ஹுசேன் என்ற இரு சகோதர்களால் தூக்கிப் பிடிக்கப்படும் சமூகப் பண்புகளால் தாங்கப்பட்டு நிற்கிறது. அலீப்-லைலா, மிஸ்கீன் அலி ஷாஹ் தோதாசஷ்மி நடத்தி வரும் சுரண்டலையும், அவர் கொண்டிருந்த மூட நம்பிக்கைகளையும் அடிப்படையாகக்கொண்டு குற்றுயிராகிப் போன சமயச் சூழ்நிலையைப் பிரதிபலிக்கின்றது. அய்வானே-கஜல், கவிதை புனைவதிலும் சிற்றின்ப நுகர்ச்சியிலும் நாட்டம் கொண்டு மங்கி மறைந்துவரும் பெருமை, செல்வச் செழிப்பு ஆகியவற்றில் குளிர்காய்கின்ற நெருங்கிய நண்பர்களின் கோட்டை யாகக் காட்டப்படுகின்றது. அலீப்-லைலாவிலோ, எளிதில் நம்பி விடும் பக்தர்களிடமும், சீடர்களிடமிருந்தும் கறக்க மட்டும் கறந்து செல்வச் செழிப்பில் வாழ்வது போன்றதொரு வாழ்க்கையைச் சித்திரிக்கின்றது. போலிப் பண்பாடு, இழிவு தரத்தக்க சமயவுணர்வு ஆகியனவும் சேர்ந்த இவ்விரு மையங்களுக்கிடையே பொதுவாக இருப்பதென்னவெனில், சுரண்டலும், வாழ்க்கையின் நிதர்சன நிலையை நேருக்குநேர் எதிர்கொண்டு அதன் கொடூரமான உண்மைகளைச் சந்திப்பதற்கு விடாப் பிடியாய் மறுப்பதும், மாறி

வரும் உலகப் போக்குகளுக்கு ஏற்பத் தம் போக்கின் கோலங்களை மாற்றிக் கொள்ளாதிருப்பதும் ஆகும்.

வேறுபட்ட இவ்விரு குருதியோட்டங்களின் நடுவே வாஹித் ஹுசேன், அஹ்மது ஹுசேன் ஆகியோரின் மைத்துனரான ஹைதர் அலிகான் புதிய துடிப்பாற்றலாக ஒருபுறமும், ரஷீத் மற்றொரு புறமுமாய் நிற்கின்றனர். ஹைதர் அலி கான் தன்னைக் கம்யூனிஸ்டுக் கட்சிக்காரராகக் காட்டிக் கொள்கின்றார். கீழ் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த ரஷீத் வெகு விரையிலேயே செழிப்பு மிக்க வியாபாரியாகிப் போகிறார். மிஸ்கீன் அலி ஷாஹ்வின் மகனான ஹுமாயூன் தான் பிறந்துவிட்ட அழுகிப்போன சமூகத்தி லிருந்து மேலேற முடியாதவனாக இருக்கிறான். எனவே வறியவ னாகவே வாழ்ந்து, தன் மனைவி பதூல் பேகம் சகோதரன் வாஹித் ஹுசேனிடமிருந்து எதைப் போட்டாலும் அத்தோடு மன நிறைவு கொள்கின்ற நிலைக்குத் தள்ளப்பட்டு விடுகிறான். புதினத்தின் இரு பெரிய கதை மாந்தர்-அவர்களை அச்சாகக் கொண்டுதான் கதைச்சகடம் சுழகின்றது-பஷீர் பேகம், ஹைதர் அலி ஆகியோரின் மகளான சாந்த்; பதூல் பேகம், ஹுமாயூனின் மகளாகிய கஜல் ஆவர். அயாஸிற்கும் ஷஹ்ஜாதுக்கும் பிறகு கஜல் பிறந்ததால் ஆண்களின் மேலாண்மை ஆட்சி புரிந்த அலீப் லைலாவில், அவளது பிறப்பு தீயசகுனமாகக் கருதப்படுகின்றது. பஷீர் பேகமும் அவளுடைய தந்தையும் இறந்த பிறகு ஹைதர் அலிகான் தீவிரவாதிகளுடன் சேர்ந்து சாயா என்ற கிருத்துவப் பெண்ணை மணந்ததும், சாந்த் தன் தாய் மாமனான ரஷீத், சண்டைக்காரரான அவருடைய மனைவி ரஜியா ஆகியோரின் ஆதரவில் வாழ்வதற் கென்று முன்னோரின் இல்லமான கவிதாலயத்துக்கு வந்து விடுகிறாள். அதைப்போலவே கஜலின் தாய் பதூல் பேகம் இறந்த பிறகு கஜலுக்கும் கவிதாலயமே நிலையான வாழ்விடமானது. இவ்விருவரின் வாழ்க்கையும் அடுத்தடுத்து ஒரே போக்கில் செல் கின்றது. சாந்தும் கஜலும் நேருக்குநேர் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள இரு கண்ணாடிகள்; அவர்கள் சமகாலச் சமூக அமைப்பின் உருவரையைப் பிரதிபலிக்கின்றனர் எனலாம்.

சாந்தும் கஜலும் துன்பியல் பாத்திரங்கள். அவர்களிருவரும் தாம் பிறந்துவிட்ட சமூக, பொருளாதாரச் சூழலில் நெருக்கடி களுக்கு ஆட்பட்டுப் பலியானவர்கள். சாந்த் மிகவும் அழகானவள். இசை, மேடை, நாடகம் ஆகிய படைப்புக் கலைகளை வெளிப் படுத்தும் கலையாற்றல் மிக்கவள். அவள் ஹைதராபாதின் கலை யுலகில் அறிமுகமாகி நட்சத்திர உச்சத்தை எட்டியவள். அவளை வக்கிரக் காமுகர்களும், ராஜா சிவராஜ், பான் சாஹிப், பில்கிராமி ஆகியோர் பயன்படுத்திக்கொள்ள ரஷீத் அனுமதிக்கின்றான்.

அவள் சஞ்சீவா என்ற இளஞ்சிற்பி மீது காதல் கொள்கிறாள். அவன் பின்னர் தலைமறைவுக் கொரில்லாக் கூட்டத்தில் சேர்ந்து தீவிரவாதியாகி விடுகிறான். அவளால் அவனது கரடு முரடான வாழ்க்கையுடன் இணைந்து செல்ல முடியவில்லை. அவன் பின்னர் பாத்திமா பேகத்தின் மகளான கைசரை மணந்து கொள் கிறான். கைசர் அவனது பயங்கரவாத இயக்கத்தில் போராடுபவள். அவர்களுக்கு, இயல்பு மீறிய அறிவுக் கூர்மையுடைய கிராந்தி பிறக்கிறாள். கிராந்தி முதலில் சாந்தின் பொறுப்பிலும், பின்னர் கஜலின் கவனிப்பிலும் கவிதாலயத்தில் வளர்கிறாள்.

சாந்த் தன் மேனியெழிலை இழந்து, சஞ்சீவாவினால் கை விடப்பட்டு, பெரும் வீரத்தோடு, ஆனால் பெருமையில்லாத முறையில் சாவைச் சந்திக்கிறாள். கலைத்திறன் மிக்க கஜலும் சாந்தைப்போலவே பல வகைகளிலும் அதே வாழ்க்கை முறையைத் தான் கடைப் பிடிக்கிறாள். அவள் சாந்தைவிட பேரழகு வாய்ந்த வளாகவும், சாந்தினாலேயே வியந்து பாராட்டப்பட்டவளாயும் இருந்தபோதிலும், வெகு கொந்தளிப்பான வாழ்க்கையை நடத்த வேண்டிய கட்டாயம் அவளுக்கு ஏற்பட்டு, இறுதியில் சாந்துக்கு கிடைத்ததைவிடக் கொடிய முடிவே அவளுக்கு வாய்க்கிறது. அவள் பான் சாஹிப், பில்கிராமி, நசீர் போன்ற போக்கிரிகளின் காதல் உறவுகளில் சிக்கிக் கொள்கிறாள். அவர்கள் அனைவராலும் தூக்கியெறியப்படுகிறாள். அவளைச் சமூகத்தின் குப்பை கூளம் போன்ற ஷேகு மியானுடன் பிணிக்க வேண்டுமென்றும் பேசு கின்றனர். கடைசியில் ரஷீத் மகன் ஷாஹீன் தன் பெற்றோரின் கடும் எதிர்ப்பையும் தள்ளிவிட்டு சாந்தை மணக்க முன் வருகின் றான். அவள் விழுந்துவிட்ட இழிவு என்ற பாதாளக் குழியிலிருந்து, வீரனைப்போல் அவளை ஷாஹீன் காப்பாற்றுகிறான் எனலாம்.

இதற்கு முன்னர், ஹைதராபாத்தின் புகழ் மிக்க உருதுக் கவிஞனான சர்வர், தன் காதல் ஏக்கங்களால் தூண்டப்பட்டு ஓரளவும், பரிவிரக்கம் கொண்டு ஓரளவும் அவள் மீது மையல் கொண்டு அவ்ளைத் திருமணம் செய்வதற்கு முன் வந்தான். கஜல் அதிர்ஷ்டத்தின் பல்வேறு தாக்குதல்களால் அலைக்கழிக்கப்பட்ட பின்னர் ஷாஹீனின் மனைவியாகி, அவனது பாதுகாப்பு என்ற புகலில் வாழப் போகின்றாள் என்று தோன்றும் வேளையில், நசீர் தன் மனைவி நபீசுடன் எல்லைக்கப்பாலிருந்து வந்து சேரவே, நிலைமை தலைகீழாக மாறிப் போகிறது. அவள் இத்தனை ஆண்டு களாகத் தன் விரலில் அணிந்திருந்த நசீர் அணிவித்த நிச்சயதார்த்த மோதிரத்தையும், கழற்றும்படி ஆகிறது. அவள் அந்த மோதிரத்தை அணிந்திருந்தது பற்றி ஷாஹீன் எந்த மறுப்பும் கூறியதேயில்லை. அம்மோதிரம் ஏதோ ஒரு வகையான சின்னம் என்பதுபோலவும்,

தான் உயிர் வாழ்வதே அம்மோதிரத்தில்தான் இருப்பது போலவும், அவள் நினைத்திருந்தாள். அதை இப்போது இழந்துவிட்டோம் என்பதை உணர்ந்ததும், அவளது உடல், உள்ளம் முழுமையும் குமுறி கொந்தளித்து, அடிபட்ட மானைப்போல் விழுந்து விட்டாள். அவள் கண்களில சாவின் நோவும், கடுந்துன்பமும் வெளிப்பட்டன. அவள் அதற்கு முன்னர்தான் தன் காதலர்களின் புகைப்படங்களடங்கிய ஆல்பத்தைத் தீயிலிட்டாள். விசித்திரமான முறையில் அவற்றுள் பாதி எரிந்துபோன சர்வரின் படம் எஞ்சியது. அதிலிருந்து அவனது ஒரு கண் அவளை உற்று நோக்குகின்றது. அவன் ஒருவன் மட்டுமே அவள்மீது மெய்யான காதல் கொண் டிருந்தான். அவன் அவளை மணக்க முன்வந்தபோது அதை ஏற்கும் துணிவு அவளுக்கு இல்லாது போயிற்று என்பதை இப்புகைப்படத்தின் ஒற்றைக் கண் உருவகித்துக் காட்டுகின்றது எனலாம். அவள் வண்ணப் பகட்டான காதலில் ஊறித் திளைப் பதற்கு விரும்பவில்லை. அடக்கமும் அமைதியும் வாய்ந்த ஒரு வகையான மறைந்த தனி வாழ்க்கையை ஆரவாரமின்றி நடத்து வதையே நாடினாள். ஆனால் அப்படி நடக்கவில்லை.

கஜல் சாந்தைத் தனக்கு முன் மாதிரியாகக் கொண்டிருந்தாள்; அவளை வழிபடவே செய்தாள்; எல்லா விதத்திலும் அவளை அடியொற்றிச் செல்லவே முயன்றாள் என்பது முதலில் எடுத் துரைக்கப்படுகிறது. சாந்தின் துன்பியலான அழிவைப் போலவே கஜலின் வாழ்க்கையும் அமைந்து விடுகிறது. எனினும் கஜலின் பாத்திர உருவாக்கம், சாந்தைவிடக் கச்சிதமான, தெளிவில்லாத, சற்று சிக்கலான பாத்திரம் எனலாம். ஒன்றன்பின் ஒன்றாக விரிந்துகொண்டே வரும் நிகழ்ச்சிகளை ஊன்றிக் கவனிக்கும் போது, அடுத்தடுத்துப் பெருகிக்கொண்டே வந்த ரஷீதின் பேராசை களை நிறைவேற்றி வைப்பதில் சாந்தும் கஜலும் கருவிகளாக்கப் பட்டுவிட்டனர் என்று எண்ணச் செய்கிறது. கஜலின் மனம்போன போக்கிற்கும், அவள் சரிந்துவிழும் பனிமலை போன்று பாவம், சீரழிவு என்ற அதல பாதாளத்தில் வீழ்ந்ததற்கும் ஹுமாயூனின் இல்லாமையும், கையறு நிலையும் பெரிதும் காரணமாயிருந்தன. அவளிடத்தில் தனித்தன்மை வாய்ந்த மனநிலை, அவளுடன் வாழ் பவர்கள் அவளை எப்போதும் வெறுத்தும் ஏளனமும் செய்ததால் புண்பட்டு நொந்து வாடும் ஒரு வகையான ஆளுமை ஆகியன வளர்ந்து வருவதை குறிப்பாகக் கவனிக்க முடிகின்றது. அவள் மன உறுதியற்ற காதலர்களின் பசப்புகளுக்கு ஆட்பட்டுக் காதலிக்க முன்வந்ததற்கெல்லாம் இணங்கிப் போவதைக் காண்கிறோம்.

சாந்தைப் போலவே கஜலும் கவர்ந்திழுக்கும் கவர்ச்சி மையமாகவே இருந்தாள். தன் அழகின் துடிப்பையும், அதன் கூரிய

சக்தியையும் அவள் நன்கு அறிந்திருந்தாள். அவளுக்கு வெள்ள மென வெகுமதிகள் வந்து குவிந்தன. அவள் கொஞ்சலுக்கும், கெஞ்சலுக்கும் எப்போதும் இணங்கிச் செல்லும் போக்கினளாக இருந்தமையால், அவையே சீர்கேட்டிற்குக் காரணமாயின.

வாஹித் ஹுசேன் சமூக நிதர்சனங்களை உணர்ந்து அவற்றுக் கேற்ப இயைந்து செல்லும் திறமையற்றவராக இருந்ததாலும், முதுமையினால் செயலற்றுப் போன காரணத்தாலும், அலையென ஓடிவந்த சீரழிவைத் தடுத்து நிறுத்தும் வலுவற்றுப் போனார். கவிதாலயத்திலும், அலீப்-லைலாவிலும் கட்டுப்பாடு தளர்ந்து போன நிலை உச்சத்திலிருந்ததால், சாந்தும், கஜலும் கடிவாள மில்லாத சிற்றின்ப உணர்ச்சியோட்டம் என்னும் கீழ்மையில் சிக்கி உழல நேர்ந்தது. அதனால் அவர்கள் கழுகுகளிடம் சிக்கிக் கொண்டு தம்மை அவர்களின் இச்சைகளுக்குப் பயன்படுத்த இசைந்து சென்றனர். ஒழுக்கத்தைக் கெடுப்பதிலும் வீம்பு வீராப்பிலும் வல்லவர்களான பான் சாஹிப், பில்கிராமி போன் றோரோடு, அஹ்மது ஹுசேனின் காமக்கிழத்தி மகனும், போக் கிரியும் கேடு கெட்டவனுமான நசீர், சதை வாணிபத்தில் ஈடுபட்டு இளங்குமரியரைக் கூடுதலான விலை தருபவர் எவரோ, அவருக்கு அளிப்பதில் கை தேர்ந்தவனுமான குர்ஷீத் போன்றவர்களும் இப்புதினத்தின் கதை மாந்தராவர்.

சாந்த், கஜல் ஆகியோரின் குழப்பமிக்க வாழ்க்கைப் போக்கும், அவர்களது வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களும், அவர்களை ஒவ்வோர் அடியிலும் விடாப்பிடியாய்ப் பற்றிக் கொண்டிருந்த சாத்தானுக்கும், உடல் இச்சைக்கும் நடந்த போராட்டத்தைப் படம் பிடித்து காட்டுகினறன என்று கூறலாம். காமன் எத்தனை வடிவங்களில் வந்து லீலைகள் புரிகின்றான் என்பதையும், அத்தகைய லீலைகளால் என்னென்ன இடுக்கண்கள் விளை கின்றன என்பதையும் இப்புதினம் வெளிப்படுத்துவதாகவும் கொள் ளலாம். சாந்தும் கஜலும் ஒன்றாக அடைவதற்காக விதிக்கப் பட்டுள்ள அனுபவங்களாக, அவர்கள் படுகின்ற துன்பங்கள், கசப்புகள் ஏமாற்றமென்னும் வெறியாட்டங்கள் அனைத்தும் இப்போராட்டத்திலிருந்துதான் தோன்றுகின்றன. பெண்ணென் பவள் ஆடவர் ஆதிக்கம் ஓங்கி நிற்கும் சமுதாயத்தின் விளை யாட்டுப் பொம்மை என்று கருதப்படுவதை விட மேலானவள். அவளது துடிப்புகளும், எதிர்ப்புணர்ச்சிகளும் வணிக சமுதா யத்தில் ஆட்சி செய்துவருகின்ற பணப்பிணைப்புகளால் தூய்மை கெடுக்கப்படுகின்றன என்ற உண்மைகளையும் இப்புதினம் கோடிட்டுக் குறிக்கிறது.

சாந்தும், கஜலும் மிக நேர்த்தியான மேனியெழிலும்,

குறையில்லாத வெகு இயல்பான மனப்போக்குகளும் கொண்டு விளங்கிய அழகான வண்ணத்துப்பூச்சிகளைப் போன்றிருந்தனர். தம் கைகளில் அதிகாரம், பணம் என்னும் கயிறுகளை வைத்துக் கொண்டு ஆட்டிப் படைத்தவர்கள், அழகிய அவ்வண்ணத்துப் பூச்சிகளின் இறக்கைகளை வெட்டி நசுக்கிவிட்டனர். சாந்த், கஜல் இருவரின் அழிவிற்கும் தனது சுயநல நாட்டமும், பயன் ஒன்றையே கருதிச் செயல்பட்டு வந்த போக்குமே காரணங்களாகும் என்பதை ரஷீத் உணரவோ வரவிருந்ததை எண்ணிப் பார்க்கவோ இல்லை. மந்த மனமும், மடத் துணிச்சலும், ஈனத் தனமும் உடையவனாக இருந்த ஹுமாயூன் நிலைமை மிகவும் சீர்கெட்டழியும்படி விட்டு விட்டான். அவனால் நிலைமையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. கஜலைச் சூழ்ந்து வளைத்துக்கொண்டு போக்கிரிகள் அவள்மீது பொழிந்த வெகுமதிகளைக் கண்டு ஹுமாயூன் மதி மயங்கிப் போனான் என்று தோன்றுகிறது. அவன் பிறரை உறிஞ்சும் ஒரு வகையான அட்டையாக வாழ்ந்தே பழகிப் போனான்.

வாஹித் ஹுசேனையும் அஹ்மது ஹுசேனையும் போன்ற பாத்திரங்கள் காலத்திற்கொவ்வாத சடங்குகளை வெறுமனே பிடித்துக் கொண்டிருப்பவர்கள். செல்வ வாழ்வின் சீர்கெட்டுப் போன வாரிசுகள். இருப்பினும் இவர்களை மிஸ்கீன் அலி ஷாஹ் வுடன் ஒப்பிடுகையில், இவர்கள் மிகவும் வீரியமானவர்கள். மோசடிக்காரர்கள். ஆனால் நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சிகளை இருந்து காண்பதற்கு வேண்டிய ஆயுள் அவர்களுககு இல்லாமற் போய்விட்டது. முறையே வாஹித் ஹுசேன், அஹ்மது ஹுசேன் ஆகியோரின் மனைவியரான பீஜானும், உஜாலா பேகமும் எந்த மதிப்பும் இல்லாதவர்கள். ஆனால் கைசர் கவிதாலயத்தில் முன்னர் விடாது துன்புறுத்தப்பட்டும், அவள் தலைமறைவான பயங்கர வாதிகளுடன் சேர்ந்து கொண்டு கிராந்தியைப் பெற்றெடுக்கிறாள். அவள் மிகவும் நிதானமான பெண். கூருணர்ச்சியுடையவள். அவளை இளமைக் காலததுக் காதலால் எந்த விதத்திலும் அசைக்க முடியவில்லை. அதனால்தான் வெறுக்கத் தக்க காமுகனான நசீர், அசாதரணமான கவர்ச்சி மிகுந்த கிராந்தியின் அழகில் மயங்கி அவளை நெருங்கியபோது, அவளால் வெறுப்பு மிகக் கொண்டு அவனை எதிர்க்க முடிந்தது.

செயல் துடிப்பும், வன்மையும், சாகசச் செயல்புரியும் மனப் போக்கும் உடைய பாத்திரங்களையும் நாம் இப்புதினத்தில் காண்கையில், ஷேகு மியான், குலாம் ரசூல் போன்றவர்களையும் இங்கு சந்திக்கிறோம். அவர்களிடத்தில் சிறிதளவு கூர்ந்த மதி இருந்தபோதிலும், அடிப்படையில் அவர்கள் வெறும் எந்திர மனிதர்களாகவே இருக்கின்றனர். புறத்தூண்டுதல்களால்

உண்டான உணர்ச்சிகளினால் உருப்படுத்தப்பட்டவர்களாய், ஓரளவு அசாதரணமானவர்களாய் இருக்கின்றனர். இரண்டு பாத்திரங்கள் நமது கவனத்தை அப்படியே ஈர்த்துக் கொள்கின்றன. அவர்கள் ரஷீதின் மனைவி ரஜியாவும், மூத்த மகன் ஷாஹீனும். ரஜியா சிடுசிடுப்புள்ளவளாயும், எளிதில் சினங்கொள்பவளாயும், எதிருணர்ச்சிகளை வெளிப்படுத்துபவளாயும் இருந்தபோதிலும், நிலைமையை மிகவும் கெட்டிக்காரத்தனமாய் சமாளிக்கக் கூடியவள். ஷாஹீன் மனதில் பட்டதைச் சட்டென்று வெளிப் படுத்துபவன், புறநோக்குள்ளவன். எனினும், கஜலின் கேவலமான காதல் ஈடுபாடுகளனைத்தையும் முற்றிலும் அறிந்திருந்தும், அவளை மணந்து கொள்வதென்று உறுதியாகவும், மாற்ற முடியாதபடி முடிவெடுக்கும் திறனும் அவனுக்கு இருந்தது.

பலரறிந்த கவிஞனான சர்வரிடத்தில் போலியில்லாததும், நம்பத் தகுந்ததுமான பண்புகளைத் தவிர, அவன் தன்னைப் பற்றிப் பெருமையாக எடுத்துக்கூற எதுவுமில்லையெனினும், அவனும் நமது கவனத்தைப் பெரிதும் ஈர்க்கின்றான். இவர்களைப்போலவே மறக்க முடியாதவர்களுள் செல்லி ரெட்டியும் ஒருத்தி. இவள் காதல் பற்றிய அவதூறுகளினால் ஏளனத்திற்கு ஆளாகும் துரதிருஷ்டசாலி. அடுத்து ஹமீது மியானின் பெயர் சொல்லப் படாத மணமாகாச் சகோதரி. அவள் வாழ்க்கையில் அடைய வேண்டிய சுகங்கள் அனைத்தையும் பெறும் வாய்ப்புகளை யெல்லாம் இழந்து விட்டு ஒன்றுமில்லாமல் போய்விட்டவள். அடக்குமுறை. அநீதி, பிரிவாற்றாமை ஆகியவற்றுக்குப் பலியான நொண்டி அத்தை—விசித்திரமான முறையில் கூட்டிக்கொண்டு ஓடிக் கள்ளத்தனமாக நடந்த திருமண நாடகத்து மாந்தரில் ஒருத்தி. இந்நாவலில் வரும் நிகழ்ச்சிகளின் ஊடும் பாவுமான நெசவோட்டம். ஹைதராபாத் சமஸ்தானத்தின் அரசியல் கட்டமைப்பில் பிரிட்டிஷ் மேலாண்மையினால் ஏற்பட்ட வழுவுடன் தொடர்புடைய யுக மாற்றங்கள் உண்டானதால் எழுந்த புதிய நிலைமையைப் பற்றியும் குறிப்பிடுகிறது. ஹைதராபாத் இறுதியில் இந்தியக் கூட்டாட்சியில் இணைந்தது. அதன் நிலப் பிரபுத்துவ அமைப்பு முறையின் இடத்தை ஜனநாயக அமைப்பு முறை பெற்றுவிட்டது.

இவ்வாறு, வெகு பழமை வாய்ந்த கடந்த கால மரபுகளையும், சமூக அமைப்பு முறைகளையும் தாங்கிக் கொண்டிருந்த முட்டுகளெல்லாம் தளர்ந்தன. விரைவில் மறையப் போகின்றன. வாஹித் ஹுசேன் பாகிஸ்தானிற்குக் குடியேறச் செல்வதிலிருந்தும். ரஷீதின் வாணிபத் தொடர்புகளும், மேற் கொள்ளப்பட்ட பொறுப்புகளும், திசைமாறுவதிலும் இவையனைத்தும் பிரதிபலிக்கின்றன.

கவிதாலயம் என்ற இந்நாவல் 1976ஆம் ஆண்டு வெளிவந்த போது மிகுந்த ஆர்வத்தோடு வரவேற்கப்பட்டது. இப்புதினம் மெத்தக் கவனத்துடன் கட்டி எழுப்பப்பட்டுள்ளது. இதில் ஆற்றொழுக்குப் போன்ற ஓட்டமும், துள்ளாட்டமும் காணப்படுகிறது. வட்டார வழக்கு மிக அருமையான முறையில் தங்கு தடையின்றி ஓடி வருகின்றது. சந்தம் போன்ற துள்ளலும் முடுக்கமும் இந்நாவலுக்கே உரிய முறையில் அமைந்திருக்கின்றன. நாவலாசிரியர் பல்வேறு பாத்திரங்களுக்கிடையில் நடக்கும் உரையாடல்கள், பாத்திரங்களையும், நிகழ்ச்சிகளையும் பற்றிக் கூறும் கருத்துரைகள் ஆகியவற்றைத் தனிச் சுவையோடும் நறுக்குத் தெரித்தது போன்ற சொற்றொடர் அமைப்போடும் கூறிச் செல்கின்றார். அவர் விஷயங்களை மதிப்பிடுவதில் கண்கூடான நிதர்சனத் தன்மையைக் கைக்கொண்டிருப்பதுடன் எங்கெங்கு வஞ்சப் புகழ்ச்சியைப் பயன்படுத்த வேண்டுமோ அங்கெல்லாம் மனக் குழப்பமில்லாது கையாளுகின்றார். பாத்திரங்களின் மறைவான உள் நோக்கங்களை வெளிப்படுத்தும்போது ஆழ்ந்து நோக்கியும் விருப்பு வெறுப்பில்லாமலும் நறுக்கென்று குத்திக் காட்டுகின்றார். அவ்வாறிருப்பினும் சாந்த். கஜல் இருவருக்கும் ஏற்பட்ட துயர முடிவு சொந்தக் குடும்பத்தில் நேர்ந்துவிட்ட துன்ப நிகழ்ச்சி போலவே இருக்கின்றது. ஆண், பெண், விலங்கு என்ற சாசுவதமான முக்கோணக் கதைச் கருத்தைத் தவிர பொதுவான வேறு கதைக்கருவோ, கருத்துருவோ இப்புதினத்தில் இல்லை. இதில் வரும் பாத்திரங்களும் தம்மைப் பற்றிய சிந்தனையில் ஈடுபடுவன வாகவும் காட்டப்படவில்லை.

எனினும் விரிவான ஒரு திரைச் சீலையில் நிகழ்ச்சிகள் சித்திரிக்கப்படுகின்றன. பல்வேறு வண்ணங்களும், வகைகளுமான பாத்திரங்கள், பல வகையான முரண் கூறுகள், மண் வாசனை, என நாவல் பல சிறப்புக் கூறுகளைக் கொண்டுள்ளது.

ஏ.ஏ. அன்சாரி

# 1

கூட்டம் நிரம்பி வழிந்தது.

சோபாக்களுக்குப் பின்னால் நாற்காலிகளின் வரிசைகள் வெகுதூரம் வரை இருந்தன. என்றாலும் மக்கள் நுழைவாயில் களிலும் பலகணிகளிலும், அரங்கத்தின் அக்கம்பக்கங்களிலும், வெளியே இடைவழிகளிலும் நின்றுகொண்டிருந்தார்கள். இத்தனை கூட்டத்திலும் அஜீம் தென்படவில்லை; எனினும் அவனைப் பற்றிய பாராட்டுரைகளும் புகழுரைகளும் ஒலி பெருக்கி மூலம் மக்களின் செவிகளில் ரீங்காரமிட்டன.

அகில இந்திய இலக்கிய மாநாடுகளின் முக்கிய அங்கமெனக் கருதப்படும் எல்லா முன்னணி எழுத்தாளர்களும், சிந்தனை யாளர்களும் முன்வரிசையில் அமர்ந்திருந்தனர். அவர்கள் அனைவரும் மேதகு தலைவர் அவர்களின் 'உருது மொழியார்வம்' கண்டு மகிழ்ச்சி அடைந்தனர். அவர் தமது அமைச்சகத்தின் மதிப்புமிக்க நேரத்தை ஒதுக்கி உருதுக் கவி விழாவுக்கு வருகை தந்திருக்கிறார்!

பூத்தையல் போடப்பட்ட திண்டு ஒன்றின் மீது சாய்ந்திருந்த தலைவர் அவர்கள் வேட்டியின் ஓரத்தைச் சரி செய்தவாறு தனது உயர்நிலையை நினைத்து மகிழ்ந்தார். மகிழ்ச்சி மிகுதியால் அவரது வாய் திறந்து கொண்டது. உருது மாநாட்டின் நிகழ்ச்சிகளைக் கேட்பதற்குப் பதிலாக அவர் விழுங்குவதுபோல் தெரிந்தது. தனக்கு அணிவிக்கப்பட்ட செந்நிற ரோஜா மாலையைக் கவனமாக வீட்டுக்குக் கொண்டு செல்லுமாறு பலமுறை அவர் தனது செயலரிடம் கூறினார். அவருக்குத் தனது காலணிகள் நினைவுக்கு வந்தன; கம்பள விரிப்புக்கு வெளியே மக்கள் அதை கழற்றி விட்டார்களே...

அமைச்சரானதும் உருதுவைப் பற்றிப் பல தகவல்களை உடனடியாக அவர் சேகரித்துக் கொண்டார்; 'உருது கஜல்' பற்றி நடைபெறும் இந்தக் கூட்டத்தின் தலைமையையும் அவர் ஏற்றுக் கொண்டார். இன்று அவர் ஆற்றிய சொற்பொழிவை அவரது செயலர் உருது மொழியில் எழுதினார்; பிறகு தெலுங்கில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது. தெலுங்கில் அதன் கருத்தை

அறிந்த பின்னர் உருதுவில் மனப்பாடம் செய்து கொண்டார்.

கஜல், எந்தப் பறவையின் பெயர் அல்லது எந்த மங்கையின் திருநாமம் என்பதும் அவருக்குத் தெரியாது. ஆனால் உருதுவின் ஒரு கவிஞனை மட்டும் நன்கு தெரியும்; அவன்தான் பலவந்தமாக இந்தக் கூட்டத்திற்குத் தலைமை தாங்க அவரை அழைத்து வந்திருக்கிறான். புதிதாகக் குடியரசு அமைக்கப்பட்டிருந்தது. அதனால் எல்லா மாநிலங்களின் அமைச்சர்களும் பொது மக்களுடன் தொடர்பு வைத்திருக்க வேண்டும். குறிப்பாக கலாச்சார நிகழ்ச்சிகளில் பங்கு பெற்று பொதுமக்களுடன் நெருக்கம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று பண்டித நேருவின் தனிப்பட்ட ஆணையும் இருந்தது. அதன் காரணமாகவே நண்பரின் கோரிக்கைக்கு அவரும் இசைவு தெரிவித்தார். அவர் அமைச்சராக இல்லாமல் வெறும் யல்லா ரெட்டியாக இருந்த போது ஒரு முறை இதே நண்பன் கிராமத்திலும் இருந்தான். நிஜாமின் அடக்குமுறைக்கு எதிராக மக்களைத் தூண்டிவிட்டான். உழவர்களுக்கு பூமியைப் பிடுங்கிக் கொள்வதற்கான கனவுகளைத் தந்து, பண்ணையார்களுக்கும் வட்டிக் கடைக்காரர்களுக்கும் எதிராக ஏவினான். தனது இனிமையான புன்சிரிப்பால் அவன் கிராமத்தையே கவர்ந்து விட்டான். இன்றும் அந்தப் புன்முறுவல் அவனுடைய உதடுகளில் பசுமையாக இருந்தது. கிராமத்து இளங்காளையர்கள் அவனுடைய பேச்சுக்களைக் கேட்பதற்காகச் சென்ற போதெல்லாம் "நீங்கள் நவாப் அஹ்மத் ஹுசேனை மறந்து விடக் கூடாது; ஒரே நாளில் எல்லாரையும் சிறைக்கூடத்தில் அடைத்து விடுவார்" என்று பெரியவர்கள் இளைஞர்களைப் பயமுறுத்தினார்கள்.

ஆனால் இளைஞர்கள் புயல்காற்று போன்றவர்கள். அஜீமைச் சந்திப்பதற்காக அவர்கள் பல வழிகளைக் கடைப் பிடித்தார்கள்.

அந்த நாட்களில் யல்லா ரெட்டி தனது கிராமத்துப் பள்ளியில் சிறுவர் சிறுமியருக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வந்தார். ஒரு நாள் அஜீம் அவருடைய பள்ளிக்கும் வந்தான். கல்வி போதனைக்கான புதிய முறைகளை விளக்கினான். அங்கிருந்து அவன் கிளம்பும்போது குழந்தைகள் முதல் ஆசிரியர்கள் வரை எல்லாருமே அவனுடன் நட்புப் பாராட்டி னார்கள். சாதாரணமான தோற்றமுடைய, ஒல்லியான அந்த மனிதன், கதைகளில் வரும் புல்லாங்குழல்வாசியைப்போல் அந்த கிராமவாசிகளின் இதயங்களைத் தனது கீதத்துடன் இணைத்து எடுத்துச் சென்றுவிட்டான்!

அந்நாட்களில் கைஸர், சஞ்சீவா ஆகியோரைப் பற்றிப்

பரபரப்பான பேச்சுகள் பரவியிருந்தன; அவர்கள் தெலுங்கானா இயக்கத்தின் கொரில்லா பிரிவான 'வல்லத்'தின் தலைவர்களாக இருந்தார்கள்; பண்ணையார் குடும்பத்தைச் சார்ந்த கைஸர் இயந்திரத் துப்பாக்கி ஏந்தி நிஜாம் படைகளுடன் போரிட்டாள்.

அப்போதுவரை யல்லா ரெட்டிக்குத் தக்காண முஸ்லீம் களின் இரு வகையினரைப் பற்றியே தெரியும். ஒன்று நவாப் அஹ்மத் ஹுசேன்—அவருடைய சீற்றம் கிராமவாசிகளைக் கதிகலங்க வைக்கும்; இரண்டாவதாக செம்மான் சிலாகு—தினமும் காலையில் கிழிசலான பழைய காலணிகளுக்கு மத்தியில் தானும் ஒரு காலணி போலவே உட்காருவான். அல்லாஹ் ஒவ்வொரு முஸ்லிமையும் நவாப் அஹ்மத் ஹுசேனாகவே படைக்கிறான்; ஆனால் அவர்கள் தங்களுடைய இழிவான செயல்களால் சீரழிகிறார்கள். சிலாருவின் குருட்டு மனைவியைப்போல் வீடுவீடாகச் சென்று பிச்சை எடுப்பார்கள் என்பது தான் சிலாருவின் சிந்தாந்தமாகும்.

யல்லா ரெட்டியும் அந்தத் தெளிவில்லாத இளைஞர்களின் தூண்டுதலுக்கு ஆளாகி, சில நாட்களில் தம்மையும் அழித்துக் கொண்டிருப்பார்...

ஆனால் இறைவனின் செயலால் தில்லியிலிருந்து சுவாமி ஆனந்த் ராவ்ஜி, நவாப் அஹ்மத் ஹுசேனின் விருந்தினராக வந்திருந்தார். காங்கிரஸின் மூத்த தலைவராக இருந்தும் இம்முறை பொது மக்களிடம் நன்கொடையும் வசூலிக்கவில்லை; பரிசு களையும் ஏற்றுக் கொள்ளவில்லை. 'ஆங்கிலேயர்கள் தங்கள் பெட்டி படுக்கைகளைச் சுருட்டிக் கொண்டு போகப் போகிறார்கள். அதனால் காங்கிரசும் தனது பலத்தை ஒன்றாகச் சேர்த்து நிஜாமின் பிடியிலிருந்து மக்களை விடுவிக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது; இல்லாவிட்டால் முழு தெலுங்கானாவில் கம்யூனிஸ்டுகளின் ஆதிக்கம் ஏற்பட்டுவிடும்' என்று மட்டும் அவர் சொன்னார்.

அந்நாட்களில் ஒவ்வொரு இரவும், தன்னுடன் பெருந் துயரத்தைக் கிராமத்திற்கு கொண்டு வந்தது. முதலில் 'அல்லாஹு அக்பர்' என்று முழங்கியவாறு 'இத்திஹாதுல் முஸ்லிமீன்' குழுத் தொண்டர்கள் கிளம்புவார்கள். தனது பாதுகாப்புக்காக நவாப் அஹமத் ஹுசேன் நகரத்திலிருந்து அவர்களை அழைத்திருந்தார். பிறகு அவர்களுடன் போரிடுவதற்காக செங்கொடியினர் படை, மலைகளிலிருந்து குதிக்கும். காலையில் வேலையும் கழிவிரக்கமும் கொண்ட கதிரவன் கிராமத்தில் எட்டிப் பார்க்கும்போது, வயல்களில் மனிதச் சடலங்கள் கிடக்கும்; நெற்கதிர்கள் இரத்தத்தில் குளித்ததும் தென்படும்.

அதனால் நவாப் அஹ்மத் ஹுசேனும், சுவாமிஜியும் சேர்ந்து கிராமத்தின் அறிவுள்ள இளைஞர்களை ஒன்று சேர்த்து, குழு ஒன்றை அமைத்தார்கள். பல அபாயகரமான மூளைகளைத் திசை திருப்பியும் விட்டார்கள். காங்கிரஸ் பஞ்சாயத்துக் குழுவின் தலைவராக யல்லாரெட்டி தேர்ந்தெடுக்கப்பட்டார்; அந்த நாளின் நற்குறியை என்னவென்று சொல்வது! யல்லா ரெட்டி ஏணிப் படிகளில் வெகுவேகமாக மேலேறிச் சென்றார். நவாப் அஹ்மத் ஹுசேன் காட்டிய வழியே சென்று, அமைச்சர் அரியணையில் அமர்ந்து விட்டார்.

அவருக்கெதிரில் அதே ஒல்லியான, மாநிறங்கொண்ட மனிதன், தன் முகத்தில் அழியாத புன்முறுவலுடன், எஃகு போன்ற உறுதியுடன் உட்கார்ந்திருந்தான்; அவன் தனது மார்பின் மீது குண்டுகளைத் தாங்கிக் கொண்டான். தூக்குக் கயிறும் அவனைத் துரத்திக் கொண்டே ஓடியது. ஆனால் அவன் மட்டும் தனது இடத்தை விட்டு நகரவே இல்லை; யல்லா ரெட்டி அவனுக்குப் பல செழிப்பான காட்சிகளைக் காட்டினார்; தில்லியில் பெரிய பதவி தருவதாகச் சொன்னார். ஆனால் அவனுக்கு எந்தப் பொருளின் மீது பேராசை இருந்ததோ, இந்தப் பதவிகளை யெல்லாம் சட்டை செய்யவேயில்லை. காலம் அவனுள் எவ்வித மாறுதலையும் ஏற்படுத்தவில்லை.

அவன் இன்றும் கிழிந்த செருப்புடன், இதைப்போன்ற கூட்டங்களில் அலைந்தான். அவனுக்கு ஒரு நிமிடமும் ஓய்வு கிடைக்கவில்லை; ஒவ்வொரு வினாடியையும் அவன் மிகுந்த சிந்தனையுடன் செலவிட்டான். அப்போது மேடைக்கு எதிரில் சோபா ஒன்றில் அமர்ந்தவாறு அவன் யல்லா ரெட்டியைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் அவனது ஆதரவாளர்களின் பெருங்கூட்டம் இருந்தது. எழுத்தாளர்கள்—கவிஞர்கள்—சிந்தனையாளர்கள்—பொதுமக்கள்... அல்லாஹ்தான் காப்பாற்ற வேண்டும். இன்று கவிதாலயத்தில் எத்தனை பேர் கூடியிருக்கிறார்கள்...!

பத்து ஆண்டுகளாக அஜீமின் பயத்தால் ஓடிய தான் இன்று அதே அஜீமின் அழைப்பை ஏற்று உருது மாநாடு ஒன்றின் தலைவராக, உருதுக் கவிதை பற்றிச் சொற்பொழிவாற்ற வர வேண்டியிருக்கும் என்று அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

அதுவும் இந்த விழாவில் செருப்புகளைப் பாதுகாக்க எந்த ஏற்பாடும் செய்யப்படவில்லை; உட்காருவதற்குப் பூத்தையல் போட்ட திண்டு இருக்கைகள் இருந்தன. அவருடைய புத்தம் புதிய வேட்டி அதில் மாட்டிக்கொண்டு கிழிந்துவிட்டது; இவை அனைத்தும் பண்ணையார்களின் போலி ஆடம்பரங்களே!

கவிதாலயத்தின் அந்தப் பெரிய கூடத்தை அவர் நோக்கினார்; பெரிய மாளிகை; அழகான மண்டபம்; மேலே அலங்கார விளக்குகள்... கீழே விலையுயர்ந்த சமுக்காளம் விரிக்கப் பட்டிருந்தது; தங்கச் சட்டங்களில் இந்த மாளிகையின் உரிமை யாளர்களாக இருந்த நிலக்கிழார் கவிஞர்களின் படங்கள்... அவர்களுடைய சந்ததியினர் இந்த மாளிகையை அதன் நூலகத் துடன் உருது மொழிக்காக அர்ப்பணம் செய்து விட்டார்கள்.

ஆனால் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு இந்தக் கவிதாலயத்திற்கு வருகை தந்த அஜீமின் நண்பனான சர்வருக்கு மிகவும் சோர்வாக இருந்தது. சர்வர் அமர்ந்திருந்த திசையிலேயே இளநங்கையரின் பார்வைகளும் பதிந்திருந்தன; ஹைதராபாத்தின் மிகவும் போற்றப்பட்ட கவிஞனாக அவன் திகழ்ந்தான்; கர்வம் நிறைந்த அழகிகளை அவன் வசீகரித்து விட்டான்; எத்தனையோ கண்கள் அவன் பாதையை எதிர்நோக்கின, என்றாலும் அவன் மணமாகாத காளையாகவே இருந்தான்; நாற்பது வயதுள்ள காளை! இன்று கவிதாலயத்திற்கு வந்து அவன் கவலை கொண்டான். தனது கைகளைப் பார்த்து அவற்றை என்ன செய்வது, எங்கு வைப்பது என்று திண்டாடினான்.

அவன் மூளையில் பெரியதொரு கம்பலை உருவாகி இருந்தது; ஏதேனுமொரு நல்ல கவிதை உருவாகும் நிலை இது; இன்றுவரை ஓர் ஈரடியும் புனையாததுபோல் தவித்தான். அவனுடைய இரண்டு கவிதைத் தொகுப்புகளும் பெரும் பாறைகளாக அவனது மூளையின் மேல் இருந்தன. அதன் பளுவால் தலை வெடித்துவிடும்போல் தெரிந்தது.

தலையைத் தூக்கி அவன் மேலே நோக்கினான்—

டாக்டர் யாகூப் ஹுசேன் தனது பருமனான உடலைச் சமாளித்தவாறு கம்பீரமான குரலில் பேசினார். ஒரு கையில் ஒலிவாங்கியைப் பிடித்துக் கொண்டார் அவர்; சற்றே பிடி தளர்ந்தாலும் அது ஓடிவிடும் என்று அஞ்சினார் போலும்...

"தலைவர் அவர்களே!

எனது தனிப்பட்ட அபிப்ராயம் என்னவென்றால், 'கஜல்' நமது இலக்கியத்தின் பிரகாசமான தீபமாகும். கஜலை இலக்கியத்திலிருந்து நீக்கிவிட்டால் கவிதையின் மாளிகை இருளடர்ந்து விடும் என்று தங்கள் அனுமதி யுடன் நான் கூறுவேன் அதாவது... எனது கருத்து யாதெனில்... நான் சொல்ல விரும்புவது என்னவென்றால்... எனது நோக்கு... நான்... நான்... நான்..." சர்வர் தனது கால்களை வேகமாக அசைத்தவாறு எண்ணமிட்டான். பழைமைவாதியாக இருந்தாலும் யாகூப் ஹுசேன் அவ்வளவு கெட்டவர் அல்ல; அவரது பானை போன்ற வயிறு, உதடுகளின்

ஓரங்களிலிருந்து வெளிப்படும் உமிழ் நீர், அவருடைய தனிப்பட்ட அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் சகித்துக் கொள்ள முடியும். ஏனென்றால் கஜலைப் பற்றி அவர் அழகான, மிகச் சரியான கருத்துக் கொண்டிருக்கிறார். கஜல் இல்லாவிட்டால், ஒரு மாளிகை என்ன, உலகமே இருட்டாகி விடும். எதிரே இருக்கும் அழகு தேவதைகளின் கூட்டமே தென்படாது. கவிதை முழுவதுமே பொலிவிழந்து, உயிரிழந்து விடும்...

கைதட்டல்களின் பேரொலியில், விவாத அரங்கு முடிந்து விட்டதென்ற நினைப்பில் சர்வர் திடுக்கிட்டான்; சிகரெட் கேசை எடுத்தவாறு எழுந்து நின்றான்.

ஆனால் டாக்டர் யாகூப் ஹுசேன் நகர்ந்ததும், சிராஜ் ஹாஷ்மி ஒலிவாங்கியைக் கைப்பற்றிக் கொண்டார்.

புதைபட்ட சடலங்களைத் தோண்டி எடுக்கும் ஆர்வம் கொண்டவர் ஹாஷ்மி. குலி குதுப்ஷா முதல் அஜீம் வரை அவர்களுடைய மரபுப்பட்டியல், வம்ச வரலாறுகள், குற்றங் குறைகள், இறப்புத் தேதிகள் எல்லாமே அவருக்கு மனப்பாடம்; எனவே அவர் கஜலின் தையல்களைப் பிரிக்கத் தொடங்கினார்.

"கஜலின் தொடர்பு கஜால் (மான்குட்டி) உடன் இருப்ப தாகப் பழையதொரு புராணம் இருக்கிறது. வேடன் அதனை வேட்டையாடும்போது காயமுற்ற அது ஓடுகிறது. வேடனும் விடாமல் அதைப்பின் தொடருகிறான். இறுதியில் காயங்களால் வலுவிழந்த மான்குட்டி கீழே சாய்ந்து விடுகிறது. அப்போது அதன் கண்களில் வேதனையும் ஏக்கமும் தோன்றுகிறதே, அதையே கஜல் என்கிறார்கள்..."

சிகரெட்டைப் பற்ற வைத்த சர்வரின் கைகள் தடைபட்டு நின்றன. அவனுடைய உதடுகள் வியப்பால் திறந்துவிட்டன. கனவில்லாத செந்நிறக் கண்கள் ஒரே இடத்தில் நின்றுவிட்டன; அவனுள் பெரிய ஆரவாரமே நிகழ்ந்தது. பெரும்போரே நடந்தது; ஆயிரமாயிரம் வேடர்கள் காமமுற்ற ஒரு பெண் மானைச் சுற்றி வளைத்து அம்புகளை எறிந்தார்கள்.

ஓ! இந்த உலகமறிந்த கிழவன்—மரணத்தின்போது கஜலின் முகத்தைப் பார்த்து விட்டான் போலும். கஜலைப் பற்றியும் கஜல் மாளிகை பற்றியும் அவன் நன்றாக அறிவான் போலும்...

கூட்டம் முடிந்துவிட்டது. எல்லாரும் எழுந்து சென்று விட்டார்கள்.

பாலையான கவிதாலயத்தில் தனியாக அமர்ந்தவாறு சர்வர் கஜலின் நினைவுகளில் மூழ்கிவிட்டான்.

# 2

காலை...

ஒவ்வொரு காலையும் எவ்வளவு அழகாக இருக்கிறது. எத்துணை புதுமையாக ஊக்கமளிப்பதாக இருக்கிறது. ஒவ்வொரு நாளும் காலையில் விழிப்புப் பெறும்போது புதியதொரு மகிழ்ச்சி உண்டாகிறது - தபால்காரன் வெளிக்கதவைத் தட்டுவதுபோல்! யாருக்குத் தெரியும், இந்தத் தபாலில் எத்தனை வியப்புக்குரிய செய்திகள் இருக்கின்றனவோ? எத்தனை அரிய நிகழ்ச்சிகள் மறைந்திருக்குமோ?

'காலைப்பொழுது, அஞ்சல் சேவகனைப்போல் இதயத்தின் கதவுகளைத் தட்டுகிறது; வாழ்வில் ஒரு புதியநாளின் வருகை... ஒரு நாவலின் முதல்பக்கம்... ஒரு புதிய கவிதையின் முதல்வரி...'

'இதை நினைத்துப் பார்க்கும்போது எவ்வளவு இன்பமாக இருக்கிறது. எங்களுக்கு முன்னால் இருந்தவர்கள் இந்தக் காலையைத் தொட்டுவிட முடியாது. இதுவரை பிறக்காதவர்கள் இதனைப் பற்றிப் பிற்காலத்தில் எண்ணமிடுவார்கள். இந்தப் புத்துயிர் பெற்ற வினாடிகளின் உரிமையாளர்கள் நாம் மட்டுமே! நேரத்தின்பால் காட்டும் உரிமையால் இதயத்தில் ஒரு நோவு உண்டாகிறது. நான்கு திசைகளிலும் அது நீரூற்றுப்போல் பரவியும் விடுகிறது...'

சப்போட்டா மரத்தினடியில் ஒரு நாற்காலியின் மேல் உட்கார்ந்தவாறு வாஹித் ஹுசேன் சிந்தனையில் மூழ்கியிருந்தார். காலைப்பொழுது பற்றி இருவரிகள் எழுத வேண்டுமென்ற எண்ணத்துடன், காலைத் தொழுகை முடிந்ததும் அமைதியாக இங்கு உட்கார்ந்து விட்டார்.

எதிரே இருந்த குறிப்பேட்டில் அடித்துத் திருத்தி எழுதப் பட்ட ஒரு வரி மட்டுமே இருந்தது. அதன்மேல் மூக்குக் கண்ணாடி வைக்கப்பட்டிருந்தது. மூக்குக்கண்ணாடியின் மேல் நேற்று அவர் பெயருக்கு வந்த நீதிமன்ற சம்மனும் இருந்தது.

'இவ்வையகத்தில் எந்தக கவிஞனும், இத்தகைய நிலையில் கவிதை புனைந்திருக்க முடியாது...'

அவர் தனது சுற்றுப்புறத்தை நோக்கிப் பேசினார்; பிறகு

சிந்தனையில் மூழ்கி விட்டார். 'எனக்கு முன்னால் இருந்த கவிஞர்கள் முழு அமைதியை எப்படிப் பெற்றிருக்க முடியும்? அமைதிதான் மரணம்; அதுவே வாழ்க்கையும்கூட. அமைதியைத் தேடி மனிதன் பூமியைப் பிளந்துவிட்டான்; சமுத்திரங்களை அலசிவிட்டான்; வானங்களைத் துருவி ஆராய்ந்துவிட்டான்; ஆனால் அது எங்குமே கிடைக்கவில்லை.' வாஹித் ஹுசேன் பலமுறை அமைதியான வினாடிகளைப் பகுத்தாராய விரும் பினார். அமைதியான பிரிவுகளை நினைவுபடுத்திக் கொண்டார். அமைதி என்பது எவ்வாறு? பணியாற்றிய முப்பது ஆண்டுகளை இதே அமைதியைத் தேடுவதில் கழித்து விட்டார். ஆனால் இப்போதும் அவர் எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். மரணத்தையா? அல்லது மாறுதலைக் கொண்டுவரும் காலத்தையா? ஏதேனுமொரு நற்செய்தியையா? 'நற்செய்தி' விசித்திரமான பொருள் அல்லவா? இந்தக் காலத்தில் நற்செய்தி என்பது சுயநலமாகும் என்று ரஷீத் மிகச் சரியாகவே சொல் கிறான். வாஹித் ஹுசேன் இந்தக் கூற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. சுயநலவாதியான மைந்தனின் இந்தப் பேச்சு அவருக்கு வியப்பையும் வருத்தத்தையும் அளித்தது. கவிதாலயத்தில் வசிக்கும் அவன், கவிஞர்களின் மரபில் வந்த அவன்— இவ்வளவு எழுச்சி யற்றவனாக இருக்கிறான். எப்பொழுதும் ஆதாயம்—இழப்பு என்ற துலாக்கோலை ஏந்தி நிற்கிறான். ஆனால் வாஹித் ஹுசேன் இந்த அச்சத்தைத் தனது மனதிலிருந்து எடுத்தெறிந்துவிட்டார். இழப்பு என்பது மனிதனின் தலைவிதியாகும். அது அவனுடைய தனி உரிமையே; ஏனெனில் இழப்பைத் தனிப்பட்ட நிலையில் மட்டுமே மனிதனால் சகித்துக் கொள்ளமுடியும்; அதில் யாருமே பங்கு பெறுவதில்லை...

சோர்வடைந்த நிலையில், குறிப்பேட்டை எடுத்துக் கொண்டு உள்ளே போக வேண்டுமென அவர் நினைத்தார். இதற்குள் கவ்ஹர் பேகம் பாதாம் பாயசத்தைத் தயாரித் திருப்பார். ஆனால் இப்போது கவிதையே அவருக்குக் காயகல்பமாகிவிட்டது. ஒவ்வொரு புதிய கவிதையும் அவருக்குப் புத்துணர்ச்சி தந்தது. நான்கு திசைகளிலிருந்தும் சூழ்ந்து கொள்ளும் கவலைகளை விரட்டியடிக்க முடியாத நிலைகளில், அவர் கவிதைகள் புனைய முற்பட்டு விடுவார்; அத்துடன் நேரத்தை அறிந்து கொள்வதற்குச் சப்போட்டா மரத்தின் நிழலையும் பார்த்துக் கொள்வார்.

விஞ்ஞானம் எவ்வளவோ முன்னேறிவிட்டது; நேரம் பார்ப் பதற்காகப் பல வகைக் கடிகாரங்கள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டன; ஆனால் வாஹித் ஹுசேன் இப்போதும் வெயிலும் நிழலும் பார்த்தே நேரத்தை அறிந்து கொள்கிறார். ஓய்வூதியம்

பெற்ற பிறகு பழியுணர்ச்சியுடன் கடிகாரம் பார்ப்பதையே தவிர்த்து விட்டார். இதே கடிகாரம் அவரை முப்பத்தைந்து ஆண்டுகள் வரை நாட்களையும் மணியையும் எண்ண வைத்து விட்டது!

இப்போதெல்லாம் அவர் நிம்மதியாக நன்றாகச் சிந்திந்து நேரத்தைக் கழித்தார். காலத்தின் மிக துல்லியமான அசைவையும் அவரால் உணர முடிந்தது.

இன்று வானம் ஆழ்நீலமாக இருக்கிறது. இரவில் குளிர் அதிகமாக இருக்கும்...

இன்று வெப்பமாக இருக்கிறது. 'உர்தி மஹிஷ்த்' (ஏப்ரலுக்குச் சமமான இரண்டாவது பாரசீக மாதம்) வரப் போகிறது...

அத்தி மரத்தில் புதிய தளிர்மொக்குகள் தெரிகின்றன. இளவேனில் காலம் வரப்போகிறது...

இந்தக் கவிஞர்கள் இந்த இளவேனில் காலத்தை ஏன் இந்தப் பாடுபடுத்துகிறார்கள்?

ஆனால் ரஷீத் வினா எழுப்புவான்—'நல்லது ஐயா! இள வேனில் காலம் வந்துவிட்டது என்பதை ஒப்புக் கொள்கிறேன். சில மலர்கள் பூஞ்சோலைகளில் மலர்ந்துவிட்டன; சில வண்ணப் பறவைகள் தென்படவும் செய்கின்றன. போதும் ஐயா, வேறு என்னவோ?'

இரவும் பகலுமாகப் பணத்தைப் புரட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும் ரஷீதைப் பார்க்கும் போதெல்லாம் வாஹித் ஹுசேனின் இதயத்தில் சிறுகல்லை யாரோ எறிந்து விட்டது போல் இருக்கிறது. இந்தக்கால இளைஞர்கள் எவ்வளவு இயந்திரத்தனமாக இருக்கிறார்கள்! மென்மையான உணர்ச்சிகள் அவர்களைத் தொடுவதில்லை. அவனுடைய தந்தை கோடை காலத்திற்காக என்னென்ன ஆயத்தங்கள் செய்கிறார் என்பது ரஷீதிற்குத் தெரிவதில்லை; கோடைக் காலத்திற்கான துணிகள் தயாரிக்கப்பட்டுவிட்டன; பூஞ்சோலையில் புதிய பூச்செடிகள் நடப்படுகின்றன; ஹோலி எரிவதற்கு முன்பாகவே மண் தொட்டிகள் வாங்கப்பட்டு விட்டன; திராட்சைக் கொடிகள் வெட்டப்படுகின்றன. இப்போது நிலவரிக் கணக்குகள் பார்க்க கிராமத்திற்குப் போக வேண்டும்...

வாஹித் ஹுசேன் ஒவ்வொரு பருவ காலத்தையும் ஒரு பண்டிகையைப்போல் வரவேற்றார். மற்ற வீட்டுக்காரர்களைப் பாருங்கள். எழும்போதும், உட்காரும்போதும் குளிர்காலத்தின் துன்பங்களால் அவதிப்படுவர். கோடைக்காலத்தின் வெப்பத்தைக் குறை கூறுவர். கோடை தன்னுடன் மாம்பழமும் கொண்டு வருகிறதே என்று சிறிதும் எண்ணிப் பார்ப்பதில்லை!

வாஹித் ஹுசேனின் கவிதை நயம் நிறைந்த பேச்சுகளைக்

கேட்டு ஒரு முறை சரோஜினி நாயுடு கூறினார்.

"வாஹித் நவாப்! உங்களுடைய மென்மையான எண்ணங் களை நீங்கள் கவிதைகளில் வெளிப்படுத்தினால் எத்துணை சிறப்பாக இருக்கும்."

இதைக்கேட்டுக் கூடியிருந்தவர்கள் சிரித்துவிட்டார்கள். ஏனெனில் வாஹித் ஹுசேன் தன்னைக் கவிஞனாக அல்லாமல் வேறு கோணத்தில் என்றுமே பார்த்துக் கொண்டதில்லை.

வாஹித் ஹுசேனின் அழகான எண்ணங்கள் அவரது கவிதைகளாக உருவெடுக்கவில்லை என்பதும் உண்மையாகும். ஏனெனில் அவர் பிரபல கவிஞர் தாக் அவர்களைப் பின் பற்றினார். காதலியைத் தலைமுதல் கால்வரை வர்ணனை செய்வது, சாதாரணமான அக உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கச் செய்வது, இதுதான் அவரது கவிதைகளாகும். அவர் எல்லாத் தத்துவங்களையும், தனது சிந்தனை ஓட்டத்தையும் தனிப்படுத்தி விடுவார். ஏழு தலைமுறைகளாகக் காதலே கவிதையின் மையமாக இருந்து வருகிறது.

கவிதாலயத்தின் கதவுகளும், மாடிமுகப்புமே இதற்குச் சாட்சி; காதலியின் புகழுரைகளைத் தவிர வேறு எதுவுமே கேட்கவில்லை.

அப்போது வாஹித் ஹுசேனைச் சுற்றிலும் நான்கு திசைகளிலும் காலையின் அமைதி நிறைந்த நிசப்தம் நிலவி யிருந்தது. ஆஜரா (மார்ச்) மாதம் முடிவடையப் போகிறது. அதனால் புலர்காலையில் சற்றே குளிர்ச்சி இருந்தது. உடலில் குளிர் அலைபாய்ந்தது. இன்னும் பகல் உதயமாகவில்லை; ஆனால் மரங்களின் உச்சிகளில் பறவைகள் விழித்துக் கொண்டன. உலகப் பிரச்சினைகள் குறித்துக் காரசாரமான விவாதமும் நடந்து கொண்டிருந்தது.

சாலையில் செல்லும் ஓரிருவரின் நிழல்களின் வண்ணமேற ஆரம்பித்துவிட்டது. தோட்டக்காரன் குழாயமைத்துப் புல் வெளியில் நீர் பாய்ச்சுகிறான். அதனால் புற்களின் பச்சையான நறுமணத்துடன் புதிதாக மலர்ந்த பல வண்ணப் பூக்களின் கசப்பான மணமும் கலந்து விட்டது. குழாய் மூடப்பட்டிருந்தும் அதிலிருந்து வரும் நீர்த்திவலைகளின் ஓசை தொடர்ந்துகேட்டது - ஒருவன் ஒரே வேகத்தில் நடப்பதுபோல்!

வாஹித் ஹுசேனின் தலைமேல் சப்போட்டா மரத்தில் குருவிகள் மனம் திறந்து பேரொலி கிளப்பின. இன்று வாஹித் ஹுசேன் மனக்கவலையில் இருக்கிறாரே என்று அவை அக்கறை காட்டவில்லை.

'இந்தக் குருவிகளுக்கும் பல பிரச்சினைகள் இருக்கின்றன. அவற்றுக்கும் அகமெய்ம்மை நெறி இருக்கிறது. கொள்கைகள்

உள்ளன; அவற்றுக்கு விளக்கம் தர அவை பெருங்குரல் எழுப்ப வேண்டியிருக்கிறது. அதற்காக ஒன்றையொன்று அடிக்கவும் கொலை செய்யவும் தயாராகிவிடுகின்றன... ஒரே கருத்துக் கொண்ட குருவிகள் தனித்தனிக் கூட்டமாக ஒதுங்குகின்றன... மனிதன் நிறையப் படித்து, நிறைய சிந்தனை செய்து பிரச்சி னைகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறான்... மனிதன் கல்வி கற்பதற்காக சீனா வரை போகமுடியும். ஆனால் அங்கிருந்து திரும்பிவரும்போது என்ன கொண்டு வருகிறான்? ஒரு பிரச்சி னையின் தீர்வு சாத்தியமாகிறதா?'—மூக்குக் கண்ணாடியை ஒருவரிக் கவிதையின்மீது வைத்தவாறு அவர் எண்ணமிட்டார். செய்திப் பத்திரிகைக்காகவும் காத்திருந்தார். காலையில் ஒரு புதிய முக்கியமான செய்திக்காக எவ்வளவு எதிர்நோக்குதல் இருக்கிறது. பிறகு ஏமாற்றத்துடன் செய்தித்தாளை மடித்து வைத்துவிடுவார். மூக்குக் கண்ணாடியை அகற்றி, 'இன்று பத்திரிகையில் ஒன்றுமே இல்லை' என்று முணுமுணுப்பார். ஆனால் பல நாட்களில் பத்திரிகையில் நிறைய விஷயங்கள் இருக்கும். நாஜிக்களின் சதித்திட்டங்கள், ஐரோப்பாவில் கொழுந்து விட்டெரியும் தீ, காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கத்தின் மதிப்பீடு—அன்று வாஹித் ஹுசேனின் இரத்த அழுத்தம் அதிகமாகிவிடும். அவருடைய நாடியின் தொடர்பு செய்தித்தாளுடன் இருக்கிறது போலும்! என்றாலும் அவர் தனது நண்பர்களிடமும், மகன் ரஷீதிடமும் கூறுவார்; "மற்றவர்களுடைய விஷயங்களில் நமக்கு என்ன அக்கறை? நமது நாட்டில் அமைதியும் சுபிட்சமும் இருந்தால் போதும்."

ஆனால் வாஹித் ஹுசேனின் இருப்பிடமான கவிதா லயத்தைத் தவிர உலகில் வேறு எங்குமே அமைதி இருக்கவில்லை.

ஷி... ஷி... ஷு... ஷு... சுகூ...

வண்ண இறக்கைகள் கொண்ட சிட்டுக்குருவி ஒன்று தனது சீழ்க்கை ஒலியுடன் வாஹித் ஹுசேனிடம் பேச வந்துவிட்டது. இந்தக் குருவி தினமும் அவரிடம் வந்து, ஆங்கில மாது தனது மொழியில் பேசுவது போல் பேசும். காலைச் சிற்றுண்டி முடிந்ததும் குருவிக்காக சிறுசிறு ரொட்டித் துண்டுகளை வெளிமுற்றத்தில் அவர் தூவிவிடுவார். அதற்குக் கைமாறாக அது அவருடைய புதிய கவிதையைக் கேட்கத் தயாராவிடும். அவருடைய பிரச்சினைகளையும் கவலைகளையும் குறித்து கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளும். வாஹித் ஹுசேனின் எதிரிகள்மீது அவருடன் சேர்ந்து பழிப்புரைகளும் நவிலும்.

சிட்டுக்குருவியுடன் வண்ணத்துப் பூச்சிகளின் வண்ணம் நிறைந்த கூட்டமும் உலவி வரக்கிளம்பி விடும். இளஞ்செடிகள்

மீது அவை இறக்கைகளை விரித்துப் பரவி விடும்.

செந்நிற மலர்க்கொடி அவரது நாற்காலியின் ஓரமாகச் சென்று நுழைவாயிலை அடைந்துவிட்டது. அங்கு கவிதா லயத்தின் வாயிற்கதவு - இதய வடிவில் அமைக்கப்பட்டது - திறந்து இருந்தது. வாயிலுக்கு இரு பக்கங்களிலும் 'சைனா' மலர்ச்செடிகள் இருந்தன. அதற்குப் பின்னால் குரோட்டன்ஸ் மண் தொட்டிகளின் வரிசைகள் தொடங்கின. வாயிலின் இடப் புறத்தில் வெள்ளை, சிகப்பு 'போகன்வில்லா' கொடி கவிதா லயத்தின் துருப்பிடித்த மங்கலான பலகையை முழுவதுமாக மறைத்துவிட்டது. இப்போது அதனுடைய அவசியமும் இருக்க வில்லை; ஹைதராபாத்தின் ஒவ்வொரு குடிமகனும் அந்த வாயிலை, அதனுள் வசிப்பவர்களை நன்றாக அறிவான். நுழை வாயிலிலிருந்து உட்புறம்வரை பாதையின் இருபுறங்களிலும் பச்சைப் புற்களின் நடுவே மலர்ச்செடிகள் வெட்டி முடிக்கப் பட்டிருந்தன. நீல, வெள்ளைநிற மலர்கள் கூடை கூடையாக வைக்கப்பட்டிருப்பதுபோல் காட்சியளித்தன. படிக்கட்டுகளின் மேல் இந்த மலர்கள் தொடர்ச்சியாக இருந்தன. அவற்றை அடுத்து கவிதாலயத்தின் மிகப்பெரிய கலைக்கூடம் தென்பட்டது. எதிரில் மிகப்பெரிய, உயரமான தூண்களின் இடையே அகலமான, நீண்ட தாழ்வாரமும் இருந்தது. அதன் இரு புறங்களிலும் உள்ளே செல்வதற்கான வழிகள் இருந்தன. இடையில் கலைக்கூடத்தின் கதவு தெரிந்தது. இந்தக் கூடம் அந்தக் கட்டிடத்தின் மிகப்பெரிய அறையாகும். கட்டிடத்தின் ஒவ்வொரு வழியும் இதே கூடத்தை வந்தடைந்தது. கூடத்திற்குள் செந்நிறச் சமுக்காளம் விரிக்கப் பட்டிருந்தது. பழைய வாதுமை வகை மரத்தால் செய்யப்பட்ட மிகவும் விலையுயர்ந்த சோபாக்கள் இருந்தன. நடுவில் உயரமான பீடம் ஒன்று இருந்தது. அதன் மேல் பொன்நிறக் கம்பளமும், சாய்வு மெத்தைகளும் இருந்தன. ஹைதராபாத்துக்கு வந்த முக்கியமான கவிஞர்கள் அனைவருமே இங்கு அமர்ந்து தங்கள் கவிதைகளைப் படித்திருக்கிறார்கள். இதே கூடத்தில் வாஹித் ஹுசேனின் மூதாதையரும் கவிதைகள் புனைந்திருக்கிறார்கள்; கவியரங்கங்களை நிகழ்த்தியிருக்கிறார்கள். இப்போது அவர்கள் படங்களாக தங்கநிறச் சட்டங்களில் இதே மண்டபத்தில் இருக் கிறார்கள். சிலர் அரும்பு மீசைகளுடன்- வேறு சிலர் தாடிகளுடன்- தலைப்பாகைகள் அணிந்து... இடைகளில் வாள்களுடன் காட்சி தருகிறார்கள். ஆனால் யாருக்குமே வாள்வீச்சுக்கலை தெரியாது. அவர்கள் எல்லாருமே பேனா வீரர்களே. அதனால் காலத்தின் கட்டாயம் வந்தபோது தோல்விமுகம் கண்டார்கள். கவிதாலயத்தின் நூலகத்தில் விலையுயர்ந்த அரிய நூல்கள்

இருக்கின்றன. இதே நூல்களின் பலனால் கவிதாலயத்தின் மதிப்புக்கும் பகட்டுக்கும் வீழ்ச்சி ஏற்பட்டது. 'ஜாகீர்'கள் குறையத் தொடங்கின. சதிகளும், துரோகங்களும் தலை தூக்கின. வாஹித் ஹுசேன் தனது மாளிகையை விட்டு வெளியே வந்தார். வட்டாட்சியர் போன்ற மிகச் சாதாரணமான பதவியில் அமர்ந்தார். அவருடைய மகனான ரஷீத் பொறியியல் படிப்புக்காக இங்கிலாந்துக்குச் சென்றான். இந்த மாளிகையின் தலைவிதி, இத்தகைய கெட்ட காலத்தையும் பார்க்க வேண்டும் என்று இருந்திருக்கிறதே...!

அதிகப் படிப்பாலும் இதே கதி ஏற்படுகிறது. சில நேரங் களில் வாஹித் ஹுசேன் இவ்வாறு எண்ணமிடுவார். 'அதிகமான சிக்கல்கள், அதிகமான பிரச்சினைகள், ஐயங்கள், என்ன... கல்வியின் பயனால் மனிதன் திட்டவட்டமான முடிவுக்கு வரமுடிகிறதா?'

இப்போது சாலையில் போக்குவரத்துத் தொடங்கிவிட்டது.

சில நேரங்களில் குதிரை வண்டி ஒன்று 'டக்டக்'கென்று ஒலியெழுப்பியவாறு கடந்துசெல்லும். பால்காரன் தனது தலையில் புல்கட்டு சுமந்தவாறு எருமையை ஓட்டிச் சென்றான். தூலே நவாபின் வாயிற்படியில் வேலைக்காரி ஏதோ கூச்சலிட்டாள். சீதாராமின் வீட்டுக்கு முன்னால் அவருடைய மூத்த மகள் சாணநீரைத் தெளித்துக் கோலம் போட ஆரம்பித்து விட்டாள்.

சீதாராம் பிராமணர் என்றாலும் ஈத் பெருநாளில் தவறாமல் வாஹித் ஹுசேனின் வீட்டிற்கு வருகை தந்து பாயசம் சாப்பிடுவார். அவர் வீட்டில் நடக்கும் எல்லா பூசைகளுக்கும், மற்ற விழாக்களுக்கும் வாஹித் ஹுசேனும் அவருடைய மனைவி மக்களும் செல்வார்கள். அவர் ஒரு வழக்கறிஞர். வாஹித் ஹுசேனின் எல்லா உண்மையான, பொய்யான வழக்குகளையும் அவரே நடத்துவார். அவருக்காகப் பொய் சாட்சிகளையும் தேடி அழைத்து வருவார். அவருடைய மகனான மலீஷம், ரஷீதுடன் பி.ஏ. படித்து தேர்வு பெற்றான். ஆனால் ரஷீத் பொறியியல் படிப்புக்குச் சென்றுவிட்டான். இவன் கட்டிட நிர்மாண வேலையில் ஈடுபட்டான். இந்த வேலை சிறப்பாக நடைபெற வாஹித் ஹுசேனையும், ரஷீதையும் அவன் பெருமளவில் நம்பியிருந்தான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தூலே நவாப் தமது இல்லத்தை விட்டு வெளியே வந்தார். பழைய மணிப்பின்னல் ஷேர்வானியும் தலைப்பாகையும் அணிந்த உயரமான, ஒல்லியான உடல். பின் புறத்தில் வெள்ளை முடியில் குஞ்சம் தொங்கியது. அவர் தனது பேரனை மார்புடன் அணைத்தவாறு சாலையில் உலவினார்.

தூலே நவாபின் இல்லத்தில் டஜன் கணக்கில் பணியாட்களும் ஆயாக்களும் இருந்தார்கள். என்றாலும் தினமும் காலையில் ஓராண்டு நிறைந்த பேரனை எடுத்துக்கொண்டு தாமே உலாவுவார். அது அவருக்கு உலகத்தின் மிக விலையுயர்ந்த பொருள்தான். தூலே நவாப்பைப் பார்த்து, வாஹித் ஹுசேனுக்கும் தனது மூன்று வயதுப் பேரனான ஷாஹீனை எடுத்துக்கொண்டு அவருடன் உலவ வேண்டுமென்ற பேராசை வரும். ஆனால் அவர் மகன், தனது மகனை ஆங்கில நியதிப்படி வளர்க்கிறான். பருமனான கிருத்துவ ஆயா குழந்தையை ஏழு மணிக்கு முன்னால் படுக்கையை விட்டுவர அனுமதிக்க மாட்டாள். குழந்தையின் உதடுகளில் முத்தமிடாதீர்கள்; தரையில் வெறும் பாதங்களுடன் இறக்கி விடாதீர்கள்; அவனுக்குப் புளிப்பான, இனிப்பான பழங்களைக் கொடுக்காதீர்கள் என்றெல்லாம் கட்டுப்பாடுகள் விதிப்பாள். அதனால் கசப்பும் வெறுப்பும் பொங்கி வரும்போது தூலே நவாப் பேரனை அணைப்பதுபோல் யாரையாவது மார்புடன் அணைத்து எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டு மென நினைப்பார். ஆனால் உதயமாகும் பகலின் வாய்மையை, கதிரவனின் முன்னிலையை எப்படி மறந்துவிட முடியும். "வணக்கம், மேதையாளரே!" தூலே நவாப் வாயிற்கதவைக் கடந்தபோது வாஹித் ஹுசேன் எழுந்து நின்றார்.

"வாழும்! சிறப்பாக வாழும்!" தூலே நவாப் நின்றுவிட்டார்.

"இன்று இளவரசரைச் சீக்கிரமாகவே வெளியே அழைத்து வந்துவிட்டீர்கள்."

"ஆமாம்... சிறிய நவாப்பை மார்புடன் அணைத்துக் கொண்டால் மனம் தணிகின்றது" தூலே நவாப் பெருமூச்சு ஒன்றை வெளிப்படுத்தினார்.

"உண்மைதான். அந்த 'மன்சப்' (பதவி) பற்றி ஒரு முடிவும் தெரியவில்லை போலும்..." தூலே நவாப்பின் அமைதியிலா நிலைக்குக் காரணம் எது என்பது வாஹித் ஹுசேனுக்குத் தெரியும்.

"எப்போது ஆகுமோ, ஆண்டவனுக்கே தெரியும். மாட்சிமை தாங்கிய மன்னரின் வெள்ளிவிழாவின்போது எல்லாருக்கும் பதவி உயர்வு கிடைக்கும் என்று பேசிக் கொள்கிறார்கள்."

"ஆமாம். இன்ஷா அல்லாஹ் (ஆண்டவன் விரும்பினால்)" வாஹித் ஹுசேன் கைகட்டித் தலைகுனிந்து நின்றார். பெரியவர் களிடம் பேசும்போது இப்படித்தான் இருக்கவேண்டும்.

"ஆனால் இந்தப் பதவி உயர்வால் என்ன கிடைத்துவிடப் போகிறது?" தூலே நவாப் இகழ்ச்சியுடன் கூறினார். "அண்ணாவின் மாளிகையில் நான்கு பேகம்கள் இருக்கிறார்கள். ஆறேழு சிறுவர் சிறுமியர் இருக்கிறார்கள். என் வீட்டில் இரண்டு பேகம்களின்

செலவுகள் இருக்கின்றன. ஜாகீர் வருமானமும் மாதம் ஆயிரத்து ஐநூறாகிவிட்டது. மகனுக்கும் கல்யாணமாகி விட்டது. வீட்டில் மருமகளும் குழந்தைகளும் இருக்கிறார்கள். நீரே சொல்லும்— எப்படி வாழ்க்கை நடத்துவது?”

“தங்கள் கூற்றுச் சரியானதே”.

வாஹித் ஹுசேனின் சுருக்கமான பதில்களால் கலவரமடைந்த தூலேநவாப் முன்நோக்கிச் சென்றுவிட்டார். வாஹித் ஹுசேன் முதுகுப்புறத்தில் கைகளைக் கட்டியவாறு, பச்சைப்புல் மீது வெறுங்காலால் நடக்க ஆரம்பித்தார். தூலே நவாபின் தந்தையாரும் பாட்டனாரும் இப்படி வரவு செலவு கணக்கைப் பார்த்திருக்க முடியுமா? அந்த ஆங்கிலேய ரெஸிடென்டும் எவ்வளவோ தொல்லைகள் கொடுத்தான். நிலச்சுவான்தார்களின் வரவுசெலவுக் கணக்குகளைப் பார்க்கவும், அவர்களுடைய இல்லற விஷயங்களைக் கண்காணிக்கவும் முயன்றான். யாரோ செலவழிக்க வேறு யாருக்கோ கவலை.. அந்தப் பாழடைந்த முகங்கள் கொண்ட ஆங்கிலேயர்கள் பேகம்களின் அந்தப்புரங்களையும் அலசி விட்டார்கள் என்று தூலே நவாப் சொல்லுவார்.

இதனால் அஞ்சிய மேதகையாளரான நிஜாம், மனிதத் துன்புறுத்தலைத் தடுப்பதற்காகவே ஓர் இலாகாவை அமைத்தார். அதன் அதிகாரிகள் மாளிகைகளிலிருந்து பணியாட்களையும், வேலைக்காரிகளையும் வெளியே அழைத்து அவர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் பற்றி விசாரித்தார்கள். இந்தப் பணியாட்களுக்கு கோள்மூட்டும் பழக்கம் இருக்கவே செய்தது. முதுகின் மேல், கைகளின் மேல் காயம் இருப்பதைப் பார்த்து விட்டால் அந்தப் பெண்ணைச் சர்க்கார் சார்பில் பறிமுதல் செய்து லாரியில் போட்டு எடுத்துச்சென்று விடுவார்கள். பிறகு எத்தனை முயற்சிகள் செய்தாலும் பலன் கிட்டுவதில்லை. இந்தப் பெண்கள் இலவசமாக வானத்திலிருந்து விழுவதில்லை! பணம் செலவழித்து விலைக்கு வாங்கப்படுகிறார்கள். சொல்லுங்களேன், இனி யார் வேலை செய்வார்களாம்? சம்பளம் வாங்கும் வேலைக்காரர்கள் ஆயிரம் மிடுக்கு செய்கிறார்கள். தங்கள் முக்கியத்துவத்தை அறிந்த காமாட்டிகளும் பிகு செய்கிறார்கள். வெளிச்சத்திலும் இருளிலும் யாரும் அவர்கள் கையைப் பிடித்துவிட முடியாது. அரிஜனர்களின் படையே கூக்குரலிட வந்து விடுகிறது...

வாஹித் ஹுசேன் நுழைவாயிலில் நின்றவாறு வெகுதூரம் வரை பரவி இருந்த பங்களாக்களின் வரிசைகளை நோக்கினார். ‘ஒட்டுகள் போடப்பட்ட பக்கிரிகளின் ஆடைகளைப்போல், பழைய, உருவிழந்த இந்த இல்லங்கள் தமக்குள் என்னென்ன இரகசியங்கள் மறைத்து வைத்திருக்கின்றனவோ... ஒவ்வொரு

மாளிகையிலும் எத்தனை கதைகள் புதைந்துள்ளனவோ... கண்ணீரில், சிரிப்பொலிகளில் மறைந்த பேச்சுகள்... ஏமாற்றங் களின் நீண்ட வரிசைகள்...'

சோர்வடைந்த அவர் தன் வீட்டைப் பார்த்தார். இங்கு அவர் எத்தனை நேர்த்தியாகப் பூஞ்சோலையை அமைத்திருக்கிறார். ஹைதராபாத் முழுவதிலும் இந்தச் சோலையின் புகழ் பரவி இருந்தது. அதற்கு முன் இந்தக் கவிதாலயம் இங்கு வாழ்ந்த கவிஞர்களால் மட்டும் பேர் பெற்றது. நான்கு தலைமுறைகளாக அவர்கள் கவிதை புனைகிறார்கள். ஏனென்றால் கவிதை பாடு வதைத் தவிர எந்தக் கவலையையும் ஆண்டவன் அவர்களுக்குத் தரவில்லை. கவிதாலயத்தில் தொங்கிய படங்களில் காணப்படும் அனைவருமே எத்தனை வலுவற்ற காதலர்கள் என்பதை வாஹித் ஹுசேன் அறிவார். இந்த இல்லத்தில் எப்போதுமே மரண—வாழ்க்கை நாடகமே நடந்தது. ஒரு மங்கையே இங்கு எப்போதும் ஆட்சி நடத்தியிருக்கிறாள்.

இந்த இல்லத்திற்கு ஒரு புதிய உருவமும் வண்ணமும் தந்து மலர்ச்சோலையாக மாற்றியது வாஹித் ஹுசேன்தான். இந்த வீட்டில் 'மதப்பற்றை மறக்கச் செய்யும் மது வழங்கும் மங்கை'யை இன்று நீங்கள் தேடினால் அது உங்களுடைய முட்டாள் தனமாகவே இருக்கும். ஏனெனில் எந்த ரோசா மொக்குப்போன்ற வாய்கொண்ட அழகிக்காக இந்தக் கவிதாலயாவை அழகுறச் செய்தாரோ, அவள் தனது பாதி வெண்முடியை முகத்தில் பரப்பியவாறு தனது பேரன் பேத்திகளின் சின்னஞ்சிறு ஆடை களைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருக்கிறாள். இப்படி இருந்தும் வாஹித் ஹுசேனின் ஏழு கவிதை ஏடுகளின் பக்கங்கள், பிரிவின் தாபத்தாலும், துயரத் தீயிலும் எரிந்து கொண்டிருந்தன. ஏனெனில் இந்த மதுமங்கை கர்வியாகவும் கருணையற்றவளாகவும் இருக்கிறாள். அவள் மதுக் கோப்பையைத் தருவதில்லை. வாலிப காலத்திலும் அவர் ஒரு மெழுகு பொம்மையுடன்தான் விளையாடி இருக்கிறார்! எடுத்தால் அது கண் திறக்கும். படுக்க வைத்தால் கண்களை மூடிக்கொள்ளும்.

இதன் காரணமாகவே வாஹித் ஹுசேன் தனது மரபு வழக்கினை மறந்து ஒரே மனைவி போதும் என்று இருந்து விட்டார். தனது பூஞ்சோலையில் புத்தம்புதிய மலர்களை உருவாக்குவதில் முனைந்துவிட்டார். அவருடைய தோட்டத்தில் ஒவ்வொரு கிளையும் மிக்க நேர்த்தியுடன் வளைந்திருந்தது. ஒவ்வொரு பூவும் நாகரிகமான மனிதனைப் போல் புன்முறுவல் செய்தது! புல்வெளியில் ஒரு சிறு துரும்பும் ஒழுங்கு முறையை மீற முடியாது. வட்டாட்சியராக இருந்தபோது தனது உதவி

யாளர்களுடன் நடந்துகொண்டதுபோல், அவர் பூச்செடிகளையும் கண்டித்து வைத்தார்.

சில சமயங்களில் ரஷீத் சிரித்தவாறு கூறுவான். "அப்பா முழுச்சோலையையும் 'மார்ச் பாஸ்ட்' செய்கிறார்".

தனது ஒரே மைந்தனின் இந்தக் கூற்று அவருக்கு மிகவும் பிடித்தது. பொதுவாகவே ரஷீதின் ஒவ்வொரு பேச்சும் அவரைக் கவரும். ரஷீத் பிறந்தது முதல் அவருடைய கிறுக்குத்தனம் தெளிவுபெற்றுவிட்டது. அவர் பீபியின் செருக்குத் தன்மையை நினைக்காமல் தனது சிந்தனையைத் திருப்பினார்.

ரஷீத் தனது தாத்தாவின் காலத்தில் பிறந்திருந்தால் அவனுடைய திறமைகளுக்குப் பெரும் பாராட்டும் மதிப்பும் கிடைத்திருக்கும். மாநில ஆட்சியாளனாகவே அவன் ஆகியிருக்க முடியும். ஜாகீரும் பட்டமும் கிடைத்திருக்கும்... நஜாகத் ஜங்கின் பேரன் பொறியியலாளனாக இன்று ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறான்! நாள் முழுவதும் கடும் வெயிலில் குடை பிடித்தவாறு கூலியாட்களுடன் நிற்கிறான். சுற்றுப் பயணமும் மேற்கொள்கிறான். இந்த நாட்களை அவன் பார்த்திருக்க வேண்டாம்... அரசாங்கம் அவனுடைய திறமைகளை அலட்சியப் படுத்திவிட்டது என்றும் சொல்லிவிட முடியாது. உஸ்மானியா சர்வகலாசாலைக் கட்டடம் எழுப்புவதற்காக, இங்கிலாந்துக்கு அனுப்பி அங்கிருந்த நல்ல கட்டடங்களைப் பார்த்துவருமாறு அரசாங்கம் தனது செலவில் அவனை அனுப்பி வைத்தது.

நல்லது... ரஷீதைப் பற்றியும் அவனது மகனைப் பற்றியும், வாஹித் ஹுசேனுக்கு அதிகக் கவலையும் இல்லை. ஏனெனில் அவரது தம்பியான அஹ்மத் ஹுசேனின் திருமணம் முனாசிப் ஜங்கின் ஒரே பேத்தியான உஜாலா பேகத்துடன் நடந்தது; முப்பது ஆண்டுகள் கழிந்த பிறகும் உஜாலா பேகத்தால், அஹ்மத் ஹுசேனின் வீட்டிற்காக ஒரு தீபத்தை ஏற்றி வைக்க முடியவில்லை. அதனால் தனது சொத்தைக் கடனெனும் கறையான் அழித்து விடும் என்ற கவலை வாஹித் ஹுசேனுக்கு இருக்கவில்லை. கையிலிருந்த தொகையை அவர் தனது இரு மகள்களான பஷீர் பேகம், பதூல் பேகம் ஆகியோரின் திருமணங்களுக்குச் செலவழித்து விட்டார். இப்போது ஒவ்வொரு ஆண்டும் கவிதாலயம் மீது வரும் 'அட்டாச்மென்ட் நோட்டீசை' ஏதேனும் ஒன்றைச் செய்து, தட்டிக்கழித்து வருகிறார். அவரது பார்வை அவுரங்காபாத திசையிலேயே இருந்தது. அங்கு அஹ்மத் ஹுசேன் அளவிலா செல்வத்துடன் வீற்றிருக்கிறாரே!

அஹ்மத் ஹுசேனோ, வாஹித் ஹுசேனைப்போல் கவிதையும் பாடவில்லை. பெரிய பதவிகளும் தேடவில்லை.

அரசினை வீழ்த்திடும் சதிகளிலும் ஈடுபடவில்லை. ஏனென்றால் மனைவியின் பெரும் சொத்து அவருக்கு வலிமை தந்தது. அவர் தனது கிராமப் பங்களாவில் இருந்தார். இந்திர தேவனைப்போல் எல்லா வசதிகளையும் பெருக்கிக் கொண்டார். உலகப் பிரச் சினைகள் பற்றிச் சிறிதும் அக்கறை காட்டவில்லை.

வாஹித் ஹுசேன் தனது தம்பியின் செல்வ நிலையை எண்ணிப் பொறமை கொண்டார். அஹ்மத் ஹுசேன் தனக்காக மட்டுமே வாழ்ந்தார். அதனால் சுகமாக இருக்கிறார். ஆனால் வாஹித் ஹுசேன் எவ்வளவு தேடியும் அவருக்குள் 'நான்' என்பது தனியாகக் கிடைக்கவில்லை. அத்துடன் யாரேனும் இணைந்து இருந்தார்கள். இந்த 'நான்' என்பது என்னவோ?

'என்னுடைய 'நான்' தன்மை. அதில் யாரும் இருக்கக் கூடாது—ஆண்டவனைப்போல்!' ஆனால் இறைவன் தனியானவன் என்று ஒப்புக் கொள்வதற்கும் மனிதப் பிறப்பை அவனிடமிருந்து பிரித்து விடுகிறார்கள்' இறுதியில் சோர்வுற்று வாஹித் ஹுசேன் தன்னுடைய குறிப்பேட்டில் தஞ்சம் புகுந்து கொண்டார்.

சிறிது நேரத்தில் நாளிதழும் வந்துவிட்டது.

வாஹித் ஹுசேன் அங்கேயே தோட்டத்துக் கரை மேட்டின்மீது உட்கார்ந்துவிட்டார். கண்ணாடி அணிந்து அவசர அவசரமாகத் நாளிதழின் பக்கங்களைப் புரட்டினார். குறிப்பிட்ட தொரு செய்தியை அவர் எதிர்பார்க்கவில்லை என்றாலும் தலைப்புகளைப் படிக்கும்போது அவருடைய இதயத் துடிப்பு அதிகரிக்கவே செய்தது.

எந்த அதிகாரி எங்கு மாற்றப்பட்டிருக்கிறார்? யார் காலமாகிவிட்டார்கள்? எவர்மீது அரசின் கண்டனம் பாய்ந் திருக்கிறது? யார் பதவி உயர்வு பெற்றிருக்கிறார்கள் என்ற செய்தி களே இடம்பெற்றிருந்தன. அதுவரை தக்காணத்தில் வெளியுலகச் செய்திகள் மிக மிகக் குறைவாகவே அச்சேறின. உலகத்தையே அசைத்திடும் செய்தி ஏதேனுமொன்று இருந்தால் அது ஒரு மூலையில் தென்படும். வாஹித் ஹுசேன் முதலில் அரசு ஆணைகளையே படிப்பார். அந்தப் பகுதிமீது பார்வை பதிந்ததும் தொப்பியை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டு வணக்க இணக்கத்துடன் உட்கார்ந்துவிடுவார். இன்றும் அது போலவே 'ஆணை'களைப் படிக்கலானார்.

'கவியரங்கக் கூட்ட நிகழ்ச்சிகள்—

தற்காலத்தில் இவை அதிகரித்து வருகின்றன. இவை உருது மொழிக்கு வலுவூட்டும் அல்லது புத்துணர்வு தரும் என்ற கருத்துச் சொல்லப்படுகிறது. சிலமணி நேரம் இதில் செலவழித்து.

கவிஞர்களின் கவிதைகளைப் பாராட்டிவிட்டு எழுந்து சென்று விடுகிறார்கள். யாரோ சொன்னதுபோல் அமருதல், பேசுதல், கலைந்துவிடுதல் என்பதால் மொழிக்கு என்ன நன்மை கிடைத்து விடப்போகிறது? வெறும் பொழுதுபோக்குச் சாதனம்தான், வெண்திரையில் அசையும் படங்களைப்போல்! ஆனால் உருது மொழியின் வளர்ச்சி அல்லது உறுதிப்பாடு நோக்கமாக இருப்பின் அதற்கெனத் தனிப்பிரிவு அமைக்க வேண்டும். இது முற்றிலும் வேறு விஷயமாகும். இதர மொழிகளிலிருந்து பயனுள்ள நூல்கள் மொழிபெயர்க்கப்பட வேண்டும் அல்லது புதிய இலக்கியம் படைக்கப்பட வேண்டும். அல்லது அரிதான ஏடுகள் பதிப்பிக்கப் பட வேண்டும். இவற்றை வெளியிடுவதற்கு நல்லதொரு அமைப்புத் தேவை. மேலும் இதற்காகப் பெருமளவில் நிதி தேவைப்படுகிறது. எனவே ஓர் அறக்கட்டளை நிறுவப்பட்டு, திறமையுள்ளவர்களிடம் இந்தப் பணி ஒப்படைக்கப்பட்டு அவர்களும் பெரும் ஆர்வத்துடன் செயலில் ஈடுபட வேண்டும். இத்தகைய ஏற்பாடுகள் இல்லை என்றால் கவியரங்கங்கள் பயனற்றவை; இது காலத்தை வீணடிப்பது என்றுதான் சொல்ல வேண்டும்.

சுருங்கக் கூறின் இது எனது சொந்தக் கருத்தாகும். கல்வித் துறை அறிஞர்கள் பலர் எனது கருத்துக்கு இணக்கம் தெரிவித்துள்ளார்கள். அப்படி இல்லாவிடில் அவசியமற்ற இதர வேலைகளில் தலையிடும் உரிமை எனக்கு இல்லை. நான் கவியரங்கங்களை மதிக்கவில்லை. என் முன்னால் இருக்கும் பிரச்சினை யாதெனில், ஒரு புறம் முஸ்லிம் சமுதாயம் ஏழ்மையான நிலையில் இருக்கிறது. மறுபுறம் வீணான காரியங்களில் பணம் செலவழிக்கப்படுகிறது. இது சிந்தனைக்குரிய மாயச்செயல்தான்!"

இதோ, கவியரங்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கப் பட்டு விட்டது. கவிஞர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியைக் கண்டு அவர் மனம் வெதும்பினார்.

'ஆணை'யைப் படித்த அவர், வேந்தர் மாளிகையின் உலகமும் அஹ்மத் ஹுசேனின் சுற்றுப்புறத்தைவிட வேறுபாடு கொண்டதல்ல என்பதை உணர்ந்தார். அங்கும் 'நான்' என்ற முத்திரைதான் இருக்கிறது. வாஹித்ஹுசேன் பத்திரிகையில் மூழ்கியிருந்தபோது அவருடைய பேத்தி சாந்த், தனது மேலாடையை மரக்கிளையிலிருந்து விடுவித்தவாறு ஓடிவந்தாள்.

"தாத்தா—சீக்கிரம் வாருங்கள். சிறிய பாட்டனாருடைய கடிதம் ஔரங்காபாத்திலிருந்து ஆள்மூலம் வந்திருக்கிறது."

"ஆங்..." அவர் திடுக்கிட்டார். அரசு ஆணைகள் கொண்ட பத்திரிகையை அவர் எச்சரிக்கையாக மடித்து வைத்துக் கொண்டார்.

"சிறிய பாட்டனாருக்கு மகன் பிறந்திருக்கிறானாம்," சாந்த் குரோட்டன்ஸ் இலைகளை நசுக்கியவாறு சொன்னாள்.

"என்ன?" நாளேடு காற்றில் படபடத்தவாறு எட்டப்போய் விழுந்தது. அவர் தனது குறிப்பேட்டையும் மறந்து உள்ளே ஓடினார்.

சில நிமிடங்களுக்குப் பிறகு அவர் முற்றத்தில், எல்லாருக்கும் மத்தியில், கண்ணாடியை மூக்குப் பள்ளத்தில் சரியாக அமைத்தவாறு கடிதத்தின் கடைசிப் பகுதியை உரத்த குரலில் படித்தார்.

'பேகமும், புதிதாகப் பிறந்திருக்கும் குமாரரும் தங்கள் அனைவருக்கும் வணக்கம் தெரிவித்துக் கொள்கிறார்கள். என் சார்பிலும் எல்லாப் பெரியோருக்கும் 'சலா'மும், சிறியோருக்கு ஆசிர்வாதங்களும் தெரிவித்து விடுங்கள்—'

குற்றங்கள் நிறைந்த அடியேன்,

அஹ்மத் ஹுசேன் கான்

கடிதம் தானாகவே வாஹித் ஹுசேனின் கையிலிருந்து நழுவி விழுந்தது. ஆனால் அவருடைய கை சிறிதும் அசையவில்லை; அவர் மட்டும் என்ன? அங்கு உட்கார்ந்திருந்த அனைவரையும் அது சிலையாக்கி விட்டது. நொண்டி அத்தையைத் தவிர; அவர் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தார்.

சில நிமிடங்களுக்குப் பிறகு மிகுந்த சிரமத்துடன் வாஹித்ஹுசேன் தன்னிலைக்கு வந்தார். மிக்க வருத்தத்துடன் கைகளைப் பிசைந்தார்.

"பார்த்தீர்களா! இறுதியில் உஜாலா பேகம் எங்களை மூட்டையில் கட்டிவிட்டார்".

"உ..ம்... இந்தக் குழந்தையின் பிறப்பில் என்ன முக்கியத்துவம் இருக்கிறது. இதைப்போல் எத்தனை பிள்ளைகள் சித்தப்பாவின் வாயிற்படியில் வளர்கிறார்கள்..!"

ரஷீதின் மனைவியான ரஜியா தனது கணவனைத் தவிர வேறு எவருமே, அஹ்மத் ஹுசேனின் சொத்துகளுக்கு வாரிசாக வர முடியும் என்பதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

"அல்லாஹ் பீஜானியின் விதியை எப்படி மாற்றிவிட்டான். சற்றும் எதிர்பாராத வகையில் அவள் எப்படித் தாயாகிவிட்டாள்!" நொண்டி அத்தை மிகவும் வருத்தத்துடன் பேசினாள்.

"தூ... அந்தப் பாழாய்ப்போன முகம் சித்தப்பாவின் இல்லத் தரசியாக எப்படி வரமுடியும்?" வாஹித் ஹுசேனின் மூத்த மகளான பஷீர் பேகம் துள்ளினாள். "பார்த்துக் கொள்ளுங்கள். உஜாலா சின்னம்மா அவளைத் தனது மிதியடியின் கீழ் அழுத்திவிடுவார். அவளுக்கு உரிமை ஏது? இரண்டு காசு

பெறாதவள்"— பஷீர் பேகத்திற்குப் பீஜானியின்மேல் ஆத்திரம் வந்தது. அவளுடைய குடலைப் பிடுங்கி எறிந்துவிட வேண்டுமென மனம் விரும்பியது.

"அப்படியானால் பீஜானி வாஹித் அண்ணாவின் பேகமாகி விட மாட்டாளா?" பீபி முதல் முறையாக விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்டார். பீபியின் இரண்டாவது பல்லும் விழுந்துவிட்டதை வாஹித் ஹுசேன் பார்த்துக் கொண்டார். ஆனால் அவரது நஞ்சு தோய்ந்த புன்சிரிப்பில், பல ஆண்டுகளுக்கு முன்பு அவர் முதல் முறையாகப் பார்த்த அதே எக்காளம் இன்றும் இருந்தது.

"ஒவ்வொரு பெண்ணின் தலைவிதியிலும் பேகமாக வரும் வாய்ப்பு இருப்பதில்லை"—இத்துணை பெரிய திகைப்புக்குரிய நிகழ்ச்சி நடந்து விட்டபோதும் வாஹித் ஹுசேனால் மனைவிக்குப் பதில் சொல்ல முடியவில்லை.

"என்னவாம்? யார் பேகமாகி விட்டார்களாம்?"— கைசரின் தாயான பாதிமா பேகம் ஒரு முறத்தில் அரிசி எடுத்துக்கொண்டு முற்றத்திற்கு வந்துவிட்டாள்.

"அதே—உங்கள் தம்பி அஹ்மத் ஹுசேனிடம் ஒரு பெண் இருந்தாளே, பீஜானி—அவளுக்குப் பேகம் அந்தஸ்து கிடைக்கப் போகிறது." பீபி முழுமையாக தைக்கப்படாத பேரனின் சொக்காயை முழங்கால் மீது வைத்துக் கையால் சரிப்படுத்தினார்.

"உங்கள் தம்பிக்குக் குழந்தை பிறந்திருக்கிறதாம். பெயர் ஏதுமில்லை. புதிதாகப் பிறந்தவன் என்று எழுதி இருக்கிறார்" நொண்டி அத்தை நையாண்டி செய்தார்.

"எல்லாம் பொய்," வாஹித் ஹுசேன் எரிச்சலுடன் கண்ணாடியைக் கீழே வைத்துவிட்டு ஷேர்வானியின் பொத்தான் களைத் திருகினார். "அஹ்மத் மியாவுக்கு மகனும் பிறக்கவில்லை; அதனுடைய பெயரும் புதிதாகப் பிறந்தவன் அல்ல!"

"ஓ, இப்போது நீங்கள் படித்த கடிதம் என்னவாம்?" ரஜியா வியப்புடன் கேட்டாள். அஹ்மத் ஹுசேன் அனைவரையும் கலங்கச் செய்ய ஏதோ நாடகமாடியதுபோல் எல்லாரும் திகைப்புடன் அவரை நோக்கினார்கள்.

"நான் சரியாகப் படித்தேன். பையனின் பெயர் நசீர் உசேன்கான் என்று வைக்கப்பட்டிருக்கிறது. பையன் அஹ்மத் ஹுசேனுக்கு அல்ல. அவருடைய பேகம் பீஜானிக்குப் பிறந்தது." என்று அவர் கூச்சலிட்டார். இதற்குள் அவருடைய இரத்த அழுத்தம் பல மடங்கு அதிகரித்துவிட்டது. கோபம் மேலிட அவருடைய உடல் நடுங்கியது.

"ஹா... ஹா... ஹா..." பாத்திமா பேகம், நொண்டி அத்தை,

ரஜியா, பஷீர்பேகம் எல்லாருமே சிரித்தார்கள். வாஹித் ஹுசேனுக்கு எதிரில் சிரிக்கக் கூடாது என்பதையும் அவர்கள் மறந்துவிட்டார்கள்.

சினத்தால் வாஹித் ஹுசேனின் இரத்த அழுத்தம் அதிகரித்தது. வருத்தம் மேலிட ரஜியாவின் வயிற்றில் துள்ளும் சிறு உயிரும் தத்தளித்தது. அவள் சிரித்துச் சிரித்து உள்ளே சென்று முனக ஆரம்பித்தாள்.

இந்தச் செய்தியால் பெரிதும் மகிழ்ந்தவள் நொண்டி அத்தைதான் என்றாலும் அவள் தனது மகிழ்ச்சியை யாரிடமும் வெளியிடவில்லை.

நொண்டி அத்தையின் பெயர் கவ்ஹர் பேகம். அவளும் ரஷீதும் ஒரே வயதினர். வாஹித் ஹுசேனின் சித்தப்பா மகள். தனது தாய் தந்தையருக்கு அவள் ஒரே மகளாகப் பிறந்தாள். பதினான்கு வயது நிரம்பிய மகளுக்காக அவளுடைய தந்தை வரன்தேடும்போது, புகைவண்டி விபத்து ஒன்றில் இருவருமே காலமாகிவிட்டனர். நொண்டி அத்தை தனது சொத்து, நகை அணிகளுடன் வாஹித் ஹுசேனுடைய தந்தையின் ஆதரவில் வந்துவிட்டார். அவரும் வரன் தேடுவதில் முற்பட்டார். இதற்குள் கவ்ஹருக்கு இருபத்தைந்து வயது ஆகிவிட்டது. அவருடைய தாய்வழி உறவினர்கள் பலவிதமாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள். வாஹித் ஹுசேனும் அஹ்மத் ஹுசேனும் அவருடைய சொத்துகள் மீது கண் வைத்திருக்கிறார்கள், அதனால் எல்லா வரன்களையும் தட்டிக் கழிக்கிறார்கள் என்று குற்றம் சுமத்தினார்கள். அதற்குள் ஆண்டவன் செயலால், பெருநாள் பிறை பார்ப்பதற்காக மாடிக்குச் சென்ற கவ்ஹர் பேகம் மயக்கமடைந்து கீழே விழுந்தாள். தரையில் விழுந்து மயக்கம் தெளிந்த பிறகு யாரோ தன்னைத் தள்ளிவிட்டார்கள் என்ற ஐயம் அவளுககு ஏற்பட்டது; ஆனால் கவிதாலயத்தில் அவளுக்கு யாரும் எதிரி இல்லையே! மருத்துவமனையிலிருந்து திரும்பிவந்தபோது தோள் எலும்பு முறிந்து, ஒருகாலும் நொண்டியாகி விட்டது. இப்போது அவர் ஊன்றுகோலின் உதவியால் உடலை வளைத்து நடந்தார். நீங்களே நினைத்துப் பாருங்கள். இவ்வாறு கால் உடைபட்ட பெண்ணை யார் திருமணம் செய்துகொள்ள முடியும்?

அவளைக் கவிதாலயத்தின் நொண்டி அத்தை என்று எல்லாரும் அழைத்தார்கள். பெண்கள் மீது அதிகாரம் செலுத் துவதிலும், வீட்டுப் பராமரிப்பு வேலைகளிலும் அவள் தன்னை ஈடுபடுத்திக் கொண்டாள். எல்லாரும் அவளுக்கு மரியாதை கொடுத்தார்கள். அவளுடைய கசப்பான பேச்சுகளைப் பெரியோர் முதல் சிறியோர் வரை எல்லாருமே சகித்துக் கொண்டார்கள்.

வீட்டுப் பெண்கள் அவருடைய ஆணைகளை நிறைவேற்றினார்கள். அவள் சிறிதளவு நோய் வாய்ப்பட்டாலும் வாஹித் ஹுசேன் கலவரமடைந்து விடுவார். அவளுடைய மனதைத் தேற்றுவதற்கு எல்லா முயற்சிகளும் செய்வார். அவப்பேறு கொண்ட தன் தங்கையின் மேல் அவருக்குக் கருணை பிறக்கும். வீட்டில் நொண்டி அத்தையின் ஆட்சி நடந்தது. அவள் கசப்பான மொழியில் எது வேண்டுமானாலும் சொல்லி விடுவாள். ஒவ்வொரு விஷயத்திலும் அவளுடைய குறுக்கீடு இருந்தது.

இந்த வீட்டில் வாஹித் ஹுசேனின் மனைவியான பீபியுடன் மட்டுமே அவருக்கு மோதல் ஏற்படும் அபாயம் இருந்தது. அண்ணி—நாத்தனார் பகை என்பது வரலாற்றுப் புகழ் பெற்றது. ஆனால் பீபியோ மென்மையான சுபாவமுள்ளவர். முப்பது ஆண்டுகளுக்குப் பிறகும் அவர் தன்னைக் கவிதாலயத்தின் ராணியாகக் கருதாமல், தொண்டனின் மகளாகவே நினைத்து வந்தார். தனது எல்லாக் கடமைகளையும் நொண்டி அத்தையிடமே ஒப்படைத்துவிட்டார். இல்லறப் பொறுப்புகளிலிருந்தும் விடுபட்டு, அலங்காரம் செய்து, நறுமணம் பூசி, பட்டாடைகள் உடுத்தி, கைளில் பளபளப்பான வளையல்களை அணிந்து, அரியணை மேல் வீற்றிருப்பார். நவீனங்களைப் படிப்பதில் நேரத்தைக் கழிப்பார். அல்லது வேலைக்காரிகளுடன் நகரின் முக்கியமான செய்திகளைப் பற்றிக் கருத்தரங்கு நடத்துவார். அல்லது திரையிடப்பட்ட வாகனத்தில் அமர்ந்து உறவினர்களை சந்திக்கச் சென்று விடுவார். வீட்டில் இன்று வெந்தயக் கீரையா அல்லது வேறு கீரையா என்பதும், வாஹித்ஹுசேன் எதைச் சாப்பிடலாம், எதைச் சாப்பிடக்கூடாது என்பதும் அவருக்குத் தெரியாது.

வாஹித் ஹுசேன் அறைக்குள் வரும்போது அவர் மணமகளைப்போல் ஒதுங்கி உட்காருவார். தனது கணவனின் ஒவ்வொரு ஆணையையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பார். வாஹித் ஹுசேனிடம் நவாப் பதவியும் இல்லை; அரச ஆடம்பரங்களும் இல்லை; எனவே அவருடைய தொனியில் பண்பு இருந்தது. அவரது குரல் சமயத்திற்கேற்றவாறு மாறிவிடும்; சில நேரங்களில் தேனாகவும், சில நேரங்களில் நஞ்சாகவும் இருக்கும். அவர் நகைச்சுவையும் பாசமும் நிறைந்த மொழியில் எல்லா வேலைக்காரர்களிடம் பேசினார். ஆனால் அவருக்கென இன்னுமொரு கம்பீரமான நடத்தையும் இருந்தது. தனக்கு எதிரில் அவர் யாரையும் மதிப்பது இல்லை. இதைத்தவிர வாஹித் ஹுசேனின் மூன்றாவது உருவம் பணிவான, தாழ்மையுள்ள காதலின் உருவமாகும். ஆனால் அது பீபிக்காக மட்டுமே! பணிவிணக்கம் மனிதனின் இயல்பில் இருப்பது உண்மையே. சிற்சில நேரங்களில்

தனது ஆற்றாமையை மறந்து தன்னை இன்னொருவரிடம் ஒப்படைத்து விடுவதில் எத்தகைய இன்பம் கிடைக்கிறது. வாஹித் ஹுசேனும் பீபியிடம் தனது எல்லாச் சாவிகளையும் கொடுத்துவிட்டார். இருபத்தைந்தாவது வயதில் இருபத்தைந்து காதல்களைப் புரிந்த வாஹித் ஹுசேன் பீபியை அடைந்த பிறகு வேறு யாரையும் நாடிச் சென்றதில்லை. இதுவல்லவோ மங்கையரின் திறமை! அவளை இந்த மாளிகைக்குக் கொண்டு வந்து மூன்று குழந்தைகளின் தாயாக்கிய பிறகும் பீபி அவருடைய கைக்கு அகப்படுவதில்லை. தோட்டத்தில் நாட்குறிப்பைத் திறந்தவாறு, காலை நேரத்தை எதிர்நோக்குவதைத் தவிர அவரால் வேறு என்ன செய்ய முடியும்?

கடிதத்தைக் கையில் வைத்தவாறு வாஹித் ஹுசேன் வெகுநேரம் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். இன்று காலை நேரமே சரியாக இல்லை. இவ்வளவு சிந்தனை செய்த பிறகும் ஒரு 'அடி'கூட அவரால் எழுத முடியவில்லை. நாளிதழிலும் ஒரு புதிர் இல்லை; ஆனால் திகைப்பு அந்தக் கடிதத்தில் அல்லவா மறைந்திருக்கிறது.

இந்த சாந்த் எத்தகைய பயனற்றவளாக இருக்கிறாள். தனது தந்தையின் வீட்டை விட்டுவிட்டு இங்கே கிடக்கிறாள். காலையில் பாடமும் படிக்கவில்லை; தொழுகையும் செய்யவில்லை. இந்த கெட்ட சேதியை அறிவிக்க வந்துவிட்டாள். அதனால்தான் பெண் குழந்தை பிறந்துவிட்டால் தலையில் அடித்துக் கொள்கிறார்களோ, என்னவோ?

"அண்ணி! இன்றே பஷீர் பேகத்திடம் சொல்லி உஜாலா அண்ணிக்குக் கடிதம் எழுதிவிடுங்கள். அந்த பாழாய்ப்போன முகமுள்ள பீஜானிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம். குழந்தைக்காக கிருத்துவ ஆயாவை வைத்துக் கொள்ளட்டும்— இல்லாவிட்டால் அந்தக்கேடு கெட்டவளின் பாலைக்குடித்து அதுவும் நீசமாகிவிடும்."

"அப்படியானால் அவன் உண்மையாகவே நவாப் ஆகி விடுவான் கவ்ஹர் பேகம்"— பீபி புன்னகை செய்தவாறு கவ்ஹர் பேகத்தை நோக்கினார். உஜாலா பேகத்திற்கு ஒரு வாரிசு கிடைத்துவிட்டது. அதுவே நல்லது.

"தூ... அவரிடம் அப்படி என்ன செல்வம் கொட்டிக் கிடக்கிறது?" ரஜியா தனது புருவங்களை நெரித்தாள். "உஜாலா சித்தி வீணாகவே ரொம்பவும் கர்வம் காட்டுகிறார்."

"இல்லை மகளே! யானை இறந்தாலும் ஆயிரம் பொன் பெறும் என்பார்கள். உஜாலா பேகத்தின் வீட்டார் பெரிய பணக்காரர்களாக இருந்தார்கள். கதைகளில் பணக்காரர்களைப்

பற்றி வருமே. அவை எல்லாம் அந்தக் குடும்பத்தில் இருந்தன. நான் அவர்களுடைய வரலாறுகளைக் கேட்டிருக்கிறேன்'' நொண்டி அத்தை முழங்கால் மீது மோவாயை வைத்து உஜாலா பேகத்தின் கடந்த காலத்தைப் பார்க்கலானாள்.

உள் அறையில் ஷாஹீன் அழுது கொண்டிருந்தான். ரஜியா தனது அறைக்குச் சென்று முனகினாள். வாஹித் ஹுசேன் உட்கார்ந்திருந்த இடத்திற்குப் பின்புற அறையில் சாந்த் ஆடி ஆடிப்பாடினாள்.

'எந்தன் சின்னஞ்சிறு உள்ளத்தினில் சின்னஞ்சிறு உலகமாம்!''

சாந்த் எட்டு வயதுச் சிறுமி; ஆனால் இப்போதே அவளுடைய அன்னை பஷீர் பேகம், மகளின் எழிலைக் கண்டு நடுங்கினாள். அவளுடைய குடும்பத்தில் அழகான பெண்கள் நஞ்சு குடித்து செத்திருக்கிறார்கள் அல்லது ஏதேனுமொரு மாளிகையில் சிறை வைக்கப்பட்டு வாழ்நாள் முழுவதும் அவதிப்பட்டிருக் கிறார்கள்...

அழகு என்பது பீபியைப்போல் தொழிலாளியின் குடிசையில் மறைந்திருந்தாலும் கலகம் விளைவிக்கவே செய்கிறது. தக்காணத்தின் வரலாற்றிலோ பாக்மதி முதல் பீபிவரை காதலின் பல வண்ணங்கள் சிதறிக் கிடக்கின்றன. ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இந்த மாறிவிட்ட காலத்தின் மிகப்பெரிய உதாரணம் பஷீர்பேகத்தின் கணவனான ஹைதர் அலிகானே ஆவார். ஹைதர் அலிகான், பஷீர் பேகத்திற்குத் தூரத்து உறவில் சகோதரரும்கூட. அவர் லண்டனிலிருந்து பாரிஸ்டர் பட்டம் பெற்றிருக்கிறார். தேசிய எண்ணங்களை ஆதரிப்பவர்—இன்னும் ஹைதராபாத்தில் சமூகப்பற்று என்று எந்த அலையும் எழுச்சி பெறவில்லை. 'இத்திஹாதுல் முஸ்லிமீன்' கழகமும் இருக்கவில்லை. ஆனால் பஹதூர் யார் ஜங்கின் அரசியல் முக்கியத்துவம் அதிகரித்து விட்டது. அவர் ஹைதராபாத் எந்த நாட்டுடனும் இணையக் கூடாது. சுயாட்சி கொண்ட அரசாகவே இருக்க வேண்டும் என்று கருத்துக் கொண்டிருந்தார்.

இதற்கு நேர்மாறாக ஹைதர் அலிகான் போன்ற முதிர்ந்த அறிஞர்கள் குழாம் ஒன்று இருந்தது. அது ஐரோப்பாவின் அரசியல் இயக்கங்களை நன்கு ஆராய்ந்து மெய்யுணர்வு கொண்டது. பண்டித நேருவால் உருவாக்கப்பட்ட காங்கிரஸின் சிறப்புகளைப் பெரிதும் விரும்பியது. இவர்கள் பொதுவுடைமை எதிர்ப்பின் இடர் தலைக்கு மேல் ஊஞ்சலாடுவதை உணர்ந் திருந்தார்கள். இந்தியாவில் ஹிட்லர், முசோலினுக்கு எதிராக மக்கள் ஒன்றுபட்டு நின்றார்கள். ஆனால் ஹைதராபாத் மக்கள் உலக அரசியலை மிகக் குறைவாகவே அறிந்திருந்தார்கள்.

ஹைதர்அலிகான் லண்டனிலிருந்து வந்து பஷீர் பேகத்தை மணந்தபோது ஹைதராபாத் அரசியலில் மாற்றம் நேர்ந்து கொண்டிருந்தது. கவிஞர் ஜோஷின் காவியங்களும், காஜி அப்துல் கஃபாரின் கட்டுரைகளும் புதிய உணர்வுகளை விழிப்படையச் செய்தன; சரோஜினி நாயுடு காங்கிரசில் சேர்ந்து பணியாற்றினார். அவர் தலைமையில் புதிய கருத்துகள் கொண்ட வாலிபர் படை ஒன்று திரண்டு வந்தது. அதன் ஆவேசமான தொண்டராக ஹைதர்அலிகான் முன்னணியில் இருந்தார். 'பாலே ஜிப்ரயில்' கவிதையை எழுதிக் கவிஞர் இக்பால் இந்திய வாலிபர்களைத் தட்டி எழுப்பிய காலம் அது. தாகூரும் கீதாஞ்சலியை இயற்றி யிருந்தார். ஹைதராபாத்தில் கவிஞர் இக்பாலின் கவிதைகள் மாளிகைகளிலும் ஃகவ்வாலி நிகழ்ச்சிகளிலும் பரபரப்பை உண்டாக்கி வந்தன. 'எதிர்பார்க்கப்படும் வாய்மையே! காணத் தெரியும் உருவில் வா!' என்ற அழைப்பைக் கேட்டு, அநீதிகளால் நசுக்கப்பட்ட வயோதிக நிலக்கிழார்கள் தங்கள் தாடிகளில் வழியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்கள்.

தனது மணவாளனின் சமூகக் கருத்துகளை அறிந்து கொள்ள பஷீர்பேகம் எந்த முயற்சியும் செய்யவில்லை. ஆறாவது-ஏழாவது வகுப்பில் படிக்கும் போதே அவருடைய திருமணம் முடிந்து விட்டது. அந்தக் காலத்தில் பொதுவாகவே பெண்களுக்குக் கல்வி அவசியமானது என்று கருதப்படவில்லை. சீர்வரிசையின் செழிப்பும், உயர்ந்த குடும்பப் பின்னணியுமே, புகுந்த இடத்தில் சிறப்பைத் தேடித் தந்தன. பஷீர் பேகமோ, இதைத் தவிரவும், பீபியின் அழகில் பங்கும் பெற்றிருந்தார். கவிதாலயத்தின் அழகும் அதன் கவர்ச்சியும் மாயமும் எல்லாருக்குமே தெரிந்திருந்தது. அதனால் அவர், இங்கிலாந்தில் படித்த தனது கணவனின் அன்புக் குரியவராகவே திகழ்ந்தார். தனது மணவாளன் ஆங்கி லேயரைப்போலவே தினமும் குளிக்கிறான்; ஆங்கிலத்தில் சரளமாகப் பேசுகிறான்; சங்கிலிகள் தொங்காத கதவுகளைக் கொண்ட வீடு ஒன்றை பஞ்சாரா குன்றின்மீது கட்டியிருக்கிறான் என்ற பெருமையில் அவர் திளைத்தார்.

தனது மகள் சாந்த் சுல்தானா டாக்டராக வரவேண்டும் என்று ஹைதர் அலிகான் முடிவு செய்தார். அதனால் அவளை ஆங்கிலப் பள்ளியில் சேர்த்தார். சுதந்திர மங்கையாக அவள் உருவாக வேண்டும் என்று அவர் நினைத்தார். எனவே மாலையில் நாட்டியப் பள்ளிக்கும் அவள் சென்றாள். ஸ்கர்ட் அணிந்தாள். அவளுடைய தலைமுடியும் ஆங்கிலப்பெண்களைப் போலவே வெட்டப்பட்டிருந்தது. சாந்த் னது தந்தையிடம் ஆங்கிலத்தில் பேசினாள்.

சாந்தின் இந்த மாறுபட்ட போக்கைக் கண்டு அவளுடைய தாய்வழிப் பாட்டனார் வீட்டில் பல கருத்து வேறுபாடுகள் தோன்றின. வாஹித் ஹுசேனுக்கு அவளுடைய துணி மூடாத நிர்வாணக் கால்கள் சிறிதும் பிடிக்கவில்லை. ஆனால் அவர் சீமையிலிருந்து வந்திருந்த தனது மருமகனிடம் அன்பு வைத்திருந்தார். அவருடைய ஒவ்வொரு பேச்சையும் சிறிதும் சிந்திக்காமலேயே ஒப்புக்கொள்வார். ஏனெனில் திறன் படைத்தவர்களின் ஒவ்வொரு கூற்றிலும் ஏதேனுமொரு நல்ல விஷயம் அடங்கி இருக்குமே!

ஆனால் சில ஆண்டுகளுக்குப் பிறகு வடஇந்தியாவில் ஒரு புதிய இலக்கிய இயக்கம் தோன்றியது. ஹைதராபாத்தில் சரோஜினி நாயுடுவின் தலைமையில் முற்போக்கு எழுத்தாளர்களின் முதல் கூட்டம் நடந்தது. ஹைதர் அலிகான் இதற்குக் காரணமாக விளங்கினார். மருமகனின் போக்குக் கண்டு வாஹித் ஹுசேன் அச்சம் கொண்டார். கம்யூனிஸ்டுகளின், நாத்திகர்களின் ஆதரவாளனாக மருமகனே வந்துவிட்டால் அவருடைய குடி மூழ்கித்தான் போகும்.

சற்றே நினைத்துப்பாருங்கள்... மேதகு மன்னர் அவர்கள் ஏதேனுமொரு சந்தர்ப்பத்தில் ஹைதர்அலிகானைப் பற்றி வினா விடுத்தால், வாஹித் ஹுசேன் என்ன விடைதரப் போகிறார்?

ஒருநாள் மாமனார் வீட்டில் ஹைதர் அலிகான் விருந்து உண்ண வந்தபோது வாஹித் ஹுசேன் மிகவும் இனிமையான குரலில் சொன்னார்: 'நீங்கள் ஆங்கிலேயருக்கு எதிராகச் சொற்பொழிவு ஆற்றுங்கள். அது சரியே. ஆனால் நாத்திகக் குண்டர்களின் பேச்சில் மயங்கிப் போலீசாரிடம் மாட்டிக் கொண்டால் என்னிடம் சொல்லாதீர்கள். உயர்குடி இளைஞர்களுக்கு இந்தப் போக்கிரிகளுடன் என்ன வேலை?' இளைஞர்கள் எதிர்காலத்தைப் பற்றி மட்டுமே கவலை கொள்வதால் எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லியே பயமுறுத்த வேண்டுமென அவர் நினைத்தார்.

"நீங்கள் சித்தித்துப் பாருங்கள். இந்தக் கம்யூனிஸ்டுகள் ஆட்சிக்கு வந்துவிட்டால் நல்லவர்களின் மதிப்பு எங்கே நிலைத்துநிற்கும்? செல்வந்தர்களும் ஏழைகளும் சரிசமமாகிவிட்ட நிகழ்ச்சி உலகில் எப்பொழுதாவது நடந்திருக்கிறதா? பிறகு நீங்கள் வீணாக எதற்குக் குரலெழுப்புகிறீர்கள்."

தனது மாமனாரின் சிந்தனைப்போக்கு சரியானதே என்பதை ஹைதர் அலிகானும் உணர்ந்தார். ஏனெனில் ஒவ்வொரு மனிதனுடனும் அவனுடைய கடந்த காலம், அவனுடைய அனுபவம், அவனுடைய நலன் ஆகியவை பிணைந்திருக்கின்றன.

அவை அவனுக்குக் குறிப்பிட்டதொரு நோக்கை அமைத்துத் தருகின்றன. ஆனால் ஹைதர்அலிகான் என்ன செய்ய முடியும்? அவருடைய பார்வை முழு உலக நிலையின்மீது பதிந்திருக்கிறது.

இந்திய அரசியல், இந்திய மக்களுடைய போராட்டங்கள், அவற்றின் விளைவுகள் ஆகியவற்றை அவரால் ஒதுக்கிவிட முடியவில்லை. ஏனெனில் நாட்டுப்பற்று என்ற பூதம் அவர் தலைமீது இருந்தது. அது 'பிழைப்பு வழி' எனும் பூதத்தைவிட எந்த வகையிலும் குறைந்ததல்ல!

என்றாலும் மானானர் வீட்டுக்கு வரும்போது, வாஹித் ஹுசேனுடன் நடக்கும் சிறியதொரு மோதலில் அவருக்கு இன்பம் கிடைத்தது.

சாப்பாடு முடிந்தபிறகு கவிதாலயத்தின் அலங்காரக் கூடத்தில் எல்லாரும் வந்து உட்காருவார்கள். "புதிய செய்தி என்ன, சொல்லுங்கள் அப்பா" என்று ஹைதர் அலிகான் கேட்டார்.

"நான் என்ன செய்திகள் சொல்வது?" வாஹித் ஹுசேன் புகைக் குழாயைப் பற்ற வைத்தவாறு சாய்விருக்கையில் சற்றே சாய்ந்துவிட்டார்.

"உங்கள் மாநில சுயாட்சி கனவுதான் நனவாகிவிட்டதே" வாஹித் ஹுசேனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

ஆனால் மேல்நாட்டு உடையணிந்த ஹைதர் அலிகான் மாமனாருக்கு முன்னால் வணக்கத்துடன் தலைகுனிந்து உட்கார்ந்தார்.

"ஆமாம. தாங்கள் நன்கு மொழிந்தீர்கள். ஆனால் பாருங்கள் ஐயா—அதனால் ஒரு பலன் ஏற்பட்டுவிட்டது. நமது உள்ளங்களிலிருந்து அச்சம் அறவே நீங்கி விட்டது. அந்நிய சக்தியின் அச்சம், புதிய நுகர் அறிவுகளின் அச்சம், புதிய செயல்களின் அச்சம், கருத்துகள் வெளிப்படுத்துவதன் அச்சம், இன்று எந்த அச்சமும் இல்லை. இதுவே மிகப் பெரிய விஷயமல்லவா?"

"தாங்கள் என்ன சொல்கிறீர்கள் அண்ணா?" —ரஷீதும் ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டு அவர்களுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். அரசியலில் அவனுக்கு எவ்வித ஈடுபாடும் இல்லை என்றாலும் வடஇந்தியாவில் எழுந்த புயல்களின் சிறு பாதிப்பு ஒவ்வொரு மெய்யறிவுள்ள, கல்விகற்ற மனிதனிடமும் காணப்பட்டது.

"நான் ஒன்று சொல்லுகிறேன். சிற்றரசுகளின் இணைப்பால் நமது ஆடம்பரமும் பகட்டும் இத்துடன் முடிவடைந்து விடும். உயர்பதவி நிலைகளும், பண்ணைகளும் பிடுங்கப்பட்டுவிடும்; பெரிய பெரிய பதவிகளை இந்தியர்கள் கைப்பற்றி விடுவார்கள்."

“ஆம்; பண்ணை முறை ஒழிக்கப்பட்டுவிடும். ஆனால் குடியரசில் முற்போக்குக் கருமூலங்கள்...” ஹைதர் அலிகான் சற்றே நின்று தனது பேச்சைத் தொடர விரும்பினார். ஆனால் வாஹித் ஹுசேன் இடையில் குறுக்கிட்டார்.

“மன்னிக்க வேண்டும். உங்கள் முற்போக்கு வாதிகளிடமிருந்து ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும். என்னே பொருளற்ற கவிதை. எத்தகைய ஆபாசமான கதைகள். நீங்கள் அவர்களை எப்படி ஆதரிக்கிறீர்களா?”

ஹைதர் அலிகான் தயங்கி நின்றார். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இன்பங்களில் ஊறித் திளைத்த இந்தக் கிழவர் களுடன் உரையாடுவது கடினம்தான். அவருடைய வாதத்திறமை இங்கே சற்றும் எடுபடாது. அவர் சற்றே நிதானித்துக் கூறினார்.

“இதன் பருப்பொருள் யாதெனில், இலக்கியத்திலும் புதுப்புதுச் பரிசோதனைகள் செய்யப்படுகின்றன. உங்கள் சமுதாயமோ இலக்கியத்தைக் கேளிக்கைகள், பொழுது போக்குகளின் சாதனம் என்றே கருதியது. ‘கஜல்’களில் மங்கையர் அழகு, கவர்ச்சி ஆகியவற்றைத் தவிர வேறு எந்தத் தலைப்பும் இல்லை; ஆனால் இப்போது இலக்கியத்தின் புதிய முறைமைகள்...”

“போதும் மியான். கவிதையில் எந்தத் தலைப்பு புதிதாக இருக்க முடியும்?” வாஹித் ஹுசேன் புகைபிடிக்கும் குழலின் எரிந்த புகையிலைச் சாம்பலைத் தட்டியவாறு கூறினார் “அது காதல் காவியம்தானே, அதில் என்ன புதுமை இருக்க முடியும்?”

அந்த நேரத்தில் தாமும் காதல் காவியத்தில் புதிய கோணங்களை அமைத்திடப் பல முயற்சிகள் செய்ததை மறந்துவிடுவார் அவர்.

“இப்போது நீங்களே கூறுங்கள். கவிதையில் தமது காதலியை விட்டு யாருடைய தோற்றத்தை வர்ணிப்பது? கூலியாட்களின் வேலையைக் குறித்துக் கவி பாடுவதா?—இயந்திர உறுப்புகளின் அமைப்பைப் புகழுவதா?”

ரஷீதுக்கும் அஹ்மத் ஹுசேனுக்கும் இந்த நேரத்தில் பலத்த சிரிப்பு வந்துவிடும்.

“சொல்லுங்கள் அண்ணா—உங்கள் பொது உடைமை ஆட்சியில் நமது செல்வங்களைப் பிடுங்கி ஏழை வறியவர்களுக்கு வழங்கி விடுவீர்கள் என்றால் அது நியாயமா? நீசர்களையும் உயர்குடிப் பிறப்பினருடன் சரிசமமாக்கி விடுவீர்கள் என்றால் அது நேர்மையா?” ரஷீத் மிகவும் தீவிரமான மனநிலையில் இருந்தான்.

“ஆனால் இத்தகைய பல அநீதிகளைச் சகித்துக்கொள்ள ஆயத்தமாகி விடுங்கள் ரஷீத் மியான்!” ஹைதர்அலிகானின்

தொனியில் கசப்பு அதிகரித்துவிட்டது. "இனி தேர்தலில் உங்கள் வேலைக்காரன் உங்கள் தலைவனாக வந்துவிடுவான். அப்போது நீதியைப் பற்றிச் சிந்தனை செய்யும்!

இத்தகைய நேரங்களில் வாஹித் ஹுசேனின் இரத்த அழுத்தம் அதிகரித்துவிடும். அவர் கோபாவேசத்துடன் கூறுவார்:

"பாரும் ஹைதர் பாஷா! உங்களுக்கு எதிரான ரகசியக் குறிப்புகள் அலிபாஷா வரை சென்றுவிட்டன. வல்லாண்மையின் போர்வையில், உலக நடப்புகளின் விமர்சனம் என்ற முறையில் உள்நாட்டு அரசியல் குறித்துப் பேசுகிறீர்கள். கம்யூனிஸ்டுக் கூட்டங்களில் கலந்து கொள்கிறீர்கள்..." வரப்போகும் இடர் குறித்து அவர் தனது மருமகனுக்கு முன்னெச்சரிக்கை விடுப்பார்.



இது ஷெஹ்ருயூர்—அதாவது பாரசீக ஞாயிற்று ஆண்டின் ஆறாவது மாதமாகும்.

சுற்றுப்புறத்தில் ஒருவித இன்ப நிலையும் மயக்கமும் பரவியிருந்தன.

கவிதாலயத்தின் வளிமண்டலமும் களிப்பூட்டுவதாகவே இருந்தது. அதில் குடியிருந்தவர்கள் தங்கள் நினைவுகளில் மூழ்கி இருந்தார்கள்; வெளியுலகுடன் அவர்களின் தொடர்பு மிகக் குறைவாகவே இருந்தது.

கிரிப்ஸின் ஆலோசனைகளைக் காங்கிரஸ் நிராகரித்துவிட்ட காலம் அது. ஜின்னாவுக்குப் பின்னால் முஸ்லிம்கள் பெருங்குரல் எழுப்பினார்கள்— "பாகிஸ்தான் வாங்கியே தீருவோம்."

பாலங்கள் தகர்க்கப்பட்டன. புகை வண்டிகள் தடம் புரண்டன. இந்தியாவின் தலைசிறந்த மனிதர்கள் 'சர்' பட்டத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். ஆனால் ஹுஜுர் நிஜாமுக்கு இந்தச் செய்திகளின் எவ்விதப் பற்றுதலும் இருக்கவில்லை. அவர் தினமும் இரவில் ஒரு கவிதையை எழுதுவார்; அது மறுநாள் நாளேடுகளில் ஆசிரியர் ஜலீல் அவர்களின் கருத்துரையுடன் முன்பக்கத்தில் வெளிவரும். மக்களும் அந்த நாளேடுகளை மிகவும் பயபக்தியுடன் வைத்திருப்பார்கள். எஜமான்மீது பற்றும் விசுவாசமும் தக்காண மக்களின் இதயங்களில் வேரூன்றிவிட்டன. ஒவ்வொரு நாளும் நிஜாம் சாலை வழியே செல்லும் போதெல்லாம், அவரைக்காண மக்கள் நீண்ட நேரம் வரை சாலைகளில் வரிசையாக நிற்பார்கள். உலகம் உள்ளவரை ஆஸிபியா ஆட்சி நிலைத்து நிற்க வேண்டுமென காலையும்

மாலையும் பிராத்தனைகள் செய்வார்கள்.

அன்றும் கவிதாலயத்தில் வழக்கம்போல் வாழ்க்கை தொடங்கியது. வாஹித் ஹுசேன் தோட்டத்தைச் சுற்றிவிட்டு நாளிதழுடன் உள்ளே வந்தபோது சாந்த் எதிர்க்கூடத்தில் நடனமாடிக் கொண்டிருந்தாள். பாட்டனாரைக் கண்டதும் தன் முகத்தை இரு கைகளாலும் மறைத்தவாறு ரஜியாவின் அறைக்குள் ஓடிவிட்டாள். விடுமுறை நாளை அவள் பாட்டனார் வீட்டில்தான் கழிப்பாள். அங்கே அவளுடைய தந்தை ஒவ்வொரு விஷயத்திலும் கண்டிப்பார். ஆனால் இங்கே மாமியும் மாமாவும் செல்லம் கொடுத்தார்கள்.

சாந்தின் இந்த மாறுபட்ட போக்கு பீபிக்கு மிகவும் பிடித்தது. அவர் குடிசையிலிருந்து வந்தவர் அல்லவா; அதனால் மாளிகையில் இருந்தாலும் குடிசையில் இருந்தாலும் மங்கை ஒரு வட்டத்தில் சுற்றிச்சுற்றி வருகிறாள் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் சாந்தைப் பார்க்கும்போது அவள் இந்த வட்டத்தைவிட்டு வெளியேறி விடுவாள் என்ற நம்பிக்கை தோன்றும்.

வாஹித் ஹுசேன் உள்ளே வந்தபோது எதிர்பார்த்ததற்கு மாறாக யாரும் அவருடைய வருகையைப் பொருட்படுத்தவில்லை! ஏனெனில ரஜியா பிரசவ வேதனையால் துடித்தாள். பீபியும் நொண்டி அத்தையும் அவளைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். கூடத்தில் சிவப்பு நிற விரிப்பு இருந்தது. அதன்மேல் பெரிய பெரிய தட்டுகளில் கிச்சடி, வெண்ணெய், கொத்திய இறைச்சி, அப்பளம், ஊறுகாய், வாஹித் ஹுசேனுக்காக அவித்த முட்டைகள் வைக்கப்பட்டிருந்தன. மாலின் பீ தலையில் முக்காடு போட்டவாறு கைகளில் விசிறியுடன் உட்கார்ந்திருந்தார். வாஹித் ஹுசேன் சாப்பிட்டுவிட வேண்டும் என்ற அறிகுறி இது. அவரும் நிலைமையைப் புரிந்துகொண்டு, தாழ்ந்த குரலில் மாலின்பீயிடம் கேட்டார்: "ரஷீத் எங்கு இருக்கிறார்?"

"மருத்துவச்சியை அழைத்துவர வண்டியில் போயிருக்கிறார்"

"ஹும்..." வாஹித் ஹுசேன் அரைமனத்துடன் கையை நீட்டினார். சிலாகு கொடுத்த துவாலையை வாங்கித் தனது முழங்காலுக்கு மேல் பரப்பினார். 'பிஸ்மில்லாஹ்... ' (ஆண்டவனின் பெயரால்) என்றவாறு கிச்சடி மூடியை எடுத்தார். ஆனால் இன்று சாப்பிடுவதில் அவருக்கு விருப்பம் இல்லை. பேரன் வரப்போகிறான் என்ற மகிழ்ச்சியும் கலக்கமும் அவரை அமைதியிழக்கச் செய்துவிட்டன.

"இன்று வீட்டில் புதியதொரு நபர் வரப் போகிறார்..." நேற்றுத்தான் ரஷீத் பிறந்த நற்செய்தியை அவர் கேட்டார்- அதுவும் இதேபோன்ற ஒரு காலைநேரம்தான்... இதேபோன்ற பருவம்தான்

இன்று ரஷீதுக்கு இரண்டாவது மகன் வரப்போகிறான். இந்தப் புதிய புதிய குழந்தைகள் எதற்காக வருகிறார்கள்? வாஹித் ஹுசேன் கையில் தட்டு அப்படியே நின்றுவிட்டது. 'ஆண்டவன் உலகினின்றும முழுவதுமாக நம்பிக்கை இழந்துவிடவில்லை; அதனால் புதிது புதிதாகப் பாலகர்களை அனுப்புகிறான் என்று தாகூர் சொல்லுகிறார். ஆனால் பழைய குழந்தைகள் அவனுக்கு ஏமாற்றத்தையே அளித்து வருகிறார்கள். இதையே பாருங்களேன். கடனிலும் அடகிலும் இருக்கும் சொத்துக்காக சகோதர்களிடையே போராட்டம், அபகரிப்பு, சுரண்டல்... உயர் பதவிகளுக்காகப் போட்டி, ஒரு மங்கைக்காக எல்லாவற்றையும் துறந்துவிடும் பரிதாபம்...' வாஹித் ஹுசேனின் வாழ்வும் இப்படியே அமைந்து விட்டது. ஒவ்வொரு மனிதனும் தனக்காகவே வாழுகிறான். மகன்வழி, மகள்வழி பேரன் பேத்திகளின் துள்ளலை ரசித்தல், மகனின் வளர்ச்சியும், செழிப்பும் காணல், இவற்றால் மன அமைதி கிட்டுகிறது. இன்று அவர் தனது துருக்கித் தொப்பியைச் சிறிது உயரமாகவே வைத்து வெளியே செல்லலாம். இரண்டு பேரன் களின் பாட்டனார்; இருபது லட்சத்திற்கு அதிபதி—ஒவ்வொரு பேரனையும் ஒரு வாக்குறுதிக் கடன் பத்திரமாகக் காசாக்கிக் கொள்ளலாம்! இதனால்தான் மகன் பிறக்கும்போது மகிழ்ச்சி கொண்டாடப்படுகிறது.

முற்றத்தில் பிஸ்மில்லாஹ் பீ மகனை அடித்துக் கொண்டிருந்தாள்.

ஷாஹீனின் ஆயா அவனுக்கு ஆடை அணிவித்தாள். அந்த ஆடையை அணிந்துகொள்வதில் அவனுக்கு விருப்பமில்லை. அதனால் சட்டையைக் கழற்றிவிட்டு அவன் கத்தினான். ஷாஹீனின் பிடிவாதத்தைக் கண்ட வாஹித் ஹுசேன் அவனை மடியில் எடுத்துக் கொண்டார். சிறிய நவாபின் விருப்பத்திற்கு மாறாக நடக்க வேண்டாம் என்று ஆயாவுக்கு ஆணையிட்டார். அவருக்குப் பேரன்மேல் கொள்ளைப் பிரியம்; நன்றாகப் படித்து வளர்ந்துவிட்ட மகனை விடப் பிரியம்! "அசல் தொகையைவிட வட்டியே எல்லாருக்கும் பிடிக்கும்" என்று அவர் சிரித்தவாறு சொல்லுவார்.

"ஓ கைசர்! பாப்பாவின் துண்டு எடுத்துவா" என்று ஆயா குரல் கொடுத்ததும் கைசர் ஓடோடி வந்தாள். ஒன்பது பத்து வயது நிரம்பிய ஒல்லியான பெண் அவள். கசங்கிய பாவாடையும், கிழிந்து அழுக்கடைந்த மேல்சட்டையும் அணிந்திருந்தாள். அவள் முகத்தைப் பார்க்கும்போது, அவளுடைய ஒளி மிகுந்த கண்கள் மீதுதான் கவனம் செல்லும். அவை தீபங்களைப்போல் பிரகாசித்தன. அவள் திரும்பிப்போகும்போது அவளது பின்னல்

கவனத்தை ஈர்க்கும். இத்தனை சிறிய குழந்தைக்கு இத்தனை நீளமான தலை முடியா!

கைசர் வாஹித் ஹுசேனுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள். அவர் அவளைக் கவனமாக நோக்கினார்; இவள் இவ்வளவு வளர்ந்துவிட்டாளே என்று அவருக்கு வியப்பாக இருந்தது.

"இவள் பாத்திமா பேகத்தின் மகள் அல்லவா?" கைசர் அங்கு அடிக்கடி வருவாள் என்றாலும் வாஹித் ஹுசேன் நீண்ட காலமாக அவளைப் பார்க்கவில்லை.

"ஆமாம் அண்ணா" பாத்திமா பேகம், அரிசியைச் சுத்தம் செய்தவாறு தலைமேல் முக்காடு போட்டுக்கொண்டு பின்புறமாக வந்து நின்றாள்.

"இவள் இவ்வளவு பெரியவளாகிவிட்டாள் அண்ணா, படிக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறாள். என்ன செய்வது? இவளுடைய அப்பாவை எதிர்பார்த்து அலுத்து விட்டாள்", அவள் பயபக்தியுடன் மிகவும் தாழ்ந்த குரலில், வெகுகாலமாகத் தனது மனத்தில் இருந்த வேண்டுகோளைச் சமர்ப்பித்து விட்டாள். வாஹித் ஹுசேன் ஷாஹீனைச் சமாளித்தவாறு மௌனமாக அதைக் கேட்டார்.

"ஆனால் கைசரின் அப்பா இதுவரை..." பாத்திமா பேகம் வெட்கமும் கவலையும் மேலிட, தனது பேச்சை முடிக்கவில்லை.

"அது சிரமம்தான் பாத்திமா பேகம்" வாஹித் ஹுசேன் அவளுக்கு ஆறுதல் கூறினார். "பாவம். அஹமத் ஹுசேன் என்ன செய்ய முடியும். குலாம் ரசூலை விட்டுவிட்டால் வயலில் வேலை செய்யும் மற்றவர்களும் தங்களை விட்டுவிடுமாறு வற்புறுத்துவார்கள். நீயும் மகளை அழைத்துக்கொண்டு ஔரங்காபாத்திற்குச் சென்றுவிடுவதே நல்லது என்று நான் சொல்வேன்."

"உண்மைதான் அண்ணா. ஆனால் கைசருக்கு அங்கு செல்வதில் விருப்பம் இல்லை. உஜாலா அண்ணியிடம் அவளுக்குப் பயம். இந்தப் பாழாய்ப் போனவள் என்னை எங்கும் நிம்மதியாக இருக்க விடுவதில்லை" பாத்திமா பேகம் பெருமூச்சு விட்டாள். பிறகு அரிசியைச் சுத்தம் செய்வதில் முனைந்து விட்டாள்.

மலர்ச் செடிகளின் நடுவே வளர்ந்துவிட்ட முட்புதர்தான் இந்தப் பாத்திமா பேகம். வாஹித் ஹுசேனின் தந்தை குழந்தைப் பெருக்கத்தைக் கண்டு அஞ்சி, வேறொரு இரக்கமற்ற காதலியின் கவலையில் மூழ்கியிருந்த சமயம், மனமகிழ்வுக்காக பாத்திமா பேகத்தின் தாயை மணந்துகொண்டார். ஓராண்டு முடியும் முன்பே அந்த மனைவியும் கணவனின் முகத்தைப் பார்த்து வாந்தி எடுக்க ஆரம்பித்துவிட்டாள். இந்தச் செய்தியைக் கேட்டதும்

நவாப்சாஹிப் கோபம் மேலிட அவளை ஓர் அறையில் பூட்டிவிட்டார். பிறகு ஒருநாள் மகள் பிறந்திருக்கிறாள் என்ற செய்தியைக் கேட்டதும் அவர் சக்தி இழந்துவிட்டார். அதற்குப் பிறகு அப்பாவைப் புதைகுழிக்குக் கொண்டு செல்வதற்காகவே மக்கள் அவரை எடுத்தார்கள் என்று வாஹித் ஹுசேன் கூறுவார். பிறகு வாஹித் ஹுசேனும், அஹ்மத் ஹுசேனும் தந்தையின் உயிலைப் பார்த்தபோது அதில் எங்கும் பாத்திமா பேகமின் தாயின் பெயர் காணவில்லை; மேலும் அவளை அவர் திருமணம் செய்ததற்கான சான்று எதுவும் கிடைக்கவில்லை.

இனி வாழ்நாள் முழுவதும் இந்தப் பேய் இந்த வீட்டை விட்டு அகலாது என்றுதான் அஹ்மத் ஹுசேன் நினைத்தார். ஆனால் வாஹித் ஹுசேன் கருணை உள்ளத்துடன் பாத்திமாவின் அன்னைக்காக மாத உதவிப் பணம் நிர்ணயித்து விட்டார். ஆதரவற்ற பெண்களின்பால் உதவிக்கரம் நீட்டுவது இறைவனின் விருப்பத்தைப் பெறும் நற்காரியமன்றோ! பிறகு பன்னிரெண்டு பதிமூன்று வயது நிரம்பிய பாத்திமா பேகத்தின் திருமணத்தை, அஹமத் ஹுசேனின் வயல்களில் வேலை செய்த குலாம் ரசூலுடன் முடித்துவிட்டார். இதை அவர் தனது சொந்தப் பணத்திலேயே செய்து முடித்தார். ஆனால் இத்தனை பெரிய ஜாகீர்தாரின் 'வாய் சொல் மூலம்' தங்கையாகிவிட்ட ஒருத்தியுடன் மணம் செய்வதற்காக, குலாம் ரசூலின் தந்தைக்குச் சிறிதளவு பணம் தேவைப்பட்டது. எனவே அவர் தனது மகனை அஹமத் ஹுசேனிடம் ஐநூறு ரூபாய்க்கு அடமானம் வைத்துவிட்டார். அந்நாட்களில் பண்ணையார்கள், இவ்வாறு கூலியாட்களை அடகுபிடித்துக் கொள்வார்கள். குறிப்பிட்ட காலம் வரை பகல் இரவு என்று பாராமல் உரிமையாளர்களுக்கு அவர்கள் ஊழியம் செய்ய வேண்டும். அதில் அவனுடைய சாப்பாடு. துணிமணி முதலியவை அடங்காது. அந்தக் காலத்திற்குள் வாங்கிய பணத்தைக் கொடுத்துவிட வேண்டும்; தவறினால் மீட்புக்காலம் நீட்டிக்கப்பட்டுவிடும். ஏதேனுமொரு பணியாளன் ஒப்பந்தத்தை மீறி ஓடிவிட்டால் கிராமத்தில் அவன் மதிப்பிழந்துவிடுவான், ஏனெனில் மனிதனின் நாக்குதான் எல்லாவற்றையும்விட நம்பத் தகுந்த பொருளாகும். தனது வாக்கை மீறிவிட்டவனை யார்தான் மதிக்க முடியும்? இதுதான் கிராமத்தின் நடைமுறைச் சட்டமாகும்; மற்ற சட்டங்களைப்போல் இதையும் ஒவ்வொருவரும் ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயநிலைதான். அதனால் குலாம் ரசூல் நாள் முழுவதும் அஹ்மத் ஹுசேனின் வயல்களில் வேலை செய்வான். அங்கு எந்த வேலையும் இல்லாவிட்டால் உஜாலா பேகம் தனது மாளிகையில் வேறு வேலைகளில் ஈடுபடுத்துவார்.

விறகு வெட்டுவது, முதலாளியின் காலைப்பிடித்துவிடுவது, பேகம் சாஹிபாவின் துணிகளைத் துவைப்பது, கடைகண்ணிகளுக்குச் சென்று பொருள்கள் வாங்கி வருவது, இதைப்போன்ற பல சில்லறை வேலைகள் இருந்தன. பாத்திமா பேகம் வந்துவிட்டால் இன்னொரு வேலைக்காரியை உஜாலா பேகம் வேலையிலிருந்து நீக்கி விடுவார். ஊதியம் கொடுத்து வேலைக்கு அமர்த்தினால், அவர்கள் எந்த நேரத்திலும் வேலையை விட்டுவிடலாம் என்ற பயம் இருக்கவே செய்யும். ஆனால் பாத்திமா பேகமும், கைசரும் போகவே மாட்டார்கள் என்பது உறுதியான விஷயம். அதனால் இரவும் பகலுமாக கையில் செருப்பை எடுத்துக்கொண்டு, வேலைகள் கொடுத்து, உஜாலா பேகம் அவர்களைத் திணறடிப்பார். பாத்திமா பேகம் தலைகுனிந்து எல்லாக் கொடுமை களையும் சகித்துக் கொள்வாள். ஆனால் கைசர் வாயாடியாகவும் துணிச்சல் காரியாகவும் இருந்தாள். பலமுறை அவள் உஜாலா பேகத்திற்குச் சரியான பதிலும் கொடுத்தாள். எனவே அவருடைய மிதியடிகளால் தண்டனை பெற்று அங்கிருந்து வெளியேறி யிருக்கிறாள். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்துவிட்டன. பாத்திமா பேகத்தின் கணவன் தனது கடனை அடைக்க முடியாமல் அடமானமாகவே இருந்தான்.

பாத்திமா பேகம் நகரத்திற்கு வந்துவிட்டாள். எங்கேயோ ஒரு குடிசையில் இருந்தாள்; வயிறு நிரப்புவதற்காக அப்பளமும் ஊறுகாயும் போட்டு விற்றாள். கைசர் பள்ளிக்குச் சென்றாள், எஞ்சிய நேரங்களில் பாத்திமா பேகம் தெரிந்தவர்கள், உறவினர்கள் வீடுகளுக்குச் சென்று சிறுசிறு ளேலைகளைச் செய்து சிறிதளவு பணம் கொண்டு வருவாள். ஒவ்வொரு மாதமும் நான்கைந்து நாட்கள், ஊறுகாய் போடவும், சாம்பார் பொடி பொருள்கள் தயாரிக்கவும், அரிசியைச் சுத்தம் செய்யவும் பீபியிடம் வருவாள். பீபியும் ஏதேனுமொரு சாக்கில் அவளுக்கு மூன்று நான்கு ரூபாய் கொடுத்து விடுவாள். பழைய கிழிந்த துணிகளுக்கும் தான தருமங்களுக்கும் அவளே உரிமைபெற்றவள் என்று கருதப்பட்டது. கைசருக்கும் சிறு சிறு வேலைகள் கொடுக்கப்படும். ஆனால் அவள் தனது தாய்க்கு நேர்எதிராக, துடிப்புள்ளவளாக இருந்தாள். வீதியில் ஒவ்வொரு குழந்தையுடனும் சண்டையிடத் தயாராகிவிடுவாள். அவள் சிறுமியாக இருந்தபோது இனிப்பு என்று சொல்லி சாந்த் அவளுக்கு 'குயினைன்' மாத்திரையைக் கொடுத்துவிடுவாள். ரஷீத் ஐம்பது பைசா கொடுப்பதாகச் சொல்லி வெயிலில் அவளை ஒரு மணிநேரம் நிற்க வைப்பான். ஒரு மணிக்குப் பிறகு அவள் பணம் கேட்கும்போது, கட்டைவிரலைக் காட்டி எல்லாரையும் சிரிக்க வைப்பான்.

“ஐய, இந்தச் சிறுமிக்கு இப்போதே எவ்வளவு பண ஆசை இருக்கிறது” பஷீர் பேகம் முகத்தைச் சுளித்தவாறு சொல்லுவாள்.

ரஜியா தனது சீர்வரிசையில் கொண்டு வந்த கிராமபோன் பெட்டியில் பப்பூ-சுரேந்தர் பாடிய இசைத்தட்டை வைப்பாள்.

“காதலைக் கற்றுத் தந்தவள் நீயே” என்ற பாட்டைக் கேட்கும்போது, அந்தப் பெட்டிக்குள் சாந்த் ஒளிந்துகொண்டு பாடுகிறாள், இது அவளுடைய குறும்புத்தனம் என்று கைசர் நினைப்பாள்.

வீட்டில் அனைவரும் கைசரிடம் வேலை வாங்கினார்கள். அத்தை தனது காலைப் பிடித்து விடுமாறு சொல்லுவாள்; பதூல் தனது குழந்தைகளை அவளிடம் கொடுத்துவிடுவாள். வாஹித் ஹுசேனுக்கு, பாத்திமா பேகத்தின் கையால் தயாரான ஊறுகாய்கள் மிகவும் பிடிக்கும். அதனால் பாத்திமா பேகம் மாங்காய் வெட்டினால் கைசர் மசாலாப் பொருள்களைத் தூளாக்கிக் கொடுப்பாள். அரிசி சுத்தம் செய்யப்படும். தாயும் மகளுமாகச் சேர்ந்து அடுப்பு மூட்டுவார்கள். மெத்தை தலையணைகளை சீராக்குவார்கள். அவர்களுடைய வாழ்க்கை மிகச் சூடான பாலாகிவிட்டது. விழுங்கவும் முடியவில்லை; துப்பவும் முடியவில்லை. அதற்குப் பலனாக மூன்று நான்கு நாட்கள் இலவசமான சாப்பாடு கிடைத்துவிடும். பஷீர் பேகமும் சாந்தின் பழைய துணிகளைக் கொடுத்து விடுவாள். ‘இவை சாந்துக்கு சிறியதாகிவிட்டன’ என்பாள். சாந்தும் கைசரும் சம வயதினரே, மேலும் கைசர் சாந்தைவிட உயரமாகவே இருந்தாள். ஏனென்றால் சாந்துடன் என்றுமே அவளுக்கு நல்ல உறவு இருந்ததில்லை; சாந்தின் பழைய ஆடைகளைப் பார்த்து அவள் கூச்சலிடுவாள், பற்களால் அவற்றைக் கடிப்பாள், சாந்தும் அவளுடைய தோழியரும் அவளை மிகவும் இகழ்ந்து பேசுவார்கள். தனது பாட்டி வீட்டிலிருந்து கைசர் பல பொருள்களைத் திருடிச் செல்கிறாள் என்றுதான் சாந்த் நினைத்தாள். ஒரு முறை அவளுடைய தலை அணியிழை காணாமற் போய்விட்டது. இன்னொரு முறை பாத்திமா பேகம் சென்றபோது ரஜியாவின் கைப்பையிலிருந்து ஒரு ரூபாய் குறைந்துவிட்டது.

பதூல் பேகத்திற்கும் பஷீர் பேகத்திற்கும் கைசரின் சடையைக் காணும்போதெல்லாம் பொறாமை வரும்; சாந்தின் முடி வளர வேண்டுமென்பதற்காகப் பஷீர் பேகம் பலவேறு மருந்துகளையும், வகை முறைகளையும் செய்து பார்த்துவிட்டார். இறுதியில் தன்னுடைய கணவனின் சொற்படி ஆங்கிலேயே முறையிலேயே முடிவெட்டி விட்டார். அதனால் பஷீர் பேகம் பலமுறை பாத்திமா பேகத்தை இடித்துக் கூறினாள்.

“பாத்திமா அத்தை! நீண்ட முடி அவப்பேறின் அறிகுறி என்றுதான் மக்கள் சொல்வார்கள். முடியை வெட்டி விடுங்கள். உங்கள் ஏழ்மையும் அகன்று விடும்.”

சில சமயங்களில் சிரித்துச் சொல்வாள். “கைசரின் சடை நீளமாக இருக்கிறது அல்லவா. கணவன் அந்த முடியைப் பிடித்து வெளியே தள்ளுவதற்குச் சுலபமாகிவிட்டது.”

இதைக்கேட்டு இரண்டு சகோதரிகளுக்கும் சிரிப்பு வந்துவிடும். பிறகு பதூல் பேகம் சிரித்தவாறே சொல்லுவாள்:

“இந்த கைசரின் நாக்கும் நீளமாகவே இருக்கிறது. புகுந்த வீட்டில் ஒரு நாளும் இவள் தங்கவே மாட்டாள்.” பிறகு அமைதியாக இதையும் கேட்டு வைப்பாள்: “நீங்கள் ஒவ்வொரு பைசாவுக்கும் கஷ்டப்படுகிறீர்கள். இத்தனை நீண்ட சடைக்காக எவ்வளவு எண்ணெய் வாங்க வேண்டும். சிறிது முடியை வெட்டி விடுங்கள்.”

ஆனால் பாத்திமா பேகம் எதற்கும் மறுமொழி தருவதில்லை; தலையில் முந்தானையைச் சரிப்படுத்திவிட்டு அரிசியிலிருந்து சிறு கற்களைப் பொறுக்குவதில் ஈடுபட்டுவிடுவாள்.

“நீங்கள் வெட்டுவதில்லை என்றால் நானே வெட்டி விடுகிறேன்,” பஷீர் பேகம் இங்கும் அங்கும் கத்தரிக்கோலைத் தேடுவாள்.

வாஹித் ஹுசேன் முற்றத்திலிருந்து அறைக்குள் வந்தபோது ரஜியாவின் நிலை சற்று தேறி இருந்தது. வெளியே பீபியும் நொண்டி அத்தையும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். பீபி சலாருவிடம் சண்டை போட்டார்.

“தக்காளி ஒன்றரை ரூபாய் கிலோ விற்கிறதே. நீ இரண்டு ரூபாய்க்கு வாங்கி வந்திருக்கிறாய்.”

‘காலம் எங்கே செல்கிறது’ வாஹித் ஹுசேன் பைப் புகையை இழுத்தவாறு சிந்தனை செய்தார்.

“போகட்டும் அண்ணி... மருமகளுக்கு உடம்பு சரியில்லை; சப்தம் போடாதீர்கள்” என்றாள் நொண்டி அத்தை.

“எப்படிப்போக விடுவது கவ்ஹர் பேகம், ஐம்பது பைசா சும்மாவா வருகிறது.”

சில வேளைகளில் பேகமாகிவிடும் மனோநிலையில் பீபி இருப்பாள், ஆனால் அது சரியான தருணமாக இருக்காது.

“நல்லதுதான்,” வாஹித் ஹுசேன் சிந்தனையிட்டார். அவருக்குத் தனது பாட்டனாரின் கதை ஒன்று நினைவுக்கு வந்தது. இது குடும்பத்தில் ஒவ்வொரு குழந்தைக்கும் தெரிந்த கதைதான். பாட்டனார் ஒருநாள் தனது தோட்டக்காரனிடம் பந்தயம் கட்டினார். இந்த ரோசா மொக்கு இந்தக் குறிப்பிட்ட நாளில்தான்

மலரும் என்று. அந்தக் குறிப்பிட்ட நாளில் நவாப் சாஹப் காலைத் தொழுகைக்குப் பிறகு, மணிமாலையை உருட்டியவாறு தோட்டத்திற்கு வந்தபோது தோட்டக்காரன் முன்னே வந்து, "ஐயா, அந்தப் பூவை இன்று நீங்கள் பார்க்கவில்லையா" என்று பணிவுடன் கேட்டான்.

"ஹூம், நன்றாகத்தான் இருக்கிறது"

"ஆனால் அன்று தாங்கள் பந்தயம் கட்டினீர்கள், இது வியாழக்கிழமைதான் மலரும் என்று. இன்று புதன்கிழமை தானே..."

"அடச்சீ போ, நான் உன்னுடன் எந்தப் பந்தயமும் கட்டவில்லை!" அவர் சற்றே தயங்கி நின்றார்.

"என்ன ஐயா," தோட்டக்காரன் கைகளைக் குவித்துத் தானே நாணமடைந்தான்.

"உனக்கு என்ன வேண்டும்?" அவர் மிக அலட்சியமாகவே கேட்டார்.

"ஹி.. ஹி.. தாங்கள் பெரியவர்கள் ஐயா" அவன் வாய் திறந்து எதுவும் கேட்கவில்லை.

"எழுத்தரைக் கூப்பிடு"

விடியற்காலையிலேயே அழைப்பு வந்துவிட்டதைக் கண்ட எழுத்தர் பதறியவாறு மூக்கு இறைக்க ஓடி வந்தார்.

"பெட்டியில் எவ்வளவு பணம் இருக்கிறது?" மணி மாலையை உருட்டியவாறு சைகையிலேயே அவர் கேட்டார்.

"ஐயா, நேற்றுத்தான் நிலங்களிலிருந்து ஒரு தொகை வந்தது. நாலாயிரத்து ஐநூறு, ஐயாயிரம் ரூபாய் இருக்கும்."

"அந்தத் தொகை முழுவதும் தோட்டக்காரனுக்குக் கொடுத்து விடுங்கள்..." அவர் கையாலேயே சைகை காட்டினார். தோட்டக்காரனும் இதர பணியாட்களும் எஜமானரின் ஆணைக்காகவே காத்திருந்தவர்கள்போல் இதைக் கேட்டதும் கலைந்து சென்று விட்டார்கள். அவர்களைப் பொறுத்தவரை இது ஏதும் வழக்கத்திற்கு மாறான அன்பளிப்பு இல்லை.

கல்ஹர் அத்தைக்குத் தெரியும். இந்தத் தோட்டக்காரனின் மகன் கல்வி கற்று ஏதோ ஒரு பணியில் அமர்ந்துவிட்டான். அவனுடைய மகன் மலீஷும் இப்போது ரஷீதுடன் கட்டிட வேலை செய்து வருகிறான். ரஷீதுடன் வாணிபத்திலும் கூட்டு சேர்ந்து இருக்கிறான். அவர்களுக்கு எதிரிலேயே புதிய முறையில் கட்டப்பட்ட பங்களாவும் அவர்களுடையது. இருவரும் நெருக்க மாகப் பழகுகிறார்கள். ஏனெனில் வாஹித் ஹூசேனுக்கும் அந்தக் குடும்பத்திற்கும் இடையே நல்லுறவு இருக்கிறது. மலீஷின் அப்பாவை வாஹித் ஹூசேன் வெறும் 'ராஜா' என்றுதான் அழைக்கிறார். ஹோலி, தீபாவளி, தசரா போன்ற விழா நாட்களில்

எல்லாரும் மலீஷமின் வீட்டுக்குப் போகிறார்கள். தீபாவளி இரவில் மலீஷமுடன் ரஷீத் தவறாமல் சூதாடுகிறான். பூசையைப் பார்ப்பதற்காக இருவரும் ஒன்று சேர்ந்து சிகந்தராபாத்திற்குப் போகிறார்கள். பூசைக்காக அலங்கரித்துக்கொண்டுவரும் பெண்களைச் சீண்டுவதும், எவளையாவது ஒருத்தியை மயக்கி அழைத்து வருவதும் அவர்களுக்கு வழக்கமாகி விட்டது.

மலீஷமின் மகனான நாராயணா, சாந்துடன் ஒரே வகுப்பில் படிக்கிறான். இருவரும் நன்றாகப் பழகுகிறார்கள். நாராயணாவுடன் விளையாடுவதற்காக ஒவ்வொரு விடுமுறை நாளிலும் சாந்த் கவிதாலயத்துக்கு வந்து விடுகிறான்.



"என்ன கவ்ஹர் பேகம், உட்கார்ந்தபடியே தூங்கி விட்டீர்களா?" பீபி அவரைக் குலுக்கினார். அவள் திடுக்கிட்டு எழுந்தாள்.

"என்ன, மீண்டும் வலி அதிகமாகி விட்டதா" அவள் திகைப்புடன் கேட்டாள்.

"பதூல் பேகத்தின் புகுந்த வீட்டிலிருந்து ஆள் வந்திருக்கிறது."

"ஆ!" என்ன செய்தி கொண்டுவந்திருக்கிறானோ!

முன் முற்றத்தை எல்லாரும் முற்றுகையிட்டனர். நடுவில் வெள்ளை வெளேரென்ற சீருடையும், தலைப்பாகையும் அணிந்து இடையில் 'அலீப் லைலா' குறியிட்ட தோல்பட்டையைக் கட்டிய கருத்த பணியாளன் நின்றிருந்தான். அவன் கையில் முத்திரை யிட்ட ஒரு பெரிய உறை இருந்தது. பதூலின் மாமனார் வீடான 'அலீப் லைலா'வில் மக்கள் இதே பகட்டுடன் வாழுகிறார்கள். அங்கு ஒவ்வொரு விஷயத்திலும் சட்ட திட்டங்கள் கடைப் பிடிக்கப்பட்டன. இவை ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அவர் களுடைய முப்பாட்டனாரால் ஏற்படுத்தப்பட்டவை.

பதூலின் மாமனார் அல்ஹாஜ் மிஸ்கீன் அலி ஷாஹ் தோதா கஷ்மியின் பிடியிலிருந்து எல்லா வரையறைகளையும் காலக் காற்றுகள் அடித்துச் சென்று கொண்டிருந்தன. பாட்டனார் காலம் வரை அவர்களே எல்லா நவாப்புகள், பண்ணையார்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பவர்களாக இருந்தார்கள். ஏனென்றால் ஹஜரத் ரஹ்மத் ஷாஹ்வுடைய தர்காவின் பொறுப்பு அவர்களிடமே இருந்தது. இது தலைசிறந்த பெரியாரின் கல்லறையாகும். அதனால் எல்லா மதத்தினரும் பெரும் நம்பிக்கையுடன் இங்கு வந்தார்கள்.

இது என்றுமே குறையாத செல்வமாகும். செல்வந்தர்களின்

சிக்கல்களும், நிலக்கிழார்களின் நிறைவு பெறாத வேலைகளும், நன்கு சீர்படுத்தும் குத்தகைகளும் அவர்களிடம் இருந்தன. அல்ஹாஜ் மிஸ்கீன் அலி ஷாஹ்வின் கரங்களில் அபூர்வ சக்தி இருப்பதாக எல்லாருமே எண்ணினார்கள். ஆனால் ஏனோ இப்போது அந்தச் சக்தியின் சிறப்பு குறைந்துகொண்டே போய் விட்டது. தர்காவிலிருந்து மக்கள் வெறுங்கையுடன் திரும்பிக் கொண்டிருந்தார்கள். மிஸ்கீன் அலிஷாஹ் தோதா சஷ்மியும் இதையே சிந்தித்துக் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தார். இந்தப் பழக்க வழக்கங்களில் சாயும் தூண்களை எப்படி நிலை நிறுத்துவது? நான்கு திக்குகளிலும் சம்பிரதாயங்கள், பல நடை முறைகளின் அமைப்புகள் கலைந்த வண்ணம் இருக்கின்றன.

இன்று நிலை யாதெனில் தனது நான்கு மனைவிகளை அவர்களுடைய பதினெட்டுக் குழந்தைகளுடன் அலீப் லைலாவில் அவர் அடைத்துவிட்டார். கண்களை மூடியவாறு, மாரடைப்பு களுக்குத் தாக்குப் பிடித்துத் தர்காவின் ஓர் அறையில் காலம் கழித்தார். தர்காவும் அலீப் லைலாவின் வட்டத்திற்குள்தான் இருந்தது. உலகின் கேளிக்கைகளிலிருந்து தர்காவைத் தனிப் படுத்துவதற்காக அரசாங்கம் அளித்த பூமியில் மிஸ்கீன் அலி ஷாஹ்வின் பாட்டனார் பிரம்மாண்டமான மாளிகை ஒன்றைக் கட்டி முடித்து, அதற்கு 'அலீப் லைலா' என்று பெயரும் சூட்டிவிட்டார். தனது சந்ததியினர் தர்காவை எல்லா ஆபத்து களிலிருந்தும் காப்பாற்றுவதற்காக இதே மாளிகையில் வசிக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். ஒருமுறை ஒரு பெரியார் மிஸ்கீன் அலி ஷாஹ்வின் பாட்டனாரை ஒரு குடிசையில் சந்தித்தாராம். அப்போது "போ, உனக்காக அலீப்லைலா கதையில் வரும் மாளிகையைப் போன்றதொரு சிறந்த கட்டிடத்தை உண்டாக்கி விடுவோம்" என்று மொழிந்தாராம். எனவே அவர் தனது மாளிகையின் பெயரை 'அலீப்லைலா' என்றே வைத்துவிட்டதாகச் சொல்கிறார்கள்.

இப்போது மிஸ்கீன் அலி ஷாஹ் தோதா சஷ்மி தர்கா விலேயே கிடந்தார். நகரில் என்ன நடந்தாலும் - உறவினர் வீட்டுத் திருமணம், மரணம் எதுவாக இருப்பினும் - அவர் வெளியே செல்வதில்லை.

இந்தத் தர்காவைப் பற்றிய நிகழ்ச்சி ஒன்றை எல்லாரும் அறிவார்கள். ரஹ்மத் அலிஷாஹ் ஒருமுறை மிஸ்கீன் அலி ஷாஹ்வின் பாட்டனாருடைய கனவில் தோன்றி, 'நான் குறிப்பிடும் இடத்தில் எனது கல்லறையைத் தோண்டி, அங்கு தர்கா கட்டினால் உனது சந்ததியினர் பசி, பிணியிலிருந்து நிரந்தரமாக விடுதலை பெறுவார்கள்' என்றாராம். எனவே அந்தத் தர்காவில்

*வேண்டுதல்கள் செய்ய பெரிய பெரிய மனிதர்களும் வந்து தலை குனிகிறார்கள்.*

*யாரேனும், மிஸ்கீன் அலிஷாஹ்விடம், வெளியே செல்லாத தற்கான காரணத்தைக் கேட்டால், அவர்தனது கைகளை உயர்த்தி 'எனக்குக் கிடைக்கும் ஆணைப்படி நடந்து கொள்கிறேன்' என்பார். இதனால்தான் வழக்குரைஞர்களும் தரகர்களும் சாதிக்க முடியாத காரியங்களை மிஸ்கீன் அலி ஷாஹ்வின் தாயத்துகளும், மந்திரங்களும் செய்துவிடுகின்றன என்று எல்லாரும் சொல்லிக் கொள்கிறார்கள்.*

*அலீப்லைலாவின் பகட்டு ஆரவாரத்தைப் பற்றியும் பல கருத்துகள் இருந்தன. ரஹ்மத் அலிஷாஹ் ஒவ்வொரு இரவும் மிஸ்கீன் அலிஷாஹ்வின் தலையணை அருகில் ஆயிரம் ரூபாய் கொண்ட பையை வைத்துவிடுகிறார் என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். மிஸ்கீன் அலிஷாஹ் 'ஜின்' எனும் ஆவிகளுக்குப் பாடம் சொல்லித் தருவதால்அவர்கள் ஒரு மூட்டை நிலக்கரியை அவருக்குக் கொடுக்கிறார்கள். அது காலையில் தங்கமாக மாறி விடுகிறது என்று சிலர் நினைத்தார்கள். ஆனால் இந்தக் கூற்றுகளை எவராலும் மறுக்க முடியவில்லை. ஏனெனில் அலீப்லைலாவின் பெண்களும் ஆண்களும் செய்த ஆடம்பரமும் பகட்டும் பெரிய பண்ணையார் வீட்டினரும் செய்யவில்லை.*

*இதனால் மிஸ்கீன் அலிஷாஹ் தோதா சஷ்மியின் அருட் செயல்கள் பெண்கள் மத்தியில் பிரபலமாகி இருந்தன. உயர் குடி மக்களும் ஏழைகள் வட்டாரமும் தனித்தனியாக இருப்பதுபோல், தர்காக்களும் ஆலயங்களும் வேறுபட்டு நிற்கின்றன.*

*ரஹ்மத் அலி ஷாஹ்வுடைய கல்லறையின் தங்கத்தாலான பின்னல் தடுப்பு, முத்துக்களால் செய்யப்பட்ட நிழற்குடை, மாளிகையின் ஒவ்வொரு செங்கல் எல்லாமே ஆஸிபியா அரசாட்சியை நிறுவிய அந்த வல்லாளர்களின் காணிக்கையாகும். அதனால் உயர்குடி பேகம்கள் அனைவரும் இங்கு வந்து தலை வணங்கினார்கள். தங்கள் சக்களததியரின் மரண ஓலையையும் இங்கு பெற்றுத் திரும்பினார்கள்.*

*பெரிய பெரிய நிலக்கிழார்கள் இங்கு வந்தார்கள். தங்கள் எதிரிகளின் தோல்விச் செய்தியைப் பெற்றுச் சென்றார்கள். இங்கு மங்கையரின் மடிகளும், ஆடவர்களின் கருவூலங்களும் நிரம்பின. 'உருஸ்' என்ற சந்தனக்கூடு நடக்கும் நாளில் ஆயிரம் ஏழைகளுக்கு அன்னதானம் செய்யப்பட்டது.*

*மிஸ்கீன் அலிஷாஹ் பணிவான நடையில் கூறுவார்: "இந்த ஏழை தனக்காகவே ஒவ்வொரு தானிய மணிக்கும் ஏங்குகிறான். இத்தனை மக்களுக்கும் உணவு வழங்கும் திறன் அடியேனுக்கு*

ஏது? எல்லாம் பெரியவரின் அருள்; அன்னாருடைய அன்புச் செயலே!"

மிஸ்கீன் அலிஷாஹ்வின் வெண்மையான முகம், சாயம் பூசப்பட்ட கருந்தாடி கொண்டு தலைமுடிகளுக்கு இடையே மதியைப்போல் பிரகாசித்தது. சரிகை போட்ட கறுப்பு மேல் அங்கியை அவர் அணிந்து, தலையில் கைக்குட்டையைக் கட்டி, கையில் தொழுகை மணிமாலையை எடுத்து, தனது செந்நிறமான பெரிய பெரிய கண்களைச் சற்றே விரித்து ஏதேனுமொரு மங்கையை ஆசீர்வதிக்கும்போது நான்கு புறங்களிலும் விசித்திரமான ஒளி பரவி விடுகிறது. வானுலகத்தினர் தங்கள் நீலநிற ஆடைகளில், பட்டு இறக்கைகளுடன் சுற்றி வருகின்றனர். வானவில்லின் பாதை மிஸ்கீன் அலிஷாஹ்வின் கால்களிலிருந்து ஏழாவது வானம்வரை ஒளிர்ந்து மின்னுகிறது!

பிறகு அவள் தன்னை மறந்து விடுவாள். பாவங்கள் பதிந்த உடல் சிதறி விடுகிறது. நிர்வாணமான ஆன்மா மிக்க நாணத்துடன் மிஸ்கீன் அலிஷாஹ்வினுள் இணைந்து விடவே விருப்பம் கொள்ளும்.

பெண்களின் அளவிலா பக்தியே மிஸ்கீன் அலிஷாஹ்வைக் கலவரப்படுத்தியது. முராத் அலியின் வாலிபமான பெண்ணுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது என்கிறார்கள். இரவுகளில் எழுந்து மிஸ்கீன் அலி ஷாஹ்வுக்கே அவள் குரல் கொடுத்தாள். அவளை வெகு நாளாக வருத்திய நோயைக் கண்ட முராத் அலி ஒருநாள் தனது மகளை அழைத்து வந்து மிஸ்கீன் அலிஷாஹ்வின் காலடியில் கிடத்தினார்.

ஓர் அந்நிய வாலிபமான மங்கையைத் தனது அறையில் எப்படி வைத்திருப்பது என்று மிஸ்கீன் அலி ஷாஹ் குழம்பினார். பிறகு அவருடைய தாராள மனப்பான்மை உதவியது. வேறு வழியின்றி அந்தப் பெண்ணை அவர் நிக்காஹ் செய்து கொண்டார்.

அலீப் லைலாவின் ஓர் அறை அவருக்காக ஒதுக்கப்பட்டது. பிறகு என்ன? மிஸ்கீன் அலி ஷாஹ்வின் இந்த அன்புச் செயலின் புகழ் பரவி விட்டது. எல்லாப் பண்ணையார்களின் பேகம் களுக்கும் ஒரு வழி தென்பட்டு விட்டது.

இந்த இள மங்கையரும் வாலிப எழுச்சியின் மயக்கத்தில், மிஸ்கீன் அலி ஷாஹ்வின் முகத்தைப் பார்த்ததும் 'புறா'க்களாகத் துடித்தார்கள். அதனால் 'அலீப் லைலா'வின் எல்லைக்குள் புதிய புதிய அறைகள் தோன்றின. பாவம் மிஸ்கீன் அலி ஷாஹ்! வேறு வழியின்றி நன்றியுள்ள பழைய மனைவியருக்கு விவாகரத்து வழங்கினார். ஏனென்றால் இறைவன் ஒரு சமயத்தில் நான்கு

மனைவியரைவிட அதிகமாக வைத்துக் கொள்வதைத் தடைசெய்து விட்டானே!

ஆனால் 'குற்ற மீட்பின்' தேடுதலில் அலையும் இந்த ஆன்மாக்கள் அந்த அறைகளிலும், வலையில் சிக்கிய மீன்களைப் போல் தடுமாற்றம் கண்டன. சுவர்களுடன் தலைகள் மோதிக் கொண்டன; ஆனால் மிஸ்கீன் அலி ஷாஹ்வின் முகத்தைக் கண்டதும் மயக்கத்தில் ஆழ்ந்துவிடுகின்றன.

மிஸ்கீன் அலி ஷாஹ்விடம் நிறைய வைரங்கள் இருக் கின்றன. ஒவ்வொரு பெண்ணும் வைரத்தை விழுங்கி விட்டுச் செத்துவிடுகிறாள் என்று மக்கள் சொல்கிறார்கள்.

வாஹித் ஹுசேனும் அலீப் லைலாவின் இந்த ஆடம் பரங்களின் கதைகளைக் கேட்டபோது அவரது வாயில் நீர் சுரந்தது. ஆதீனத்தின் ஓட்டம் ஆட்டங்கண்டபோது பாதுகாப்புக்காக அவர் நான்கு புறங்களிலும் கைகால்களை அசைத்தார். ரஷீதின் திருமணத்தை நகரின் மிகப்பெரிய வணிகரின் மகளான ரஜியாவுடன் முடித்தார். பஷீர் பேகமும், பதூல் பேகமும் கவிதாலயத்தின் வரலாற்றுப் புகழின் எழிலும் கவர்ச்சியும் கொண்டிருந்தார்கள். அதனால் பஷீர் பேகத்திற்காக அவர் சீமை சென்று திரும்பிய ஹைதர் அலிகானைத் தேர்ந்தெடுத்தார். பஷீர் பேகம் ஆணவமும் கூர்மையான நாக்கும் கொண்டவர். ஆனால் பதூல் பேகம் தனது அன்னையின் முகத் தோற்றத்துடன் அதே சுபாவமும் பெற்றிருந்தார். அமைதியின் உருவம் அவள் எனலாம். தன்னை மறந்து நிலைமைகளுக்கு ஏற்றவாறு பணிந்து போகிறவள். எனவே மிஸ்கீன் அலி ஷாஹ் தனது மகனான ஹுமாயூன் அலி ஷாஹ்வுக்காகப் பதூல் பேகத்தைக் கேட்டபோது, கவிதாலயத்தில் தீபங்கள் ஒளி சிந்தின.

இப்போது பதூல் பேகம் பிறந்தகத்திற்கு வரும் போதெல்லாம் இரண்டு காவலர்களும் ஒரு வேலைக்காரியும் அவருடன் வந்தனர். தாய்வீடு தவிர வேறெங்கும் போவதற்கு அவருக்கு அனுமதி இல்லை; மக்கள் ஆன்ம குருக்களைத் தேடித்தான் வரவேண்டுமே தவிர அவர்கள் தங்களுடைய படிக்கட்டுகளைத் தாண்டக்கூடாது! தாய்வீடு செல்லவேண்டுமென்றால் ஒரு மனுவை பதூல் பேகம், மிஸ்கீன் அலி ஷாஹ்வின் அவையில் சமர்ப்பிக்க வேண்டும்; அப்போதுதான் அது பரிசீலிக்கப்பட்டு ஆணைகள் பிறப்பிக்கப் படும். இதற்கான அவசியம் ஏற்படுவதற்கு ஒரு காரணமும் இருந்தது. மிஸ்கீன் அலி ஷாஹ்வின் பல மனைவியர் தங்கள் தாய்வீடுகளுக்குச் செல்வதாகச் சொல்லி தப்பியோடிவிட்டார்கள்! இதனால் பல நாட்கள் அரசாங்க அலுவலகங்களின் ஏடுகளில் அதைப் பதிவு செய்வதில் செலவழிந்தன. அலீப் லைலாவில்

ஒவ்வொரு விஷயத்திற்கும் நேரம் குறிக்கப்பட்டிருந்தது.

இது பக்கிரியின் குடில் அல்லவா. இங்கு இறைவனின் விருப்பப்படியே ஒவ்வொரு அடியும் எடுத்து வைக்க வேண்டும் என்பார் மிஸ்கீன் அலி ஷாஹ். தன்னிச்சையாகச் செயல் படுவதற்கு இது ஒரு நிலக்கிழாரின் மாளிகை அல்லவே!

பதூல் பேகமும், ஹுமாயூன் அலி ஷாஹ்வும் வாஹித் ஹுசேனின் வீட்டிற்கு வரும்போது, பல நாட்களுக்கு முன்பே கடிதப் பரிமாற்றம் நடைபெறும். குறிப்பிட்ட நேரத்தில் ஹுமாயூன் அலி ஷாஹ் தென்படுவார். சரிகைத் தலைப்பாகையுடன் நறு மணம் வீச, பளபளக்கும் வைர மோதிரம் அணிந்த கைகளால் முகத்தை கைக்குட்டையால் துடைத்தவாறு காரிலிருந்து இறங்கி வருவார். அந்தக் காரில் 'அலீப் லைலா' பெயர்ப் பலகையும் பளிச்சிடும். அவர்களுடன் வரும் பழங்கள், இனிப்புகள் மீதும் அலீப் லைலாவின் பெயர் குறித்த சீட்டு இருக்கும். இவை எல்லாம் தர்காவின் பொருள்களே. ஏனென்றால் இது பெரியார் ரஹ்மத் அலி ஷாஹ்வின் கொடை. இதில் என்னுடையது எதுவும் இல்லை என்று பணிவுடன் மிஸ்கீன் அலி ஷாஹ் கூறுவார்.

பதூல் பேகத்தின் திருமணம் முடிந்து இது ஐந்தாவது ஆண்டு ஆகும். இப்போது அவள் மிஸ்கீன் அலி ஷாஹ்வுக்காக மூன்றாவது வாரிசை உருவாக்கிக் கொண்டிருக்கிறாள்.

# 3

அலீப் லைலாவிலிருந்து இன்று வந்த மடல் வழக்கம்போல் சொல்வன்மை கொண்டதாக இருந்தது. முதலில் பீபி அதைக் கவனமாக நோக்கினார். என்ன எழுதப்பட்டிருக்கும் என்று ஊகம் செய்தார். பிறகு அது ரஜியாவிடம் அனுப்பப்பட்டது. அவளும் தன்னுடைய வயிற்றில் எழும் புயலை அடக்கிக் கொண்டு பலமுறை படிக்க முயற்சி செய்தாள். மெட்ரிக் வரை அவள் படித்திருந்தாலும், அவளுக்கு உருது மொழி சிறிதளவே தெரியும்; ஆனால் நொண்டி அத்தையோ குற்றம் கண்டுபிடிக்கும் குணம் உள்ளவராயிற்றே. அதனால் பலமுறை தாழ்ந்த குரலில் மருமகளின் படிப்பு குறித்து நம்மை ஏமாற்றி விட்டார்கள் என்று அவள் சொல்லிவந்தாள்.

இறுதியில் வெளியிலிருந்து ரஷீதை அழைத்து வந்தார்கள். எல்லாத் தேர்வுகளிலும் முதன்மையாக வந்தவன். அப்படி

யிருந்தும் அவனால் அந்த மடலைச் சரியாக வாசிக்க முடியவில்லை. என்றாலும் "மருமகள் மூன்றாவது குழந்தைக்குத் தாயாகப் போகிறாள். (எனவே அவருடைய அன்னையாரும் இதர மங்கையரும் இதன் மூலம் அறிவிக்கப்படுகிறார்கள்) இந்தக் கடிதம் அந்த அறிவிப்புக்கான சான்றாகும்; தேவைப்படும்போது பயன் படவும் கூடும்" என்ற செய்தி அதில் இருந்தது.

"இது அலீப் லைலாவின் விநோதமன்றோ!" என்றாள் நொண்டி அத்தை.

"இந்த மடல் நேற்று அனுப்பட்டிருக்கும். இதுவரை பதூல் பேகத்தின் குழந்தைக்கும் பனிரெண்டு பதிமூன்று மணி வயதாகி இருக்கும்."

"ஆண்டவன் அருள் புரியட்டும்" பாத்திமா பேகம் தலைமீது கிழிந்த முந்தானையைச் சரிசெய்தவாறு வந்தாள்.

"அண்ணி! நீங்கள் பேரக்குழந்தைகளுடன் விளையாட வேண்டும். இறைவன் அருளால் தாயும் சேயும் நலமாக இருப்பார்கள். அண்ணி! பதூல் பாஷாவைப் பார்க்க நானும் உங்களுடன் வரட்டுமா?" அவள் ஆர்வத்துடன் கேட்டாள்.

"நீங்களா?" ரஜியா அவள் மீது கடுமையான பார்வையை வீசினாள். கிழிந்த, பழைய, அழுக்கேறிய சேலை. மிதியடி இல்லாத கால்கள், பாத்திமா பேகம் வரவேண்டுமென்றால், பீபி அவளுக்குத் தனது ஆடை ஏதேனும் கொடுக்க வேண்டும். கைசருக்காகவும் சாந்தின் உடை கொடுக்கப்படவேண்டும். பிறகு அவளுடைய தலைக்கு எண்ணெயும் வேண்டும். இத்தகையவர்கள் அங்கு போவதால் என்ன பயன்?

"இப்போது நீங்கள் எங்கே போகிறீர்கள் பாத்திமா பேகம், எல்லா வேலைகளும் தாறுமாறாகிவிடும்—இன்று ரஜியாவின் உடல்நிலையும் சரியில்லை!"

பீபி இந்த வீட்டிற்கு வந்து முப்பது ஆண்டுகளாகிவிட்டன. ஆனால் வீடு சம்பந்தப்பட்ட ஒவ்வொரு விஷயத்திற்கான விடையும் நொண்டி அத்தையே கொடுப்பாள். இப்போது மருமகளும் கொடுக்கிறாள்; பீபி தலையை அசைத்து இசைவு மட்டும் தெரிவிப்பார்.

"அப்படியா, நல்லது" பாத்திமா பேகம் பயந்து ஒதுங்கி விட்டாள். பெரும் ஆர்வத்துடன் தனது விருப்பத்தை வெளிப் படுத்தினாள், ஆனால் உடனடியாக நொண்டி அத்தை மறுப்பு தெரிவிப்பாள் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

"அம்மா, அம்மா, நானும் போகிறேன்," வீட்டில் எங்கேயோ செல்ல ஏற்பாடுகள் நடக்கின்றன என்பதை அறிந்த கைசரும் துள்ளினாள்.

"மம்மி! பாருங்களேன், கைசர் உங்களுடனும் பீபியுடனும் போவதற்காகப் பிடிவாதம் பிடிக்கிறாள்" சாந்த் தனது அன்னை பஷீர் பேகத்திடம் முறையிட்டாள்.

"இவள் இப்படிச் சொன்னால் கேட்க மாட்டாள். இப்போதே எரியும் கட்டையுடன் இவளை விசாரிக்கிறேன்" பஷீர் பேகம் பற்களின் மிஸ்ஸி பொடியைத் தடவி, சுண்ணாம்பு டப்பியில் இருந்த கண்ணாடியில் தனது முகத்தைப் பார்த்துக் கொண்டாள்.

"சும்மா இரு!" பாத்திமா பேகம் அவசரமாக எழுந்து கைசரின் கையைப் பிடித்து இழுத்தவாறு சமையலறையை நோக்கிச் சென்றாள். ஆனால் கைசரின் துடிப்பு அடங்கவில்லை; அதனால் பஷீர் பேகத்தின் சினமும் அதிகரித்து விட்டது. அவருக்குக் கைசரின் நீண்ட முடி சிறிதும் பிடிக்கவில்லை. அதே சடையைப் பிடித்து இழுத்துப் பலமுறை அவர் கைசரை அடித்து இருக்கிறாள்.

"இரு. நானே வருகிறேன்" பஷீர் பேகம் தோள்வரை இருந்த தனது முடியைச் சீவினாள். அவரது முடி எந்த மருந்தாலும் சிறிதும் வளரவில்லை; அதனால் சாந்தும் கைசரின் நீண்ட முடியைப் பார்த்து பொறாமைப்பட்டாள். தனது அன்னையின் மடியில் படுத்தவாறு பலமுறை அவள் கேட்டிருக்கிறாள்.

"மமமி! என் முடியும் கைசரின் சடையைப்போல் எப்போது வளரும்."

"எனக்கு முன்னால் அந்தப் பாழாய்ப் போனவளின் பெயரை எடுக்காதே" என்று பஷீர் பேகம் கோபத்துடன் சொன்னாள்.

"நானும் சின்னக் குழந்தையைப் பார்க்க வேண்டும்" கைசரின் பிடிவாதம் சிறிதும் தளரவில்லை.

"அல்லாஹ்! கருணை காட்டு. என் மகள் நலமுடன் இருக்க வேண்டும்" பீபி வாயினுள் முணுமுணுத்தவாறு, போவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கத் தொடங்கினார்.

"இந்த நேரத்தில் இப்படி அழுது எதற்காக ஆர்ப்பாட்டம் செய்கிறாய். உன்னைத் தீ பொசுக்கட்டும்" பாத்திமா பேகம் கைசரைப் பலமாக அடித்தாள். அதனால் அவளுடைய கூச்சலும அதிகரித்தது.

பிறகு பஷீர் பேகம் ஆசனத்தைவிட்டு எழுந்தாள். மறு வினாடியே அவள் முற்றத்தில் எதையோ தூக்கி எறிந்தாள். பாத்திமா பேகம் திரும்பிப் பார்த்தாள். அது கைசரின் சடை!

பீபியும் நொண்டி அத்தையும் தங்கள் இடங்களில் சிலையாகி விட்டார்கள். சாந்தின் சிரிப்பொலி மட்டுமே கேட்டது.

"நான் முன்பே சொல்லியிருக்கிறேன். என் முன்னால் பிடிவாதம் செய்யாதே என்று. என் கோபம் மிகவும் கெட்டது..." பஷீர் பேகம் மூச்சுவிட்டவாறு கத்திரிக்கோலை ஊன்றினாள்.

பீபி மிகவும் சிரமத்துடன் கண்களை உயர்த்தி மகளைப் பார்த்தார். அவர் தாமே பாலூட்டி இந்தச் சிறிய பாம்புகளை வளர்த்திருக்கிறார். பிறகு அவர் பார்வை நொண்டி அத்தையின் திசையில் சென்றது. இந்நிலையில் சிரிப்பதா அழுவதா என்பதை அவள்தானே சொல்ல வேண்டும்.

ஆனால் நொண்டி அத்தை தலையைப் பிடித்தவாறு, உட்கார்ந்திருந்தாள்.



"நமது முர்ஷிதுகளில் யாருமே இதுவரை சினிமா பார்க்கவில்லை. ஆனால் உங்கள் மகள் என் மகனையும் வழி தவறச் செய்து விட்டார். அவன் தனது மனைவியின் பேச்சை வேதவாக்கு என நம்புகிறான்."

வெளியே பதூல் பேகத்தின் மாமியார் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். உள்ளே பலகணி இல்லாத இருண்ட அறையில் பீபி, பஷீர் பேகம் ஆகியோரின் மூச்சுத் திணறியது. எதிரே அகலமான கட்டிலின் மீது பதூல் பேகம் சோர்வடைந்த நிலையில் கிடந்தாள் - பல மற்போர் வீரர்களுடன் சண்டையிட்டுத் தோல்வியடைந்ததுபோல். பற்களால் உதடுகளைக் கடித்ததால் பல இடங்களில் ரத்தமும் தெரிந்தது. வேதனையின் அலை சற்றே தணியும்போது அவள் ஆண்டவனையோ பீபியையோ அழைப்பாள். இருளில் எரிந்த மெழுகுவத்தியின் ஒளி இருட்டு உணர்வைச் சற்றே குறைத்து விட்டது.

மந்திரவாதிக் கிழவி போன்ற பயங்கர உருவம் கொண்ட மருத்துவச்சி புது மூச்சுடன் பதூல் பேகத்தைத் தாக்க முயன்ற போது பீபி அவளைப் பிடித்து இழுத்தார்.

"நில்லுங்கள்"

அலீப் லைலாவுக்கும் கவிதாலயத்துக்கும் இடையே இருந்த பல வேற்றுமைகளில் இதுவும் ஒன்றாகும். அலீப் லைலாவில் இதுவரை எந்த டாக்டரும், பெண் டாக்டரும்கூட வரவில்லை; அவர்கள் டாக்டர்களிடம் சிகிச்சை பெறுவதை விரும்பவில்லை; ஒவ்வொரு நோய்க்கும் தனித்தனி மருத்துவர் என்ற மரபும் அப்போது இருக்கவில்லை.

நூற்றுக்கணக்கான ஆங்கிலப் பெயர்கள் கொண்ட எண்ணிக்கையிலாப் பிணிகளும், இன்னும் நடைமுறைக்கு வராத காலம் அது அதனால் எந்த ஊரிலும் நோய்க்கு மருத்துவம் இல்லையென்றால் ஹைதராபாத்துக்கு நோயாளியை அழைத்துச்

செல்லலாம் என்ற மனப்பான்மையும் உருவாகவில்லை. ஹார்ட் அட்டாக், பிளட் பிரஷர், கேன்சர் ஆகியவற்றால் சாகும் நபர்களைப் பற்றியும் மக்கள் கேள்விப்பட்டதில்லை.

அதனால்தான் பழைமைவாதிகளான குடும்பங்களின் பெண்ணை டாக்டருக்கு காட்டுவது குற்றமாகவே கருதப்பட்டது. ஆங்கில மருந்துகளில் மதத்தால் விலக்கப்பட்ட பொருள் கலக்கப்பட்டிருக்கிறது என்றும் நினைக்கப்பட்டது. அதனால் வயோதிகர்கள் செத்தாலும் அந்த மருந்துகளைத் தொட மாட்டார்கள்.

மிஸ்கீன் அலி ஷாஹ்வின் இல்லத்திலும் ஆங்கில மருந்துகளும் பெண் டாக்டர்களும் வரவேற்கத்தக்கவர்களல்ல என்று கருதப்பட்டது. அதனால் இந்தப் பயில்வான் போன்ற மருத்துவச்சியிடம் மிஸ்கீன் அலி ஷாஹ்வின் குல விளக்கை ஏற்றிவைக்கும் பொறுப்புத் தரப்பட்டிருக்கிறது.

"கோரி பேகம், இங்கு ஒரு விளக்கை அனுப்பி வையுங்கள். இருளில் மூச்சுத் திணறுகிறது." சீமையிலிருந்து திரும்பி வந்தவரின் மனைவியும் பஞ்சாரா குன்றின்மேல் சொகுசான பங்களாவில் வாழ்பவருமான பஷீர்பேகம் முகத்தைச் சுளித்தவாறு குரல் கொடுத்தாள்.

"வேண்டாம் அம்மா, நாங்கள் எங்கள் குழந்தைகளுக்கு முதல் முறையாக மண்ணெண்ணெய் விளக்குக் காட்டுவதில்லை," பதூலின் மாமியார் வெளியிலிருந்து பதில் அளித்தார்.

"அல்லாஹ்!" பஷீர் பேகம் இன்னும் பொறுமையைக் கைவிடவில்லை; இவர்கள் வீட்டுக்குப் பெண் டாக்டர்கள் வருவதில்லை; ஆங்கில மருந்துகள் கொடுக்கப்படுவதில்லை; குழந்தை பாதாள அறையில் பிறக்கிறது. குழந்தையின் முப்பாட்டனார் ரஹ்மத் அலி ஷாஹ்வை கனவில் கண்ட அறை அல்லவா அது. அத்துடன் 'உன்னுடைய வேதனைக் குரலை வெளியே யாரும் கேட்கக் கூடாது' என்று மருமகள் வேறு அச்சுறுத்தப்பட்டிருக்கிறாள்.

"எங்கள் மாமியார் முதலிலேயே சொல்லிவிடுவார்—'பார் மகளே! எனக்குப் பேரன்தான் வேண்டும். பெண்குழந்தையாகப் பிறந்தால் உன் தாய்வீட்டில் வீசி எறிந்துவிடுவேன்'—நானும் மாமியாரின் அறிவுரையைக் கேட்டு அதன்படியே நடப்பேன்." பதூலின் மாமியார் பெருமையுடன் சொன்னார்.

"அது எப்படி?" பஷீரும் வியப்புடன் கேட்டாள். "பையனோ, பெண்ணோ, அது ஆண்டவனின் கையில் அல்லவா இருக்கிறது. மேலும் நமது பதூல் பேகத்துக்கு ஏற்கெனவே இரண்டு பையன்கள் இருக்கிறார்கள்."

“அதனால் என்ன?” அவள் சினம் கொண்டாள். “முர்ஷிதுகளின் பெண்களை யாரும் திருமணம் செய்வதில்லை. மகனாக இருந்தால் எல்லாரும் அவனுடைய கையை முத்தமிடு வார்கள். அவனைப் போற்றிப் புகழுவார்கள். எனக்கு மூன்றாவது பேரனாகவே வேண்டும் என்று நான் முதலிலேயே மருமகளிடம் சொல்லி இருக்கிறேன்.”

அவர் விரலை எடுத்து, கடுமையான பார்வையால் பதூல் பேகத்தைக் கூர்ந்து நோக்கினார்; பிறகு வெளியே சென்றுவிட்டார்.

பதூலின் மாமியாரும் ஒரு மாந்திரிகர்தான். இளவரசிகளை நாயாக்கி விடுகிறார். இளவரசர்கள் அவருடைய மாந்திரிகச் சக்தியால் கல்லாகி விடுகிறார்கள் என்பது போலவே அப்போது பஷீர் பேகமும் உணர்ந்தாள்.

மிஸ்கீன் அலி ஷாஹ்வின் இரண்டாவது அல்லது மூன்றாவது மனைவியின் அறையில் சிறுமியர் ‘மீலாத்’ படித்துக் கொண்டு இருந்தார்கள்.

உள்ளேயும் பெரிய ஆரவாரம் இருந்தது. ஏதோ ஒரு மண ஊர்வலம் வருவதுபோல் அடிக்கடி அந்தத் தர்காவில் பாட்டுக் கச்சேரிகள் நடைபெறும். ஆனால் இத்தகைய மகிழ்ச்சிகரமான நேரங்களில் வாத்திய இசையும், அலிகளின் நடனமும் நடை பெறும். கதவுக்கு வெளியே டமாரம் அடிப்பவர்கள் காத்திருந்தனர். எப்போது மதிப்புக்குரிய புதியவர் அச்சமூட்டும் இந்தக் காட்சியைக் கண்டு கூக்குரலிடப் போகிறார்! எப்போது மத்தளத்தை அடித்துப் புதியதொரு நட்சத்திரத்தின் வருகையை மிஸ்கீன் அலி ஷாஹ்வுக்குத் தெரிவிப்பது என்று எல்லாரும் எதிர்நோக்கினார்கள். பதூலின் மாமியார் தனது மூன்று சக்களத்திகளுக்கு முன்னால் எப்போதுமே தாழ்வாகவே கருதப் பட்டார். மேலும் மிஸ்கீன் அலி ஷாஹ்வின் மூத்த மனைவி, அவளைத் தனது கணவனின் சட்டப்படியான மனைவி என்பதை ஒப்புக்கொள்ளவே தயாராக இல்லை. கன்னியாக இருந்தபோது அவள் மீது ‘ஜின்’ ஆவியின் நிழல் இருந்தது. எனவே குரு அவர்களிடம் சிகிச்சைக்காக அவள் கொண்டு வரப்பட்டாள். ஆவியோ மிகவும் பலம் வாய்ந்தது. பலமணி நேரம் வரை மிஸ்கீன் அலி ஷாஹ் அதை விரட்டுவதற்காகப் பாடுபட்டார். அவள் குணமடைந்ததும், தாய் தந்தையருடன் போக மறுத்துவிட்டு மிஸ்கீன் அலி ஷாஹ்வைப் பிடித்துக் கொண்டாள். பிறகு ஹுமாயூனின் பிறப்பு நேரம் நெருங்கி வந்தபோது மிஸ்கீன் அலி ஷாஹ் அவளை மணம் செய்துகொண்டதாக விளம்பரப் படுத்தினாள். இதன் காரணமாகவே அவர் ஹுமாயூனைத் தனது மகனாக ஏற்றுக்கொள்ள வேண்டியநிலை ஏற்பட்டு விட்டது.

மூன்று மனைவியரும் இந்தக் கூற்றைப் பலவேறு சான்றுகள் மூலம் நிரூபிக்க முயன்றாலும், அவருக்கு ஹுமாயூன் தனதுமகன்தான் என்ற உறுதி இருந்தது. எனவே முர்ஷிதுகளின் வரைமுறைகளைத் தாண்டி ஐயாவின் ஆணைக்கெதிராகச் செயல்படும் துணிவு ஹுமாயூனின் அன்னைக்கு இருந்தது. இப்போது அவளுடைய தளர்ச்சியுற்ற உடல் நான்கு புறங்களிலும் தொங்கியது. முன் புறத்தில் இரண்டு பற்கள் விழுந்துவிட்டன. தலையிலும் வெள்ளை முடி தெரிந்தது., வாய்க்குள் இருள் இருந்தது. ஆன்மாவிலும் ஒளிக்கதிர் எதுவும் இருக்கவில்லை போலும். அவர் செல்லும் வழியெங்கிலும் நகைகளின் ஒலி கேட்கும், ஏதோ ஒரு யானை நடந்துவருவதுபோல்! அவரிடம் இல்லாத நகையே எதுவும் இல்லை என்று சொல்லிவிடலாம். மேலும் அவர் நகைகளை அணியாத நேரமே இல்லை. கால்களில் மட்டும் இரண்டு கிலோ எடைகொண்ட வெள்ளி நகைகள் இருந்தன. ஒருமுறை கால் அணிகளை எல்லாம் அவர் கழற்றியபோது தடுமாற்றம் கண்டு விழுந்துவிட்டார் என்று ஹுமாயூன் கூறுவான். காதுகளில் காதணியுடன் தொங்கல், கழுத்தில் ஏழுமணி மாலை, மங்கலத்தின் அறிகுறியான கருகமணி மாலை, சந்திர மாலை. முத்துமாலை எல்லாம் இருந்தன. எப்போதும் மிஸ்ஸியும், கண்மையும் பூசிக் கொள்வாள். சாந்த் அவரை நகைகளின் மலை என்பாள். எனவே பஷீர் பேகம் தனது தங்கையைச் சந்திக்க 'அலீப் லைலா'வுக்கு வந்தபோதெல்லாம் சாந்தும் அவளுடன் தவறாமல் வருவாள்.

"அம்மா! அம்மா! நான் செத்துப்போனால் நன்றாக இருக்கும்" பதூல் பேகம் முழு பலத்துடன் பீபியைப் பிடித்துக் கொண்டாள்.

"ஐய... உலகில் இல்லாத புதிய வலியா இது. என்ன, தலைப் பிரசவமா உனக்கு?" இந்நேரத்தில் அன்பு காட்டுவதால் வலியின் வேகம் அதிகரித்துவிடும் என்று பஷீர் பேகத்துக்கு நன்றாகத் தெரியும்.

"சும்மா இரு" பீபிக்கு உள்ளூர நடுக்கம் இருந்தாலும் மகளை அதட்டினார். அவரும் ஒரு பெண்தானே. மனிதப் படைப்பின் உரிமையை ஆண்டவன் பெண்ணிடம் ஒப்படைத்திருக்கிறான். ஆனால் எந்தப் பெண்ணும் தனது உடலிலிருந்து அவளைப் போன்ற அடக்கமான, வலிமையற்ற உருவம் தோன்றுவதை விரும்புவதில்லை. பதூலின் மாமியார் நினைப்பதுபோல், நல்ல முடிவு எடுப்பது அவளுடைய கையில் இருந்தால் பதூல் படுத்தவாறு மரணமே மேல் என்று ஏன் கெஞ்சுகிறாள். அவளுக்கு நடுக்கம் ஏன் ஏற்படுகிறது. பதூலின் மாமியார் தனது எல்லா சக்களத்திகளின் மீதும் எப்படி ஆதிக்கம் செலுத்துகிறாள்? உலகில்

எல்லாருமே ஆண்களாகவே இருந்துவிட்டால், எல்லாரும எத்தனை மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருப்பார்கள்... பெண்களின் 'ஆ, ஆ' என்ற கூக்கூரல்களும் குழந்தைகளின் அழுகையும் கூச்சலும் இருந்திருக்காது. வாழ்க்கை எத்துணை இன்பமாகக் கழிந்து இருக்கும்...!

ஹுமாயூன் தாழ்வாரத்தில் அலைந்தான்; தொடர்ச்சியாக சிகரெட்டுகளைப் புகைத்தான். அவனுடைய பாதங்கள் மெது வாகவே எழுந்தன; ஆனால் சிந்தனை மட்டும் நிமிடத்திற்கு நூற்று இருபத்தைந்து கிலோமீட்டர் வேகத்தில் ஓடியது.

அவன் எப்போது பதூலின் மேல் முதல் பார்வையைப் பதித்தானோ, அதை அவனால் திருப்பவே முடியவில்லை; வாழ்வின் இருபத்தேழு ஆண்டுகளில் அவன் இரண்டு காரியங்கள் மட்டுமே செய்திருக்கிறான்; அப்பாவின் விருப்பப்படி ஏழு வகுப்புகள் வரை படித்துவிட்டான்; பிறகு பதூலை மணந்து கொண்டான். கல்யாணத்திற்கு முன்பு பகல் முழுவதும் ரஹீம் மியாவுடன் 'ரம்மி' ஆடுவான். சில நேரங்களில் ரஹீமின் கட்டாயத்திற்கு உட்பட்டு அவர்கள் இருவரும் வேறொரு இச்சையை நிறைவேற்றுவதற்காகச் சென்று விடுவார்கள். ஆனால் பதூலின் முகத்திரையை விலக்கியபோது அவன் அங்கேயே 'ஒட்டிக்கொண்டு' விட்டான். ரஹீம் ஆண்கள் பகுதியில் உட்கார்ந்தவாறு அவனுக்காகப் பலமணி நேரம் காத்திருப்பான். ஆனால் இப்போது 'கணவ..ா பாஷா' ஆகிவிட்ட ஹுமாயூன் வெளியே செல்வதில்லை.

பதூலின் இத்தகைய நற்பேறு கண்டு எல்லாருமே பொறாமை கொண்டார்கள். ஆண்டவன் அவளுக்கு எத்தகைய அன்பு கொண்ட கணவனைக் கொடுத்திருக்கிறான் என்றார்கள். பதூலின் பொறுமைக்கும் அடக்கத்திற்கும் இறுதியில் பலன் கிடைத்து விட்டது. ஒரு நொடியும் அவள் தனது பார்வையைவிட்டு அகன்றுவிட ஹுமாயூன் அனுமதிப்பதில்லை. பிறகு பதூல் அவனுக்கு அயாஸைக் கொடுத்தாள். பாட்டனாரும் பாட்டியும் அயாஸின் பிறப்பின்போது பெருமகிழ்வு கொண்டாடினார்கள். ஹுமாயூனும் தனது எதிரியின் வருகையால் அச்சமுறவில்லை. மறு வருடமே ஷஹ்ஜா வந்துவிட்டான். சிறிது சிறிதாக ஹுமாயூன் பதூலை விட்டு விலகிச் செல்லத் தொடங்கினான்.

ஆனால் அயாஸின் பாட்டனாருடைய முகம் மலர்ச்சி யடைந்தது. 'இவர்கள் இரண்டு சிறுவர்கள் அல்ல. இரண்டு தங்கக் கட்டிகள். தடுமாற்றம் காணும் நமது பொருளாதார நிலையை நிலை நிறுத்துபவர்கள்' என்பார் அவர். இதைக்கேட்டு ஹுமாயூனுககுச் சற்று ஆறுதலாக இருக்கும். பிறகு அவனும்

பதூலின் காதல் பிணக்குகளில் மூழ்கிவிட்டான். தன் மனைவியை அவன் பெரிதும் விரும்பினான். அதனால் அலீப் லைலாவின் வரையறைகளையும் மீறி முதல் முறையாக 'ஷீரீன்-பர்ஹாத்' படம் பார்க்க அழைத்துச் சென்றான்.

ஆனால் ஷீரினுடைய பிரிவின் சோகத்தால் பர்ஹாத் தனது மார்பில் கத்தியைச் செருகியபோது, அது நேராகப் பதூலின் வயிற்றிலிருந்த சிசுவின் இதயத்தினுள் பாய்ந்துவிட்டது. துன்பியல் நாடகமான படங்களைப் பார்க்கும் போதெல்லாம், சொற் பொழிவாளர் மூலம் ஷஹாதத் நிகழ்ச்சியை (இமாம் ஹுசேன் அவர்களின் தன்மறுப்பு வரலாறு) கேட்கும் போதெல்லாம் அவள் அழுவாள். அவளுடைய வயிற்றிலிருந்த சிசுவோ அவளைவிட இளகிய மனம் கொண்டதாக இருந்தது. வெண்திரையில் பர்ஹாதின் முடிவு கண்டு ஷீரீன் கதறினாள். இங்கே பதூல் தனது வயிற்றைப் பிடித்துக்கொண்டு துடித்தாள்.

அவர்களைப் பெண்கள் சூழ்ந்து கொண்டார்கள். வழி நெடுகிலும் ஹுமாயூன் மிகுந்த கலவரத்தில் இருந்தான். காரிலேயே 'புதியவர்' வருகை தந்து, தாங்கள் திரைப்படத்திற்குச் சென்ற ரகசியத்தை வெளியிட்டுவிடக் கூடாதே என்ற கவலை அவனுக்கு.

ஹுமாயூனின் அம்மாவோ தன்னை யாரோ கொதிக்கும் எண்ணெயில் வீசி எறிந்துவிட்டதுபோல் குதித்தாள். மருமகளைப் பழித்துரைக்க அவளுக்கு நல்லதொரு வாய்ப்புக் கிடைத்தது. ஹுமாயூன் மட்டும் அறையில் இல்லாமல் இருந்தால் மருமகளின் சடையைப் பிடித்து அடிக்கும் ஆர்வத்தையும் நிறைவேற்றிக் கொண்டிருப்பாள். முதுகுப் புறமாக கைகளைக் கட்டியவாறு ஹுமாயூன், அமைதியின்றி, மூன்றாவது மகனின் வருகையை எதிர் நோக்கினான். இருபத்தேழு ஆண்டுகள் நிரம்பிய பிறகும் அவன் தன்னுடைய உழைப்பால் ஒரு காசும் சம்பாதித்துத் தந்தையின் கையில் கொடுக்கவில்லை. எப்போது எந்த மாரடைப்பு கிழட்டுத் தந்தையைக் கொண்டுச் செல்லும், எப்போது தனது விதியின் கதவுகள் திறக்கும், என்று அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அப்பா என்னவோ லட்சக்கணக்கில் கடன் வாங்கியிருப்பதாகச் சொல்கிறார்; ஆனால் ஹுமாயூன் என்றுமே அவருடைய பேச்சை நம்பவில்லை. அவனுடைய மாற்றாந்தாய்களின் மகன்கள் தந்தையிடம் ஏமாற்றமடைந்து, காலணிகளைத் தேய்த்தவாறு பள்ளிகளுக்குச் சென்று படித்து, பிறகு தங்கள் தலைவிதியை நிர்ணயிக்கத் தாமே இங்கும் அங்கும் வேலைகளில் அமர்ந்து விட்டார்கள். ஆனால் உழைப்பு என்றால் ஹுமாயூனுக்கு உயிரே போய்விடும். அவன் மிகவும் நற்பேறு பெற்றவன்தான். இயற்கையும் எப்போதும் அவனுக்கு உதவியாக இருந்தது. அவனுடைய மூன்று

மகன்களும் வளர்ந்து பெரியவர்களாகி விடுவார்கள். அதற்குள் அவன் தன் மூதாதையரின் கொடையான ரஹ்மத் அலி ஷாஹ்வுடைய கல்லறையின் ஒரு செங்கல்லையும் விட்டு வைக்க மாட்டான் எனறாலும் அந்த மூன்று மகன்களும் சேர்ந்து தங்க மாளிகையை எழுப்பி விடுவார்கள்...!

அவன் மீண்டும் கதவருகில் சென்று காதுகளைத் தீட்டினான். உள்ளே முழுமையான அமைதி இருந்தது. எல்லாரும் உயிரற்றுக் கிடப்பது போல்! யாரோ பகைவன் தன்னுடைய மகனின் குரல் வளையை அழுத்திவிட்டதுபோல்! அவன் வேகமாக உலாவ ஆரம்பித்தான்.

"அம்மா! என்னுடைய பரிசை எடுங்கள்—மூன்றாவது பேரனின் மகிழ்ச்சியில் நூற்றியோரு ரூபாய்க்குக் குறைவாக வாங்க மாட்டேன்...!" உள்ளே ஹுமாயூனின் தங்கை அம்மாவிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்.

இன்று இரவு முழுவதும் விழித்திருப்பார்கள். எல்லாரும் தங்கள் துணிமணிகளைப் பற்றியே பேசுகிறார்கள். ஹுமாயூன் கவலையுடன் உட்கார்ந்துவிட்டான். பத்து லட்ச ரூபாய்ப் பரிசுச் சீட்டின் முடிவு தெரியப்போவதுபோல்!

எங்கிருந்தோ அயாஸும் ஷஹ்ஜாதும் சண்டையிட்டவாறு வந்து விட்டார்கள். மூன்று வயது நிரம்பிய அயாஸ், இரண்டு வயது நிரம்பிய தனது தம்பியைத் திட்டினான். செருப்பால் அடிக்கவும் செய்தான். ஆனால் ஷஹ்ஜாத் தனது அன்னையைப் போலவே இருந்தான். அவளைப் போலவே மௌனமாக, கோழையாக இருந்தான். சிறுசிறு விஷயத்திற்கும்கூட அழுது விடுவான்.

அப்போது ஹுமாயூனுக்கு அந்த இருவரின் வருகையும் நஞ்சுபோல் தெரிந்தது. போக்கிரிகள் இவர்கள், ஹுமாயூனுக்கு வெறுப்பூட்டும் காரியங்களையே செய்கிறார்கள். புதிதாக வருபவன் மீது இந்த முட்டாள் பெண்ணின் நிழல் கூடப் படவிட மாட்டான்! இந்த இருவரும் அவனுக்குத் தொந்தரவு கொடுத்தால், மூன்றாவது மகனிடமே தர்காவின் பொறுப்பையும்...

மூச்சிறைக்க அவனுடைய மைத்துனி பஷீர் பேகம் அறையிலிருந்து வெளியே வந்தாள்.

"நல்வாழ்த்துகள் ஹுமாயூன் மியான். உங்கள் மகள் ஷீரினைவிட அழகாக இருக்கிறாள்."

ஹுமாயூனின் இதயத்தின்மீது யாரோ பர்ஹாத்தின் கோடாரியை வீசி எறிந்துவிட்டார்கள்! பஷீர் பேகம் தனக்குத் துரோகம் செய்து, பத்து லட்ச ரூபாய் பணமுடிப்பை அபகரித்து விட்டதுபோல் அவன் அவளை நோக்கினான்.

"பேத்தி வாழ்க, பேத்தி வாழ்க..." இந்தச் செய்தி அலீப் லைலாவின் எட்டுத் திசைகளிலும் பரவியது. பயங்கரமான புயல் தீபங்களை அணைத்து விடுவதுபோல்!

வெளியே இசைக் குழுவினர் சிறிதும் யோசிக்காமல் பிறப்புச் செய்தியைக் கேட்டதும் வாத்தியங்களை இசைக்க ஆரம்பித்து விட்டார்கள்.

"ஆ, எனது மரணத்தின்போது இன்னிசை ஏன் முழங்குகிறது?" ஹுமாயூனின் தாய் இதயத்தின்மீது கைவைத்த வாறு தாழ்வாரத்தில் உட்கார்ந்துவிட்டாள். அலீப் லைலாவில் மகள் பிறக்கும்போது எழுபது பெருந்துயர்களைக் கூடவே கொண்டு வருகிறாள்...!

"சின்னம்மா, மருமகன் கிடைத்ததற்கு நல்வாழ்த்துகள்" பஷீர்பேகம் குற்றவாளியைப்போல், மருமகனின் ஆசைகாட்டி அவரை மகிழ்விக்க விரும்பினாள். பிறகு அமைதி நிலவிவிட்டது.

ஹுமாயூனின் தங்கை அலிகளை அவசர அவசரமாக மௌனப்படுத்தினாள். சுவருக்கு அப்பால் ஹுமாயூனின் மாற்றாந்தாய்கள் வசித்த பகுதியிலிருந்து சிரிப்பொலிகள் கேட்டன.

மடத்தின் இருண்ட அறையில் தலையை இரண்டு கைகளாலும் பிடித்தவாறு மிஸ்கீன் அலி ஷாஹ் உட்கார்திருந்தார். இந்தப் பெண்ணுக்கு வரன் எங்கு கிடைப்பான். முர்ஷிதுகளின் பெண்களை யாரும் விவாகம் செய்து கொள்வதில்லையே என்று அவர் கவலை கொண்டார்.

"மம்மி-மம்மி- இந்தப் பெண்ணும் ஷீரீனைப் போல் இதயத்தில் அம்பு பாய்ச்சுவாளா?" சாந்த் ஷீரீனைப்போன்ற அழகான குழந்தையைப் பார்த்துத் தன் தாயிடம் கேட்டாள்.

"சும்மா இரு. பைத்தியம் பிடித்துவிட்டதா?" பீபி அவளை அதட்டினாள்.

சாந்துக்கு அப்போது வயது ஏழு. ஆனால் ஒவ்வொரு படத்தின் முழுக் கதையும் அவளுடைய மனதில் பதிந்துவிடும். நகரில் ஓடிக் கொண்டிருந்த எல்லாத் திரைப்படங்களின் பாடல்களும் அவளுக்கு மனப்பாடம். லீலா சிட்னிசின் ரசிகை அவள். நாட்டியத்தில் பல பரிசுகள் வாங்கியிருக்கிறாள். ஆனால் தனது தாய்வழிப் பாட்டனார் வீட்டாருக்குத் தெரியாமல் மறைத்து வைத்தாள். சாந்தின் தாய்வழிப் பாட்டனார் வீடு வெகு தூரத்தில் இல்லை எனறாலும், எண்ணங்களின்படி அது பல நூற்றாண்டுகளின் தொலைவு இருந்தது.

கவிதாலயத்தில் வாழ்ந்த பெண்கள் போகும் காரில் திரைகள் போடப்பட்டிருக்கும். சாந்தின் அத்தைமார்கள் தங்கள் கணவர் களின் கைகளில் கை போட்டவாறு சிகந்தராபாத் கிளப்புக்கு

நடனமாடச் சென்றார்கள். கையில்லாத ரவிக்கைகளும், உதட்டுச் சாயமும், உயர்ந்த குதிகால் கொண்ட காலணியும்—நவீன நாகரிகத்தின் எல்லா அம்சங்களும் இதே குடும்பத்தினர் மூலம் ஹைதராபாத்தில் முதல் முறையாகப் பரவின. பல குடும்பங்களைச் சேர்ந்த பையன்கள் மேல் படிப்புக்காக அக்கரைச் சீமைக்குச் சென்றார்கள்; என்றாலும் முடியை வெட்டிக்கொண்டு, பிராக்குகள் அணிந்து, இந்தக் குடும்பத்துப் பெண்கள்தான் ஆங்கிலப் பள்ளிக்குச் சென்றார்கள். இதற்கு மேலும் அவர்களுடைய சாகசங்களைப் பற்றிப் பொதுமக்கள் நன்றாக அறிவார்கள். சுற்றுலாவுக்காக நைனிதாலுக்குச் சென்ற ஒருத்தி அங்கேயே ஓர் ஆங்கிலேயனை மணந்து கொண்டாள்! தந்தைக்கும் பாட்டனாருக்கும் எதிரிலேயே ஒருத்தி தனக்காக ஒருவனைக் கணவனாகத் தேர்ந்தெடுத்தாலும் அவர்கள் கைதட்டி அந்தத் தேர்வைப் பாராட்டினார்கள். இந்த விவரங்களைப் பஷீர் பேகம் மூலமாக அறியும்போது நொண்டி அத்தை கன்னங்களில் போட்டுக் கொள்வாள்.

பஷீர் பேகத்தின் புகுந்த வீடா அல்லது விலைமாதர்களின் இருப்பிடமா என்று கேட்டு, உலகம் செவிகளை மூடிக்கொள்ளும். அதனால் பஷீர் பேகம் தாய் வீட்டுக்கு மிகக் குறைவாகவே வருவாள். நாத்தனார்களைப் பின்பற்றி அவளும் பக்க வகிடு எடுத்து, நடிகை கஜ்ஜன் பாய் நடையில் தலை அலங்காரம் செய்து கொள்வாள். உதடுகளில் சாயம் பூசிக் கொள்வாள். இடுப்பில் சேலையும் இறுக்கமாகக் கட்டுவாள். கைகள் இல்லாத ரவிக்கை போடுவதில் மட்டும் அவளுக்கு நடுக்கம் எற்பட்டது; என்றாலும் தாய்வீட்டில் அவளை நோக்கி மறுப்புக் கணைகள் வீசப்பட்டன. பக்க வகிட்டை ஒருவர் குறை கூறினால், வேறொருவர் சாந்தின் நிர்வாணக் கால்களைக் கடுமையாக விமர்சனம் செய்வார். இதே காரணமாக அவள் பதூல் பேகத்தின் பு.குந்த வீட்டிற்கும் மிகக் குறைவாகவே செல்வாள். இன்று வந்ததுபோல் ஏதேனுமொரு நிகழ்ச்சியின்போதுதான் வருவாள்.

"இவளுடைய கண்கள் மிக அழகாக இருக்கின்றன. இவளுக்கு கஜாலா என்று பெயர் சூட்டி விடுங்கள் சின்னம்மா", பஷீர் பேகமும் தானொரு கவிஞரின் மகள் என்பதை மெய்ப்பித்து விட்டாள்.

"ஆமாம், ஏதாவது ஒரு பெயரை வைத்து விடுங்கள். பெயரில் என்ன இருக்கிறது'', சின்னம்மாவும் பெருமூச்சு ஒன்றை வெளிப்படுத்தினாள்...



மறுநாள் வாஹித் ஹுசேன் தனது புதிய கவிதையின் ஓர் அடியை முணுமுணுத்தவாறு உள்ளே வந்தபோது, அவருடைய கையில் அலீப் லைலாவின் பெரிய உறையும் இருந்தது. நொண்டி அத்தை தொழுகை விரிப்பின் மேல் நின்று 'ரகாத்' செய்யத் துவங்கியவர் வாஹித் ஹுசேனைக் கண்டதும் கீழே விட்டுவிட்டாள்.

"என்ன அண்ணா, எல்லாம் நலம்தானே?"

"குழந்தைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறார்கள்?" பெரும்ஆர்வம் இந்த வினாவில் இருந்தது.

"கஜல்..." அவர் அலட்சியமாகப் பதிலளித்தார். பிறகு தனது முடிவு பெறாத கவிதையின் ஈரடியை முணுமுணுக்கலானார். காதல்-சாதல்-போதல்-மோதல்... ஏதோ ஒரு எதுகையை அவர் மறந்துவிட்டார். நேற்றிலிருந்து எதுகைகளைச் சுற்றி வளைத்துக் கொண்டு வர முயலுகின்றார்; ஆனால் பிணக்குற்ற காதலியைப் போல் அவை அவருடைய கைக்கு எட்டவில்லை.

'இன்று காதலியின் வருகை நாள்...

சந்தையில் நன்றியறிதல் எனும் பொருள் மலிவாகிவிடும்,

எனவே இதயமுள்ளவர்களே, ஒதுங்கி நில்லுங்கள்...'

எத்தனை புதிய கற்பனை இது. எத்தனை சிறப்பான சிந்தனை!

"ஐய... கஜலா? இதென்ன பெயரோ?" அத்தை மூக்கின்மேல் விரலை வைத்தவாறு ரஷீதிடம் கேட்டாள். முகச் சவரம் செய்து கொண்டிருந்த ரஷீத் தயங்கி நின்றான்.

"கஜல்— இந்தப் பெயரை யார் வைத்தார்கள். அப்பாவா— நன்று மிக நன்று!" அவன் எக்காளமாகப் பேசிவிட்டு மீண்டும் கண்ணாடியை நோக்கிச் சென்றுவிட்டான். "நல்லதாகப் போய் விட்டது; கவிதாலயம் இருக்கிறது. ஆனால் கஜல்தான் எங்களிடம் இருக்கவில்லை."

அந்தக் குடும்பத்திலேயே கவிதை ஆர்வம் இல்லாத முதல் ஆள் ரஷீத் தான். தனது ஒரே மகன் மரபின் வரைமுறையைத் தகர்த்தெறிகிறானே என்று வாஹித் ஹுசேன் வெட்கப்படவே செய்தார்.

"ஆனால் உயர்குடிப் பெண்ணுக்கு இந்தப் பெயரா?" பீபியும் சேலைத் தலைப்பால் தலையை மூடினார். "கஜல் என்பது காதல் பேச்சுக்கு அல்லவா சொல்கிறார்கள்" அவர் நாணத்துடனும், சற்றே திகைப்புடனும் அந்த கஜல்களை நினைவுபடுத்திக் கொண்டார். தன் கணவர் தன்னிடமே தனிமையில் சொன்ன கஜல்களை!

"ஆமாம்!" ரஷீத் முகத்தைச் சாய்த்துக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். சவரக்கத்தி கன்னங்கள் மீது வேகமாக

ஓடியது. கசாப்புக்காரன் ஆட்டின் தோலை உரிப்பதுபோல்!

"பாரசீக மொழியில் வேறொரு பொருளும் இருக்கிறது. காயமுற்ற பெண் மான் சாகும்போது அதன் கண்களில் தோன்றும். வேதனையையும் கஜல் என்கிறார்கள்".

"உங்கள் விமர்சனம் இருக்கட்டும்" ரஷீதின் மனைவி தனது வயிற்றின் வேதனையைத் தாங்கியவாறு பேசினாள். "பெயர் நன்றாகவே இருக்கிறது. பெண்களின் பேச்சைக் கஜல் என்பார்கள். நான் மெட்ரிக்கில் படித்திருக்கிறேன்."

"அப்படியானால் சரிதான்," நொண்டி அத்தை சிறிது நிம்மதிப் பெருமூச்சை வெளிப்படுத்திவிட்டுத் தொழுகையில் ஈடுபட்டு விட்டாள்.

ரஷீத் அவசர அவசரமாக ஆடைகள் அணிந்துகொண்டு வெளியே ஓடினான்.

உஸ்மானியா சர்வகாலச்சாலைக் கட்டிடம் நகரத்திற்கு வெளியே நிர்மாணிக்கப்படுகிறது. ரஷீதுக்கு ஒரு பெரிய ஒப்பந்தம் கிடைத்திருந்தது. அந்த வேலையை அவன் விரைவிலேயே முடிக்க வேண்டும். அதுவே ஆலா ஹஜ்ரத் (நிஜாம்)தின் விருப்பமும்கூட. மேலும் அந்த ஒப்பந்தத்தொகை கிடைத்ததும் கவிதாலயத்தின் கடன்காரர்கள் பறிமுதல் செய்துவிடாமல் பாதுகாக்க வேண்டும். இப்பல்கலைக்கழகத்தின் வரைபடம் வரைவதற்காக ஐரோப்பாவுக்கும், அரேபிய நாடுகளுக்கும் அனுப்பப்பட்ட பொறியியலாளர்களில் அவனும் ஒருவனாக இருந்தான்.

# 4

'எழுத்து நூறு என்று சொல்லி
எழுதினார் பஞ்சாங்கங்கள்
வார்த்தை நூறு என்று சொல்லி
வாசித்தார் பஞ்சாங்கம்'

சமுக்காளத்தின் மீது உட்கார்ந்திருந்த பாடகியர் உரத்த குரலில் பாடினார்கள்.

பெரிய முற்றத்தில் மேடை மீது சிவப்பு மென்பட்டு விரிப்புப் போடப்பட்டிருந்தது. அதன் மேல் மலர்களாலும், மின் விளக்கு களாலும் அலங்கரிக்கப்பட்ட பந்தல் இருந்தது. குறும்புக்காரச் சிறுவர்கள் அம்மலர்களைப் பறித்துக் கொண்டு ஓடினார்கள். விருந்தாளிகள் வந்தவண்ணம் இருந்தார்கள். மாளிகையின்

பின்புறத்தில் வெங்காயம் பூண்டு ஆகியவற்றின் சருகுகள் குவியலாக இருந்தன. பெரிய பெரிய கொப்பரைகள் இங்கும் அங்கும் இழுக்கப்பட்டன; அடுப்புகள் எரிந்து கொண்டிருந்தன. இறைச்சி, அரிசி, நெய், கூட்டுப் பொருள்களின் குவியலுக்குப் பக்கத்தில் சமையல்காரர்களுக்கு இடையில் குலாம் ரசூல் ஓடியாடிக் கொண்டிருந்தான். ஒருவன் "குலாம் ரசூல் நீர் கொண்டு வா" என்று குரல் கொடுத்தான். "குலாம் ரசூல்! இங்கே பன்னீர் கொண்டு வா" என்று இன்னொருவன் கத்தினான். இடை யிடையே பேகம் சாஹிபாவின் கர்ஜனைக் குரல் கேட்டது. "குலாம் ரசூல்! என் காலணி எங்கே?"

விருந்தாளிகள் வர ஆரம்பித்து விட்டார்கள். வெளியே தாழ்வாரத்தில் விரிப்புகளின் மேல் வெள்ளைத் துணி விரிக்கப் பட்டு அதன் மேல் பாரசீகக் கம்பளங்கள் போடப்பட்டிருந்தன. இடையில் ஆங்காங்கே வெள்ளி ரேக்குகள் ஒட்டிய வெற்றிலைப் பீடாக்களின் கிண்ணங்கள் வைக்கப்பட்டிருந்தன. வெளியே ஆடவர் பகுதியில் கூட்டம் அதிகமாக இருந்தது. அதன் இடையில் வெள்ளை நிறங்கொண்ட, உயரமான அஹ்மத் ஹுசேன் சிரித்தவாறும், புன்முறுவல் செய்தவாறும் குனிந்து வணங்கி விருந்தினர்களை வரவேற்றார்; இன்று அவர் இறுக்கமான பைஜாமாவும், உயர்தர ஷேர்வானியும் அணிந்திருந்தார். அவருடைய துருக்கித் தொப்பியின் தொங்கல் அவருடைய நெற்றியில் ஊஞ்சலாடியது. விருந்தாளிகளை வரவேற்கப் பல முறை வெளியே நுழைவாயில் வரை அவர் வரவேண்டியிருந்தது. சில சமயங்களில் திரையிட்ட கார்கள் வரும்போது அவர் கையால் சைகை செய்வார்.

"பெண்களை அங்கே அழைத்துப் போகவும்!"

உஜாலா பேகம், சரிகையிட்ட ஜார்ஜெட் சேலையைச் சமாளித்தவாறு இங்கும் அங்கும் அலைந்து வேலைகளை மேற் பார்வை செய்தார். அடிக்கடி அவருடைய ஒளி மிகுந்த முகத்தின் மீது மின்னல்கள் பளிச்சிட்டன. கல்யாணங்கள், விசேஷங்களின் போது அங்கு மேலாண்மை செலுத்துவதில் உஜாலா பேகம் மிகவும் புகழ்பெற்றிருந்தார். என்றாலும் இன்று அடிக்கடி ஏதேனுமொன்றை மறந்து விடுகிறார். வேலைக்காரிகள் எப்பொ ழுதுமே சோம்பேறிகள்தான். வேலை நெருக்கடியின்போது அவர்கள் எல்லாருமே தலைமறைவாகி விடுகிறார்கள். இன்று அவர் தனியாகவே எல்லா சமையற்காரர்களையும் மேற்பார்வை யிட்டார்; விருந்தினர்களை வரவேற்றார்; சரிசமமானவர்களுடன் நகைச்சுவையாகப் பேசினார்; குழந்தைகளை அழுக்கான சேறு நிறைந்த கால்களுடன் சமுக்காளத்திற்கு வராமல் தடுத்தார்;

இவ்வாறு ஒரே சமயத்தில் எல்லா வேலைகளையும் செய்யும் கலையை அவர் தமது பாட்டியிடம் கற்றிருந்தார்.

உயரமான, பருமனான உடல் கொண்ட பெண்மணி அவர். நாற்பதைத் தாண்டிவிட்டார். அதற்குப் பிறகும் அவருடைய மூக்கும் விழியும் ஆப்பிள் பழம் போல் சிவப்பு நிறம் கொண்டிருந்தது. அதன்மீது ஆங்காங்கே பளிச்சிடும் பாரசீக எழிலின் சாயலும், இன்றும் அவரால் ஒருவர் இதயத்தைக் காயப் படுத்தும் ஆற்றல் இருப்பதை விளக்கியது. அவருடைய கொள்ளை அழகும், நாணமும் அவருடைய குரலைப்போல் அவ்வளவு சிறப்பாக அமையவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இதுவரை என்றுமே தோல்வி காணாத குரலும் சொல்வன்மையும் அவர் பெற்றிருந்தார்.

மாளிகையின் பல்வேறு அறைகளில் மங்கையர் பல்வேறு குழுக்களாகப் பிரிந்து சிரிப்பொலிகளை எழுப்பினார்கள். மலர்களின் வாசனையும் நறுமணங்களும் வீச, வெளியே பிரியாணியின் வாடையும் பரவி இருந்தது.

சமையற்காரர்கள் சமையல் செய்து கொண்டிருந்த இடத்தின் வழியே மங்கையர் உள்ளே வந்தனர். வழியில் பாத்திரங்களும், காய்கறிகளும், முட்டைகளின் மேலோடுகளும் கிடந்தன. சமயல்காரர்கள் தண்ணீரை ஊற்றி ஊற்றித் தரையை ஈரமாக்கி விட்டார்கள். அதனால் உஜாலா பேகம், வந்துகொண்டிருந்த பெண்களுக்கு எச்சரிக்கை விடுத்தார். "கோரி அம்மா! கொஞ்சம் சேலையை தூக்கிப் பிடித்து வாருங்கள்... இந்தப் பாவி சமையல் காரர்கள் எல்லா இடத்தையும் குளமாக்கி விட்டார்கள்."

பெரிய பெரிய அடுப்புகளின் புகையும் நான்கு திசைகளிலும் பரவிவிட்டது. அடுப்புக்கு மத்தியில் ஷேகுமியான் கையில் தடியுடன் வெள்ளை ஆடைகள் அணிந்து மேற்பார்வை செய்து கொண்டிருந்தார்.

"கொஞ்சம் பார்க்கிறேன். இனிப்பில் எவ்வளவு சர்க்கரை போட்டிருக்கிறீர்கள்," அவர் சிறிதளவு சுவைத்துப் பார்ப்பார்.

"இந்த உடைந்துவிட்ட முட்டைகளை இங்கு கொடுங்கள்" அவசர அவசரமாக முட்டைகளைக் குடித்துவிட்டு வேறுபக்கம் திரும்பி விடுவார்.

பந்தல்களுக்குக் கீழ், சமுக்காளங்கள்மீது குழந்தைகள் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

தாழ்வாரத்தில் ஒரு மூலையில் காலணிகள் கழற்றி வைக்கத் தனியிடம் ஒதுக்கப்பட்டிருந்தது. அங்கு ஆயாக்களின் ஒரு படை அழும் குழந்தைகளைச் சமாதானப்படுத்தும் வேலையை விட்டுவிட்டுப் பேச்சுகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தது.

அங்கு பீஜானியும் வெற்றிலை மடித்துக் கொண்டிருந்தாள். வரும்போதும் போகும்போதும் உஜாலா பேகம் பலமுறை அவளுக்கு எச்சரிக்கை விடுத்தார்...

"இன்று உனக்கு என்ன ஆகிவிட்டது. வழியில் உட்காராதே என்று பலமுறை சொல்லிவிட்டேன். இனி காலிலிருந்து மிதியடியைக் கழற்ற வேண்டுமா?"

ஆனால் பீஜான், உஜாலா பேகத்தின் அச்சுறுத்தலுக்கு மசியவில்லை என்பதைக் கண்ட ஆயாக்கள் வியப்படைந்தனர். அவள் அங்கு உட்கார்ந்தவாறே வெற்றிலை மடிப்புகள்மீது வெள்ளித் தகடுகளை ஒட்டினாள்.

ஆண்கள் பகுதியிலிருந்து அஹ்மத் ஹுசேன் பலமுறை பெண்கள் பகுதிக்கு வந்தார். பலமுறை அவர் ஏதோ ஒரு முக்கியமான வேலையாக வருவார்; தவறுதலாக ஏதேனுமொரு பனாரஸ் சேலையுடன் மோதிவிட்டு வெளியே ஓடிவிடுவார். இத்தனை அழகான முகங்கள் இருக்கும்பேது அவர் அமைதி இழப்பது இயற்கைக்கு மாறானது அல்லவே...

அந்த நிலையிலும் மிகவும் அமைதியாகப் புதிய விருந்தாளியை வரவேற்க அவர் எழுந்து நிற்பார். சற்றே இடுப்பை வளைத்து வணக்கம் தெரிவிப்பார்; தனது கையில் விருந்தாளியின் கையைப் பிடித்து கண்களுடன் ஒற்றிக் கொள்வார். சில நேரங்களில், 'வாருங்கள், அமருங்கள் அன்பரே!' என்று கரங்குவித்துச் சொல்வார்.

அஹ்மத் ஹுசேனின் இந்த இணக்க வணக்கமான நடையைக் கண்டு வாஹித் ஹுசேன் சிரிப்பார். ஆனால் வட்ட ஆட்சியாளராக இருந்து, கைக்கூலி பெற்று, நகரில் ஆடம்பரமாக வாழ்வதற்கும், சிற்றூரில் நிலக்கிழாராக இருப்பதற்கும் இடையே நிறைய வேற்றுமை இருக்கிறது. வாஹித் ஹுசேன் மண்டல ஆட்சியாளராக இருந்தவர்; அதே தோரணையில் அவர் பேசுவார். அஹ்மத் ஹுசேனோ, மனைவியின் தாய்வழிப் பாட்டனாருடைய பெஞ்செல்வத்திற்கு அதிபதியாகிவிட்டார்; அதனால் தன்னைவிட தாழ்ந்தவர்களிடமும் அவர் பணிந்து பேச வேண்டும்.

இன்று வாஹித் ஹுசேனும் பீபியும் இல்லாத குறையை உட்புறத்திலும் வெளியிலும் எல்லாரும் உணரவே செய்தார்கள். இத்தகைய மகிழ்ச்சியான நேரங்களில் தங்கள் சுற்றத்தார்கள் நினைவுக்கு வரவே செய்கிறார்கள். அதனால் உஜாலா பேகமும் மிக்க அன்புடன் இந்த விழாவுக்காக அவர்களை அழைத்திருந்தார். தாங்கள் வராததற்கு அவர்கள் பல சாக்குப் போக்குகள் சொன்னாலும் உஜாலா பேகத்திற்கு உண்மை நன்றாகவே தெரியும். அஹ்மத் ஹுசேனின் நேர்வாரிசை, வாஹித் ஹுசேன் எந்த

இதயத்துடன் பார்க்க முடியும்? அவர்களோ உஜாலா பேகத்தின் முழு சொத்துக்களுக்கும் வாரிசாக ரஷீதையே நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

வெளியே அஹ்மத் ஹுசேனின் உரத்த சிரிப்பொலிகளைக் கேட்டு உஜாலா பேகமும் புன்முறுவல் செய்து கொண்டிருந்தார். இன்று அவர் அஹ்மத் ஹுசேனின் அப்பாவித் தனத்தைக் கடுமையான தாக்குதலுக்கு உள்ளாக்கிவிட்டார்; அதனால் தாமும் கலவரமடைந்துவிட்டார். அருடைய இதயம் வேகமாகத் துடித்தது. இந்தக் குழப்பம் அவருடைய அழகுக்கு மேலும் மெருகு அளித்தது. ஆழமான நீலநிறச் சேலையுடன் 'கார்க்கா'வின் ரவிக்கை மிகவும் கவர்ச்சியாக இருந்தது.

கழுத்தில் ஏழு வரிசை மாலையும், சந்திர மாலையும் கற்கள் பதித்த நெக்லசும் மின்னலடித்தன. கைகளில் வைரக்காப்புகளுடன் உண்மையான முத்துகள் பதித்த வளையல்களும் இருந்தன. அந்த வெள்ளை நிறக் கைகளில் கற்கள் பதித்த வளையல்கள் மிக அழகாகவே காட்சியளித்தன. என்றாலும் எப்போதும் 'பார்த்துக் கொண்டே இருக்கலாம்' என்ற தகுதியை உஜாலா பேகத்தின் கைகள் பெற்றிருந்தன.

அவரது அழகும் அவரது பிடிவாதமும் அவரை இந்த நிலைக்குக் கொண்டு வந்துவிட்டன. ஓர் இளவரசரின் மாளிகையை அலங்கரிப்பதற்குப் பதிலாக சாதாரணமான அஹ்மத் ஹுசேனின் வீட்டிற்கு அவர் வந்துவிட்டார். அவருடைய தாய்வழிப் பாட்டனாரான முனாசிப் ஜங், படையில் தளபதியாக இருந்தவர். தனது குடும்பத்தில் 'புதுமை விரும்பி' என்று பெயர் பெற்றவர். யாருமே செய்யாததைத்தான் அவர் செய்து முடிப்பார்; இறுதியில் தனது மரபின் நளினமான நங்கையரைவிட்டு, புகழ்பெற்ற பாரசீக அழகி ஒருத்தியை மணந்துகொண்டார். இந்தப் 'புதுவழி காணல்' அக்காலத்தில் இடர் நிறைந்தது. அதனால் அவருடைய ஆதினமே ஆட்டங்கண்டுவிட்டது. அப்போது அரச பரம்பரையில், வெளிநாட்டுப் பெண்களை மணக்கும் இளவரசர்கள் பிறக்கவில்லை. குடும்பத்தின் ஒவ்வொரு ஆண் மகனும் அரச ஆணைக்குக் கட்டுப்பட்டவனாக இருந்தான். அபின் மயக்கத்தின்போது முதல்வர் ஈமான் ஜங் ஒப்புதல் தரும் பெண்ணைத்தான் ஒருவன் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற நிபந்தனை இருந்தது. அதனால் ஈமான் ஜங் கோட்டையில் முளைத்த ஒட்டுப்போட்ட மாங்கன்றுகளை மட்டும் வளர்க்கவில்லை. அழகான ரோசாச் செடிகளின்மேல் முள் செடிகளையும் பரவவிட்டார். அதற்குப் பிறகும் அவை பசுமையாக இருந்தது வேறு விஷயமாகும். அதனால் வழக்கு வாதங்கள்

ஏற்பட்டு, குடும்பப் பகையின் முட்களும் வளர்ந்தன. முதலில் அவை மேல்வாரியாக இதயங்களை மட்டும் தாக்கின. இறுதியில் ஆஸிபியா அரசின் அடித்தளத்தையே சதிகளின் பூகம்பங்களால் ஆட்டங்காணச் செய்தன!

அப்படியே பார்த்தால் அப்போது வாழ்க்கை அமைதியாக இருந்தது. மூசா நதிக்கரையில், நகரில் பரவியிருந்த அமைதியின்மையின் அலைகள் அரசு மாளிகையைவிட்டு வெகுதூரத்தில் இருந்தன. வேந்தரின் பெண் யானையின் கல்யாணத்தின்போது முழு நகரமும் விழாக்கோலம் பூண்டது; ஏனெனில் ஆட்சியாளர்களின் சினம், இயற்கையின் சீற்றத்திற்குச் சற்றும் குறைவானதல்ல; கொள்ளை நோய், அம்மை நோய் பரவினால் காளியம்மையின் சீற்றத்துடன் மேதகு வேந்தரின் கோபமும் அதில் கலந்திருக்கும்.

ஆங்கிலேயன் கையில் தடியுடன் நின்றுகொண்டிருந்த காலம் அது. அந்தத் தடி சிற்றரசர்களை நோக்கியே எழுந்தது. இங்கிருந்து பொதுவாகச் சிறுசிறு கிளர்ச்சிகளே தலைதூக்கும். பொது மக்கள் மிகவும் அடியில் நசுக்கப்பட்டு இருந்தார்கள். மேல்வாரியாக அவர்கள் தென்படவே இல்லை. அந்நாட்களில் அரசுப் பதவிகள் அவ்வளவு விலைமிகுந்ததாகவும் இருக்கவில்லை. அதற்காகச் சீமைக்குச் செல்லும் அவசியமும் ஏற்படவில்லை. ஆனால், அப்போது முனாசிப் அலி பெய்க் என்று அழைக்கப்பட்ட முனாசிப் ஜங் ஒரு பெரிய பதவிக்காகக் காத்திருந்தபோது, ஈரானிலிருந்து ஒரு புதிய குழு ஔரங்காபாத்திற்கு வந்து குடியேறியது. பொதுவாகவே ஔரங்காபாத் பகுதி குளிர்ச்சி மண்டலமாகக் கருதப்பட்டது. அதனால் மேதகு வேந்தரும் கோடைப் பருவத்தின் சில மாதங்களை இங்கே கழிப்பார். பொதுவாக வெளிநாடுகளிலிருந்து வருபவர்கள், ஔரங்காபாத்தைக் குடியிருப்புக்குத் தேர்ந்தெடுப்பார்கள். அப்படித்தான் ஆரிஃப் பெய்க்கும் பாரசீகத்திலிருந்து தனது இலக்கியக் கருவூலத்துடன் இங்கு வந்து தங்கினான். தனது இலக்கியத் திறமையின் முத்திரையைப் பதிக்கவே வந்திருப்பதாகச் சொல்லிக் கொண்டாலும் உண்மையில் மதிமுகம் கொண்ட தனது மகளை மன்னருக்கு காணிக்கையாகப் படைக்கவே வந்திருக்கிறான் என்று பேச்சு பரவி இருந்தது. இதனால் அவனுடைய பிழைப்புக்கான நல்வழி பிறந்து விடுமன்றோ! அழகான மங்கையர் மூலம், அந்தச் சமயத்தில், பல பெற்றோர்கள் தங்கள் சந்ததிகளின் விதியை ஒளிபெறச் செய்துவிட்டார்கள். அந்தப் பெண் சில மாதங்கள் வரை மாண்புமிக்கவரின் விசேஷ கவனத்திற்குத் தகுதியானவளாக இருப்பாள். பிறகு 'அம்பர்பாக்'கின் இருண்ட

அறை ஒன்றில் வைக்கப்பட்டு எல்லாராலும் மறக்கப்பட்டு விடுவார். அரசின் ஒரு துறை மட்டுமே அவளை நினைவில் வைத்துக் கொள்ளும். அந்த மங்கையரின் மூன்று வேளை உணவும், மாதத்திற்கு ஒரு புத்தாடையும் அனுப்ப வேண்டிய பொறுப்பு அத்துறையைச் சார்ந்தது.

ஆரிஃப் பெய்க்கும் வேகமாக முன்னேறினான். அந்தப் பெண்ணின் முதல் பார்வையிலேயே வேந்தர் இரவு நித்திரையைப் பறி கொடுத்தார். இனி எந்த விலை கொடுத்தும், எந்தக் காரணத்தொடர்பு இருந்தபோதிலும், ஆரிஃப் பெய்க்கின் மகளை அந்தப்புரத்திற்குக் கொண்டுவரும் பொறுப்பு அவையினருடையது. ஆரிஃப் பெய்க்கின் அண்டைவீட்டுக்காரராக இருந்த முனாசீப் அலி பெய்க் இடையில் குறுக்கிட்டார். தனது தனிப்பட்ட சமையற்காரன் தயாரித்த பிரியாணியில் ஏதோ கலந்து அவளுக்கு ஊட்டிவிட்டார். தக்காணத்தின் மாந்திரிகம்தான் பெயர் போனதாயிற்றே! இல்லாவிட்டால் அரச அந்தப்புரத்தின் வண்ணக் கனவுகளில் மூழ்கி இருந்த ஓர் அழகி, நிலக்கிழார் ஒருவருக்கு எப்படி மனதைப் பறி கொடுக்க முடியும்? முனாசிப் பெய்க்கின் தந்தை தனக்குச் சம்பந்தியாக வரப்போகிறவரிடம் சீர்வரிசை குறித்து சண்டையிட்டதாகவும் மக்கள் பேசிக் கொள்கிறார்கள். ஈமான் ஜங் அவசியமான காகிதங்களில் கைச்சாற்றல்கள் வாங்கி வேந்தரின் கவனத்திற்கு இந்த விஷயத்தைக் கொண்டுசென்றுவிட்டார். எனவே முனாசிப் பெய்க்கின் குடும்பத்தார்மீது சீற்றம் பாய்ந்தது. திடீரென்று ஆதீனத்தின் மீது விசாரணைக் குழு நியமிக்கப்பட்டது. முனாசிப் அலி மிகுந்த சிரமங்களுக்கிடையில் ஜாகீரைக் காப்பாற்றிக் கொண்டுவிட்டார் என்றாலும், கருணை வெள்ளத்தால் பயனடையவிருந்த அவருடைய சகோதர சகோதரிகள் பாதிக்கப் பட்டார்கள். எனினும் தனது தனித்திறமைபோல், அழகுப் பதுமையின் உதவியுடன், அரச தரிசனம் கிடைக்கப்பெற்றது, பின்னர் நடந்த கிளைக் கதையாகும். முனாசிப் அலி பெய்க் திடீரென்று முனாசிப் ஜங் ஆகிவிட்டார். இது மட்டுமல்ல, தனது மாளிகையில் அரிய பொருட்களைப் பெருமளவில் சேகரித்து, மன்னருக்கு சமமாகவே வந்துவிட்டார்.

அது இருக்கட்டும். உஜாலா பேகம் பிறப்பில் தனது பாரசீகப் பாட்டியின் தோற்றமும் அழகும் பெற்றிருந்தார். அதே செருக்கு, அதே ஆணவம்! ஒரே மைந்தனின் ஒரே மகள். எனவே ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தொழுகைக்குப் பிறகு உஜாலா பேகத்திற்குச் சந்திப்பின் வாய்ப்பு அளிப்பது என்று நாட்குறிப்பில் எழுதச் சொன்னார். ஆனால் வயது முதிர்ச்சியுடன் தொடர் நிகழ்ச்சி

களின் பாதிப்பும் அவரது உடலில் இருக்கவே செய்தது. எனவே உஜாலா பேகம் சந்திக்க விரும்புகிறார் என்று சேவகன் அறிவித்த நேரங்களில் அவரது சிந்தனை ஏதேனுமொரு விலைமாதை நினைக்கும். ஒரே நேரத்தில் பல விஷயங்கள் அவரைக் குழப்பிவிடும்.

உடல் வலுவுக்காகச் சிட்டுக்குருவி லேகியத்தைச் சாப்பிட வேண்டும்; பல நாட்களாக தலைமுடிக்கு மைதீட்டவில்லை; சில நேரங்களில் தொழுகையும் செய்ய வேண்டும்.

அவர் திகிலடைந்து எழுவார்; மீசைகளைத் தடவிவிடுவார்; நெஞ்சை நிமிர்த்தியவாறு நிற்பார்; அவசர அவசரமாக வேலைக்காரர்களின் உதவியுடன் பைஜாமாவும் சிவப்பு ஷேர் வானியும் அணிந்து கொள்வார். அப்போது ஆயா ஐந்து வயது நிரம்பிய உஜாலா பேகத்தை எடுத்தவாறு உள்ளே வருவாள்.

"ஓஹோ! தாங்கள் வருகை தந்துள்ளீர்களா?" அவர் விலை மாதின் நினைவை ஒதுக்கிவிட்டுப் பாட்டனாராகும் ஏற்பாடு களைச் செய்வார். தனது வெள்ளை மீசைகளுடன் அவளுக்கு முத்தமிடக் குனிவார். ஆனால் உஜாலா பேகம் முகத்தை விலக்கிக் கொள்ள, அது ஆயாவின் பங்குக்குப் போய்ச்சேரும்! கலவர மடைந்து அவள் உஜாலா பேகத்தைக் கீழே இறக்கிவிடுவாள்.

"தாத்தா! நான் இனி வெள்ளைக்குதிரை மீது உட்கார மாட்டேன். அந்தக் குதிரைக்காரன் மகன் அம்மாஞ்சி அதைத் தொட்டுவிட்டான்"

"இல்லை, மகளே, யாரையும் திட்டக்கூடாது" அவர் அன்புடன் அறிவுரை வழங்குவார்.

"ஆ! அநதப் பாழாய்ப் போனவன் என் குதிரைக்கு முத்தம் கொடுத்துவிட்டானே..."

"தாத்தா! எனக்கு உங்கள் துப்பாக்கியைக் கொடுங்கள். நான் அந்த நீசனைக் கொன்றுவிடுகிறேன்" உஜாலா பேகத்தின் அப்பாவித்தனத்தைக் கண்டு அவர் சிரிப்பார்.

"மனிதரைக் கொல்வது சரிஇல்லை மகளே, அது பாவக்கேடு ஆகும்."

"பாவக்கேடு என்றால் என்ன தாத்தா?" அவள் கழுத்தைத் தூக்கிக் கேட்பாள்.

"இறைவன் எங்கள் மேல் கோபம் கொள்வான்"

"ஆ! உங்களைக் கண்டு எல்லாரும் பயப்படுகிறார்களே"

இதுவே உண்மையாகவும் இருந்தது. எனவே தாத்தாவின் செல்வாக்கைப் பயன்படுத்தி உஜாலா பேகம் தன்னிச்சைபோல் வளர்ந்தாள். வழக்கம் போலவே அன்றும் அவள் தாத்தாவின் கைத்துப்பாக்கியை எடுத்துக்கொண்டு தோட்டத்திற்குச் சென்றாள்.

இங்கும் அங்கும் குறி வைத்துச் சுட ஆரம்பித்தாள். அப்போது அவள் பதினாறு வயது நிரம்பிய மங்கை!

குருவிகளை வேட்டையாடுவதாகத்தான் அவள் தனக்குள் நினைத்துக் கொண்டார். ஆனால் பிரதாப் கிரணின் தோட்டக் காரன் அவளுடைய குறிக்கு இலக்காகி விட்டான். அண்டை வீட்டுக்காரனான பிரதாப் கிரண் ரெட்டிக்கும் முனாசிப் ஜங்குக்கும் இடையில் நீண்ட நாட்களாகவே பகைமை இருந்தது. இருவருமே ஒருவருக்கெதிராக மற்றொருவர் தகுந்த தருணத்தை எதிர்நோக்கினார்கள். முனாசிப் ஜங்கின் கைகளில் அதிகாரம் இருந்தது உண்மையே என்றாலும், இறகு ஒன்றைக் காகமாக்கி ஆங்கில ரெஸிடென்ட் முன்னிலையில் நிலக்கிழார்களுக்கு எதிராகச் சதிகள் நடந்த காலம் அது. அவர்களும் ஜஹாங் கீரைப்போல் சற்றும் நீதி தவறாதவர்கள் என்று பறை சாற்றிக் கொண்டாலும், உஜாலா பேகம் நூர்ஜஹானாக இருக்கவில்லையே, தனது உயிரைத் தோட்டக்காரியின் முன்பு பணயம் வைக்க! எல்லா தோட்டக்காரர்களும் இந்த நிகழ்ச்சிக்கு சாட்சிகளாக வெளியே நின்று கொண்டிருந்தார்கள். உள்ளே வேறொரு வழக்கு நடந்து கொண்டிருந்தது. அதற்கு பார்வையாளராக வந்திருந்த அஹ்மத் ஹுசேனுக்கு ஒன்றுமே புரியவில்லை. திடீரென்று முனாசிப் ஜங்குக்கு என்ன நோய் வந்துவிட்டது. அவர் எதற்காக தனது தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்? பலமுறை விசாரித்த பிறகு முனாசிப் சிங் தமது இக்கட்டான நிலைமையை விவரித்தார். உடனடியாகவே அஹ்மத் ஹுசேன் தனது உதவிக்கரத்தை நீட்டினார். அஹ்மத் ஹுசேனின் திரையிட்ட காரில் உஜாலா பேகத்தை ஔரங்கா பாத்திலிருந்து வெகுதூரம் அனுப்பிவிட்டால், இந்தத் தோட்டக் காரர்கள் எதையும் நிரூபிக்க முடியாது. பிறகு அவர் உஜாலா பேகத்தைத் தனது காரில் மறைத்துக்கொண்டு விரைந்து சென்றார். இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு அறுபது மைல் தொலைவில் அஜந்தாக் குகைகளில் ராஜகுமாரன் சித்தார்த்தன், பலவந்தமான காமக் களியாட்டத்தைக் கண்டு தனது பார்வையைத் தாழ்த்திக் கொண்டான். மீண்டுமொரு முறை உஜாலா பேகத்தின் கைகள் துப்பாக்கிக்காகத் துடித்தன. அவரது பலவீனமான கூக்குரல்கள் இருண்ட குகைகளில் அமிழ்ந்து விட்டன. ஆனால் இதில் அஹ்மத் ஹுசேனின் தவறு என்ன? இரண்டு சகோதரர்களுக்கும் முன்னால் யாராவது பெண் வந்துவிட்டால் அவள்மீது எருதுபோல் பாயாமல் இருக்க முடியாது. மேலும் உஜாலா பேகத்தின் கொள்ளை அழகுக்கு முன்னால் தேவதூதர்களும் தப்பிஇருக்க முடியாது.

பல மாதங்கள்வரை பிரதாப் ரெட்டி பல வழிகளில் முயற்சி செய்து அலுத்துவிட்ட சமயம் உஜாலா பேகம் மீண்டும் தாத்தாவிடம் துப்பாக்கிக்காகப் பிடிவாதம் செய்தார். ஆனால் மணமகளாக, மீண்டுமொரு முறை அஹ்மத் ஹுசேனின் மனைவியாக பிறந்த வீட்டிலிருந்து பிரியாவிடை பெற நேர்ந்தது.

அவருடைய வாகனம் மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவருடன் முனாசிப் ஜங்கின் செருக்கும், அவருடைய செல்வமும், உஜாலா பேகத்தின் ஆணவமும், அஹ்மத் ஹுசேனுக்கு முன்னால் கைகளைக் குவித்தவாறு சென்றன.

யானை இறந்தாலும் ஆயிரம் பொன் பெறும்; முனாசிப் ஜங்கின் பேத்திவரை வந்தடைந்த போதும் முனாசிப் ஜங்கின் சொத்துகளின் வருமானம் பெருமளவில் இருந்தது. அஹ்மத் ஹுசேனின் ஏழு சந்ததியினர் அதை அனுபவிக்க முடியும்.

பூனையின் நற்பேறு, பால்உறி அறுந்ததாம்! வாஹித் ஹுசேனின் கவிதை நடைப்பிடிவாதம் குடும்பத்தின் மதிப்பைக் குலைத்துவிட்டது; அஹ்மத் ஹுசேன் மீண்டும் அதை நிலை நிறுத்திவிட்டார். இந்தத் திடீர்த் திருமணச் செய்தியை அறிந்த வாஹித் ஹுசேனும் சிறிது நேரம் கலக்கம் அடைந்தார். அவருடைய விளையாட்டுக்காரத் தம்பி முனாசிப் ஜங் வரை எப்படிச் சென்றுவிட்டான் என்பது அவருக்கே புதிராக இருந்தது. ஆனால் காலம் செல்லச் செல்ல முனாசிப் ஜங்கின் செல்வம் தன்னை நோக்கி வருவதை வாஹித் ஹுசேன் கண்டார்; ஏனெனில் உஜாலா பேகம் வறண்ட பூமியாக இருந்தார்; அதில் எந்தத் துளிரும் தென்படவில்லை.

பலமுறை கலவரத்துடன் அவர் தனது கணவனைத் தேடவும் செய்தார். ஆனால் அஹ்மத் ஹுசேனும் சும்மா இருக்கவில்லை. மனமகிழ்வுக்காக ஏராளமான பெண்கள் கிடைக்கிறார்கள். ஒரே ஒரு மனைவிக்காகத தன்னை வருத்திக் கொண்டதுபோதும். குழந்தைகள் தொல்லை இல்லாததும் ஒருவகையில் மிக நல்லதுதான். இல்லாவிட்டால் இந்திரனைப்போல் இன்பங்களை அனுபவிக்க இயலாது. மனைவியின் மேல் இருபத்திநான்கு மணி நேரமும் அதிகாரம் செய்யலாம்... அவருடைய புதிய காதல், புதிய காதலிகளைப் பற்றி உஜாலா பேகத்தால் ஒன்றும் பேச முடியவில்லை; வீட்டுக்கு வரும் போதெல்லாம் அஹ்மத் ஹுசேன் ஆவேசத்தில் இருப்பார், எனவே இவ்வளவு பணம் எங்கே செலவாகிறது என்று கேட்கும் துணிவு மனைவியாருக்கு இருக்கவில்லை; அஹ்மத் ஹுசேனின் மனைவி என்ற அந்தஸ்து பெற்றிருக்கிறாரே, இந்த மாளிகையின் தலைவியாக அதிகாரம் செலுத்துகிறாரே, அதுவே போதும் அல்லவா? இத்தனை

சொத்துக்கு அதிபதியாக இருப்பவன், ஒரு மனைவிக்காக குழந்தை இல்லாமல் இருக்க முடியுமா? உலகில் இப்படி, எங்கே, யாரால் இருக்க முடியும்? உஜாலா பேகம் கொடுத்து வைத்தவர் என்றுதான் மக்கள் பொறாமை கொண்டார்கள். எத்தனை நல்ல உள்ளம் படைத்த கணவன் அவருக்குக் கிடைத்திருக்கிறான்!

உஜாலா பேகத்திற்கு முகம் மட்டும் தாய்வழிப்பாட்டிபோல் அமைந்துவிட்டது; ஆனால் மூளையை முனாசிப் ஜங்கிடமிருந்து பெற்றிருக்கிறார்; அதனால் ஆட்சித்திறமை கொண்ட அவர் மூளை ஒருநாள் புதியதொரு திட்டத்தை வகுத்துவிட்டது. அந்த வெற்றி கரமான திட்டத்தின் பலனாக இன்று இங்கே மகிழ்ச்சிச் சங்கு முழங்குகிறது. சில நேரங்களில் வீட்டுப் பெண்களும் எத்தனை பெரிய சாதனைகளைச் செய்து முடிக்கிறார்கள்! பீஜானியை, அவருடைய அன்னை சீர்வரிசையுடன் அனுப்பி வைத்தார். கொள்ளைநோய்க் கூடாரத்திலிருந்து வந்தவள் அவள் என்பதெல்லாம் இப்போது உஜாலா பேகத்திற்கு நினைவில் இல்லை; ஒருத்தியாக இருந்தால் அவளைப் பற்றிய விவரங்களை நினைக்க முடியும். ஆனால் இவளைப்போல பத்துப் பனிரண்டு பெண்கள் அங்கு வளர்ந்தார்கள். பீஜானியிடமும் மற்ற பெண் களைப்போல் எல்லா இழிவான குணங்களும் இருந்தன. உயர்தரமான பீங்கான் தட்டுகளை உடைப்பது, ஒரு முறை கூப்பிட்டால் பதில் சொல்லாமல் இருப்பது, சாட்டையால் ஓர் அடி விழுந்ததும், பலமாக கூச்சலிட்டுக் கூரையைத் தலைமேல் எடுத்துக் கொள்வது போன்ற எல்லா குணங்களும் அவளிடமும் இருந்தன. எல்லாவற்றுக்கும் மேலான தவறான பழக்கம் அவளுடைய காதல் வேட்கைதான். உஜாலா பேகம் பெண்களின் இளமை உணர்ச்சிகளைத் தடைப்படுத்தப் பலவழிகளை வகுத்தார் என்றாலும், பீஜானியின் முன்னால் அவர் தோல்வி காணவே நேர்ந்தது. காதலித்தாலும் யாரைக் காதலித்தாளாம்? அந்த அறிவற்ற குலாம் ரசூலை! பாத்திமா பேகத்தின் கணவனான குலாம் ரசூல், அஹ்மத் ஹுசேனிடம் வாங்கிய கடனுக்கு ஈடாகப் பிணைக்கப்பட்டு இருக்கிறான். அவனுக்கு விடுதலையளித்துவிட வேண்டும். ஏனென்றால் சகோதரியாகிவிட்ட பாத்திமாவின் கணவன் அவன் என்றுதான் அஹ்மத் ஹுசேன் கருதினார். ஆனால் அவனோ இத்தகைய மடத்தனமான செயல்களல் காலத்தைக் கடத்திக் கொண்டே போகிறான்.

பீஜானியின் இந்தத் திருவிளையாடலைக் கண்டு பலமுறை உஜாலா பேகம் பீஜானியை எச்சரிக்கவும் செய்தார்.

"அட கேடு கெட்டவளே! அவன் மணமாகாதவன் அல்லவே. பாத்திமா பேகமும் அவள் மகள் கைசரும் உன்னைத் திட்டித்

தொலைப்பார்கள்". ஆனால் வெட்கமில்லாமல் பீஜானி ஒவ்வொரு முறையும், "எனக்கும் குலாம் ரசூலுக்கும் மணம் முடித்து வையுங்கள்" என்ற கோரிக்கையை முன் வைப்பாள். உஜாலா பேகத்திற்கு இந்த விளையாட்டு இப்போது வெறுப்பாகிவிட்டது. அவர் பல பெண்களின் திருமணத்தை, பொம்மை விளையாட்டுப் போல், பெரும் ஆர்வத்துடன் நடத்தியிருக்கிறார். உண்மையில் பலமுறை அழைப்பிதழ்களும் அச்சடித்திருக்கிறார். ஒருமுறை வட்டாட்சியரின் பணியாளனுக்காகத் தங்க மோதிரமும் கொண்டு சென்றார். ஆனால் அந்தப் பட்டிகள் குழந்தைகளைப் பெற்றெடுப்பதில் முனைந்துவிட்டன. அவர்களின் சோம்பேறித் தனமும் அதிகரித்துவிட்டது. அவர்களுடைய ஆடவர்கள் சந்தைப் பணத்தைத் திருடவும் ஆரம்பித்து விட்டார்கள். எப்போதும் மனைவியருடன் கூடிக் குலாவுவதில் காலம் கழிக்கிறார்கள். வேலை செய்ய வேண்டுமானால் அவர்களுக்கு உயிர் போய் விடுகிறது.

ஓர் இரவில், வாய்ப்புக் கிட்டியதும் பீஜானியுடன் குலாம் ரசூல் காணாமற் போய்விட்டான். ஔரங்காபாத்தின் பறவைகள் கூட அஹ்மத் ஹுசேனின் அனுமதியின்றி எங்கும் போக முடியாது! அப்படியிருந்தும் பீஜானிக்கு இந்தத் துணிவு எப்படி வந்துவிட்டது? உண்மை யாதெனில் உஜாலா பேகமே அப்போது தனது உணர்ச்சியில் இருக்கவில்லை. புதிதாக வந்த மாவட்டக் காவல் துறை அதிகாரி ஒரு கிருத்துவன். அவன் தன்னுடன் கைதேர்ந்த ஒருத்தியையும் அழைத்து வந்திருக்கிறான்.

அந்த மிஸ் ஜூலி பம்பாயில் ஏதோ ஒரு கல்லூரியில் ஆங்கிலம் சொல்லித் தந்தாளாம். இங்கு வந்த பிறகு அஹ்மத் ஹுசேனை எப்படியோ கவர்ந்துவிட்டாள். அவரும் 'கிளப்'பே கதி என்று ஆகிவிட்டார். வாரம் முழுவதும் வீட்டுக்கு வர மாட்டார். வந்தாலும் ஜூலியுடன்தான் வருவார். அவளைத் தனது பண்ணையைக் காட்டுவதற்காக அழைத்துச் சென்று விடுகிறார். தனது கையால் சமைத்தும் ஊட்டுகிறார்.

வாழ்நாள் முழுவதும் உஜாலா பேகம் கணவரின் காதல் விளையாட்டுகளைச் சகித்துக் கொண்டாள். ஆனால் இம்முறை அபாயகரமான அறிகுறிகள் தெரிந்தன. குழந்தைக்காகவே அஹ்மத் ஹுசேன் ஜூலியை மணந்துகொள்ளப்போகிறார் என்று வெளி வட்டாரங்களில் செய்திகள் பரவியிருந்தன. ஆனால் வீட்டினுள் அதை அறிவிக்கத் தயக்கம் காட்டினார்.

"உம்... நாம் செத்துப்போனால் நமக்கு யார் 'பாத்திஹா' செய்வார்கள்..."

"இந்தச் சொத்தை இப்போதே ஏதேனுமொரு அனாதை

இல்லத்திற்கு எழுதிவிட வேண்டும்..."

இதற்கு முன் இத்தகைய எச்சரிக்கைகளைக் கணவன் வாயிலிருந்து உஜாலா பேகம் கேட்டதில்லை. அதே நேரத்தில் குலாம் ரசூலும் பீஜானியும் அகப்பட்டுக்கொண்டார்கள். பீஜானியை உதைப்பதற்காகக் காலை உயர்த்திய உஜாலா பேகம் நிறுத்திக் கொண்டார்; ஏனெனில் அவள் முகத்தில் ஒருவிதப் பொலிவு இருந்தது. தன் முகத்தில் அத்தகைய பொலிவை உஜாலா பேகம் என்றுமே பார்த்ததில்லை. அதைப் புரிந்துகொள்வதில் அவருக்குச் சிறிது நேரமும் ஆகவில்லை.

அன்று முழுவதும் அவர் தீவிரமாகச் சிந்தனை செய்தார். அன்றிரவு பல நாட்களுக்குப் பிறகு உஜாலா பேகத்தை அஹ்மத் ஹுசேன் படுக்கையறைக்கு அழைத்தபோது, அவர் தலையில் முன்றானையைப் போட்டுக்கொணடு மேற்குத் திசையில் முகத்தைத் திருப்பி தான் கண்ட கனவைச் சொல்ல ஆரம்பித்தார்—நேற்றிரவு ரஹ்மத் அலி ஷாஹ் அவரது கனவில் தோன்றி, நற்செய்தி ஒன்றை அளித்திருக்கிறார். அஹ்மத் ஹுசேனின் வாரிசு பீஜானியின் வயிற்றிலிருந்துதான் பிறப்பானாம். எனவே இந்தப் பெண்ணை அவர் மணந்து கொண்டால் உஜாலா பேகத்தின் உரிமைகளும் பறிபோகாது; வேறு எந்தப் பிரச்சினையும் இருக்காது. பையனைத் தனது மகனாக ஏற்றுக் கொள்ளவும் இசைவு தெரிவித்தார். இவ்வாறு எல்லா இடர்ப்பாடுகளுக்கும் முடிவு கிடைத்துவிடும்! உஜாலா பேகம் இந்தக் கனவைச் சொல்வதற்கு முன்னாலேயே வெளியறையில் காஜி சாஹிபை அழைத்து உட்கார வைத்திருந்தார். அவர் முன்னால் வைக்கப்பட்டிருந்த வாதாம் பருப்பு, திராட்சை, கல்கண்டு தட்டுகளின் மேல் ஈக்கள் உட்காராதபடி விசிறிக் கொண்டிருந்தார். அஹ்மத் ஹுசேனுக்குச் சிந்தனை செய்வதற்கும் நேரம் கிடைக்கவில்லை. ரஹ்மத் அலி ஷாஹ்விடம் அவருக்கு அளவு கடந்த பயபக்தி இருந்தது. இதுவரை அவருடைய எல்லா கோரிக்கைகளும் அங்கிருந்துதான் நிறைவேறி இருக்கின்றன. அதனால் அவரும் மேற்கொண்டு எதுவும் ஆழமாக யோசிக்க வில்லை. காஜி சாஹிப் அஹ்மத் ஹுசேனுடன் பீஜானியின் நிக்காஹ் படித்தபோது பீஜானி கேவிக் கேவி அழுதாள். யாரோ ஒரு நீசனிடம் உஜாலா பேகம் அவளை ஒப்படைப்பதுபோல்!

அன்றிரவு அஹ்மத் ஹுசேன் அந்தச் சிறு பெண்ணைப் பார்த்தபோது காயமுற்ற குருவிபோல் அவள் நடுங்கினாள். இரவு முழுவதும் அவளுடைய கூக்குரல்களும் அழுகையும் கேட்டு உஜாலா பேகம் தனது கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

இரண்டு மூன்று மாதங்கள் இப்படியே கழிந்துவிட்டன.

இறுதியில் ஜமீலி திருமதி அஹ்மத் ஹுசேனாகிவிட முடிவு செய்த சமயத்தில் நல்வாழ்த்துக்களின் ஒலியில் அஹ்மத் ஹுசேன் தகப்பனாகிவிட்டான். எனவே ஜமீலியை முழுமையாக மறந்து, ரஹ்மத் அலி ஷாஹ்வின் தர்காவில் காணிக்கை செலுத்தவும், ஆடுகள் கொண்டு செல்லவும் அவர் ஏற்பாடுகள் செய்யலானார்...

உஜாலா பேகம் தனது பையிலிருந்து பத்துரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து மூன்று முறை குழந்தையின் தலைமீது சுற்றி, 'தூ' என்று துப்பி பீஜானியிடம் நீட்டினாள்.

உணவு சாப்பிட்டு முடிந்ததும், செந்நிற விரிப்புகளை அகற்றிவிட்டுக் கொழுப்பின் கறைகள் நிறைந்த அதே இடத்தில் பாடகிகள் மத்தளம் அடித்து உரத்த குரலில் பாடினார்கள்.

'ஆல்போல் தழைத்து
அல்லிபோல் திளைத்து
மூங்கில் போல் மொசிந்து
அறுகுபோல் வேரோடி
ஆயிரம் ஆண்டு இருக்க...'

வயதில் மூத்தவரான ஹஜரத்பேகம், உஜாலா பேகத்திற்குச் செந்நிற பனாரஸ் சேலையை அணிவித்தாள். நறுமணம் பூசி, முகத்திரையை இழுத்து, அரியணை மேல் அமரச் செய்தார்.

"ஏழு தாய்களைக் கூப்பிடுங்கள்" ஹஜரத் பேகம் கண்ணாடி வழியே கூட்டத்தை ஒருமுறை நோக்கினார். அவரைச் சுற்றிலும் பெண்கள் கூட்டம் மலர் அணிவிக்கும் காட்சியைக் காணத் துடித்தது. ஹஜ்ரத் பேகம் மலர் அணிவிப்பதிலும், சம்பிரதாயங் களை நிறைவேற்றுவதிலும் முழுத் திறமை பெற்றவர். அவரே குடும்பத்தின் மங்களகரமான முதியவராகவும் 'பூவும் பொட்டும் கொண்டு' பேரக் குழந்தைகளைப் பார்க்கும் நற்பேறு பெற்றவர்.

அவருக்கு எல்லாச் சடங்குகளும் தெரியும். அதனால் எல்லாரும் எல்லா விஷயங்களிலும் அவரை முன்னிலையில் வைப்பார்கள்.

"சந்தனம் எங்கே, தேங்காய் இனிப்புத் தட்டு எங்கே"

"சத்கா (தருமப்) பணம் எங்கே இருக்கிறது?" ஹஜரத் பேகம் கண்ணாடி அணிந்திருந்தார் என்றாலும் குழப்பமான நிலையில் ஒன்றும் தோன்றவில்லை; பெண்கள் கூட்டம்வேறு முணு முணுத்துக் கொண்டிருந்தது. ஐம்பதுக்கும் மேற்பட்ட தாய் மார்கள் அவருக்கு முன்னால் போய் நின்றார்கள். அவரோ ஏழு தாய்களை மட்டும் தேடுகிறார்! சந்தனம் கொடுத்து, தேங்காய் வெற்றிலை போட்டு அவர்களுடைய மடிகளை நிரப்ப வேண்டுமாம்.

"அஹ்மத் மியாவைக் கூப்பிடுங்கள்..."

இதைக் கேட்டுப் பாதிக்கூட்டம் வெளிப்புறத்தை நோக்கிச் சென்றது. மிகுந்த சிரமத்துடன் பெண்களைத் தள்ளியவாறு அஹ்மத் ஹுசேன் உள்ளே வந்தார். முகத்தில் புதிய மண மகனைப்போன்ற நாணமும் தயக்கமும், சற்றே தாழ்ந்த பார்வையும், புதிதாகத் தந்தையாகிவிட்ட பெருமையும், அமைதியும் கொண்டிருந்தார். அவருடைய முடி ஆங்காங்கே வெள்ளையாகி விட்டது; முகத்தில் சுருக்கங்களும் ஆழமாகிவிட்டன. வெகு வேகமாக அவருடைய உடல் தடித்துக் கொண்டு போகிறது.

உள்ளே வந்ததும் அவரது தலை மலர்ச்செடியின் கிளையில் சிக்கியது. அவரது தொப்பி கீழே விழுந்துவிட்டது. கலவரத்துடன் அவர் தன்னைச் சமாளித்தார். குறிப்பிட்ட முதியவர்களைப் பார்த்து வணக்கங்களும் தெரிவித்தார்.

உஜாலா பேகமும், பல சின்னம்மாக்கள், பல சித்திகளுக்கு முன்னால் அவரைத் தலை வணங்கச் செய்தார். மகன் வளர்ந்து, அறிவாளியாகி, சீரும் சிறப்பும் பெற்று வாழ வேண்டுமென்ற ஆசீர்வாதங்களைப் பெறும்போது அவருக்கு மூச்சு வாங்கியது.

பிறகு நறுமணங்களில் மூழ்கி, பட்டாடைகளில் அடைபட்டுக் கிடந்த மங்கையர் குழு, சிரித்தவாறே உஜாலா பேகத்திற்குப் பக்கத்தில் அவரை அமரச் செய்தது. இந்நேரத்தில் எல்லாருமே அஹ்மத் ஹுசேனிடம் 'பர்தா' செய்ய வேண்டும் என்பதை மறந்து, நேர்மாறாக அவரே பார்வையைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும் என்று ஆணையிடப்பட்டது.

"இந்தப் பையன் மட்டும் உஜாலா பேகத்தின் வயிற்றிலிருந்து பிறந்திருந்தால்—" சிலர் தாழ்ந்த குரலில் பேசினார்கள்.

திடீரென்று காலியாக இருந்த தனது மடியைப் பார்த்துவிட்டு உஜாலா பேகம் கூவினாள்— "அடியே பீஜானி! நசீர் நவாபைக் கொண்டுவா"

எல்லாரும் தங்கள் மடமையை உணர்ந்தார்கள். குழந்தையே இல்லை; ஹஜரத் பேகம் பூமாலையைச் சரிப்படுத்துகிறார்.

இருண்ட அறையில் பீஜானி, அழுது கொண்டிருந்த குழந்தையை மார்புடன் அணைத்துத் தட்டிக் கொடுத்தாள். குலாம் ரசூல்' பொம்மையைக் கையிலெடுத்தவாறு பின்னாலேயே சுற்றினான்.

"இந்த வேடிக்கையைப் பாருங்கள். வேலைகளை விட்டு விட்டுக் குழந்தைக்குப் பின்னால் சுற்றுகிறான்".

''குழந்தை அங்கே வேண்டுமாம்'' பீஜானியிடமிருந்து குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு ஒருத்தி ஓடினாள்.

ஹஜ்ரத் பேகம் குழந்தையை உஜாலா பேகத்தின் மடியில் கிடத்திவிட்டு கல்கண்டு, வாதாம், வெற்றிலை பாக்கு, பணம்

ஆகியவற்றால் நிரப்பினார். குழந்தையின் 'சத்கா'வை இறக்கினார். உஜாலா பேகத்திற்கும், அஹ்மத் ஹுசேனுக்கும் மாலைகள் அணிவித்துத் தித்திப்பு ஊட்டினாள். குடும்பத்தின் ஒவ்வொரு பீபியும் வெள்ளிக் காசுகளை அவர்கள் தலைமீது சுற்றிப் போட்டார்கள். பிறகு உஜாலா பேகமும், அஹ்மத் ஹுசேனும் எழுந்து நின்று எல்லாரையும் வணங்கினார்கள்.

பின்னால், தூரத்தில் நின்றவாறு பீஜானி இந்த வேடிக்கையைப் பார்த்தாள்.

"உஜாலா மகளே! பீஜானியை நன்றாகக் கவனித்துக்கொள். அல்லாஹ் திருத்தூதர் ஆணைப்படி இனி அவளை மகிழ்வுடன் வைத்துக் கொள்வது உன்னுடைய கடமையாகும்" ஹஜ்ரத் பேகம் பீஜானியின் முகத்தில் என்ன கண்டாரோ, நடுங்கிப் போய்விட்டார்.

"பாவம், தனது வயிற்றுச் சிசுவை உங்கள் மடியில் போட்டு விட்டாளே" இன்னொருத்தியும் அதை ஆமோதித்தாள்.

"அதற்கான உரிமை நான் தரமாட்டேனா?" உஜாலா பேகத்திற்கு ஆத்திரம் வந்துவிட்டது. "சண்டாளிக்கு இன்றே புத்தாடைகள் கொடுத்திருக்கிறேன்—பீஜானி! அடி பிசாசே! புத்தாடை அணிந்து எல்லாருக்கும் சலாம் செய்யவில்லையா?"

வெட்கமும் தயக்கமும் கொண்ட பீஜானி முன்னே வந்தாள். பதினைந்து பதினாறு வயது நிரம்பிய மாநிறமான பெண்— உஜாலா பேகத்தின் மடியில் குழந்தை இருந்தது நன்றாகப் போய்விட்டது. இல்லாவிட்டால் இத்துணை சிறிய பெண்ணுக்கு ஒரு குழந்தையா என்று யாரும் நம்ப மாட்டார்கள். அவள் தனது கைத்தறிச் சேலையின் தலைப்பைச் சரிசெய்தவாறு முதலில் ஹஜ்ரத் பேகத்தின் கால்களைத் தொட்டாள். பிறகு மதிப்புமிகு எல்லா பேகம்களின் கால்களையும் தொட்டுவிட்டு உஜாலா பேகத்தின் மருதாணியிட்ட வெள்ளைக் கால்களில் விழுந்து அழுதாள்.

"சரி சரி..." அவர் கலவரத்துடன் அவளை ஒதுக்கினார். மலர்களையும் கூட்டத்தையும் கண்டு குழந்தை அழ ஆரம்பித்தது. அஹ்மத் ஹுசேன் மணமகனைப்போல் இதுவரை தலைகுனிந்து உட்கார்ந்திருந்தார்.

"அடியே! இன்று ஏன் அழுது புலம்புகிறாய். இது நல்ல சகுனம் இல்லை; இனி உன் நல்ல காலம் ஆரம்பமாகிவிட்டது. உனது மகன் தன் தாய்தந்தையரிடம் சிறப்பாக வளர வேண்டும் என்று வேண்டிக்கொள். வாழ்க்கை முழுவதும் சாப்பாட்டிற்கும் துணிக்கும் உனக்குப் பஞ்சம் இருக்காது" முதியவரான ஹஜ்ரத் பேகம் பீஜானியை அதட்டினார்.

"இந்தச் சண்டாளி எங்கே போய் நிற்கப் போகிறாளோ?" உஜாலா பேகம் தனது நெற்றி வியர்வையைத் துடைத்தார். மாளிகையில் அவள் மனம் எங்கே நிலைக்கிறது. அவளுக்கு எப்போதும் புதுப்புது இடங்களைச் சுற்ற வேண்டும்.

"ஆனால் குழந்தை பால் குடிக்கும்வரை இந்தப் பிசாசின் கால்களில் சங்கிலி போட்டு வையுங்கள்," யாரோ இலவச ஆலோசனை வழங்கினார்கள்.

"அருமைக் குழந்தையின் அன்புத் தந்தையாரே! தாங்களும் ஏதாவது கூறுங்களேன்", அஹ்மத் ஹுசேனின் உறவு முறை மைத்துனி ஒருத்தி அவரைச் சீண்டினாள்.

"நான் ஏதும் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. நான் வெளியே போகிறேன்—சலாம்!".

"குழந்தைக்கு என்ன பெயர் வைத்திருக்கிறீர்கள், அஹ்மத் மியான்" யாரோ கேட்டார்கள்.

"நசீர் ஹுசேன் கான்"

"ஆண்டவன் நல்லது செய்யட்டும். நல்ல பெயர்தான்"

"பெரியப்பாவும் பெரியம்மாவும் குழந்தையைப் பார்க்க வரவில்லையா?"

ஒரு பேகம் பழித்துக்கூற முற்பட்டாள். அதன் முதல் அடியை உஜாலா பேகம் எடுத்துக் கொண்டாள்.

"எப்படி வருவார்கள் மாமி. எங்கள் வீட்டில் ஒரு விளக்கு ஏறியதும் அவர்கள் நெஞ்சு பற்றி எரிந்துவிட்டதே! என் புகுந்த வீட்டில் எல்லாரும், நான் எப்போது சாவேன், என் சொத்தை எப்போது அபகரித்துக் கொள்ளலாம் என்றல்லவா எதிர் பார்க்கிறார்கள்"

"போதும் போதும் சும்மா இருங்கள்" அஹ்மத் ஹுசேன் மெதுவாகவே கடிந்துகொண்டார். பிறகு வெளியே சென்று விட்டார். எந்தப் பெண்ணாக இருந்தாலும் புகுந்த வீட்டைக் குறை சொல்வதில் எத்தனை வேகம் காட்டுகிறாள்.

"இவன் ஏன் இவ்வளவு அழுகிறான்" குழந்தையின் கதறல் உஜாலா பேகத்தைக் கலவரமடையச் செய்துவிட்டது.

"அவனை என்னிடம் கொடுங்கள்." வேறொருத்தி கை நீட்டுவதற்கு முன்னால் பீஜானி நுழைந்து குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு தனது அறையை நோக்கி வேகமாகச் சென்றுவிட்டாள். சிறிது நேரத்திற்குப் பிறகு சில பெண்கள் அறைக்குள் பார்த்தபோது பீஜானி முந்தானையால் குழந்தையை மறைத்தவாறு அமைதியாகப் பாலூட்டிக் கொண்டு இருந்தாள். குலாம் ரசூல் அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்து கிலுகிலுப்பை ஆட்டிக் கொண்டிருந்தான்.

''இந்தப் பெண்கள் நீசர்கள். அவளுடைய வயதைப் பாருங்கள். இந்த வயதில் எங்களுக்கு மேலாடையைச் சரிப்படுத்தக் கூடத் தெரிந்திருக்கவில்லை". ஓர் அம்மையார் தனது தலை முன்றானையைச் சரிப்படுத்தி விட்டுக் கன்னங்களில் போட்டுக் கொண்டார்.

"அல்லாஹ் அஹ்மது நவாபுக்கு மேன்மை அளிக்கட்டும்! எவ்வளவு மேன்மையானவர். இருபது ஆண்டுகள் வரை குழந் தைக்காகப் பொறுமை காட்டினாரே; இப்போது பீபியின் பேச்சைக் கேட்டு ஒரு வேலைக்காரியை மணந்து கொண்டாரே"

"பாருங்கள். மகனும் தந்தையைப் போலவே குணசீலனாக இருப்பான். உஜாலா பேகம், அவனை எல்லாப் பகட்டுகளுடன் நவாபாக்கி விடுங்கள்."

"என்ன நடக்கிறது இங்கே", உஜாலா பேகம் எல்லாரையும் விலக்கியவாறு பீஜானியின் அறைக்கு வந்தார். முணுமுணுப்பு களும் இரகசியப் பேச்சுகளும் கேட்டு அவருடைய மனம் துடித்தது. ஒவ்வொருவரையும் அவர் சந்தேகக் கண்களுடன் நோக்கினார்.

''எத்தனை தடவை நான் சொல்லி இருக்கின்றேன். வேலையாட்கள் அறைக்குள் சின்ன நவாபைக் கொண்டு வராதே என்று"— பிறகு அவர் குலாம் ரசூலைப் பார்க்கத் திரும்பினார். 'அயோக்கியப் பயலே! நீ இங்கே ஏன் சாகிறாய். சின்ன நவாபுடன் விளையாடுவதே உனக்கு முக்கியமான வேலையா, என்ன?"

குலாம் ரசூல் வெட்கத்துடன் எழுந்து நின்றான். அவன் மடையன்தான். எப்போதும் வாயைத் திறந்துகொண்டே நிற்பான். பளபளப்பாகச் சீவப்பட்ட தலை; முதலாளி கொடுத்த பழைய சட்டையின் கைகளை முகம் துடைத்தே அழுக்காக்கிவிட்டான்! எல்லாரும் அவனைப் பைத்தியம் என்கிறார்கள். இந்தப் பட்டத்தைக் கேட்டு அவனும் சிரிப்பான். அவனுக்கு முன்னால் பாத்திமா பேகம், கைசர் ஆகியோரின் பெயரைச் சொல்லி விட்டால் வெட்கத்துடன் தலைகுனிந்துவிடுவான். தன் மனைவிக்கு முன்னால் தலையை உயர்த்தும் தகுதி இல்லா தவனைப்போல்! ஆனால் இதே குலாம் ரசூல் இந்தப் பீஜானியை எப்படி சுற்ற ஆரம்பித்துவிட்டானோ? ஆசிரியை சொல்வாள்: இந்தப் பாழடைந்த சண்டாளியால் வாலிபத்தைச் சமாளிக்க முடியவில்லை என்று. உஜாலா பேகம் அவனைத் தள்ளி ஒதுக்கிய பிறகும் அவன் கண் இமைகள் படபடக்க நின்றான். பிறகு குனிந்து கிலுகிலுப்பையை எடுத்தான். மிகுந்த இணக்க வணக்கத்துடன் அதை உஜாலா பேகத்திடம் நீட்டினான்.

குழந்தையை எப்படி சமாதானப்படுத்துவது என்ற இரகசியத்தை உஜாலா பேகம் தனது தோழி ஒருத்தியிடம் கேட்டுக்

கொண்டிருந்தார். குலாம் ரசூல் இவ்வாறு நிற்பதைக் கண்டதும் முதலில் கலவரமடைந்துவிட்டார். பிறகு புன்முறுவல் பூத்தார்.

"பார்த்தீர்களா இந்தப் பைத்தியத்தை. எங்கிருந்தோ இரண்டு பைசா பொருளைச் சின்ன நவாப்புக்காக வாங்கி வந்திருக்கான். குழந்தையிடம் பெரிதும் அன்பு காட்டுகிறான்."

"ஆமாம், தன்னுடைய குழந்தைபோல் இவன் அதற்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறானே!"

"ஆமாம், ஹைதராபாத்தில் இந்த அப்பாவிக்கும் ஒரு பெண் இருக்கிறது" என்றார் உஜாலா பேகம். தனது பெண்ணின் பெயர் கேட்டு, மகிழ்ச்சியுடன் சிரித்தவாறும், வெட்கமடைந்தும் குலாம் ரசூல் வெளியே சென்றுவிட்டான்.

# 5

இப்போது நான் இருக்க—

என்னுடன் ஆசை நகரம் ஒன்றின்
அழியாத் துயரமும் இருக்கிறதே!

காலிப்பின் கவிதையை முணுமுணுத்தவாறு அவர் எப்போது கண் அயர்ந்து விட்டாரோ, தெரியவில்லை.

ரஜியாவின் குழந்தைக்கு நாற்பதாவது நாள் சடங்கு நடக்கிறது. சாந்தும் அந்த வட்டாரத்தின் பெண்களும் மத்தளம் எடுத்துக்கொண்டு விட்டார்கள்.

அவர்களுடைய பாட்டுக் குரல் கவிதாலயத்தைத் தாண்டி வெளியே ஒலித்தது. ஆசனத்தின்மீது, மூக்குக் கண்ணாடியை அணிந்து உட்கார்ந்தவாறு சிறிய சிறிய துணிகளைத் தைத்துக் கொண்டிருந்தார்.

கீழே தரையின்மேல் தட்டுகளில் வாதாம் பருப்பு, கல்கண்டு, தேங்காய் முதலியவை வைக்கப்பட்டிருந்தன. நொண்டி அத்தை பிள்ளைத் தாய்ச்சிக்கான மருந்து தயாரித்துக் கொண்டிருந்தார்.

வெளியே ரஷீத் தன் நண்பர்களுடன் சிரித்தவாறு பேசிக் கொண்டிருந்தான். மகள் பிறந்த மகிழ்ச்சியில் திளைத்தான். சமையலறையிலிருந்து உணவுப் பொருள்களின் மணம் வீசியது. சாந்த் புதியதொரு பாட்டைத் தொடங்கினாள்.

பாடிடுவோம் வாழ்த்துக்கள்
புத்தம் புது, புதுப்புது...

இந்த வீட்டில் எத்தனை அமைதி இருக்கிறது—எவ்வளவு நிம்மதி! ஒவ்வொருவரும் தமது பணியில் மூழ்கி இருக்கிறார்கள். இப்போது குளிர்காலம் வந்துவிடும். அப்போது இரவு தனிமையாகத் தெரியும். வாஹித் ஹுசேனுக்கோ எப்போதும் இரவு கசந்ததில்லை.

இரவு தனது பொன்னிறமான கனவுகளைக் கொண்டு வருகிறது. உலகத்தின் எல்லாக் கவலைகளினின்றும் வெகுதூரம் அழைத்துச் செல்கிறது...

உள்ளே ரஜியாவின் சின்னஞ்சிறு குழந்தை அழுதது. இங்கு எத்தகைய அமைதி நிலவுகிறது. இந்த வீட்டிற்குள் யாருக்கும் எதுவும் தெரிவதில்லை. உலகத்தில் தொலைவில் உள்ள ஒரு மிகப் பெரிய நகரமான ஹிரோஷிமா அணுகுண்டால் அழிந்து விட்டதே...

உலகம் முழுவதுமே, தீச்சுவாலைகள். குருதி வெள்ளம் ஆகியவற்றின் பயங்கரமான விளையாட்டில் மூழ்கிவிட்டதே...

இந்தியாவிலும் சுதந்திரப் போராட்டம் வேகம் பிடித்து விட்டது. மனிதர்கள் ஓநாய்கள்போல் மற்ற மனிதர்களைப் பின் தொடருகிறார்கள். மரணம், அழிவு... எல்லாத் திசைகளிலும் கூக்குரல்கள்... இந்த வெளியுலகம் வாஹித் ஹுசேனிடமிருந்து வெகுதூரத்தில்தான் இருக்கிறது. என்றாலும் அந்த உலகத்துடன் தனது தொடர்பை அவரால் வெட்டி விடவும் முடியாது. இந்த இரண்டு உலகங்களுக்கு நடுவில் அவர் மாட்டிக் கொண்டிருக்கிறார். இத்தகைய நேரங்களில் மனிதன் புகை பிடிக்கும் குழலை நாடுவான் அல்லது கவிஞர் காலிப்பிடம் தஞ்சம் புகுந்துவிடுவான்...

மனிதர்கள் வாழ்வில் கவிதையின் முக்கியத்துவத்தை மிகவும் குறைவாகவே மதிப்பிடுகிறார்கள் என்பது வாஹித் ஹுசேனின் வாதம். ஆனால் காலிப் கவியாகவே எங்கெங்கோ அவருக்குத் துணையாக நிற்கிறார். அதாவது, துணையற்று நிற்கும் நேரங்களில் அவருக்கு உதவி இருக்கிறார்.

தான் தனித்து விடும் நேரங்களில் அவர் காலிப்பை விடாமல் பிடித்துக் கொள்வார்.

மனிதன் எங்கெங்கெல்லாமோ தனக்காக அன்பைத் தேடி அலைகிறான். உலகத்தின் எல்லாக் கலைஞர்களும். எழுத்தாளர்களும், அறிஞர்களும் ஒரே பொருளைத் தேடுவதில் ஈடுபட்டு இருப்பது போல் தெரிகிறது.

அன்பு—வாழ்வினின்று வெகுதூரத்தில் மனிதனின் கடைசி இலக்கு—இறுதிப் பாதுகாப்பு—அதற்காகவே மனிதன் மரணத்தையும் ஏற்றுக்கொள்கிறான்...

"நல்லதுதான்... இன்று யுத்தம் முடிந்து விட்டது!"

அவர் அமைதியாக தனக்கு முன்னால் இருந்த நாளிதழை ஒதுக்கினார். "இப்போது ஹிரோஷிமாவின் எல்லாக் குழந்தைகளும்... அந்தக் குழந்தைகளின் வருகைக்காக மகிழ்ச்சி கொண்டாடிய தாய்மார்களும்... பாட்டிமாரும்... எல்லாருமே..."

'என்னென்ன திருஷ்டி கழிப்பது?'

இந்தப் பெண்களும் எத்தகையவர்கள். ஒவ்வொரு குழந்தை பிறக்கும்போதும் எத்தனை கனவுகளால் அலங்கரிக்கிறார்கள். எத்தனை மாளிகைகளைக் கட்டுகிறார்கள்!

'தம்!' ஒரே அணுகுண்டு எல்லாரையும் மௌனமாக்கி விட்டது. மீட்பு என்பதற்கே வழி இல்லை. ஆண்டவன், மதம் எல்லாம் என்ன? ஆண்டவன் இருந்தால் தனது தெய்வத் தன்மையால் ஏன் இதிலெல்லாம் குறுக்கிடுவதில்லை?

பலமுறை வாஹித் ஹுசேன், மிஸ்கீன் அலி ஷாஹ்விடம் சென்றார். 'நான் மதத்தைப் பற்றி விவாதம் செய்ய வரவில்லை. கல்வி கற்க வந்திருக்கிறேன்' என்று சொன்னார். ஆனால் கல்விக்கு எல்லை ஏது? கல்வி மெய்விளக்கத்துடன் பிணைந்திருக்கிறது. பலவித கோணங்களில் பிரிந்துவிடுகிறது. எனவே வாஹித் ஹுசேன் மிகவும் குழம்பினார்.

எந்தப் பார்வைநோக்குச் சரியானது? மனிதன் எதை ஏற்றுக்கொள்வது. எந்தச் சிந்தனை வழியைத் தனதாக்கிக் கொள்வது?

கலவரமடைந்த அவர் மீண்டும் தனது கவிதையிடமே திரும்பி வந்துவிட்டார். ஏதோ ஒரு கவியரங்கில் உட்கார்ந்திருப்பது போலவும், சுற்றிலும் மக்கள் பாராட்டுரைகளைப் பொழிந்து அவரை மகிழ்விப்பது போலவும் தெரிந்தது.

அவர் விழிப்படைந்தார். உண்மையாகவே கவியரங்குபோல் எல்லாம் நடந்துகொண்டிருந்தது. சாந்த் முதல் பீபி வரை எல்லாருமே ஆரவாரம் செய்தார்கள். மனிதன் சிந்திப்பதற்கு எதுவும் இல்லாவிட்டால், நிம்மதியடைந்து விடுகிறான். அவனைச் சுற்றிலும் அதே மக்கள்—ஒன்றும் சிந்திக்காதவர்கள்—களிப்பில் மூழ்கி இருக்கிறார்கள். அவர்கள் 'இன்றைய தினத்'திற்காக மட்டும் வாழ்கிறார்கள்.

வாழ்வின் இந்தத் துள்ளலைவிட்டு வெகு தூரத்தில் வாஹித் ஹுசேன் தன் கற்பனைக் காதலியைப் பழித்துக் கொண்டிருந்தார்.

இந்தப் பழைமையான தலைப்பில், ஆயிரக்கணக்கில் இல்லை என்றாலும் நூற்று'க்கணக்கில் கஜல்களை எழுதி இருக்கிறார். அடியீற்றெதுகைகளில் மட்டும் மாறுதல்கள் செய்ய வேண்டும். அதே காதலிதான். அவள் ஈரலை நெருப்பில் வாட்டிச்

சாப்பிடுகிறாள்; வெட்டுக்கிளிபோல் எதிரிகள் தாக்குதல் நடத்தினார்கள் என்பது போன்ற கருத்துகளே. என்றாலும் நூற்றுக் கணக்கான முறை உறிஞ்சிவிட்ட எலும்பு இன்னொருவர் வாயில் இருக்கும்போது உமிழ்நீர் சுரக்கவே செய்கிறது.

'பாரும். கஜல் தயாராகிவிட்டது.'

ஆனால் இன்று ஏனோ அதுவும் அவருக்குத் துணை நிற்க வில்லை. ரஷீதின் குறைவான வருமானம், கடன் தொல்லைகளைப் பார்த்து, அதுவும் தூரத்திலிருந்து, கட்டை விரலைக் காட்டியது.

கூடத்தில் ஆரவாரத்தைக் கண்ட வாஹித் ஹுசேன், தன் மூக்குக் கண்ணாடியைக் கீழே வைத்தார். சுழலும் நாற்காலியை வேறு திசையில் திருப்பினார்.

'இவர்கள் எல்லாம் இவருக்கு யாரோ?' தன்னை மறந்து அவர் யோசனை செய்தார். குறும்பு நிறைந்த இந்தக் குழந்தைகள், கருணையில்லாத உறவினர்கள், சற்றும் கீழ்ப்படியாத பிள்ளைகள், தருக்குள்ள மனைவி... இதே கொள்ளையர்கள் தானே அவருடைய சிந்தனையின் சிறப்பு, அவருடைய அழகான உடல், அவருடைய காதல் உணர்ச்சிகள் எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டார்கள்...!

வாழ்வின் எந்தப் பகுதியும் பெண் இல்லாமல் முழுமை பெறுவதில்லை என்பது அவர் சித்தாந்தம். கவியாலயத்தின் வாசிகள் எப்போதும் ஏதேனுமொரு மங்கையின் கைதியாகவே இருந்து வந்திருக்கிறார்கள். அதனால் அவர்களது கவிதை உணர்வும் செழிப்பாக இருந்தது. வாஹித் ஹுசேனும் இளமைப் பருவத்தின் தொடக்கத்தில் இங்கும் அங்கும் தனது மனத்தைப் பறிகொடுத்தார். ஒவ்வொரு நாளும் ஒரு புதிய காதலை வளர்த்தார். இரவு முழுவதும் அந்தக் காதல் நினைவில் கண்ணீரால் தலையணை நனைந்துவிடும்; காலையில் ஒரு கஜல் தயாராகிவிடும்.

ஆனால் இவளும் ஒரு பெண் அல்லவா? அவர் நாற்காலியை மீண்டும் திருப்பி எதிரில் இருந்த பீபியை நோக்கினார். அவர் மிகவும் அமைதியாகச் சிறுசிறு துணிகளைத் தைத்துக் கொண்டிருக்கிறார். அதுவே அவரது வாழ்வின் குறிக்கோளாக இருப்பதுபோல்! அவர் உலகத்தின் எல்லா அமளிகளையும், வாஹித் ஹுசேனின் 'எதிர்நோக்கும்' மூளையையும், அவருடைய தாகமுள்ள உடலையும் அறிந்திருக்கவில்லை; இந்த அலட்சியப் போக்குள்ள மங்கையே காதலியாக இருந்து வாழ்வின் எல்லா வண்ணங்களையும் நிரப்பி இருக்கிறாள்; மனைவியாக வாழ்ந்து அந்த ஒவ்வொரு வண்ணத்தையும் அழித்துவிட்டாள். இன்று நீதி மன்றத்தில் எத்தனையோ வழக்குகளில் அவருடைய பெயர் அழைக்கப்படுகிறது. இரண்டு பெண்களும் புகுந்த வீடுகளில் துடிக்கிறார்கள். அவர் ஓய்வூதியம் பெற்றதுதான் தாமதம், பல்வேறு

நோய்கள் எழுந்து நின்றன. ஐம்பத்தைந்தாவது வயதிலேயே ஒரு டாக்டர் இரத்த அழுத்தம் என்றால், இன்னொரு டாக்டர் இதய பலவீனம் என்கிறார். நொண்டி அத்தை ஒவ்வொரு வியாழக் கிழமையும் அரிசியின் மேல் தயிர்போட்டுத் திருஷ்டி கழிக்கிறாள். மாலை வேளைகளில் தோட்டத்தில் சுற்றுவதால் ஏதோ காற்றுப் பட்டுவிட்டது என்கிறாள்.

வராந்தாவில் ஒரு மூலையில் சுழலும் நாற்காலியில் உட்கார்ந்தவாறு அவர் எல்லாவற்றையும் பார்க்கிறார். இன்று காற்றுத் தடைப்பட்டுவிட்டது. கோடைகாலம் தொடங்கவில்லை என்றாலும் வெயில் அதிகம்தான். இரவில் கொசுக்கடியாலும் குழந்தைகளின் அழுகுரல்களாலும் தூங்க முடிவதில்லை. தோட்டத்தில் எல்லாச் செடிகளும் துயரப் போர்வையுடன் நிற்கின்றன. அவற்றின் கண்ணீர் மஞ்சள் இலைகளாக விழுகிறது...

நாளிதழும் பயங்கரமான செய்திகளின் சுமையுடன் மேசை மேல் நடுங்கிக் கொண்டிருக்கிறது.

மேதகு வேந்தரின் சீற்றம் மீண்டும் பாய்ந்தது. அரசாங்க சமையல்துறை மேலாளர்மீது! மாளிகையினுள் வசிப்போருக்குக் கொடுக்கப்படும் தக்காளிப் பச்சடியில் நெய் குறைவாகப் போடப்படுகிறது. சமையல்துறை மேலாண்மை ஏன் இவ்வளவு சீர்கெட்டுவிட்டது?

இந்தப் பேச்சு அரசமாளிகையின் சமையலறையிலிருந்து கிளம்பிச் சார்மினாரின் தேநீர் விடுதிகளை அடைந்துவிட்டது. ஐம்பது காசு தேநீர்க் கோப்பையை எதிரில் வைத்தவாறு காச நோய் உள்ளவர்களும், நகரின் கிழட்டுக் கவிஞர்களும், அபினிப் பிரியர்களும், மாளிகையிலிருந்து வெளியேற்றப்பட்ட ஊர்சுற்றி களும், காலச் சுழற்சியில் அழிந்த நவாப்புகளும், சதித்திட்டங்கள் தீட்ட இங்கும் அங்கும் ஓடும் 'இந்துஸ்தானி'களும் இதைக் குறித்து விவாதித்தார்கள். 'இன்று ஹுஜூரின் நெற்றியில் சுருக்கங்கள் இருக்கின்றன. இறைவன்தான் காப்பாற்ற வேண்டும்' என்றார்கள்.

யுத்தம் நின்றுவிட்டது. காந்திஜி அயல்நாட்டுப் பொருள் களைக் பகிஷ்கரித்தார். தன் ஆசிரமத்தில் உண்ணாநோன்பு கடைப்பிடிக்கிறார். அகிம்சையின் மூலம் இந்தியாவுக்கு விடுதலை தேடுகிறார்.

இந்த 'இந்தியா' தக்காணத்திலிருந்து வெகுதூரத்தில் இருந்தது. அதை நினைக்கும்போதே வாஹித் ஹுசேனின் சிந்தனை சோர்வடைந்துவிடும்.

ஆனால் சுதந்திரம் என்பது மிகப்பெரிய அருளாகும். நமது அரசு—நமது அரசர்—நமது நாடு! வாஹித் ஹுசேனுக்குத் தனது நகரத்துடனும், தனது வீட்டோடும் ஆழமான அன்புப் பிணைப்பு

இருந்தது. அதனால் வெளியுலகச் செய்திகளை மிகக்குறைவாகவே படித்தார். இன்றைய முக்கிய செய்தி—'மாளிகைவாசிகளின் உணவில் நெய்குறைவாக இருக்கிறது'. ஏதோ ஓர் இடத்தில் ஒரு கவிஞன் தனது கவிதையைப் படிக்கிறான்.

'காதலியின் அழகு முகத்தின்மேல் இருக்கும் பரு—
இயற்கையின் எழுத்தர் பேனா உதறும்போது விழுந்த புள்ளியே!'

பாராட்டுதலின் கரகோஷம் விண்ணைப் பிளக்கிறது.

ஹைதராபாத்தில் பாடகிகள் வாழுமிடமான மெஹ்பூப் கி மெஹந்தியில் மலர்ச் சரங்கள் விற்பனையாகின்றன. மாடியில் ரோசாமொக்குப் போன்ற நளினமான பெண் ஒருத்தி 'கெதார்' ராகத்தில் கவிஞர் தாக் அவர்களின் கஜல் ஒன்றைப் பாடிக் கொண்டிருக்கிறாள்.

'பத்தர்கடி'க்கு எதிரில் சாலார் ஜங்கின் பிரம்மாண்டமான மாளிகை நிற்கிறது. எண்ணிலடங்கா அறைகளில் உலகின் மிக அரிய பொருள்களைச் சேகரித்த பிறகு, அவர் மிக அலட்சியமாக உட்கார்ந்தவாறு கறையான் அரித்த ஒரு கையெழுத்துப் பிரதியைப் படிப்பதற்கு முயன்று கொண்டிருக்கிறார். ஏனெனில் மிகவும் அரிய நூல்களைச் சேகரிக்க வேண்டும் என்பதே அவருடைய துடிப்பாகும்.

அரச மாளிகையின் நுழைவாயில் வழியே தட்டுகளை எடுத்தவாறு சேவகர்கள் வெளியே வந்தார்கள். இன்று யாருக்கு நற்பேறு கிடைக்கப் போகிறதோ?

இந்தக் 'கான்' (உணவு) யாருக்கு அனுப்பப்படுகிறது? மேதகு மன்னரின் கருணைப் பார்வை யார்மீது படுகிறது? இது தற்செயல் நிகழ்ச்சியே ஆகும். ஒருவருடைய வீட்டு வாயிலின் முன்னால் அரசமாளிகையின் நீளமான, அகலமான, மூன்று கார்களிலிருந்து பத்துப்பணியாட்கள் வெளியே வருவார்கள். ஒரு பெரிய தட்டு இறக்கப்படும். பாதி ரொட்டி, ஒரு மாம்பழம், ஒருசிறு கிண்ணத்தில் பாலாடை அதில் வைக்கப்படும். ஆனால் அதற்குப் பின்னால் அன்பருளின் ஒரு நீண்ட தொடர்ச்சி இருக்கும். பெரிய பதவி—ஆதீனம்—பட்டம்—பெருங்குடி சந்ததியின் வருங்காலம் இதே பாதி ரொட்டியில் அடங்கியிருக்கும்.

தன் மாளிகையின் கூடத்தில் சமுக்காளத்தின்மீது அமர்ந்த வாறு 'தான்பூரா' வாத்தியத்துடன் சுன்னு நவாப் உட்கார்ந் திருந்தார். உலகத்தையே மறந்து மூடிய கண்களுடன் பாடினார்.

'அதோ சோலையில் வசந்தம் வந்து விட்டது.
எவ்விலையாயினும் வாங்கிக் கொள்!
எழுந்திருங்கள், சுன்னு நவாப், எழுந்திருங்கள்.
இளவேனில் காலம் எப்போதோ கடந்து போய் விட்டது.'

மலர்களின் நறுமணம் காற்றோடு கலந்து வெகுதூரம் போய்விட்டது. இப்போது எல்லாத் திசைகளிலும் இலையுதிர் காலத்தின் சோகம் பரவி இருக்கிறது. மலர்கள் சிறுசிறு மொக்குகளுள் மறைந்து ஓய்வெடுத்துக் கொண்டிருக்கின்றன. ரோசாச் செடிகள் வெட்டப்பட்ட பிறகு எவ்வளவு அசிங்கமாகத் தெரிகின்றன. பிணம் போன பிறகு வீட்டில் பரவும் சோகம் போல்! உலர்ந்த இலைகளை எடுத்துச் செல்லத் தோட்டக்காரன் இன்று சலவைக்காரனை அழைத்து வந்திருக்கிறான். இன்று அழிவுத்தீ எல்லாவற்றையும் சாம்பலாக்கி விடும். பிறகு மீண்டும் ரோசாவில் புதிய மொக்குகள் வளரும்.

ஆனால்`என்னுடைய சிந்தனை பிடிக்கு அடங்காத குதிரை போலாகிவிட்டதே! பகல் முழுவதும் கழிந்துவிட்டது. மனதைத் தொடும் ஓர் ஈரடியும் உருவாகவில்லை.

முன்பும் இதே பீபிதான் இருந்தார். இவருடைய நினைவில் கஜல்கள் வெள்ளம்போல் வரும். ஆனால் இப்போது பழக் கொத்துக்கள் பறிக்கப்பட்ட திராட்சைக் கொடிபோல் பயனற்றவராக ஆகிவிட்டாளே...

இருபத்தேழு ஆண்டுகள் கழிந்துவிட்டன, இந்த பீபியின் எதிர்நோக்குதலில்—ஆனால் இன்று நினைக்கும்போது அவர் எஃகு போல் அசையாமல் தன்னிடத்தில் நிற்கிறார். ஆமாம்; அவருள் தான் பல இடங்களில் மேடு பள்ளங்கள் வந்துவிட்டன. பீபி இப்போது அவருடைய காதலியாக இருக்கவில்லை! உலகின் பீபியாகி விட்டார்.

பெரிய மாளிகை, குடும்பத்தின் உயர்ந்த மூக்கு—வாஹித் ஹுசேனின் காதல் உணர்ச்சி, ரஷீத்தின் முற்போக்கு எண்ணங்கள், நான்கு புறங்களிலும் சண்டையிட்டு அழும் அவரது பேரக் குழந்தைகள்—இவையெல்லாம் பீபி அவரைத் துன்புறுத்துவதற் காகவே செய்த வேலையாகும். அவள் வெகுதூரத்தில் நின்று அவருக்கு கட்டை விரல் காட்டுகிறாள்...

எதிரே குழலில் புகையிலை நிரப்பப்பட்டிருக்கிறது. அவர் அடிக்கடி வானத்தின் விரிந்த பரப்பைப் பார்த்துவிட்டு முணுமுணுக்கிறார்.

'இப்போது நான் இருக்க—
என்னுடைய அசை நகரம் ஒன்றின்
அழியாத் துயரமும் இருக்கிறது...'

ஆ! காலிப்பும் என்ன சொல்லி விட்டுச் சென்றிருக் கிறான்—ஆசை நகரமொன்றின் அழியாத் துயரமாம்!

எழுதி எழுதி அடிக்கப்பட்ட கஜலை எடுத்து வீசி எறிந்தார். குழலை எடுத்து மீண்டும் எதுகைகளின் தேடலில் மூழ்கி விட்டார்.

சொக்காயை முடித்துவிட்டு பீபி பார்வையை உயர்த்தினார். மௌனமாக உட்கார்ந்திருந்த வாஹித் ஹுசேனைப் பார்த்தார்.

ஏதேனுமொரு பாலை நிலத்தில் யாரோ ரோசாச் செடியை நட்டு அதை அங்கே வலுக்கட்டாயமாகச் செழிப்புடனும் காண விரும்புவது போல் பீபியும் இந்த வீட்டில் வசித்தார்.

இருபத்தி ஏழு ஆண்டுகள் கழிந்த பிறகும் இந்தப் பூமியில் அவருடைய கால்கள் ஆழமாக ஊன்றவில்லை. ஒருநாள் கூண்டுக் கதவுகள் திறக்கும். அப்போது வெளியே சென்று மலர்கள் நிறைந்த கொடியின் மீது உட்காரலாம் என்று நினைக்கும் குருவி போலவே அவர் இங்கு இருந்தார்.

பீபியின் தந்தை வாஹித் ஹுசேனுடைய தந்தையிடம் எழுத்தராக இருந்தார். தனது பணியைத் தவிர, பேகம் சாஹிபாவை மகிழ்விப்பதற்காக பீபியின் அம்மாவிடம் சொல்லி அப்பளம், ஊறுகாய் செய்து எடுத்துக்கொண்டு வருவார். தனது முதலாளியை நல்ல மனநிலையில் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவருடைய இரத்தத்தில் ஊறி இருந்தது. அதனால் கவிதாலயத்தில் அவர் பெரிதும் விரும்பப்பட்டார். எல்லா நிகழ்ச்சிகளிலும் பொறுப்பான வேலைகள் அவரிடம் ஒப்படைக்கப்பட்டன. மாளிகையின் பேகம்கள், மாமியாருக்கும் சக்களத்திகளுக்கும் தெரியாமல் நகையோ துணியோ வாங்க நினைத்தால், அது இவர் மூலமாகவே நடைபெறும். இந்த வாணிபத்தில் சில காசுகளை அவர் மிச்சப்படுத்தி வீட்டுக்குச் செல்லும்போது தனது ஒரே மகளுக்கு, இந்த மாளிகையின் விசித்திரமான சம்பவங்களைச் சொல்லுவார். எழுத்தரின் குடிசையில் பீபி பிறந்தார் என்றாலும் அவருக்குக் கிடைத்த அழகு கதைகளில் வரும் அரசகுமாரிகளுடையதைப் போல் இருந்தது. அவருடைய முகத்தைப் பார்த்தவர்களுக்குப் பித்துப் பிடித்து விடும். ஆனால் எழுத்தரோ தனது மகளின் முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் கவலை கொள்வார்—முதலில் பெண் ஜென்மம், அதற்குமேல் அழகு—இது பெரிய ஆபத்து அல்லவா?

ஆண்டவன்தான் இவளைக் கரையேற்ற வேண்டும்.

மாளிகையில் வாழ்ந்த இந்த இரண்டு சகோதரர்களைப் பற்றியும் அவருக்கு நன்றாகவே தெரியும்—காதலிப்பதைத் தவிர இவர்களுக்கு வேறு வேலையே இல்லை. அதனால் அவர் தனது மனைவியையும் மகளையும் எப்போதுமே கவிதாலயாவுக்கு அழைத்து வருவதில்லை.

கவிதாலயத்தில் தினமும் ஐந்து சேர் இறைச்சி வருகிறது என்று அவர் இரவில் தனது மனைவியிடம் சொல்லும்போது அவளும் வியப்பு அடைவாள். ஏனெனில் அவர்கள் வீட்டுக்கு

மாதத்திற்கு ஒரு முறையும்கூட ஒழுங்காக அரை கிலோ இறைச்சியும் வருவதில்லை. மாளிகைகளில் இழைக்கப்படும் கொடுமைகளைக் கேட்டு அவளும் நடுங்குவாள்.

அதனால் பீபியின் சிறிய இதயத்தில் நவாப்புகள் ஜாகீர் தாரர்களின்மேல் பயத்துடன் அவர்களுக்காக வெறுப்பும் வளர்ந்தது. ஒரே சமயத்தில் அவர்கள் நான்கு விவாகங்கள் செய்து கொள்கிறார்கள்... வேலைக்காரிகள், விலைமாதர்களின் எண் ணிக்கை வேறு! அவர்களின் வீடுகளில் குழந்தைகளுக்கான அன்பு, இரத்தத் தொடர்பாக இருப்பதில்லை—அது நிலைமைகளைப் பொறுத்தது... பீபி அவர்களை மிகவும் வெறுத்தார் என்றாலும் இந்தக் கதைகள் நடக்கும் ஒரு மாளிகையை ஒருமுறை பார்க்க வேண்டுமென்றுதான் அவருடைய மனம் விரும்பியது. ஆனால் எழுத்தர் தட்டிக் கழித்து விடுவார். அவருக்கு பதினான்கு வயது நிரம்பிய போது ஒரு போலீஸ்காரர் பெண்கேட்டு வரவே, மனைவியுடன் ஆலோசனை நடத்திய பிறகு ஒருநாள் அவர் பீபியை மாளிகைக்கு அழைத்துச் சென்றார். பேகம் சாஹிபாவுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு மகள் திருமணத்திற்காக ஏதேனும் உதவி பெற வேண்டும் என்பதுதான் அவருடைய எண்ணம்.

இவ்வாறு பயந்தவாறு, நடுங்கியவாறு கலவரமடைந்த பீபி ஒருநாள் கவிதாலயத்திற்குச் சென்றார். வெள்ளை பைஜாமாவும் மேலாடையும் அணிந்து ரோசா நிற 'மல்மல்' துண்டு போட்டிருந்தார். நீண்ட தலைமுடியில் மேலிருந்து கீழ்வரை பச்சை 'கோர்லா' இருந்தது.

வாஹித் ஹுசேனின் சின்னம்மா தொழுகைக்காக வந்தவர் நின்று விட்டார். எதிரில் ஞாயிறுபோல் பிரகாசிக்கும் யுவதி ஒருத்தியைக் கண்டதும் அவரால் தொழுகை நடத்த முடிய வில்லை. ஆண்டவன்தான் இவளைக் காப்பாற்ற வேண்டும். இந்தப் பெண்ணை நலத்துடன் வீட்டிற்குக் கொண்டு செல்ல வேண்டும்.

அவருக்கு எழுத்தரின் அறிவுகண்டு அழுகைதான் வந்தது. இந்த ரோசா மொக்கு போன்ற யுவதியை இங்கு எதற்காக அழைத்து வர வேண்டும்? அஹ்மத் ஹுசேனும் வாஹித் ஹுசேனும் கட்டப்படாத எருதுகளைப் போல் சுற்றிச் சுற்றி வருவது இவருக்குத் தெரியவில்லையா? அவர்களுடைய காதல் விளையாட்டுக்களால் வீடு துன்பப்பட்டது. அஹ்மத் ஹுசேன் மரபு வழக்கப்படி கவிதை எழுதவில்லை; மேலும் தகுதி பாராமல் நீசர்களையும் அழைத்து வந்து விடுவார். வீட்டு வேலைக்காரி களோ எப்போதும் எளிதில் கிடைக்கக்கூடிய பொருள்களாக இருந்தார்கள். ஆனால் வாஹித் ஹுசேன் கவிஞராக இருந்தால், பல நாட்கள் வரை ஒரு தொடர்ச்சி இருக்கும். அப்போது

எல்லாரும் ஆபத்தில் இருப்பது போல் தவிப்பார்கள். இருவருக்கும் 'மூக்கணாங் கயிறு' போட்டுவிட வேண்டும் என்று பெரியவர்கள் கவலை கொண்டார்கள். ஓரிடத்தில் அந்தஸ்து குறைந்தவர்களாக இருந்தால் வேறொரு இடத்தில் சீர்வரிசை சரியாக இல்லை என்ற குறை இருக்கும்.

'பெருந்துயரோ இடரோ எதுவாக இருப்பினும்
நீ என்னுடையவளாக இருக்கக் கூடாதா?'

வாஹித் ஹுசேன் வேறொரு அறையில் முணுமுணுத்தவாறு சுற்றிச் சுற்றி வந்தார். அவளது தோழி ஜமானி பேகத்தை அழைக்கும்படி அவர் தனது சின்னம்மா மகளை வற்புறுத்தினார்.

"இன்னும் ஜமானிக்குத் தொல்லை கொடுக்காதீர்கள். அண்ணா! அவளுடைய அம்மா நல்லதொரு வரனைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவள் வாழ்வைக் கெடுக்க வேண்டாம"

சில நிமிடங்களுக்குப் பிறகு அவள் திரைக்குப் பக்கத்தில் வந்து அழைத்தாள்—"அண்ணா, இங்கே வாருங்கள். இங்கிருந்து எட்டிப் பாருங்கள். இத்தனை அழகான பெண்ணைப் பார்த்திருக் கிறீர்களா?"

வாஹித் ஹுசேன் சற்றே திரையை விலக்கிப் பார்த்தார். எதிரே தரைமேல் காலணிகளுக்குப் பக்கத்தில் வைரத்தைப் போன்ற ஒரு பெண் மின்னினாள். தலைத்துண்டை சரிப்படுத்திய வாறு நான்கு திசைகளிலும் நோக்கினாள். அரும்பொருள் காட்சி சாலைக்கு வந்து விட்டதைப்போல் அவள் விழித்தாள்.

வாஹித் ஹுசேன் அவளைப் பார்த்தார். வெண்திரையில் படம் ஓடிக்கொண்டிருக்கும்போதே நின்று விடுவதைப் போல் அவரும் சிலையாகி விட்டார்.

பல நிமிடங்கள் கடந்து விட்டன. அவருடைய தங்கை கலவரமடைந்து, "அண்ணா, நகருங்கள். அங்கே 'கோஷா' இருக்கிறது" என்றாள்.

பிறகு அவள் முன்னே சென்று பீபியை மறைத்தவாறு நின்றாள். அவளுடைய மாயச் சக்தியுள்ள கண்களை அவர் பார்த்துவிடக் கூடாது என்று நினைத்தாள் போலும்—

பிறகு கதவை மூடிவிட்டுச் சொன்னாள்— "எழுத்தரின் மகள் இவள் - பாவம் ஏழைகள் - அழகாக இருக்கிறாளே என்றுதான்..." தனது தவறை உணர்ந்து அவள் பீபியின் முக்கியத்துவத்தைக் குறைக்க முயன்றாள்.

ஆனால் வாஹித் ஹுசேன் எதுவும் கேட்கவில்லை; தான் குருடனாகிவிட்டது போல் அவர் உணர்ந்தார். அவர் முன்னால் திடீர் ஒளி தோன்றவே நான்கு திசைகளிலும் இருள் பரவி விட்டது. இந்த இருளில் ஜமானி பேகம் என்ன, இதர

விலைமாதுகள்தான் எதற்கு? வாஹித் ஹுசேன் இரவு முழுவதும் அமைதியிழந்து நடமாடினார். இனி அவர் எழுத்தரின் மகளை எந்த விலைக்கும் வாங்கிவிட முயற்சி செய்வார் என்று தங்கை அச்சம் கொண்டாள். ஆனால் அங்கே நிசப்தம் குடிகொண்டு இருந்தது. உணவும் நீரும் ஒதுக்கப்பட்டு விட்டன. நண்பர்களுடன் கேலிப்பேச்சு, சிரிப்பொலிகள், ஒவ்வொரு சனிக்கிழமை இரவிலும் கவியரங்கின் ஆரவாரம், எதுவுமே இல்லை. இதே காதலியை எதிர்நோக்கியே கவிதாலயத்தின் ஒவ்வொரு கவிஞனும் கஜல் பாடியிருக்கிறான் என்று நினைத்து வாஹித் ஹுசேன் அவளுடைய நினைவுகளில் மூழ்கிவிட்டார். அவருடைய தங்கை மகள் ஒருத்தி பள்ளியில் அவளுடன் படித்திருக்கிறாள். அவள் உதவி செய்ய முயன்றபோது பல விசித்திரமான தகவல்கள் வந்தன.

'அவள் சக்களத்திகளை வெறுக்கிறாள். நவாப்புகள், ஜாகீர்தாரர்கள் என்றாலே அவளுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. மாளிகைகளில் வசிப்பதை அவள் விரும்பவில்லை! நவாப்புகளை நம்ப முடியாது! சில நாட்களிலேயே அவர்கள் மாறிவிடுகிறார்கள் என்கிறார்கள்.'

வாஹித் ஹுசேன் தினமும் ஒரு புதிய செய்தியைக் கேட்டார். அதனால் அவருடைய ஆர்வத்தீ மேலும் அதிகரித்தது; அவரைப் பொறுத்தவரை அவர் பர்ஹாத்தாகவே மாறிவிட்டார். மறுபுறும் அவரது தந்தை கவிஞர் தாக் அவர்களுடன் அமர்ந்து கஜல்களைப் படித்தார். வாஹித் ஹுசேன் பீபியின் நினைவில் கவிதைகள் புனைந்தார். இறுதியில் ஐயாயிரம் ரூபாய் ரொக்கம் என்ற பேராசை எழுத்தரை மசிய வைத்தது. கவிதாலயத்தின் கஜல் கூடத்தில் பீபி மணமகளாக வந்து அமர்ந்தார். பலசாலியான நான்கு பெண்கள் அவரது கழுத்தைப் பிடித்து 'நிக்காஹ்'குக்கான சம்மதத்தைப் பெற்றபோது அவர் மூர்ச்சையாகி விட்டார். மண மகனுக்கு முன்னால் மருத்துவர்தான் மதி முகத்தை முதலில் பார்த்தார். மறுபுறம் வாஹித் ஹுசேனின் தந்தைக்கு அளவிலா சோகம் இருந்தது. ஏனெனில் தனக்குப் பிடித்தமான பெண் களுடன் வேண்டும் போதெல்லாம் ரகசியத் திருமணம் செய்து கொள்ளும் உரிமை நவாப்புகளுக்கு இருக்கிறது. ஆனால் முதல் 'நிக்காஹ்' பெரிய இடத்துப் பெண்ணுடன்தான் பகிரங்கமாகவும் ஆடம்பரமாகவும் நடைபெற வேண்டும்.

பீபியின் மாமியார் இந்தக் கதையை அடிக்கடி சொல்வார். தன்னை சுவர் ஒன்றில் உயிருடன் அறைந்து விட்டு வாஹித் ஹுசேன் வேறொரு திருமணத்தைச் செய்து கொள்வார் என்ற பயத்தில் பீபி இரவும் பகலும் அழுவாராம். அவர் முழு மனதுடன் வாஹித் ஹுசேனைத் தனது கணவனாக ஏற்றுக் கொள்ளவில்லை;

கள்ளன் ஒருவன் பலவந்தமாக அவரைத் தனது மாளிகைக்குச் சிறை எடுத்து வந்துவிட்டான். அங்கிருந்து தப்புவதற்கான வழி ஏதும் இல்லை என்று அவர் நினைத்தார். அதனால் ஒழுக்கமுள்ள கைதியாக நடந்து கொண்டார். பல மாதங்கள் வரை அவர் கண்களை மூடி, தலை கவிழ்ந்தவாறே உட்கார்ந்திருந்தார். அவருடைய மாமியார் சொல்லும் திசையில் சென்று விடுவார். வாஹித் ஹுசேனின் சொற்படி கேட்பார்; கவிதாலயத்தில் பிரியாணி சாப்பிடுவதால் அவருக்கு வயிற்றைக் கலக்கும். நகைகள் முட்களைப்போல் உடலில் குத்தின. பனாரஸ் சேலைகளைக் கண்டு பயந்து ஒதுங்கினார்.

கீழ்ப்படிதலை யார்தான் விரும்புவதில்லை. ஆனால் பீபியின் மௌனம் வாஹித் ஹுசைனைக் கிலியடையச் செய்து விட்டது. அதனால் பல இடங்களில் இன்பத்தைச் சுவைப்பதை விட்டுவிட்டு, கழிவிரக்கம் கொண்டு, ஒரே இடத்தில் உட்கார்ந்து விடுவார்.

பீபி வந்தவுடன் சரிகைச் சேலைகள், முத்துவைர நகைகளில் மனம் செலுத்தியிருந்தால் வாஹித் ஹுசேன் சில நாட்களிலேயே வேறு திசைக்குச் சென்றிருப்பார். ஆனால் பீபியோ கஜல் கவிதையில் வரும் காதலியாக இருந்தார். அவருடைய நறுமணம் நான்கு திசைகளிலும் பரவி இருந்தது. அதனைத் தொடவே முடியாது என்ற உணர்வுதான் வாஹித் ஹுசேனுக்கு இருந்தது. மூன்று குழந்தைகளுக்குத் தந்தையாகிவிட்ட பிறகும் பீபி அவருக்கு அந்நியராகவே இருந்தார். அவர் பல்லாண்டு கால வேட்கையுடன், பிடிக்கவே முடியாத இந்தத் தங்கக் குருவிக்காக வலை விரித்துக் கொண்டு காந்திருந்தார்.

பிறகு ரஷீதின் வளர்ச்சி அவருடைய கவலைகளை அதிகரித்து விட்டது. பஷீர், பதூலின் சிறுசிறு குறும்புகளும் வளர்ந்தன. பீபியின் முகத்தில் ஒளிந்த ஞாயிறும் சாய ஆரம்பித்து விட்டது. பிறகு அந்த நாளும் வந்தது. பீபி தனது கையால் ரஷீதின் தலையில் மலர்முடியைச் சூட்டினார். பஷீர் பேகத்தை மண மகளாக்கினார். ஷாஹீனைத் தன் மார்புடன் அணைத்துத் தன் ஒவ்வொரு தோல்வியையும் மறந்து விட முயன்றார்.

இந்த இருபத்தி மூன்று ஆண்டுகளில் ஒருநாளும் பீபி எந்தக் குறையும் அவரிடம் சொல்லவில்லை; சண்டையும் போடவில்லை. வாஹித் ஹுசேனின் பேச்சையெல்லாம் கேட்டார். குடும்பத்தில் எல்லாப் பெரியவர்களையும், சிறுவர்களையும் மகிழச் செய்தார். எவருடைய பேச்சிலும் குறுக்கிடவில்லை. அவருடைய குரலைக் கவிதாலயத்தின் சுவர்களும், கதவுகளும் மிகக் குறைவாகவே கேட்டன. வாஹித் ஹுசேனின் கைகளில் துணி பொம்மையைப்

போலவே அவர் விளையாடினார். அவருக்கு வெள்ளை முள்ளங்கி பிடிக்குமா அல்லது சிவப்பு முள்ளங்கியா, இனிப்பில் விருப்பமா, அல்லது காரத்திலா என்பது கூட இதுவரை யாருக்கும் தெரியவில்லை.

எத்துணை வன்மம் கொண்டு இருக்கிறாள் இந்தப் பெண். இவள் ஜாகீர்தாரர்களை வெறுக்கிறாள்; மாளிகைகளை விரும்பவில்லை என்று யாரோ சொன்னதும் மிகச் சரியாகவே இருந்தது. பீபி எத்துணை தூரம் சென்றாரோ, அவ்வளவு தூரம் வாஹித் ஹுசேனும் காதல் மயக்கத்தில் முன்னேறிச் சென்றார். பீபியை முழுமையாக அடையவேண்டும் என்று துடிப்பு அவரைப் பின்தொடர்ந்து செல்லத் தூண்டியது.

எனவே கொடுமைக்காரக் காதலியின் ஆர்வத்தில் அவர் ஏழு கவிதை நூல்களை எழுதிவிட்டார்.

ஆனால் பீபி இன்னும், அமைதியாக உட்கார்ந்து பேரக் குழந்தைகளின் துணிகளைத் தயாரிக்கிறார். உலகத்தின் எல்லா விஷயங்களைக் குறித்தும் சிரித்துப் பேசுவார். ஆனால் வீட்டின் முக்கியமான பிரச்சினைகள் குறித்து மௌனமே சாதிப்பார். அதற்கும் தனக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லாததுபோல்! அவர் வாஹித் ஹுசேனின் தீவிரமான காதலையும் சகித்துக் கொண்டார்; திடீரென்று வந்த முதுமையையும் வரவேற்றார். ஆனால் வாஹித் ஹுசேன் தன்னுடையவர் என்று ஒருநாளும் பீபி உரிமை பாராட்டவில்லை. உங்கள் தந்தை, உங்கள் பாட்டனார், உங்கள் அண்ணன் என்றே வாஹித் ஹுசேனைத் துண்டுகளாகச் செய்து மற்றவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார்.

'இப்போது நான் இருக்க—
என்னுடன் ஆசை நகரம் ஒன்றின்
அழியாத் துயரமும் இருக்கிறது!'

வாஹித் ஹுசேன் நீண்டதொரு பெருமூச்சு விட்டவாறு புகைக்குழாயைத் தீக்குச்சியால் உயிர்பெறச் செய்தார்.

இன்று ஹஜ்ரத்பாக்கில் மாதந்தோறும் நடக்கும் கவியரங்கம்—இதில் ஹைதராபாத் நகரின் பெரிய கவிஞர்களனைவரும் பங்கேற்பார்கள்—பானி பதாயூனி, ஜலீல் மனெக்பூரி முதல் தங்கள் இடுப்பில் வாளும், தலையில் தலைப்பாகையும், ஒல்லியான கால்களில் பைஜாமாவும் அணிந்து மாளிகைகளிலிருந்து வரும் எல்லாக் குட்டிக் கவிஞர்களும் கலந்து கொள்வார்கள்.

ஆனால் இன்று வாஹித் ஹுசேனால் கஜல் எழுத முடியவில்லை!

வாஹித் ஹுசேன் கவிஞர் தாக் நடையிலேயே கஜல் புனைவார். ஆனால் இப்போது சில நேரங்களில் வாழ்க்கைப் பிரச்சினைகளைப் பற்றிய சிந்தனைகளும் அதில் கலந்து விடுகின்றன. ஏனெனில் இக்பாலின் 'பாங்கே திரா' அச்சாகி வந்துவிட்டது. தாகூரின் மென்மையான நடையில் மனிதப் பண்பு, மெய்வழிப் பிரச்சினைகள் குறித்து எழுதப்பட்ட கவிதைகளும் பிரபலமாகி வருகின்றன. அதனால் அவர் அமீர் மீனாய், வஹ்ஷத், சக்பஸ்த், இக்பால் ஆகியோரைப் பின்பற்றி எழுதுகிறார்.

வட இந்தியாவில் ஹாலி தனது 'முஸத்தஸ்' காவியத்தைப் பாடிவிட்ட காலம் அது. அதைக் கேட்டு ஒவ்வொரு முஸ்லீமின் கண்ணும் கலங்கிவிட்டது; உணர்ச்சிகள் எழுச்சி பெற்றன; இப்போது இக்பாலின் செய்தி எங்கும் எதிரொலித்தது.

கவ்வால் பாடகர்களும், 'காதல் வரவில்லையே', அல்லது 'மேகம் சூழ்ந்துவிட்டது, இதயமும் துடிக்கிறது' போன்ற பாடல்களை விட்டு இக்பாலின் நாட்டுப் பற்று நிறைந்த கவிதை களைப் பாடினார்கள். பிரேம்சந்தின் 'நாட்டுத் தீ' ஒவ்வொரு இந்தியனின் உள்ளத்திலும் எரிந்தது.

அந்நாட்களில்தான் செய்திப் பத்திரிகையில் 'ஜலியான் வாலாபாக்' படுகொலைச் செய்தியை ஒருநாள் படித்த வாஹித் ஹுசேன் நடுக்கம் கொண்டார். நாட்டுக்காக உயிர்த் தியாகம் செய்தவர்களின் பல கதைகளை அவர் கேட்டிருக்கிறார். ஆனால் வளரும் பருவத்தில் இயல்பாகத் தோன்றும் அனைத்தையும் மறந்துவிடச் செய்யும் உணர்வை அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. பகத்சிங்குக்கும் அவருடைய தோழர்களுக்கும் காதலிகள் இருக்கவில்லையா? அவர்கள் பருவ மாறுதல்களின் மயக்கத்தை உணரவில்லையா? பெண்ணின் அழகு, அழகின் கவர்ச்சி, கவர்ச்சியின் ஈர்ப்பு, கவிதையின் இனிமை, தனது வீட்டில் கிடைக்கும் அமைதி, வாழ்வின் வண்ணங்கள், உணர்வுகளின் பிணைப்புகள் ஆகியவற்றை அவர்கள் தெரிந்து கொள்ள வில்லையா? வாஹித் ஹுசேன் ஐம்பத்தைந்தாவது வயதைத் தாண்டிவிட்டார். ஆனால் மரணமடையும் எண்ணம் அவருக்கு இல்லை; மரணத்தின் பயம் அவரை அச்சுறுத்தியது. நாட்டுக்காக வாழ்வைத் தியாகம் செய்வது எங்ஙனம் என்பது அவருக்குப் புரியவில்லை.

நாட்டை அந்நியர்களிடமிருந்து மீட்பதற்காக நூற்றுக் கணக்கான மக்கள் அழிந்து போனார்கள். இந்த இந்தியா எப்போதுதான் சுதந்திரமாக இருந்ததாம்? முதலில் ஆரியர்கள் ஆடி அசைந்தவாறு உள்ளே நுழைந்தார்கள். பிறகு முஸ்லீம்கள் இதைச் சின்னா பின்னமாக்கி விட்டார்கள். இப்போது

ஆங்கிலேயர் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டி இருக்கிறார்கள். ஆங்கிலேயர் போய்விட்டால் காங்கிரஸ் அரசு வந்துவிடும். பிறகு மண்ணின் மைந்தர் சிலர் கம்யூனிஸ்டுகளாக எழுந்து நிற்பார்கள். மக்கள் உரிமை, சமத்துவம், குடியரசு... இந்தச் சூழலிலிருந்து மீளும் வழி எங்கு இருக்கிறது. மனிதன் உண்மையில் எங்குதான் சுதந்திரமாக இருக்கிறான்?

சுதந்திரம் என்ற உணர்வே ஒரு சமூகத்துடன் அல்லது ஒரு நாட்டுடன் சம்பந்தப்பட்டதல்ல. ஒரு தலைமுறைக்கும் இன்னொரு தலைமுறைக்கும் இடையேயுள்ள சிந்தனைத் தொலைவு என்றுதான் வாஹித் ஹுசேனுக்குப் புரிந்தது.

இரண்டு தலைமுறைகள் அல்லது காலங்களின் மோதல், இரண்டு சிந்தனைகளின் வேறுபாடு, அதனால்தானே காந்திஜியால் நிர்மாணிக்கப்பட்ட காங்கிரஸ் போராட்டங்கள் நேருவிடம் புதிய திசை பெறுகின்றன. மேலும் பகத்சிங்கின் இளமை மரணம் தனிக்கோணம் கொண்டிருந்தது.

'தலைதூக்கி நிற்க வேண்டும் என்ற எண்ணம் இப்போது எங்கள் உள்ளத்தில் வேரூன்றி விட்டது; கொலைகாரனின் கரங்களில் எவ்வளவு சக்தி இருக்கிறது என்பதைப் பார்த்து விடலாம்" என்று அவர் கூவி அழைக்கிறார்—

ஆனால் வாஹித் ஹுசேன் தனது மண்டல அரசியலின் மாறுதல்களை மட்டுமே கவனிப்பார்—ஹைதராபாத்தின் உருது நாளிதழ்கள், ஆங்கிலேய அரசின் மண்டல சுய உரிமை, அரசியல் என்ற குடியரசு போன்ற பறை சாற்றுதல்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை. புதிய தலைமுறையின் காவியத் தலைவராக இருந்த பண்டித நேரு வல்லாண்மை அபாயத்தைக் குறித்து ஏதேனும் கூறினால், அச்செய்தி ஏதேனுமொரு மூலையில் இடம் பெறும்.

வெளிப்புற அரசியல் செய்திகளுக்கு முக்கியத்துவம் அளிக்கக்கூடாது என்று பத்திரிகைகள் வரையறைப் படுத்தப்பட்டு இருந்தன. ஏனெனில் ஹைதராபாத்தில் அப்போது அமைதி இருந்தது. இங்கு காங்கிரசுக்கு அரசியல் பெருமை கிட்டவில்லை. வேறு அரசியல் இயக்கமும் தலை தூக்கவில்லை. மக்கள் 'ஆலா ஹஜ்ரத்'திடம் திடமான பற்றுடையவர்களாக இருந்தார்கள். அவரது ஆட்சி என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டுமென்று பிரார்த்தனைகளில் பங்கேற்றார்கள்.

ஹைதராபாத்தின் இந்தக் கூட்டுக் கலாச்சாரத்தின் அடித் தளத்தை குலி குதுப் ஷா அமைத்துவிட்டுச் சென்றார். பாக்மதியை அரசியாக்கி தானும் இந்திய ஆடை அணிந்து, இந்தியப் பண்டிகைகளில் பங்கேற்று, தெலுங்கு மொழியில் கவிதைகள் பாடி,

இந்தியக் கலாச்சாரத்தின் வண்ணத்தை ஏற்றுக் கொண்டார். அவர் தன்னைச் சுற்றிலும் இருந்த பண்பாட்டில் கலந்துவிடும் இக்கட்டான நிலையில் இருந்தார். அதைப்போலவே அக்பரும் சிந்தனையற்ற நிலையிலேயே இந்தியக் கலாச்சாரத்தின் வண்ணத்தைப் பூசிக் கொண்டார். வாஜித் அலிஷாவும் ஹோலி கொண்டாடினார்; கதக் நாட்டியத்தில் தனது திறமையைக் காட்டினார்.

இங்கு 'கிங்கோடி' (அரசமாளிகை)யின் கறையான் அரித்து விட்ட நாற்காலிமீது மீர் உஸ்மான் அலிகான் வீற்றிருந்தார். அழுக்கடைந்த, தொளதொளவென்ற பைஜாமாவும், சாயம்போன பழைய ஷேர்வானியும், அழுக்குப் பிடித்த தொப்பியும் அணிந்து, மிகப்பெரிய ஒரு பல்கலைக் கழகத்தை இலட்சக்கணக்கான ரூபாய் செலவில் நிறுவிடும் திட்டத்தை வகுத்துக் கொண்டிருந்தார். அங்கு அவருடைய குடியாட்கள் தங்கள் தாய்மொழியில் அறிவுக் கருவூலங்கள் அனைத்திலும் தேர்ச்சி பெறவேண்டும் என்று விரும்புகிறார். அவர் தனது முடிசூட்டு விழாவின்போது கீழே விழுந்துவிட்ட நான்கணா நாணயத்தைத் தேடுவதில் ஒரு மணி நேரத்தைச் செலவழித்த இடம் இதுதான்—ஜாகீரும் பட்டமும் பதவியும் கொடுக்கும் போது அவர் இந்து-முஸ்லீம் என்ற சொல்முறையை நினைவுபடுத்திக் கொள்ளவில்லை. ஹைதராபாத் பிராமணர்கள் ஷேர்வானியும் துருக்கித் தொப்பியும் அணிந்தனர். உருதுப் பத்திரிகைகள் படிக்கும்போது அவர்களது மதத்திற்கு எவ்விதத் தீங்கும் ஏற்பட்டு விடவில்லை.

பல இந்துப் பெண்கள் மாளிகைகளில் பேகம்களாக வீற்றிருந்தார்கள். ஆனால் எந்த இந்துவின் தன்மானமும் அதனால் புண்படவில்லை.

அம்மை நோய் பரவும்போது முஸ்லீம் பெண்கள் காளி தேவிக்குக் காணிக்கை செலுத்தினார்கள். தர்க்காக்களின் உருஸ் விழாக்களில் இந்துக்கள் சார்பில் வேண்டுதல் தட்டுகள் வரும். பீபியின் கொடி (முஹர்ரம் மாதத்தில்) ஏற்றப்படும்போது முஸ்லீம்களை விட இந்துக்களே அதிகமாகத் தேன்பாகு வேம்பைகளை அமைப்பார்கள். வெள்ளிக் காசுகளும் பிறைகளும் ஏற்றுவார்கள். ரம்ஜான் மாதத்தில் இந்துக்களிடமிருந்து 'நோன்புத் திறப்பு'க்கு உணவுகள் வரும்.

அரசு மண்டலத்தின் ஒவ்வொரு முஸ்லீமுக்கும் தெலுங்கு தெரியும். எல்லா இந்துச் சிறுவர்களும் உருதுமொழி வழியே கல்வி கற்றார்கள். அதனால் அவர்கள் தாய்மொழிக்கு ஊறு உண்டாகும் நிலை ஏற்படவில்லை. ஏனெனில் அவர்களது இதயங்களில் அன்புணர்ச்சியாகிய மலர்களை எரித்துப் பொசுக்கி விடும்

ஐயத்தின், வெறுப்பின் தீ மூட்டப்படவில்லை.

அதனால் ஹைதராபாத் மக்களின் சோம்பல், அலட்சியம், உடல் வளர்ப்பு, பல நூற்றாண்டுகளின் சிந்தனை எல்லாம் அமைதியாக, நிதானமாக நடந்த வாழ்க்கை முறையில் உண்டாயின. பொதுவாக ஹைதராபாத்தில் ஒவ்வொரு வீட்டிலும் ஒன்பது மணிக்குத்தான் காலை நேரம் தொடங்கும். பதினோரு மணிக்குச் சிற்றுண்டி சாப்பிடுவார்கள்-பன்னிரண்டு மணிக்கு முன்னால் எந்த வீட்டிலும் இரவு வராது.

ஒரு முறை வடக்கிலிருந்து வந்து ஒரு கவிஞர், ஏதோ ஒரு நேரத்தில் வாஹித் ஹுசேனைச் சீண்டினார்;

'அன்பரே!ஜாகீர்தாரர்களாக நீங்கள் ஹைதராபாத்தில் மூன்று வேலைகளைத்தான் செய்து கொண்டு இருக்கிறீர்கள்—பிரியாணி சாப்பிடுவது, மாளிகைகள் கட்டுவது; மனித குலத்தை விருத்தி செய்வது..."

இதைக் கேட்டு வாஹித் ஹுசேன் கொதித்தெழுந்தார். தக்காணத்தைச் சார்ந்தவராக இருந்ததால், வடக்கிலிருந்து வரும் கர்வம் நிறைந்த கவிஞர்களை வெறுக்கவே செய்தார். அவர்கள் எப்போதும் தககாணப் பண்பாட்டை எள்ளி நகையாடுகிறார்களே. வடநாட்டின் உருதுதான் சிறந்தது; அங்குள்ள இலக்கியமும் எழுத்தாளர்களும்தான் மேம்பட்டவர்கள் என்கிறார்களே என்று அவர் வருத்தப்படுவது உண்டு. எனவே வாஹித் ஹுசேன் எரிச்சலுடன் பதிலளித்தார்.

"இல்லை; நாம் இன்னுமொரு வேலையும் செய்கிறோம்; வெளிவாயிலில் நின்று பிச்சை கேட்பவர்களுக்குப் பிச்சையும் போடுகிறோம்."

அந்தக் கவிஞன் இந்தப் பேச்சுக்கு பல உட்கருத்துகளை அளித்து அதை வெகுதூரம் வரை கொண்டு சென்றான். அது கிஷன் பிரசாத் மேம்பாடு அடைந்த காலம். தனது மாளிகையின் கவியரங்கில் அவர் கவிதை படிப்பார்—

'நான் ஒரு இந்து; நானொரு முஸ்லீம்
எல்லாச் சமயமும் என் கோட்பாடு.'

அவர்களது கலாச்சாரமும் கங்கை-யமுனை இணைப்பாகவே இருந்தது. அவர் ஓர் இந்துவாகவும் திகழ்ந்தார். முஸ்லீமாகவும் செயல்பட்டார். தக்காணப் பண்பாட்டைக் கொண்டாடி, அதனை மேம்படுத்தப் பெரும் முயற்சிகள் மேற்கொண்டார். அவருடைய மெல்லிய குரலில் குள்ளமான உருவத்தில், மென்மையான தொனியில், ஒரு மாந்திரிகச் சக்தி இருந்தது. சதித் திட்டங்கள் தீட்டும் சக்திகளும் அதற்கு முன்னால் நடுக்கம் கண்டன. ஆனால் அவருடைய கொள்கை முறை வாஹித் ஹுசேனுக்கு என்றுமே

பிடிக்கவில்லை.

எனவே அரசவையில் இடம்பெற்ற ஜானியுடன் சேர்ந்து அவர் ஒரு தனிக்குழுவை நிறுவினார். வெளியிலிருந்து வரும் அறிஞர்கள், கவிஞர்களை, கிஷன் பிரசாத்தின் பரிந்துரைகளுக்கும், முயற்சிகளுக்கும் பிறகும், மேதகு மன்னரின் இதயத்தில் இடம் பெறாத வகையில் தடுத்து நிறுத்தினார்கள். அவர்கள் ஒருவேளை அரசவையை அடைந்துவிட்டாலும் அக்கவிஞர்கள் எந்தத் தகுதியும் பெறுவதில்லை. இரண்டு மூன்று ஆண்டுகள் வரை கடும் முயற்சி செய்த பிறகும் வெற்றி காணாமல், ஒருமுறை 'ஹஜ்ரத் பாக்'கின் கவியரங்கில் அந்தக் கவிஞர் அழுது அழுது பாடினார்;

"நான் உயிருடன் உள்ள போதே ஒரு பிணம்தான்—
புதை குழியும் இறுதி ஆடையும் இல்லாத பிணம்,
நாடும் போய் விட்டது;
ஏழ்மையும் சாதகமாக அமையவில்லை!"

இதைப்போலவே பல கவிஞர்கள் மீது அரசரின் சீற்றம் பாய்ந்தது. சிலரோ காலத்தின் குறிப்பை உணர்ந்து, "கவிஞர்களுக்கு எல்லா இடங்களிலும் இடர்தான் - பூமி கடினமாகவும் வானம் வெகு தூரமும் இருக்கும்' என்று சொல்லிவிட்டு ஓட்டம் பிடித்தார்கள்.

வாஹித் ஹுசேன் சப்போட்டாச் செடியின் கீழ் நாற்காலியில் அமர்ந்து ஏதேதோ சிந்தனை செய்தார்.

கஜல் தயாராகி விட்டால், கஜல் கூடத்தின் அகலமான பரப்பைச் சுத்தப்படுத்த வேண்டும்—நாற்காலிகளை அகற்றி வெள்ளை விரிப்புகளைப் பரப்பி இடையில் தலைவருக்கான சாய்வு மெத்தை போட்டுவிடலாம். கூரையில் இருந்த தொங்கல் விளக்குகள் ஒளி பெற்றிட, நறுமண வத்திகளைச் செருகிட வேண்டும். வெள்ளித் தட்டுகளில், வெள்ளித் தகடுகள் சுற்றிய வெற்றிலை மடிப்புகள், உயர்தரத் தேநீர், இனிப்புகள், உப்புப் போட்ட வாதாம் பருப்பு, சில தின்பண்டங்கள்—இப்படியாக எல்லா ஏற்பாடுகளும் செய்து முடிக்க வேண்டும்.

கஜல் கூடத்தின் நிலையறைப் பெட்டிகளில் இருந்த அரிய கையேடுகளிலும், நூல்களிலும் புகலிடம் கண்ட பல்லிகள், கரப்பான் பூச்சிகள், அன்றிரவு அனுமதியின்றி அங்கும் இங்கும் ஓடும். பாராட்டுரைகளின் தாளம் இல்லாத இரைச்சலால் அவர்களின் அமைதி குலைந்துவிடும். ஆனால் ஒரு பல்லி மட்டும் பிடிவாதமாக, ஓர் இடத்தில் நின்று வேடிக்கை பார்த்தது. வாஹித் ஹுசேனின் ஏதேனுமொரு ஈரடிக்குப் பாராட்டுதல் கிடைக்கும் போது அதுவும் ஒலியை எழுப்பியது;

செ... செ... ச்... செ... ச்...

காலையிலேயே கைத்தடியைத் தூக்கிய வண்ணம் அவர் எல்லாப் பல்லிகளின் மீதும் தாக்குதல் நடத்த வருவார்.

பாதியாகப் புகைந்த குழாய் எதிரில் இருந்தது. அவர் வானத்தை நோக்கி முணுமுணுத்தார்—

'இப்போது நான் இருக்க—
என்னுடைய ஆசை நகரம் ஒன்றின்
அழியாத் துயரமும் இருக்கிறதே'
ஆ! காலிப்பும் இருக்கிறானே..

அவர் முழுமை பெறாத தனது கஜலை எடுத்து வீசினார்—குழாயை வாயிலிருந்து எடுத்துவிட்டுத் தன்னைச் சுற்றிலும் இருந்த உலகைப் புரிந்து கொள்ள முயன்றார்.

# 6

கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்த சாந்துக்கு அலுப்புத் தட்டியது. அதனால் அவள் நாராயணாவையும் வசீமையும் விரட்ட நினைத்தாள். அவள் எப்போதுமே விளையாட்டைப் பாதியிலேயே விட்டு விடுவாள். ஆனால் நாராயணா விளையாட்டை முடித்துவிட ஒப்புக் கொள்ளவில்லை; ஏனெனில் சாந்த் திருடனாக வர வேண்டிய கட்டம் அது.

"விளையாட்டு இல்லை என்று நான் சொல்லிவிட்டேனே!" சாந்த் தனது வெட்டப்பட்ட முடியை ஒன்று சேர்த்து அணியிழையில் கட்டினாள். அவளுடைய முடி பொன்நிறமாக இருந்தது. அவளுடைய ரோசா நிறக் கன்னங்கள் மீது கூந்தல் படர்வது தனி அழகைக் கொடுத்தது. பதின்மூன்று, பதினான்கு வயது நிரம்பிய நாராயணா ஏதோ ஓர் உணர்ச்சியால் உந்தப்பட்டு அவளிடம் வந்தான்; எதிர்பாராத வகையில் அவளுடைய கன்னத்தைக் கடித்து விட்டான்.

"அல்லாஹ்! மானங்கெட்டவன், முரட்டுப் பயல்" அவள் உரத்த குரலில் கூவினாள். பயந்துவிட்ட நாராயணா பலகணிக்குப் பின்னால் போய் ஒளிந்து கொண்டான்.

"என்ன, என்ன ஆகி விட்டது" வீடு முழுவதும் ஓடி வந்தது.

"நாராயணா - போக்கிரி - அயோக்கியன்!" அவள் சிரித்த வாறே குதித்தாள் - "அந்த நீசப் பயலின் கைகளை உடைத்து விடுவேன்."

"நீங்கள் இப்போது பெரியவளாகி விட்டீர்கள். பையன்

களுடன் விளையாடக்கூடாது" நொண்டி அத்தை அறிவுரை கூறினாள்.

ஒளிந்து கொண்டிருந்த நாராயணா இதைக்கேட்டு முகங் காட்டிச் சாந்துக்கு பழிப்புக் காட்டினான்.

சாந்த் மீண்டும் சிரித்து விட்டாள். அவனை அடிப்பதற்காக ஓடினாள்.

"நாராயணா என்ன செய்து விட்டான், சொல்லேன்" என்று மாமி கேட்டதும் அவளுக்கு வெட்கம் வந்துவிட்டது. மாமியிடம் அவளுக்கு ஈடுபாடு அதிகம். அவரைக் கவருவதற்காகவே, அழகான ஆடைகள் அணிந்து, மாலை நேரங்களில், தாய்வழிப் பாட்டனார் வீட்டிற்கு அவள் வந்து விடுகிறாள். ரஷீத் மாமாவும், ரஜியா மாமியும் எங்கு சென்றாலும் தங்களுடன் அவளை அழைத்துச் செல்கிறார்கள்.

"சீ!" அவள் தனது இரண்டு கைகளாலும் முகத்தை மறைத்துக் கொண்டாள். இந்த நடையை அவள் லீலா சிட்னிஸைப் பார்த்துக் கற்றுக் கொண்டாள். நிறைய விஷயங்களில் சாந்த் அந்த நடிகை யைத்தான் பின்பற்றி நடக்கிறாள். பத்துப் பன்னிரெண்டாவது வயதிலேயே தனது அழகின் உணர்வு அவளுக்கு இருந்தது. அவள் தன்னைத் தனிச் சிறப்புடைய பெண்ணாகவே நினைக்கிறாள். உயர் நிலையிலிருந்த பாட்டனாரின் பேத்தி; திறமைமிகுந்த தந்தையின் பெண்; தனிப்பட்ட எழிலும் கவர்ச்சியும் கொண்டவள் —எனவே மரபின் பழைமையான வரையறைகளைக் கடந்து புதுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். இச்சை கொண்ட பார்வை களுக்கு சிறிதும் அஞ்சாமல், கட்டைவிரல் காட்டிட வேண்டும்; புத்தகம் படிக்கும்போது மேகங்களில் பறந்து செல்வாள் அவள். அசோக்குமாரைப் போன்றதொரு இளவரசன் புரவியில் வந்து தன்னையும் ஏற்றிச் சொல்வான் என்று அவள் கற்பனை செய்தாள்.

ரஷீத் மாமா, முகம் வெளுத்த மாமியை மணந்து கொண்ட போது, இருவரும் உலகை மறந்து இரவும் பகலும் காதல் களியாட்டங்களில் மூழ்கி இருப்பார்கள். சாந்த் மறைந்திருந்து அவர்களுடைய செயல்களை உற்று நோக்குவாள். அப்போது அவளுக்கும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை வந்தது—ஆனால் மிகவும் விரும்பத் தகாத நிகழ்ச்சி ஒன்று இந்தத் திருமண ஆசையை முறித்து விட்டது. இளவரசனைப்போல் ஆடையணிந்து வரும் அந்தப் பதூல் சின்னம்மாவின் மணவாளன் அவளுக்கு மிகவும் பிடித்து விட்டான். பதூல் பேகத்துடன் அவன் வரும்போதெல்லாம் ஏதேனுமொரு காரணம் காட்டி அவனைச் சுற்றி சுற்றி வருவாள். பதூல் பேகத்தின் அறைக்குள் அவள் செல்லும்போது நொண்டி அத்தை ஏதேனுமொரு வேலைக்காகப்

பலவந்தமாக அவளை அழைத்துக் கொள்வாள்.

ஆனால் ஒருநாள் நொண்டி அத்தையின் அந்த உறவுக்காரர்—ஊர்சுற்றி ஷேகுமியான் வந்து விட்டார். வழக்கம்போலவே பதூல் சின்னம்மா அவருடன் சிரித்துப் பேசினார். ஷேகுமியான் எப்போதும் மது மயக்கத்தில் இருப்பார். வம்பளப்பதில் வல்லவர். அதனால் வீட்டுக் குழந்தைகளும் பெரியவர்களும் அவரைச் சுற்றி உட்கார்ந்து கொள்வார்கள். அவருக்குத் திருமணம் செய்து வைப்பதாகச் சொல்லி ஒருவன் பணத்தைப் பிடுங்கிக் கொண்டான். இன்னொருவன் 'சாராயம்' என்று சொல்லி மண்ணெண்ணெயை ஊற்றிக் கொடுத்து விட்டான். ஆனால் அங்கு, ஷேகுமியான் வந்தபோது பதூலின் கணவர் ஹுமாயூன் பெரிய ஆர்ப்பாட்டம் செய்து விட்டார். அவரிடம் பதூல் சிரித்துப் பழகுவது ஏன்? இனி அவன் ஷேகுமியானுக்கு முன்னாலேயே வரக்கூடாது என்று ஆணையிட்டார். அன்று முதல் சாந்த் ஹுமாயூனை வெறுக்க ஆரம்பித்தாள். திருமணத்தின் இந்த அருவருப்பான உருவத்தின்பால் அவளுக்கு ஆத்திரம் வந்தது. எனவே என்றுமே திருமணம் செய்து கொள்வதில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டாள். இப்போது அவள் ஹுமாயூனைப் பதூலுக்கு முன்னால் 'பதூல் சின்னம்மாவின் கணவர்' என்றும், பின்னால் 'தரித்திரம்' என்றும் குறிப்பிட்டாள்.

ஒருவருடைய பேச்சைக்கேட்டு, அவர் சொற்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது அவளுடைய இயல்பிலேயே இல்லை. பஷீர் பேகம் தன் விருப்பம்போல் ஏதேனுமொரு ஆடையைத் தயாரித்தால் அதை அவள் அணிந்து கொள்வதில்லை. இப்படி இருந்தும் அவள் எல்லாருடைய அன்புக்கும் பாத்திரமாக இருந்தாள். ஆங்கிலப் பாடல்களும், திரைப்பாட்டுகளும் தனது நண்பர்களுக்காகப் பாடிக்காட்டும்படி தாத்தா சொல்லுவார். அப்பாவுடன் நீச்சல் குளத்திற்கும், குதிரைச் சவாரி செய்யவும் போவாள். மாலை நேரங்களில் ஷர்மிலா தேவியிடம் கர்நாடக இசைப் பயிற்சியும் பெறுவாள். ஆங்கிலப் பள்ளியின் நிகழ்ச்சிகளில், கண்ணாடித் துண்டுகள் பதித்த பாவாடையும். மேல் சொக்காயும், கைகளில் கண்ணாடி வளையல்களும் அணிந்து நாடோடிப் பெண்போல் நடனமாடுவாள்.



எப்போதும் சோர்வுறச் செய்யும் வேலையின்மையால் கலவரமடைந்த சாந்த் புறத்திண்ணையில் நாற்காலிகள் மீது உருண்டாள்.

சப்போட்டா மரத்தடியில் தனியாக உட்கார்ந்ததவாறு தாத்தா ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறார். பாட்டனாரின் கவிதைகள் சாந்துக்கு மிகவும் பிடிக்கும். தன்னுடைய கம்பீரமான குரலில், கைகளை வீசியவாறு, இமைகளை அசைக்காமல் வைத்துக்கொண்டு அவர் கவிதை படிக்கும்போது தோட்டத்தில் இருக்கும் குருவிகள் எல்லாம் பறந்து சென்று விடும். அப்போது சாந்துக்கு மௌனமாக உட்கார்ந்திருந்த பாட்டனாரின் முகத்தைப் பார்த்ததும் பள்ளியின் நாடகமொன்று நினைவுக்கு வந்தது. 'கிங் லியரின் முகம் பாட்டனாரின் முகம் போலவே இருந்தது. இவரைப் போலவே வெள்ளை நிறம் கொண்டவனாக லியர் மன்னன் இருந்தான்—சிறிது வெண்மையும், சிறிது கருமையும் கலந்த தாடி; இவரைப்போலவே கவலை கொண்டவனாக, தனது சிந்தனையில் மூழ்கியவனாகக் காட்சி தநதான்; இதே அப்பாவித்தனம், இதே தேடுதல், இதே தாகம். எல்லா மனிதர் களும் முதுமைப் பருவத்தை அடையும்போது, எவற்றை யெல்லாமோ இழந்து விடுகிறார்கள். இவர்கள் எதை எதிர் நோக்குகிறார்கள்—யார் யாரை அழைக்கிறார்கள்...?

தாத்தா சாந்தை மிகவும் விரும்பினார். காலை உணவின் போது முட்டையின் வெள்ளைக் கருவை அவளுக்கு ஊட்டி விடுவார். தனது எல்லா இனிப்புகளிலும் அவளுக்குப் பங்கு கொடுப்பார். தோட்டத்தில் உலவும்போது, அவள் பிடிவாதம் செய்யும் நேரங்களில் கிச்சிலிப்பழத்தை அவளுக்காகப் பறித்துக் கொடுப்பார். இவ்வாறு நினைத்தபோதெல்லாம் பழம் பறிப்பதை அவர் விரும்பவில்லை.

ஆனால் வண்ண வண்ணப் பூக்களைத் தொடும் அனுமதி மட்டும் அவளுக்குக் கிடைப்பதில்லை. கவிதாலயத்தில்தான் எத்தனை அழகான பூக்கள்..! கூடைகளில் மலர்களைக் கொண்டு வந்து கொட்டி இருப்பதுபோல். தாத்தா காலையும் மாலையும் அந்தப் பூக்களின் மத்தியில் உலவுவார். ஒவ்வொரு கிளையையும் சீர்ப்படுத்துவார். அவை வாடும்போது அமைதியாக நோக்குவார். இதற்கு நேர்மாறாகச் சாந்தின் தந்தை வழிப்பாட்டனார் வீட்டில் மரங்களின் பராமரிப்பு என்பது வேறு விஷயம். அங்கு மனிதர்களைக் கேட்கவும் யாருமில்லை; வீடு முழுவதும் ஒரே குழப்பம்தான். எல்லா வேலைகளும் பணியாளர்கள் வசம் இருந்தன. அதனால் எதுவும் சிறப்பாக நடப்பதில்லை. சாந்தின் அத்தைமார்களும், சித்திகளும் பகல் இரவு பாராமல் ஒப்பனை செய்துகொண்டு விருந்து, நாட்டியம் என்று அலைந்தார்கள். குழந்தைகள் தாதியரின் மடிகளில் அழுதன; கூக்குரலிட்டன. சாந்த் மிக்க உரிமையுடன் த்ாத்தாவின் தோள்களில் ஏறிக்குதிரை

ஆடுவாள். அந்த வீட்டில் கூச்சல்போடவும், குறும்புகள் செய்யவும், ஆடவும் பாடவும் எவ்விதத் தடையும் இல்லை. ஏனெனில் அவளுடைய தந்தை தானே மது அருந்திவிட்டு நண்பர்களுடன் கூச்சல் போடுவார். அவர்கள் இரவு முழுவதும் உலக விஷயங்கள் குறித்து யோசனை செய்வார்கள்; கத்துவார்கள். சாந்துடைய தந்தையின் எல்லா நண்பர்களும் ஆவேசம் உள்ளவர்களே. அவர்கள் இந்த உலகன் எல்லாத் துக்கங்களிலும், எல்லா மகிழ்ச்சி களிலும் தாங்களே பங்கேற்க உட்கார்ந்து விடுவார்கள். சாந்த் சிறிது நேரம் அங்குபோகும்போது அரசியல், காந்திஜியின் அறம் போன்ற விஷயங்களைக்கேட்டு அலுப்புக் கொள்வாள். அன்று தாத்தாவும் சொல்லிவிட்டாரே, ஹைதர் அலிகானை காவல் துறையினர் பிடித்துச் செல்லப் போகிறார்களாம். 'உலகம் எக்கேடு கெட்டுப் போனால் உங்களுக்கு என்ன? நீங்கள் ஏன் இதில் பங்கேற்கிறீர்கள்?' என்று பல முறை அவளும் சொல்லிவிட்டாள்.

அவளுடைய தாயின் குணம் தந்தைக்கு நேர்மாறாக இருந்தது. பஷீர் பேகத்திற்கு வாழ்க்கை மிகவும் பிடித்திருந்தது. அவள் விலையுயர்ந்த சேலைகளையே தேர்ந்தெடுப்பாள். விதவிதமான சேலைகளின் வண்ணத்திற்கேற்ப நகைகள் அணிவாள். மருதாணி பூசிக் கொள்வாள்; உதட்டுச் சாயமும் உபயோகிப்பாள்; ஹைதர் அலிகான் எத்தகைய இடர் நிரம்பிய சிக்கல்களுக்கு விடைகாண முனைந்திருந்தாலும், அவள் அவரிடத்தில் புதிய மணமகளைப் போல் பிணக்குச் செய்வாள். ஒவ்வொரு இரவும் படுக்கையின்மீது புதிய மலர்களைப் பரப்புவாள். ஒவ்வொரு நாளும் அவளுக்காக மலர் அணிகள் வரும்.

"எனக்கு மகன் பிறந்து, என் வீட்டிற்கு மருமகள் வந்து விட்டால் நான் இந்த அலங்காரத்தை விட்டுவிடுவேன்," யாராவது அவளுக்குத் தடை கூறினால் இவ்வாறு விடை தருவாள்.

சாந்துக்குப் பிறகு அவளுக்கு எந்தக் குழந்தையும் பிறக்கவில்லை; அதனால் அவளுடைய நேரத்தின் பெரும்பகுதி குழந்தைக்காக மருந்து சாப்பிடுவதிலும் தாயத்துகள் வாங்கி வருவதிலும் கழிந்தது. இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ஹைதர் அலிகான் அவளுடைய தலையணையின் கீழிருந்து ஏதேனுமொரு தாயத்தை எடுத்து வீசி எறிவார். சாம்பிராணி, கற்பூர வாசனை கொண்ட நீரையும் எடுத்துக் கொட்டி விடுவார்.



இன்று வாஹித் ஹுசேனின் பழைய நண்பர் ஒருவர் வந்துவிட்டார். தூலே நவாப் வந்ததும் வழக்கப்படி, தோட்டக் கரையிலிருந்த உடைபட்ட செங்கல் ஒன்றை எடுத்து முயலைப் போல் அதன்மீது உட்கார்ந்துவிட்டார். வாஹித் ஹுசேன் குட்டைச் சுவர்மீது அமர்ந்திருந்தார். தோட்டத்திற்கு வரும் நண்பர்களிடம் அவர் இப்படியே உட்கார்ந்து உரையாடுவது வழக்கமாகும். தூலே நவாபின் ஷேர்வானியில் சிவப்புக்கல் பொத்தான்கள் இருந்தன. சரிகை போட்ட தலைப்பாகை, முகலாய பாணிக் கால்சட்டை, வெள்ளை மீசை—பேசும்போது அந்த மீசை துடிக்கும். துயிலுறச் செல்லும்போதும் தூலே நவாப் அந்தத் தலைப்பாகையைக் கழற்றுவதில்லை என்று சொல்லப்பட்டது. தூலே நவாபின் தொடர்பு உயர்மட்டத்தில் இருந்தது. காவல் துறையினரும் அவரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தார்கள் என்று நொண்டி அத்தை கூறுவாள். தூலே நவாப்பின் தந்தை விலைமாதர்களின் உறவிலும், ரசவாதத்திலும் தனது செல்வத்தை அழித்துவிட்டார். இப்போது தூலே நவாப் தனது குடிகார மகன்களுடனும், விதவை மகளுடனும். அவர்களுடைய எண்ணற்ற குழந்தைகளுடனும் தனது மாளிகையில் வாழ்நாளைக் கழிக்கிறார். மன்சப் (பதவி)பிலிருந்து வந்த சிறிதளவு தொகையிலேயே ஜீவனம் நடக்கிறது என்றாலும் அவருடைய பகட்டுகளில் குறை ஏதும் வரவில்லை; அதே கம்பீரம், அதே ஆணவம். தூலே நவாப்பின் மாளிகையில் பணியாள்களும், அடிமைப் பெண்களும் இப்போது இல்லை என்றாலும் அவர் பழைய வேலைக்காரிகளின் நினைவால் 'குல்பதன்...' 'குல்ஷன்...' என்று பல முறை குரல்கொடுப்பார். பிறகு தாமே எழுந்து தனது பணியைச் செய்வார் என்று சொல்கிறார்கள்.

அவர் எழுபது, எழுபத்தைந்து என்ற எல்லையில் இருந்தார். அனால் கவிதையில் வாஹித் ஹுசேனை ஆசிரியராக்கிக் கொண்டிருக்கிறார். தக்காணப் பாணியில் கவிதை எழுதுவார். பிறகு எல்லாரயும்விட தாமே அதை வெகுவாகப் பாராட்டிக் கொள்வார். 'அறிவிலி அவர், எதுகை மோனை தெரியாதவர்' என்று வாஹித் ஹுசேன் சொல்லுவார். ஆனால் அவரால் இரண்டு பலன்கள் இருந்தன— ஒன்று, தினமும் தனது கஜலைப் படித்துக்காட்ட ஒரு நபர் கிடைத்துவிடுகிறார்; மற்றொன்று, திட்டங்கள் தீட்டுவதிலும், புதிய புதிய வாணிபங்களைத் தொடங்கும் கனவுகள் காண்பதிலும் அவர் வாஹித் ஹுசேனுக்கு வழிகாட்டியாக இருந்தார்.

ஆதீனங்களுக்கும், பதவிகளுக்கும் அந்துப்பூச்சியின் பாதிப்பு ஏற்படவே தூலே நவாப் வாணிப்த்தில் இறங்கிவிட வேண்டு

மென்ற முடிவுக்கு வந்துவிட்டார். குறிப்பாக உள்நாட்டுப் பொருட்களை வெளி உலகத்திற்கு அறிமுகப்படுத்த வேண்டு மென்ற முயற்சியில் இதுவரை ஐம்பதினாயிரம் ரூபாய்வரை இழந்துவிட்டார். இப்போது வாஹித் ஹுசேனின் கூட்டுடன் பிரியாணியும் கத்தரிக்காய்க் கூட்டும் சீமைக்கு அனுப்பும் திட்டத்தை அவர் பரிசீலனை செய்துகொண்டிருந்தார். இத்தகைய புதுமையான திட்டத்தில் தனது மகன் ரஷீதுக்கு உடன்பாடு இல்லையே என்ற கவலை வாஹித் ஹுசேனுக்கு இருந்தது.

"ஐயா, நாம் முதுமைப் பருவத்தை அடைந்துவிட்டோம்; ஆனால் நம்முடைய செயல் திறனால் பயனடைந்து காட்ட இந்த இளைஞர்கள் ஒன்றும் செய்ய விரும்புவதில்லையே..."

"என்ன சொல்வது, என் மகனும் என் சொல்லைக் கேட்பதில்லை..."

தூலே நவாபும் ஆமோதிப்பார். "எப்படியாயினும் நாம் சேர்ந்தே தொழிலைத் துவங்குவோம். உங்கள் ரஷீத் நவாபின் வேலை மிகச் சிறியது. சீமை சென்றடையும் வரை பிரியாணி சூடாக இருப்பதற்கு அவர் தனது கல்வித் திறனால் ஏதேனுமொரு வழியைக் கண்டுபிடித்தால் போதும்."

"இதென்ன பெரிய காரியம்," வாஹித் ஹுசேன் எலுமிச்சை இலை ஒன்றைப் பறித்து அதை விரல்களால் தடவி முகர்ந்து விட்டுச் சொன்னார். "பிர்அவ்ன் காலத்துச் சடலங்களும் இன்று வரை அப்படியே வைக்கப்பட்டிருக்கின்றன. பதினைந்து இருபது நாட்கள் பிரியாணியை சூடாக வைத்திருக்க முடியாதா, என்ன?"

"இருந்த போதிலும் ஆண்டவன் வாணிபத்தை முஸ்லீம் களுக்காக 'ஹலால்' செய்திருக்கிறான். வீட்டில் உட்கார்ந்தவாறே ஆயிரக்கணக்கில் வருமானம் பெறலாம்."

"கத்தரிக்காய்க் கூட்டு செய்யும் ஒரு புதுமையான முறை என்னிடம் இருக்கிறது. உங்கள் சீமைக்காரர்கள் தங்கள் விரல்களைக் கடித்துக் கொள்வார்கள்." தனது பையிலிருந்து காகிதத்தை வெளியே எடுத்தார் அவர்.

"சற்றே சிந்தித்துப் பாரும். ஒரு கிலோ பிரியாணி செய்ய பதினைந்து ரூபாய் செலவாகிறது. நமது கூட்டுக்கு அதன் மேல் இரண்டு ரூபாய் இலாபம் கிடைக்கிறது. நாள் ஒன்றுக்கு ஓர் ஆயிரம் டப்பாக்கள் விற்பனையானால் எவ்வளவு வருமானம் கிடைக்கும்?"

வாஹித் ஹுசேன் குட்டைச் சுவரைவிட்டு இறங்கிக் கீழேயே உட்கார்ந்துவிட்டார். செம்மண்மீது விரலால் கணக்குப் போட ஆரம்பித்தார்.

வருமானக் கணக்கு என்றதும் தூலே நவாப் சுற்றுமுற்றும்

பார்த்துவிட்டு நிம்மதியடைந்தார்.

"பாருங்கள் வாஹித் நவாப்... நமது திட்டத்தை யாராவது ஒருவன் தட்டிக் கொண்டுபோய் விடுவான்."

இப்போது சாந்த் பலகணி வழியே தோட்டத்தில் பார்வையைச் செலுத்தியபோது தாத்தா குட்டைச் சுவர்மீது உட்கார்ந்திருப்பது தெரிந்தது. இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்தவாறு செங்கல்மீது உட்கார்ந்திருந்த தூலே நவாப் அவளுக்கு ஒரு கோமாளியாகத் தென்பட்டார். தாத்தாவும் கஜலைப் படித்துக் காட்டும் மனோநிலையில் அவருக்காக ஒரு நாற்காலியைக் கொண்டு வருமாறு சொல்லவும் மறந்துவிட்டார். அதனால் சாந்த் தானே ஒரு நாற்காலியை எடுத்துக்கொண்டு அங்கு சென்றாள்.

"சபாஷ், நீடுவாழி மகளே. இவள் பஷீர் பேகத்தின் மகள்!"

தூலே நவாப் நாற்காலியின்மீது தாவி உட்கார்ந்து கொண்டார்; இன்னும் செங்கல் மீது உட்கார்ந்திருப்பதாகவே தோன்றியது. "மாஷா அல்லாஹ்! தாய்போலவே அழகாக இருக்கிறாள்"

"தாத்தாவுக்கு சலாம் சொன்னாயா?" வாஹித் ஹுசேன் சாந்தைக் கூர்ந்து நோக்கினார்.

அவளுக்கு வெட்கமாக இருந்தது. தூலே நவாப் போன்ற முயல்களுக்கும் வணக்கம் தெரிவிக்க வேண்டுமா என்ன?

"முன்பே சொல்லிவிட்டாள்" பேச்சை மாற்றுவதற்காக தூலே நவாப் பொய் பேசினார்.

"இல்லை சொல்லவில்லை" அவள் விளக்கம் தந்தாள்.

"ஹி... ஹி... ஹி..." தூலே நவாப் சிரிக்கலானார்.

"நான் சொல்வது என்னவென்றால்..." வாஹித் ஹுசேன் தன் வாயிலிருந்து புகைக்குழாயை எடுத்துவிட்டு, நின்றுவிட்ட பேச்சுக்களின் தொடர்ச்சியை இணைத்தார்.

"அதாவது... நமது மனமகிழ்வுக்காக அல்லாஹ் அழகான மங்கையரைப் படைத்தான். ஆனால் பாருங்களேன், பெண்ணுக்கு வாயும் மூளையும் கொடுத்து அவளுடைய பாதி எழிலைக் குறைத்து விட்டான்."

பிரியாணியில் தொடங்கிய பேச்சு பெண்டிர் கவர்ச்சியில் எப்படியோ வந்துநின்றது.

"ஆமாம். ஆமாம். ஆதாமின் பொழுதுபோக்குக்காகவே அல்லாஹ் அணங்கு ஒருத்தியைப் படைத்தான். அதனால்தான் பெண்களுடன் பேசுவது என்ற பொருள் கொண்டு கஜலும் இருக்கிறதுபோலும்" தூலே நவாப் தனது பேச்சைத் தாமே ரசித்துச் சிரித்துக் கொண்டார்.

"தாத்தா, அப்படியானால் பெண்கள் ஊமையாக இருக்க

வேண்டுமா?" சாந்த் கலவரத்துடன் தனது பாட்டனாரிடம் கேட்டாள்.

"ஹா.. ஹா.. ஹா... ஹ¬.. ஹ¬.. ஹ¬..." சாந்தின் பேச்சைக் கேட்டு தூலே நவாப் மீண்டும் சிரித்தார்.

"பார்த்தீர்களா ஐயா, உங்கள் பேத்தி இங்கிலீஷ் படிக்கிறாள் அல்லவா! என்ன கேட்கிறாள்? அதனால்தான் மகள், மருமகளுக்கு முன்னால் கவிதை பாடக்கூடாது என்று சொல்கிறார்கள். மாளிகைகளில் ஆண்கள் பகுதி, பெண்கள் பகுதி என்று அதற்காகவே கட்டுகிறார்கள்."

"ஹ¬..ஹ¬..ஹ¬..."—இதைக்கேட்டு வாஹித் ஹ¬சேன் செயற்கையாகச் சிரித்தார். மனம் திறந்து சிரிக்கும் பழக்கம் அவருக்கு எப்போதும் இல்லை; ஏனென்றால் வாழ்நாள் முழுவதும் வட்டாட்சியராக இருந்தவர். அதில் சிரிப்புக்கு அவசியமே இருக்கவில்லை. சுருட்டுப் பிடித்தவாறு கவிதைகள் எழுதினார். அந்நேரத்தில் ஒரு குழந்தையின் குறும்பைப் பார்த்துத் திகைப்படைவார். அப்போது சிரிப்பதற்குப் பதிலாக, அவன் ஒரு எதிரியாகவே அவருக்குத் தென்படுவான்.

நகரில் உள்ள எல்லா இலக்கிய வட்டாரங்களுக்கும் வாஹித் ஹ¬சேன் வாஹித் என்ற தனிச்சிறப்பு பெற்ற அருமையான கவிஞர் ஹைதராபாத்தில் இருக்கிறார் என்பது நன்றாகத் தெரியும். என்றாலும் யாரும் இதுவரை அவருக்கு எந்தக் கவியரங்கத் தலைவர் பதவியும் தரவில்லை.

மண்டலத்தில் ஏதாவது அரசாங்க விழா நடந்தால், அத்துடன் கவியரங்கமும் அரசு சார்பில் நடைபெறும். அதன் தலைவராக தன்னைத்தானே வாஹித் ஹ¬சேன் நியமித்துக் கொள்வார். அதுபோன்ற வாய்ப்புகளின்போது நான்கைந்து கஜல்களை அவையோர் செவிகளில் கொட்டிய பிறகுதான் மூச்சு வாங்குவார். செவியுற மறுக்கும் துணிவு அப்போது யாருக்கு இருக்க முடியும்...?

# 7

"என்ன, சிலாரு மருந்து வாங்கி வந்துவிட்டானா?' வாஹித் ஹ¬சேன் ஆத்திரமாகவே கேட்டார்.

"இந்த நேரத்தில் வீணாகவே அவனைக் கடைக்கு அனுப்பி விட்டோம். அன்னையாருக்குச் சலாம் சொல்ல 'ஆலாஹஜ்ரத்'

பவனி செல்லும் நேரம் இது. சாலைகள் அனைத்தும் மூடப் பட்டிருக்கும்." சிலாருக்கு ஆதரவாகப் பேசினாள் ரஜியா. இன்று தனது மாமனாரின் கோபம் உச்சநிலையில் இருக்கிறது. யாரேனுமொரு வேலைக்காரன் அதற்கு இலக்காகி விடுவான் என்று அவள் பயந்தாள்.

"தவறான கூற்று இது. இன்று வெள்ளிக்கிழமை. ஆலா ஹஜ்ரத் தொழுகைக்காகப் 'பாகே ஆமு'க்குச் சென்றிருப்பார்"

"அப்படியானால் ஒருவேளை பேகம் சாஹிபாவே மருந்துக் கடைக்கு வந்திருப்பார்", சிலாரைக் காப்பாற்ற ரஜியா வேறொரு காரணத்தைக் கூறினாள்.

பேகம் சாஹிபா திரைபோட்ட காரில் நாள் முழுவதும் கடைவீதியைச் சுற்றி வருகிறாள். தனது விருப்பப்படி எங்கு வேண்டுமானாலும் வாகனத்தை நிறுத்துவார். தள்ளுவண்டிக் காரனின் வியாபாரப் பொருள்களைச் சூறையாடுவார். கடைகளில் புகுந்து தனக்குப் பிடித்தமானவற்றை எடுத்துச் சென்றுவிடுவார். 'ஆலா ஹஜ்ரத்'தை வன்மம் தீர்ப்பதற்காக இந்தச் சட்ட மீறலைச் செய்வார். ஏனெனில் அந்தப்புரத்தில் அவருக்குப் பதிலாக வேறொரு அழகி அவருடைய ஆசை நாயகியாக வீற்றிருக்கிறாள்.

"ஓ! உங்களால் முடிந்தால் அரச குடும்பத்தையே சிலாருக்கு முன்னால் கொண்டுவந்து நிறுத்திவிடுவீர்கள்..." வாஹித் ஹுசேனின் பேச்சைக்கேட்டு எல்லாரும் சிரித்துவிட்டார்கள். நாளிதழ் வாசித்துக் கொண்டிருந்த ரஷீத், வெற்றிலைபோடும் பீபி, குழந்தைக்குப் பாலூட்டும் ரஜியா, பாக்கு வெட்டிக் கொண்டிருந்த நொண்டி அத்தை எல்லாரும் சிரித்தார்கள்.

"நல்லதாகப் போய்விட்டது. உஜாலா பேகத்திற்கு ஒரு குழந்தை கிடைத்துவிட்டது" பேச்சின் போக்கை மாற்றுவதற்காக நொண்டிஅத்தை இரங்கற்பாவின் முதல் வரியை ஆரம்பித்தார்.

வாஹித் ஹுசேன் புகைக்குழாயைக் கீழே வைத்துவிட்டுப் பொறுமையுடன் கவ்ஹர் பேகத்தை நோக்கினார்.

"உஜாலா பேகம் என்ன சதித்திட்டம் தீட்டினாலும், சட்டம் அதை அஹ்மத் ஹுசேனின் மைந்தனாக உடன்பாடு தெரிவிக்காது, என்ன ரஷீத் மியான்?"அவர் நம்பிக்கை நிறைந்த பார்வையுடன் ரஷீதை நோக்கினார். 'வாழ்க்கையில் உமது சாதனை யாது?' என்று யாரேனும் வினா எழுப்பினால், அவர் ரஷீதை முன்னால் நிறுத்திவிடுவார். இதர பண்ணையார்களுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். ஏழேழு திருக்குமாரர்கள் இருக்கிறார்கள். அனைவரும் உதவாக்கரைகள், ஊதாரிகள், ஊர் சுற்றிகள். நீதிமன்றங்களில் அவர்களுக்கு எதிராகப் பல வழக்குகள், விசாரணைகள் இருக்கும். அவர்களும் கறையான் அரித்துவிட்ட

சொத்துக்களின் நம்பிக்கையில் வாழுகிறார்கள். என் மைந்தனின் திறமைகளைக் கண்டறிந்து அரசாங்கமே தனது சொந்தச் செலவில் பொறியியல் படிப்புக்காக அக்கரைச் சீமைக்கு அனுப்பியது. அவன் மிகக் கம்பீரமாக மேனாட்டு ஆடையணிந்து, தனது சிறிய காரில் பவனி வரும்போது அவனது சிறப்பை உலகம் ஒப்புக் கொள்கிறது. ஹைதராபாத்தில் அவன் நிர்மாணித்த அழகான கட்டடங்கள் நகருக்கு அழகைக் கூட்டித் தருகின்றன. பண்ணையாருக்குரிய ஆணவம் அவனது இயல்பில் இல்லை. நாளை நிகழப்போகும் சம்பவத்தையே சிந்திக்கும் ஆற்றல் படைத்தவன். தந்தையின் பெருமையை நிலைநாட்டுவதும், அன்னையின் மகிழ்ச்சியை அதிகப்படுத்துவதும் தனது முதலான கடமை என்று நினைப்பவன். உறவினர்களிடத்தில் அவனுக்குத் தனி மதிப்பு; தன் வாழ்க்கைத் துணைவியைப் பெரிதும் நேசிப்பவன்.

இதே மனப்பாங்கு காரணமாக, நிலக்கிழார் குடும்பங்களை ஒதுக்கிவிட்டு, நன்கு ஆராய்ந்து அவனுக்காக ரஜியாவைக் கொண்டு வந்தார் வாஹித் ஹுசேன். ரஜியாவின் பாட்டனார் சிறிய சிகரெட் தொழிற்சாலை ஒன்றை நிறுவியவர்; அது விரைவிலேயே லட்சோப லட்சங்களைக் கொண்டுவந்து குவித்தது. மிக உயர் பதவியில் இருக்கும் பட்டாதார் ஒருவரின் மாத வருமானத்தைக் காட்டிலும் அதிகமாகவே ரஜியாவின் தந்தை ஒரே நாளில் சம்பாதிக்கிறார். இந்த வீட்டிற்கு வரும்போது ரஜியா ஒரு கார், ஒரு பங்களா, நூறு தோலா தங்கம், ஒரு லட்சம் ரூபாய் ரொக்கம் என்று எலலாமே கொண்டுவந்தாள். இத்தகைய மருமகளை அவர்கள் கொண்டாடாமல் எப்படி இருக்க முடியும்?

அஹ்மத் ஹுசேனின் வாரிசு பிறந்ததும் ரஷீத் மீண்டும் மீண்டும் ஒரே விஷயத்தை வலியுறுத்தினான். "இதைப் பெரிது படுத்தாதீர்கள். அப்பா.. அல்லாஹ் சித்தப்பாவை நலத்துடன் வைக்கட்டும். உஜாலா சித்தியைப் பின்னர் கவனித்துக் கொள்ளலாம்."

"உஜாலா அண்ணி தனது செல்வனை மௌல்வி (மதப் படிப்பு) ஆக்கிவிடுவாராம். ரஹ்மத் அலிஷாஹ்வின் கல்லறையில் நேர்ந்திருக்கிறார்."

"இப்போதே பாலகனுக்கு ஒரு தாடியும் வைத்துவிடட்டும்," ரஜியா சிரித்தாள். அவள் ஒரு லட்சாதிபதியின் மகள் என்றாலும், உஜாலா பேகத்தின் சொத்து கையைவிட்டுப் போய்விடும் என்ற ஏக்கம் இருக்கவே செய்தது.

"முன்பெல்லாம் உயர்குடி ஆடவர்கள் தாடியைத் தனக்குச்

சிறப்புத்தரும் அங்கமாகக் கருதினார்கள். நமது குடும்பத்திலும் எல்லாரும் தாடி வைத்திருந்தார்கள். இந்த அஹ்மத் மியான்தான் மரபு வழக்கத்தைக் கடைப்பிடிக்கவில்லை. முன்னோர் கடைப் பிடித்த வரையறைகளைத் தகர்த்தெறிந்துவிட்டார்; தாடியும் வைக்கவில்லை; கவிதையும் பாடவில்லை" என்று நொண்டி அத்தை பழித்துரைத்தார்.

"நமது குடும்பத்தில்..." வாஹித் ஹுசேன், சிலாரு கொண்டு வரவிருந்த மருந்தை எதிர்பார்த்திருந்ததை மறந்துவிட்டார். "நமது குடும்பத்தில் ஆண்கள் அனைவருமே தாடி வைத்தார்கள்; கவிதை பாடினார்கள்; நமது பாட்டனார்—அல்லாஹ் அவருக்குச் சொர்க்கத்தில் இடம் அளிப்பானாக—எத்துணை உயர்பண்புகள் கொண்ட மனிதராக இருந்தார். என்னே கம்பீரம்! நேற்று பார்த்தது போல் இருக்கிறது..." அவரது பார்வை வளிமண்டலத்தில் பதிந்துவிட்டது.

"பாட்டனார் எப்போதுமே உயர்ரக ஷேர்வானியும், சரிகைத் தலைப்பாகையும் அணிவார். காலையில் கழிப்பிடத்திற்குச் செல்லும்போது முதலில் அங்கு ஹுக்கா வைக்கப்படும். முக்காலி ஒன்றின்மீது குறிப்பேடும், மைப்புட்டியும் எழுது கோலும் வைக்கப்படும். அவர் தமது எல்லா கஜல்களையும் இப்படித்தான் இயற்றினார். எங்கள் பெரியப்பா, அதாவது கவ்ஹர் பேகத்தின் அப்பாவுக்குக் கவிதை என்றாலே கசக்கும். இந்தக் குடும்பத்தையே கவிதைகளின் ஹாய், ஹாய் (புகழுரைகளின் ஒலி) சாப்பிட்டு விட்டது என்று வாதிடுவார். 'இது பீடை, தரித்திரம், அழிவின் அறிகுறியே... வாழ்க்கையும் செல்வமும், மது-மங்கை-மயக்கந்தரும் கவிதைகளில் அழிந்துவிடுகிறது' என்று வர்ணிப்பார்."

"மிக மிகச் சரியான வாதம்தான்," பீபி வெற்றிலைப் பெட்டியைத் திறந்தார்.

"மிகப் பெரிய உண்மை அது. இந்தக் குடும்பத்தின் எல்லாமே அழிந்துவிட்டது" கவ்ஹர் பேகம் பெருமூச்சு ஒன்றை வெளிப் படுத்தினாள். இந்தத் தொடரில் இந்தக் கட்டத்தில் ரஷீதும் ரஜியாவும் தங்கள் கவனத்தைப் பதித்தார்கள்.

"பெரியப்பா அறிவாளி என்பதில் ஐயமில்லை. குடும்பத்திலேயே அவர் ஒருவரைத்தான் பாட்டனார் நம்புவார்" தன் தந்தையின் பேச்சைக்கேட்டு கவ்ஹர் பேகம் கண்களைக் கசக்கிக் கொண்டார்.

வாஹித் ஹுசேனின் முகத்தின்மீது கடந்தகால நினைவுகள் சுடர்விட்டுப் பிரகாசித்தன. "வீழ்ச்சி தொடங்கிய அன்றிரவு பாட்டனார் மதுவைத் தொடவே இல்லை."

"வீழ்ச்சியா..? எந்த வீழ்ச்சி?" ரஷீத் பத்திரிகையை வைத்து விட்டுக் கவனமாகக் கேட்கலானான்.

"உண்மையில் ஏதோ ஒரு பிரச்சினையில் ஆங்கிலேய ரெஸிடென்டுடன் பாட்டனாருக்கு முரண்பாடு ஏற்பட்டுவிட்டது. அதனால் நிலைமை சீர்கேடாகப் போய்விட்டது. பாட்டனாருடைய அந்தப்புரத்தில் பெண்கள்மீது கொடுமைகள் இழைக்கப்படுகின்றன என்று குற்றம் சுமத்தி, அன்று அவன் விசாரணைக் குழு ஒன்றை அமர்த்தினான்..."

"கொடுமை இழைக்கப்பட்டதா?" ரஷீத் கேட்டான்.

"அப்படி ஒன்றுமில்லை," வாஹித் ஹுசேன் அமைதியாகப் புகைக்குழாயில் தீயை மூட்டினார். "அக்கால வழக்கப்படி தனது மனமகிழ்வுக்காக, அழகழகான பெண்களை, ஒவ்வொரு நவாப்பும் வைத்துக் கொள்வார்கள்."

"இந்தப் பெண்கள் ஏழைப் பெற்றோர்களிடம் பட்டினி கிடந்தவர்களாக, அல்லது கல்வியறிவு பெறாத முரடர்களுக்கு மணம் முடிக்கப்பட்டு அல்லல்படுபவர்களாக இருப்பார்கள். மாளிகைகளில் அவர்களுக்கு நல்ல குடியிருப்பு வசதிகளும், அவர்கள் பேரில் நிலங்களும் எழுதப்பட்டு, அவர்களின் குழந்தைகளின் எதிர் காலமும் சிறப்பாக அமைக்கப்பட்டுவிடும். அந்தப் பெண்களின் பெற்றோர்கள், நன்கொடைகள் மூலம் தங்கள் நிலைமைகளைச் சீர்படுத்திக் கொள்வார்கள். என்றாலும், உலகமெங்கும் 'எங்கள் பெண்மக்களை நவாப்புகள் எடுத்துச்சென்று விட்டார்கள்' என்று அழுது புலம்புவார்கள்."

"பிறகு தாத்தா என்ன செய்தார்?" ரஷீத் கேட்டான். அன்று ரஷீதுக்கு அவசரமான கூட்டம் ஒன்று இருந்தது. இரவில் ஒரு விடுதியில் நாட்டிய நிகழ்ச்சிக்கும் அவன் போக வேண்டும்; ஆனால் தனது குடும்பத்தின் வரலாறு கேட்பதில் ஓர் ஆர்வம் ஏற்பட்டுவிட்டது.

"பாட்டனாருக்கு முன்னால் அப்போது காகிதங்கள் பரப்பிக் கிடந்தன. யாருக்கும் அவரருகில் செல்ல அனுமதி இல்லை. பாட்டி அம்மா தன் குழந்தைகளுடன் முதலிலேயே மாளிகையின் வேறு பகுதிக்குச் சென்றுவிட்டார்; ஏனெனில் புகழ்பெற்ற விலைமாது பார்வதி அப்போது அவருடைய அன்புக்குரியவளாகி இருந்தாள்..."

"நான் அந்தக் காட்சியை இதுவரை மறக்கவில்லை..." வாஹித் ஹுசேன் சொல்லிக்கொண்டிருந்தார். அவரைச் சுற்றிலும் பீபி, கவ்ஹர் பேகம், ரஷீத், ரஜியா ஆகியோர் சிலைகளாக உட்கார்ந்திருந்தார்கள். வாஹித் ஹுசேனிடம் ஏதோ ஒரு அரும்பொருள் காட்சியைக் காணுவது போன்ற பிரமை அவர்களுக்கு...

"பார்வதியுடன் நாங்கள் எல்லாருமே வண்டிகளில் உட்கார்ந்து தோட்டங்களுக்குப் போய்க்கொண்டிருந்தோம். ஒரு வண்டியில் உணவுப் பொருள்கள் இருந்தன. எங்களுடன் சேவகர்களும் இருந்தார்கள். வழி நெடுகிலும் புளிய மரங்கள், அரச மரங்களின் அடர்த்தியான நிழல்கள் இருந்தன. சுற்றிலும் நெற்பயிர்கள் பட்டுவிரிப்புப்போல் பரவி இருந்தன. அதற்கு அடுத்து காடு—சிவப்பு நிறக் குன்றுகளுக்கு மேல் நீலநிற வானம்—வானத்தில் மிதந்த முகில்கள் இப்போதும் நினைவில் இருக்கின்றன. காற்றுடன் நெற்பயிர்களின் மணம் கலந்திருந்தது. இடையன் ஒருவன் கால்நடைகளை ஓட்டியவாறு செல்கிறான். எங்கேயோ வயல்களிலிருந்து குருவிக் கூட்டம் ஒன்று பறந்துவருகிறது. கீழ்ச் சாதிப் பெண் ஒருத்தி விறகுக்கட்டு ஒன்றை எடுத்து வருகிறாள். நிர்வாணமான சின்னஞ்சிறு குழந்தைகள் புளிய மரங்களில் ஏறிப் பூக்களைப் பறிக்கிறார்கள். தூரத்தில் வயல் ஓரங்களில் சில குழந்தைகள் சிறுநீரும் கழிக்கிறார்கள்..."

"போதுமே இந்த வர்ணனை.. இது கதையா, கவிதையா?" ரஜியாவுக்கு எரிச்சலாக இருந்தது.

"வண்டியில் போகும் எங்களை அந்தக் குழந்தைகள் அழகு காட்டுகின்றன. நான் வெட்கமடைந்து முகத்தை உள்ளே இழுத்துக் கொள்கிறேன். பிறகு திடீரென்று மாலைநேரம் வந்துவிடுகிறது. பயணிகள் மாளிகையில் தங்க வேண்டாம். எங்களுக்காக காட்டில் கூடாரம் அமைக்க வேண்டும் என்று நாங்கள் பிடிவாதம் செய்கிறோம்..."

"இரவில் இன்பமாக இருக்கும்—ஆனால் எத்தனை பயங்கரமான பொழுதுபோக்கு!"

"பாதி இரவில் கூக்குரல்களைக் கேட்டு குழந்தைகளாகிய நாங்கள் விழித்துக் கொள்கிறோம்; பெண்கள் எல்லாருமே நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். குழந்தைகளும் அன்னையாரின் சேலைகளில் முகங்களை மறைத்துக்கொண்டு அழுகிறோம்—ஏனென்றால் அந்திசாயும் நேரத்தில் பாதை வழியே சென்ற சில உழவர்கள் சொல்லியிருந்தார்கள்—'பெண்கள் கூடாரத்தை இங்கு ஏன் அமைத்திருக்கிறீர்கள்? நதிக்கரையோரம் நாடோடிகளின் கூட்டம் ஒன்று இருக்கிறது. அவர்கள் இரவில் கொள்ளையடிப்பார்களாம்!' அந்தப் பேச்சு பெண்களைப் பாதித்துவிட்டது; கூக்குரல்களைக் கேட்டு, பெண்களுக்குப் பாதுகாப்பாளராக வந்த கவுஸ் மியான் தரையிலேயே படுத்துவிட்டான். இது பெண்களின் வீண் பிடிவாதம்தான். பயணிகள் மாளிகையை விட்டு இங்கு எதற்காகத் தங்கி இருக்க வேண்டும் என்று புலம்பினான்."

"இறைவா! கன்னியர் மானம் உன் கையில்தான் இருக்கிறது;

இன்று இரவு நலத்துடன் கழிய வேண்டும். பீபியின் கொடிமேல் தங்கப் பிறையை ஏற்றுகிறேன் என்று பாட்டி அம்மா வேண்டுகிறார்..."

"பிறகு ஏதோ நினைத்துப் பார்வதி எழுந்தாள். அவள் நமது பாட்டனாரின் சட்டப்பூர்வ மனைவியல்ல; என்றாலும் மனைவி யர்களைவிட அதிகமாகவே விரும்பப்பட்டார். இருந்தாலும் விலைமாது ஒருத்தியுடன் உறவுமுறை ஏற்படுத்த குடும்பத்தைச் சார்ந்த எவருமே விரும்பவில்லை. அதனால் எல்லாரும் மதிப்புடன் 'பாய் அம்மா' என்று அவளை அழைத்தார்கள்..."

குழாயைப் பற்ற வைத்த வாஹித் ஹுசேன், பார்வதியின் நினைவுகளில் மூழ்கிவிட்டார்—"எத்தகைய பெண்மணி அவள், ரஷீத் மியான்! நடுஇரவில் அடர்த்தியான காட்டில், காரிருளில், அவள் முகம் விளக்கைப்போல் பிரகாசித்தது. அவள் எத்திசையில் நோக்கினாலும் எல்லாரும் அவளுடையவர்களாகிவிடுவார்கள். என்னை மணிக்கணக்கில் மடியில் தூக்கி வைத்துக்கொள்வாள். அவளை எதிரில் அமரச் செய்து பாட்டனார் கவிதை புனைவார். பாட்டனாரைப் போன்ற எஃகு உள்ளம் படைத்தவரை அவள் தனது நளினமான விரல்களால் ஆட்டிப்படைத்தாள் என்றே சொல்ல வேண்டும்! பார்வதி எழுந்து கவுஸ்மியாவின் ஆடைகளை அணிந்து கொண்டாள். ஷேர்வானியின் மீது தலைப்பாகை அணிந்து, மையால் மீசைகளை வரைந்து, துப்பாக்கி எடுத்துக் கொண்டு கூடாரத்திற்கு வெளியே போய நின்றுகொண்டாள். தீவட்டியைக் கையிலெடுத்துச் சுற்றிவரும்போது, ஒரு முகலாய இளவரசன் தனது பெண்களைப் பாதுகாத்து வருகிறான் என்ற உணர்வே தோன்றும்; ஒரு வழியாக எல்லாரும் சற்று அமைதி கண்டார்கள். குழந்தைகள் தூங்கிவிட்டார்கள். கவுஸ் மியாவும் எழுந்து உட்கார்ந்தார்.

"பாட்டி அம்மா அவளுடன் பேசுவதில்லை. அப்படி இருந்தும் அன்று எச்சரிக்கை விடுத்தார்—அடியே பார்வதி பொருள் போனால் போகட்டும். யாராவது உன்னை தூக்கிக் கொண்டு போய்விடுவான். நீ உள்ளே வந்துவிடு..."

"இல்லை பேகம். பொருளைப் பற்றி நானும் கவலைப் படவில்லை," அவள் பாட்டியம்மாளுக்குப் பதில் கூறினாள். "கற்புள்ள உயர்குடி மங்கையரின் பாதுகாப்புக்காக நான் இங்கே நிற்கிறேன்"பிறகு அவளே சிரித்துவிட்டாள்: "வேசிகளையும் யாராவது தூக்கிக்கொண்டு போவார்களா, பேகம்?"

"அக்காலத்து வேசிகளும் இத்தகைய உணர்வு பெற்றிருந் தார்கள்..." வாஹித் ஹுசேன் எல்லாரையும் ஒருமுறை பார்த்துக் கொண்டார். "பார்வதிக்கு முன்னால் எந்தப் பெண்ணும்

முகத்திரை இல்லாமல் வரமுடியாது; யாரும் பலமாகச் சிரிக்கவும் முடியாது. தசரா நாளில் பார்வதியின் அம்மாவும், சகோதரியும் அவளைப் பார்க்க வருவார்கள். ஆனால் அவர்களை எந்நாளிலும் உள்ளே அழைக்கவில்லை; வாயிலிலே நாற்காலிகளில் உட்கார வைப்பாள். கதவு அருகில் நின்று அங்கேயே அவர்களுடன் பேசுவாள்.

"அவர்களுக்கு நாற்காலி எதற்கு?" ரஜியா ஆர்வத்துடன் கேட்டாள்.

"அந்நாளில் ஆண்களும், வேசிகளும் மட்டுமே நாற்காலிகளில் உட்காருவார்கள். எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. ஒருநாள் என் அக்கா விளையாடும்போது நாற்காலியின் மேல் உட்கார்ந்து விட்டாள். உடனே பார்வதி அவளைத் தனது மடியில் எடுத்துக் கொண்டாள். "நீங்கள் நாற்காலியில் உட்காரக் கூடாது கண்ணே—நாற்காலியில் ஆண்கள் உட்காருவார்கள். வேசிகளான நாங்கள் உட்காருவோம்."

'இவளும் பாக்மதியின் பேத்தி போலும்' ரஷீத் எண்ணமிட்டான்.

"உங்கள் பாட்டனார் காலமான நாளில் என்ன நடந்தது?" ரஜியா கேட்டாள்.

"ஆங்.. என்ன கேட்டாய்?" வாஹித் ஹுசேன் திடுக்கிட்டு ரஷீதைப் பார்த்தார்—ஏதோ இனந்தெரியாத இடத்திற்கு வந்துவிட்டதுபோல். பிறகு தன்னை சமாளித்துக்கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் துடைத்துக் கொண்டார். சிறிய பிரெஞ்ச் கட் தாடியை மெதுவாகத் தடவினார். மீண்டும் கண்ணாடியை எடுத்து அணிந்து கொண்டார். நவம்பர் மாதத்துக் குளிர்ந்த இரவின் நடுக்கம் அவர் உடலில் தெரிந்தது.

"பாட்டனார் காலமானபோது, அவரைச் சுற்றிலும் காகிதங்கள் பரவிக் கிடப்பதைப் பார்வதி பார்த்தாள். பாதாம் பாயசத்திலிருந்து ஆவி வருவது நின்றுவிட்டது. கழிவறையில் குறிப்பேடும், எழுதுகோலும், மைப்புட்டியும், முக்காலியும் வைக்கப்பட்டுவிட்டன. 'வஜு'வுக்காக வைக்கப்பட்ட நீரும் குளிர்ந்துவிட்டது. ஆனால் அவர் தலையைக் குனிந்து உட்கார்ந்திருந்தார்.

"பார்வதி மெதுவாகக் கூறினாள்—காலைத்தொழுகைக்கான பாங்கு சொல்லியாகிவிட்டது, ஐயா! எழுந்திருங்கள்—"

"இதைக்கேட்டு அவர் கண்களைத் திறந்து பார்வதியை நோக்கினார். புறா இரத்தத்தைப்போல் அவை சிவந்து இருந்ததாகப் பார்வதி ஆணையிட்டுக் கூறுவாள்; அறை முழுவதும் புதுமையான

மணம் பரவி இருந்ததாம்..."

"பொழுது இன்று புலராது—பார், எத்தனை பயங்கரமான இரவு இது!" தாத்தா மெதுவாகக் கூறினாராம்.

"இதுவும் அவருடைய காதல் வாசகம் என்றெண்ணிப் பார்வதி சிரித்துவிட்டாள். பிறகு அவர் அருகில் சென்றாள் 'இந்தத் தீபத்தை அணைத்துவிடவா!' என்று கேட்டாள்.

"இதைக்கேட்டுப் பாட்டனார் துடித்துப் போனார்—இப்போது இதில் என்ன இருக்கிறது. இது வெறும் சாம்பல்தான்"

"பார்வதி சொல்லுவாள்—அப்போது நான் பார்த்தபோது..."

எல்லாரும் கண்களை விரித்து, மூச்சுவிடாமல் வாஹித் ஹுசேனைப் பார்த்தார்கள். "என்ன ஆயிற்று?" ரஷீதும் தன்னை மறந்த நிலையில் கேட்டான்.

"ஒன்றுமில்லை..." வாஹித் ஹுசேன் பெருமூச்சுவிட்டவாறு கூரையை நோக்கினார். "உண்மையில் அங்கு எல்லாமே சாம்பலாகிவிட்டது. சிறிது நேரத்தில் காவல் துறையினரும் வந்தார்கள். கவிதாலயம் மீது ஐம்பதாயிரம் ரூபாய் கடன் இருந்தது. எழுபது பெண்கள் இங்கு மறைத்து வைக்கப்பட்டிருந்தார்கள்."

"எத்தனை நற்பேறு பெற்றவர்" நொண்டி அத்தை மதிப்பும் துக்கமும் கலந்த குரலில் பேசினாள்.

"பாட்டி அம்மா சொல்லுவார்—எல்லாக் காகிதங்களும் உயில்களாக இருக்கும் என்று நான் நினைத்தேன். ஆனால் எல்லாமே 'கஜல்' கவிதைகளே! அதாவது ஒரே இரவில் பதினைந்து கஜல்களை இயற்றி இருக்கிறார்!" வாஹித் ஹுசேன் பாராட்டும் கண்களுடன் எல்லாரையும் நோக்கினார். பிறகு தாமே மயங்கினார். "அதுவும் ஒவ்வொரு ஈரடியும் மிக மிகச் சிறந்தது. மற்ற கவிஞர்கள் வாழ்நாள் முழுவதும் எழுத முடியாத கருத்துகள்..."

"ஹகீம் ஷபாஅத் அலி அவற்றைப் பார்வையிட்டதும் சொல்லிவிட்டார். இந்த கஜல்களை எழுதிய பிறகு, அவருள் என்ன எஞ்சியிருக்கும், வாழ்வதற்கு?"

"ஊம்... பிறகு என்ன நடந்தது?" இதுவரை வாயைத் திறந்தவாறு உட்கார்ந்திருந்த சாந்த் இந்தக் கதையின் முடிவை அறிந்துகொள்ள விரும்பினாள்.

வாஹித் ஹுசேன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த சாந்தைக் கவனமாகப் பார்த்தார். பிறகு குழாயில் தீ மூட்டினார். கால்களை அசைத்தவாறு புகையை இழுத்தார்.

"அன்று முதல் இந்த வீட்டின் அழிவு தொடங்கிவிட்டது. பிணத்தை எடுத்ததுமே பார்வதி வீட்டிலிருந்த எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு சென்று விட்டாள். மாளிகையிலிருந்து

வெளியேற்றப்பட்டவர்கள் கூக்குரலிட்டு, ஓலமிட்டு எஞ்சி நின்றதையும் வாங்கிக் கொண்டுபோய் விட்டார்கள். கவிதாலயம் ஒரு பொறுப்பாண்மையாக இருந்ததால் பாட்டி அம்மா எங்களை எல்லாம் அணைத்தவாறு இங்குவந்து உட்கார்ந்து கொண்டார். அதற்குப் பிறகு மீண்டும் புதிய முறையில் என் தந்தை சொத்துக்களை வகுத்து அமைத்தார்".

"அதனால்தான் என் அப்பாவுக்குக் கவிதை என்றால் எரிச்சல் வரும்!" கவ்ஹர் அத்தை ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார்.

"கொஞ்ச நஞ்ச வெறுப்பா என்ன?" வாஹித் ஹுசேன் அணைந்துபோன குழாயைக் கீழே வைத்துவிட்டார். "ஒரு கவிஞரின் கவிதைத் தொகுதியை வீட்டில் பார்த்துவிட்டால் உடனே வெளியே வீசி எறிவார். சுன்னு நவாபுக்கு இளமைப் பருவத்தில் கவிதையின் மேல் ஆசை வந்துவிட்டது. எழுதிய கவிதைகளை வீட்டில் வைக்கமுடியாது. பெரியப்பாவின் கையில் கிடைத்துவிட்டால் அவ்வளவுதான்... அதனால் அதை இங்கும் அங்கும் மறைத்து வைப்பார். ஒருநாள் பெரியப்பாவின் கையில் அவர் ஈரடி எழுதிய தாள் கிடைத்துவிட்டது. அதில் அவர் தன் காதலியின் கண்களை மதுக்கோப்பையுடன் ஒப்பிட்டிருந்தார். பெரியப்பா தொழுகை மணிமாலையை வீசிவிட்டு எழுந்து நின்றார்..."

"என்ன அக்கிரமம். இந்தச் சாண் அளவு பையனுக்கு ஒரு காதலியாம்—இது மிக மிகப் பெரிய தவறு. ஒரு மனிதப் பிறவியின் கண்கள் கோப்பை அளவுக்கு எப்படி இருக்க முடியும்? எல்லாம் பொய்; பித்தலாட்டம். பொய் பேசப்படும் வீடுகளில் இறைவனின் சீற்றம்தான் பாயும்..."

அன்றுமுதல் சுன்னு மியாவின் கவிதைப் பொட்டலம் யாருக்காவது கிடைத்துவிட்டால் அவை சமையற்காரி இமாம் பீயின் தொட்டியில் போடப்பட்டுவிடும். இமாம் பீ அடுப்பு மூட்டுவதற்காக, அல்லது ஒரு தாதி குழந்தையின் பாலைச் சூடு செய்வதற்காக இந்தத் தாள்களை உபயோகிப்பாள். அல்லது கவிதையார்வமுள்ள ஏதாவதொரு எலி தனது காதலிக்குப் படித்துக் காட்டுவதற்காக இந்தச் செய்யுள்களைக் கொண்டு சென்றுவிடும்!"

வாஹித் ஹுசேனின் கடைசி வாக்கியத்தைக்கேட்டு எல்லாரும் சிரித்துவிட்டார்கள்.

# 8

"காதலின் இயலாமையைக் கண்டு அழுகை வருகிறது..."

வயலின் மீட்டியவாறு சாந்த் பாடிக்கொண்டு இருந்தாள்.

சாந்துக்கு இப்போது பதினாறு வயது ஆகிவிட்டது. இந்த இடைக்காலத்தில் அவளுடைய வாழ்க்கையில் எதிர்பாராத துன்ப நிகழ்ச்சிகள் பல நேர்ந்துவிட்டன. வாழ்வை மிகவும் நேசித்த பஷீர் பேகம் ஒருநாள் சிரித்துக் கொண்டிருந்தபோது தொண்டையில் ஏதோ அடைத்துக் கொண்டது. டாக்டர் வருவதற்கு முன்பே அவள் ஆவி பிரிந்துவிட்டது. சாந்த் தனது தந்தையின் மார்பில் சாய்ந்து கண்ணீர் வடித்தாள். ஆனால் ஒருநாள் அவரும் கல்வியறிவு பெற்ற ஒரு கம்யூனிஸ்டுத் தோழியை மனைவியாக்கி வீட்டுக்குக் கொண்டுவரப்போகிறார் என்ற செய்தி கிடைத்தது. எனவே அன்றே அவள் கவிதாயலத்திற்கு வந்துவிட்டாள். பிறகு தன் வீட்டுக்குத் திரும்பிச் செல்லவேயில்லை. அவளுடைய செலவுக்காக மாதம் நூறு ரூபாய் ஹைதர் அலிகான் தானே வந்து கொடுத்துவிட்டுச் செல்வார்.

வயலினின் ஓசையும், காலிப் எழுதிய ஈரடியின் தவறான வார்த்தையும் சாந்தின் அறையிலிருந்து கிளம்பி முற்றத்தில் ஒலித்தன. இது காலை நேரம். அதாவது அவள் சாதகம் செய்யும் நேரம். ஆனால் இன்று காதலின் இயலாமையைக் கண்டு அவளுக்கு உண்மையாகவே அழுகை வந்தது. இந்தித் திரைப்படக் கதாநாயகிகள் பாணியில் அவளும் பாடிக்கொண்டே எப்போதும் அழுவாள். சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவாறு ஒப்பனையும் செய்து கொள்வாள். தனது காதல் சோகத்தை இவ்வாறே வெளிப் படுத்துவாள்.

சாந்துக்காக வருகின்ற இது போன்ற ஒரு சோகமான காலை வாஹித் ஹுசேனின் அமைதி கலைவதற்கு முன்னுரையாக அமையும். வலிதரும் பல்லைப்போல் சாந்தை அவர் சகித்துக் கொண்டிருந்தார். அவளுடைய நாகரிகமான, சுதந்திரமான, ஆணவம் நிறைந்த போக்கு அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

அப்போது ஹைதராபாத்தின் உயர்குடிகளில், இரண்டு வகை மங்கையர் இருந்தனர். ஒன்று வாஹித் ஹுசேனின் குடும்பத்தினர்

போன்றவர்கள்—அதன் பெண்கள், திரைபோட்ட பிறகுதான் வாகனங்களில் உட்காருவார்கள். பீபியைப்போல் அவர்களுக்கும் தங்களுடைய கணவன்மார்களுடைய பதவிகளின் ஆங்கில உச்சரிப்பு சரியாகத் தெரிந்திருக்கவில்லை. இந்த மங்கையர் பண் பாடு, தூய்மை, கற்பு எனும் வரையறைக்குள் இயங்கினார்கள். இவர்களால் யசோதாவைப்போல் தங்கள் சித்தார்த்தனைக் குற்ற மீட்பின் வழியில் நடத்திச் செல்ல முடியும். புதிய காமக்கிழத்தி வரும்போது தங்கள் வீட்டுக்குள் வனவாசத்தை மேற்கொண் டார்கள். சீதையைப்போல் அவர்களையும் மறைத்துக்கொள்ளப் பூமி தனது மடியைத் திறந்து விடும். செல்வச் செழிப்பு என்றால் அதிகப் பணியாட்கள்—வசதிகளின் பெருக்கு `என்றுதான் அவர்களுக்குத் தெரியும். உயர்நிலையைத் தக்க வைத்துக் கொள்ளப் பெருமளவில் தன்மறுப்பு செய்தல் அவர்களுடைய கொள்கையாக இருந்தது. அதற்குச் சன்மானமாகக் கருமணி கொண்ட கழுத் தணியும் (அதுதான் மண உறவின் நற்குறியாகக் கருதப்பட்டது) சாவிக்கொத்தும் (ஆனால் அதில் அவர்களுடைய சுகத்தின் எந்தத் திறவுகோலும் இருக்கவில்லை) கிடைக்கும். அந்தச் சாவிகளால் குடும்பச் செல்வம், சந்ததி, மதிப்பு எனும் மூடப்பட்ட கதவுகளை அவர்களால் திறக்க முடியும்.

இரண்டாவது வகை மங்கையர்—ஹைதர் அலிகான் ஈன்றெடுத்த பெண்ணைப்போல் இருப்பார்கள். பஞ்சகனி, தில்லி, டேராடூன் போன்ற இடங்களுக்குச் சென்று படித்தார்கள். ஆங்கிலேய அதிகாரிகளுடன் விடுதிகளில் நாட்டியமாடினார்கள். கைகள் இல்லாத ரவிக்கைகள் அணிந்தார்கள். தலைமுடியை வெட்டிக்கொண்டு ஒப்பனை செய்துகொள்வார்கள். தந்தையையும் தாயையும் டியர்—டார்லிங் என்றே அழைப்பார்கள். அவர் களுடைய விருப்பப்படியே திருமணங்களும் நடக்கும். ஆனால் விவாகரத்துகள் ஒருவர் மற்றொருவருடைய வற்புறுத்தல்களால் தரப்படும். அந்த வீடுகளின் பழைமையை மாற்றியமைக்கும் பொறுப்பு இளைஞர்கள் மீது விழுந்தது. எனவே அவர்கள் மேல்நாடுகளிலிருந்து ஆங்கிலேயப் பெண்களையும், பாரசீக அழகிகளையும் மணந்துகொண்டார்கள். மேனாட்டுக் கல்விமுறை இதற்கு அச்சாணியாக அமைந்தது. வடநாட்டு உயர்குடி மக்கள் இதனால் ஆங்கிலப் பண்பாட்டின் வண்ணத்தைப் பெற்று விட்டார்கள். இவர்கள் ஆங்கிலேயர் பாணியில் முகபாவங்களை மாற்றிப் பேசுவார்கள். அவர்களைப் போலவே ஆடைகளும் அணிந்தார்கள். மேனாட்டுப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றுவது மிக நாகரிகமானது என்று கருதினார்கள். அவர்களின் பண்பாடு முழுதாகவே மாறிவிட்டது. சிவப்பு உணவு மேசைவிரிப்புகள்,

பிரியாணிக் கொப்பரைகள், கத்திரிக்காய்த் தட்டுகள் எல்லாம் மறைந்து, அங்கு பட்லர்களும், வெள்ளைக் கண்ணாடிக் கோப்பை களில் 'நாப்கின்'களும் வந்துவிட்டன. தாழ்ந்த சிரிப்பொலிகளின் நடுவே, வண்ணம் பூசிய உதடுகள் வழியே 'சூப்' உறிஞ்சும் நளினமான நடையும் வந்துவிட்டது...

'ஸ்கர்ட்'களும், ஸ்லாக்குகளும் அணிந்து 'ரைடிங்' குதிரைச் சவாரி செய்தனர். விடுதிகளில் விருந்துபசாரங்களும் பிறகு 'ஸ்காண்டல்'களும் பிறகு 'கோர்ட்ஷிப்' (காதலூடாட்டம்)களும்... தேனிலவுக்கு வியன்னா-காஷ்மீர்-பாரிஸ். திரும்பி வரும்போது இருவர் கையிலும் விவாகரத்துக் காகிதங்கள் இருக்கும். பிறகு மீண்டும் புதிய முறையில் அதே வாழ்க்கைப் பின்தொடர்தல் தொடங்கும்.

ஏழு கடல் தாண்டிப் பேசப்படுவதைப் போலவே பேசினார்கள். அவ்வாறே மூச்சு வாங்கினார்கள். ஆனால் அவர்களைச் சூழ்ந்திருந்த வளிமண்டலம் மிகவும் பழைமை கொண்டதாக இருந்தது!

'கேட்டீரா சேதியை... அந்த நவாப் வாஹித் ஹுசேனின் பேத்தி ஓர் இந்து வாலிபனைக் காதலிக்கிறாளாம்."

"ஆமாம். எனக்கும் சேதி எட்டியது. ஆண்கள் கல்லூரிக்கு உதட்டுச் சாயம் பூசிக் கொண்டு போகிறாளாம்...! யாரைக் குற்றம் சொல்வது..? குடும்பத்தின் மானமே போய்விட்டது."

இத்தகைய பேச்சுக்களைக் கேட்கும்போது, உண்மையாகவே தனது மரணம் எதிரில் நிற்பதுபோல் வாஹித் ஹுசேனுக்குத் தோன்றும்.

சாந்த் குமரிப்பருவத்தை அடைந்தபோது இந்தக் காலகட்டம் முடிவடைந்து பழைமை திரும்பி வந்துவிட்டது. வடநாட்டில் சமுதாயப் பற்றின் அலை வேகமாக எழுந்தது. அதனால் மக்கள் கைகளால் நெய்த துணிகளை அணிந்து கொண்டார்கள். 'சர்' பட்டங்களைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். தங்கள் புராதன கலாச்சாரத்தைக் குழி தோண்டி எடுத்தார்கள். இந்த அமளி சாந்த் வசிக்கும் மண்டலத்திலிருந்து வெகு தூரத்தில் இருந்தாலும், வட நாட்டிலிருந்து தக்காணத்திற்கு வந்த காற்றலைகள் மூலம் நாட்டுப்பற்று எனும் புதிய கோஷமும் வந்தது. நமது கலாச்சாரத்தை, நமது கலைகளைப் போற்றி வளர்க்க வேண்டும் என்ற உணர்வை அது தட்டியெழுப்பியது. பொதுமக்களுக்கு 'அல்லாஹு அக்பர்', 'ராம்நாம்' போன்ற போர்க் குரல்களைக் கொடுத்து. சச்சரவுகளில் ஈடுபடுத்திவிட்டு, உயர்குடி மக்கள் கலைவளர்ச்சியைத் தங்கள் கொள்கையாக்கிக் கொண்டார்கள். அதாவது ஐரோப்பியப் பண்பாட்டில் ஊறித் திளைத்து

இந்தியர்களாக விளங்கிடும் முயற்சி இது. இப்போது மதங்களின் ஆக்கச் சார்பான கோணங்கள் தேடப்பட்டன. ‘ஹோலி’யின் போது ஒருவர் மற்றொருவரின் கைகுட்டையில் நளிமாக வண்ணம் பூசும் முறை கடைப்பிடிக்கப்பட்டது. தீபாவளி இரவில் எல்லா மாளிகைகளிலும் விளக்குகள் எரிந்தன. ஈகைப் பெருநாளில இந்து நண்பர்களுக்குச் சேமியாப் பாயசம் கொடுக்கப்பட்டது. விடுதிகளில் ‘ஈகை ஒற்றுமை நாள்’ கொண்டாடப்படும். அதில் பெண்கள் பரத நாட்டியம், கதக்களி ஆடினார்கள். இருண்ட அறைகளில் உடைபட்ட தம்பூராக்களுடன், கர்நாடக இசையில் மூழ்கியிருந்த சித்தப்பாக்களும் மாமாக்களும் தேடிக்கண்டு பிடிக்கப்பட்டனர். அஜந்தா பாணி கொண்டைகளும், நாடோடிகள் போன்ற மேல்சட்டைகளும், கைத்தறிச் சேலைகளும் வந்துவிட்டன. இதுவே நாட்டுப்பற்றின் மேலான சான்றுகளாகக் கருதப்பட்டன.

வடநாட்டில் காலிப், மீர் போன்ற கவிஞர்கள் குறித்து வாதங்கள் நடந்தன. தக்காணத்திலும் கோல்குண்டா பாழ் மைதானங்களில் வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் அங்குலம் அங்குலமாக ஆய்வு நடத்தினார்கள். குலி குதுப்ஷா, கவாசி, வஜ்ஹி, வலி, சிராஜ் போன்றோரின் செல்லரித்த கவிதைகளைச் சுத்தம் செய்து, இலக்கியக் காட்சிசாலைகளை உருவாக்கினார்கள்.

அதே நேரத்தில் முற்போக்காளர்களின் முதல் மாநாடு ஹைதராபாத்தில் நடந்தது. ஹைதர் அலிகான் சாந்தையும் தன்னுடன் அழைத்துச் சென்றார். தன் மகள் எத்தனை முற்போககு வாதியாக இருக்கிறாள் என்பதைக் காட்டுவதற்காகவே அழைத்துப் போனார். அப்போது ஹைதராபாத்தில் எந்தப் பொதுக் கூட்டத்திற்கும் முஸ்லிம் மங்கையர் செல்வதில்லை. சாந்தைப் போன்ற இளமங்கையைப் பார்த்ததும் எல்லா முற்போக்கு வாதிகளும் தங்கள் கோஷங்களை மறந்துவிட்டார்கள். சாந்தைப் பற்றிக் கவிதை எழுதாத கவிஞனே இருக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டு விட்டது. மாநாட்டுக்கு வந்திருந்த எல்லா விருந்தாளி களுக்கும் ஹைதராபாத் மிகவும் பிடித்துப்போய் விட்டது.



தான்தோன்றித் தனத்தின் தனிப் பிரதிநிதியாகவே சாந்த். வாஹித் ஹுசேனின் வீட்டில் இருந்தாள். விஷத்தை அருந்தியதால் கிருஷ்ணனின் உடல் நீலமாகிவிட்டது என்கிறார்கள். ஆனால் சாந்த் தனது கைகளால் நஞ்சு குடித்தபோது அது அவளுடைய

வண்ணத்தை எரிக்கவில்லை. அதற்கு மாறாக அவளுடைய நரம்புகளின் மின்னல்களை நிரப்பிவிட்டது.

அவள் இப்போதும் பிராக் அணிந்து ஆங்கிலப் பள்ளிக்குச் சென்றாள். நாராயணா அவளுடைய பட்டத்துக் கயிறின் முடிச்சுகளை அதிகரித்துவிட்டான். அதை எவராலும் அவிழ்க்க முடியவில்லை; நாராயணாவின் வீட்டுக்காரர்களும், வாஹித் ஹுசேனின் வீட்டுக்காரர்களும் நீண்ட மூங்கில்களில் முட்களை வைத்து இந்தக் கயிறுகளை விடுவிக்க முயன்றார்கள். ஆனால் சாந்த் இந்த விளையாட்டை இப்படி எளிதாக முடித்துவிட இசையவில்லை; அன்னையின் மரணத்திற்குப் பிறகு அவளுடைய பிடிவாதம் அதிகரித்துவிட்டது. ரஷீதும் ரஜியாவும் அவளுக்கு நிறைய செல்லம் கொடுத்தார்கள். அதனால் வாஹித் ஹுசேன் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஹைதர் அலிகான் மறு விவாகம் செய்துகொண்டார். அவர் தன்னை நீதி-நேர்மையின் காவலாளி களில் ஒருவராகவே நினைத்தார் என்றாலும், நாராயணா—சாந்த் உறவு அவருக்குக் கோபத்தை உண்டாக்கியது. மென்மையாகப் பேசும் தந்தையும் உரத்த குரலில் கத்த முடியும் என்பதை சாந்த் உணர்ந்தாள். எந்தச் சமயத்திலும் தனக்கு ஆதரவாக நிற்கும் ரஷீத் மாமாவும் எதிரிகள் வரிசையில் நிற்பதயும் அவள் கண்டாள்.

ஒருநாள் வாஹித் ஹுசேன், நாராயணாவின் தந்தையை அழைத்து மகனின் திருமணத்தை ஒரு வாரத்தில் நடத்திவிடு என்று உத்தரவிட்டார். எனவே நாராயணாவும் சாந்தும் அன்றே விஷமருந்திவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள்.

உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் பதினான்கு வயது நிரம்பிய சாந்த், காதலுக்காக உயிர்த்தியாகம் செய்தோர் பட்டியலில் தனது பெயரும் இன்று இடம்பெற்றுவிடும் என்று மகிழ்ச்சிப் பெருக்கில் ஆடினாள்.

அவள் நாராயணாவின் காதலுக்காக நஞ்சு குடித்துவிட்டாள். ஷேக்ஸ்பியர், நீட்ஷே, மீராபாய் ஆகியோர் இதுவரை அவளை நெருங்கவில்லை; ஆனால் ஜெய்புன்னிசா, ஷீரீன், லைலா ஆகியோரின் காதல் காவியங்களை அவள் படித்திருக்கிறாள். குலி குதுப்ஷாவின் இந்தச் செய்யுளை, அவள் பல நிகழ்ச்சிகளில் பாடி இருக்கிறாள்.

'காதலி இல்லையேல்
மது பருக முடிவதில்லை
காதலி இல்லையேல்
கணப்போதும் வாழ முடிவதில்லை!'

பழைய சட்டங்களில் மங்கலடைந்துவிட்ட படங்களாகத் தொங்கிய கவிதாலயத்தின் மூதாதையர் நஞ்சு குடிக்கும்போது

அவளைத் தடுத்து நிறுத்த முயன்றார்கள்.

நஞ்சு குடிக்கும்போது அந்த வெள்ளிக்கோப்பையும் அவளுக்கு அறிவுரை கூறியது—"நீ முனாசிப் ஜங்-சாயிப் ஜங் ஆகியோரின் பேத்தி. நஞ்சு உனக்காகச் செய்யப்படவில்லை. பாழடைந்த வீடுகளில் வாழ்பவர்களுக்காக மட்டுமே இது இருக்கிறது. ஏனெனில் நஞ்சு குடித்து மரணத்தைத் தழுவுதல் அவர்களுடைய தலைவிதியாகும்' என்று அது சொல்லியது. ஆனால் சாந்துடைய குருதியில், கவிதாலயத்தின் ஏழு தலைமுறையினர் கவிதை பாடியதும், பர்ஹாத்தை கோடரியால் கொன்றுவிடும் எண்ணமும் ஊறி இருக்கவில்லை. கவிதாலயத்தின் மரபை மீறி அவள் நஞ்சு குடித்துவிட்டாள். அறிவில்லாத பெண்—காதல் என்பது என்ன, அதன் சட்டதிட்டங்கள் யாவை, காதலில் நஞ்சு என்பது வாழ்நாள் முழுவதும் சுவைக்க வேண்டிய ஒன்று என்பது அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை.

ஆனால் கவிதாலயத்தினர் அவ்வளவு முட்டாள்கள் இல்லையே? அவள் இப்படிச் செத்துப்போனால், அவளது சமகாலத்தினர் அவள் அழகை விமர்சித்து எப்படிக் கவிதைபாட முடியும்! அதனால் அவர்கள் டாக்டர்களின் உதவியால் அவளை மீண்டும் வாழ்வின் கரைக்குக் கொண்டு வந்துவிட்டார்கள். பல நாட்களுக்குப் பிறகு அவளுக்கு நினைவு திரும்பியபோது, நாராயணாவின் வீட்டில் முஸ்லிம் பாடகிகள் பாடிக் கொண்டிருந்தார்கள்.

'காயாத கானகத்தில்
மேயாத கன்றப்பா
சாயாத கொம்புள்ள
சிங்கார மானப்பா
பூவாத மரமல்ல
பூ பறித்தால் தப்பில்லை...'

நான்கு வாரங்களுக்குப் பிறகு அவள் படுக்கையைவிட்டு எழுந்தபோது நாராயணாவின் காதலை நஞ்சு எரித்துப் பொசுக்கி விட்டிருந்தது. ஆண் வர்க்கத்தின் வெறுப்பு அவளுள் முழுமையாகப் பரவிவிட்டது. பாட்டனாரின் அறிவுரைகளைக் கேட்டு, முழு மனதுடன் அவள் வயலின் மீட்டுவதில் ஈடுபட்டுவிட்டாள்.

மருத்துவக் கல்லூரிக்குச் சென்றபோது, அவளுடைய இனிமையான குரலின் புகழ் எங்கும் பரவிற்று. அவள் பல்வேறு நிகழ்ச்சிகளுக்கு அழைக்கப்பட்டாள். ஒவ்வொரு நாடகத்திலும் கதாநாயகியாகப் பங்கு பெற்றாள். எல்லாக் கலை நிகழ்ச்சிகளும் அவளிடமே ஒப்படைக்கப்பட்டன.

மாணவர்கள் கூட்டம் அவளுக்குப் பின்னால் சென்றது.

அவளுடைய ஒரு பார்வை, ஒரு புன்சிரிப்பு இரவின் தூக்கத்தையும் மன அமைதியையும் கெடுக்கப் போதுமானதாக இருந்தன! வெட்டப்பட்ட தங்க நிற முடியை அவள் அசைக்கும் பாணி, சேலையின் நீண்ட தலைப்பைத் தரையில் பரவவிட்டு நடக்கும் விதம் எல்லாரையும் கவர்ந்தன. நாராயணா செய்த துரோகத் திற்காக ஆண் வர்க்கத்தையே பழி வாங்கத் துடித்தாள் அவள். எனவே எல்லாரையும் துன்புறுத்தினாள்; ஒதுக்கித் தள்ளினாள்; ஷாஹிதுடன் கலகலப்பாகப் பேசினாள்; குமாரசாமிக்கும் ஆசைக் கனவுகளைத் தந்தாள். கவிஞன் செஹர் அவளுடைய நினைவு களிலேயே மூழ்கி இருப்பான். வயலின் ஜோசப்பும் துடிப்பான். ஆனால் டாக்டர் ரஹ்மானுக்கு முன்னால் அவளுடைய ஏய்ப்புத் திறன் தோல்வி கண்டது. ரஹ்மான் மருத்துவக் கல்லூரியின் விரிவுரையாளர்; நகரின் பிரபல மருத்துவர்; எனவே சாந்தின் நோயை நன்கறிந்து சிகிச்சையைத் தொடங்கிவிட்டார். ரஹ்மானின் மனைவியும் ஒரு டாக்டரே. அவர் வேறு இடத்தில் பணியாற்றினார். ஆனால் ஆடவரின் மனோதத்துவம் பற்றி அவர் ஆராய்ச்சி செய்யவில்லை. அதனால் சபல புத்தி கொண்ட தனது கணவரைத் தாதியர், மாணவியர் மத்தியில் விட்டுவிட்டுத் தன் பணியில் கவனம் செலுத்தினார். டாக்டர் ரஹ்மானை சாந்த் மணக்கப் போகிறாள் என்ற வதந்தி கல்லூரி முழுவதிலும் பரவி இருந்தது. அவர்கள் இருவரும் எங்கும் எப்போதும் இணைந்தே காணப்பட்டார்கள். மருத்துவமனையின் தனி அறையில் உடல் கூறுகள் பற்றி விளக்கம் தர டாக்டர் ரஹ்மான் மணிக்கணக்கில் சாந்துடன் தினமும் உட்காருவது வழக்கமாகிவிட்டது. அவருடைய காரில் விருந்துக்குப் போவாள்; திரைப்படங்களுக்குப் போவாள்; புதிய புதிய பரிசுகளுடன் வீட்டுக்குத் திரும்பி வருவாள். ஹைதர் அலிகான் இதைக் கேள்வியுற்று பெருங்கோபம் கொண்டார். டாக்டர் ரஹ்மானிடமிருந்து செய்தி வந்தால் நல்ல பாடம் புகட்டுவேன் என்று மனத்தில் நினைத்துக் கொண்டார். ஆனால் நடந்ததே வேறு; ஒரு நாள் திடீரென்று ரஹ்மானின் தந்தை காலமாகிவிட்டார். அவர் செத்த பிறகு எல்லா உண்மைகளும் வெளிவந்தன. கோழி அடைகாப்பதுபோல அவர் உட்கார்ந்திருந்த இடத்தில் தங்கக் கட்டிகள் இருக்கவில்லை. கடன் பத்திரங்கள் தான் இருந்தன! டாக்டர் ரஹ்மான் தனது மனைவி இருந்த இடத்திற்கே வேலை மாற்றல் வாங்கிக் கொண்டு, சாந்தைச் சந்திக்காமலேயே போய்விட்டார். இந்நிகழ்ச்சிகள் ஹைதர் அலிகானைச் சாந்திடம் கோபம் கொள்ளச் செய்தன. இப்போது அவர் ஒவ்வொரு மாதமும் முதல் தேதியன்று தனது மகளைப் பார்த்து, அன்புமாரி பொழிந்து செல்வதில்லை. யாரிடமாவது

நூறு ரூபாயைக் கொடுத்து அனுப்பிவிடுவார்.

இன்று மிகவும் சோகமான காலை. சாந்த் வயலின் இசைக் கேற்ப காலிப்பின் கஜலைப் பாடிக்கொண்டே இருந்தாள்.

'காதலின் இயலாமையைக் கண்டு அழுகை வருகிறது
எனக்குப் பின்னர்
இந்த இடர் வெள்ளம்
யாருடைய வீட்டிற்குச் செல்லும்?'

இதில் எழுத்துகளைத் தப்பும் தவறுமாக வாசிப்பதையும் வாஹித் ஹுசேன் சகித்துக் கொள்வார். தன் மகளின் ஒரே அன்புக் குமாரத்தி என்பதற்காக அல்ல—ரஷீதுக்கும், ரஜியாவுக்கும் மிகவும் பிடித்தமானவள் என்பதற்காக.

எந்நேரமும் சாந்தின் போக்கிரித்தனத்தைச் சகித்துக் கொண்டிருந்த வாஹித் ஹுசேனின் மனோநிலையும் கலங்கவே செய்தது. காலத்தின் எல்லா மாறுதல்களும் அந்த வீட்டைப் பாதிக்காமல் இதுவரை மேல்வாரியாகவே சென்றன. வாஹித் ஹுசேனும் தனது இரண்டு பெண்மக்களுக்கும் உயர்நிலைப் பள்ளிப் படிப்புவரையில்தான் சொல்லிக் கொடுத்தார். பத்து பதினோரு வயது வரை தமது கலாச்சாரப்படியே அவர்கள் குர்தாவும், பைஜாமாவும், பொன்னிற 'கார்சோப் வாஸ்கட்'டும், தொப்பியும் அணிந்தார்கள். இது ஹைதராபாத் உயர்குடி மக்கள் அணியும் ஆடையாகும். இன்னும் சிறிது வளர்ந்ததும் பீபி அவர்களை 'பர்தா'வில் உட்கார வைப்பார். இப்போது மேல் துண்டு ஒன்றும் அவர்கள் அணிவார்கள்; தொப்பி கழற்றப் பட்டுவிடும். அத்துடன் அவர்களின் வளர்ச்சியைக் கண்டு வாஹித் ஹுசேன் கவலை கொள்வார். அதனால் முதலில் வரும் வரனைத் தட்டிக் கழிக்காமல் கண்களை மூடிக்கொண்டு உடனடியாக விவாகம் செய்து முடிப்பார். அத்தகையவரின் பேத்தி இன்று ஆண்களுடன் டாக்டருக்குப் படிக்கிறாள்; பர்தா இல்லாமல் சுற்றுகிறாள். நாடக மேடைகளில் ஒப்பனை செய்துகொண்டு நடிக்கிறாள்; பாடவும் செய்கிறாள் என்ற உண்மை கசப்பாகவே இருந்தது. மிகவும் கலவரமடைந்த அவர் பீபி, கவ்ஹர் பேகம் ஆகியோரின் உதவியை நாடினார். ஆனால் பீபி முக்கியமான குடும்ப விஷயங்களில் கருத்து ஏதும் சொல்வதில்லை என்ற தனது நியதியைக் கடைப்பிடித்தார். கவ்ஹர் பேகமும் தனது முழ நீள நாக்கை வாயினுள் அடக்கி வைக்க வேண்டிய நிலையில் இருந்தார். சாந்தின் ஒப்பனைகள், விருந்துகள், அரைநிர்வாண ஆடைகள் எதையுமே குறை கூற முடியவில்லை. ஏனெனில் சாந்தின் ஆதரவாளர்களான ரஷீதும் ரஜியாவும் அதே வீட்டில் அதிகாரம் செலுத்தும் நிலையில் உயர்வு பெற்றிருந்தார்கள். தானும்

இந்த வீட்டின் கன்னி, தனது இளமை உணர்ச்சிகளை உயிருடன் புதைத்துவிட்டவர். ஆனால் யாருக்குமே அவருடைய வேதனை தெரிந்திருக்கவில்லை; யாரும் அதைப்பற்றிச் சிறிதும் அக்கறை காட்டவில்லை என்று கவ்ஹர் பேகம் பலமுறை யோசனை செய்திருக்கிறாள். ஒரு கன்னி வீட்டில் உட்கார்ந்த நிலையிலேயே மண்ணாகி வருகிறாள் என்று ஒருவருமே கவலை கொண்டதில்லை. யாராவது பெண் கேட்டு வந்தாலும், இரண்டு சகோதரர்களும் இரகசியமாகப் பேசிக் கொள்வார்கள். பிறகு கவ்ஹர் பேகத்தின் முன்னிலையில், இந்தப் பயனற்றவனுக்குக் கொடுப்பதைவிட இவள் கன்னியாக இருப்பதே மேல் என்று முடிவு தெரிவிப்பார்கள்.

"அந்தஸ்துக் குறைந்த குடும்பத்தில் கொடுத்துவிட்டால் பெரியப்பாவுக்குப் புதைகுழியில் அமைதி இருக்காது" என்பார்கள்.

சில நேரங்களில் வாஹித் ஹுசேன் நல்ல மனோநிலையில் இருப்பார். அப்போது இப்படிப் பேசுவார். 'இனி அதிகமாகக் காத்திருக்க மாட்டேன். இந்த ஆண்டில் கவ்ஹர் பேகத்தின் கடமையை எப்படியும் நிறைவேற்றிவிட வேண்டும்!'

இருபத்தி மூன்று வயது நிரம்பிய கவ்ஹரி, இதைக்கேட்கும் போதெல்லாம் மனதிலேயே வேண்டிக் கொள்வாள். 'அல்லாஹ்! என் விதியின் கதவுகளைத் திறந்துவிடு. என்னுடைய இணையை அனுப்பி வை..."

ஆனால் அல்லாஹ் அவளுக்கான இணையைப் படைக்கவே இல்லை போலும்!

அதனால் ஒன்றன்பின் ஒன்றாக பல ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. இப்போது அவள் நாற்பது வயதை அடைந்துவிட்டாள். நாற்பது வயதுள்ள நொண்டிப் பெண்ணை யார்தான் மணந்துகொள்ள முன்வருவார்கள்?

கவ்ஹர் பேகத்தின் அன்பையும், சேவையையும் பார்த்து வெட்கமடைந்து சில நேரங்களில் வாஹித் ஹுசேன் கூறுவார் "கவ்ஹரி பேகம்! உங்கள் பணக்கணக்கை என்னிடமிருந்து வாங்கிக் கொள்ளுங்கள்—"

"நான் என்ன செய்வேன் அண்ணா. உங்களிடமே அதை வைத்திருங்கள்," அவள் அலட்சியமாகப் பதில் சொல்லி வைப்பாள்.

"ஆனால் நகைகளும் நல்லாடைகளும் அணியுங்கள். ரஜியாவிடம் எத்தனை காலம் அவற்றை வைத்திருப்பீர்கள்?"

"எதற்காக அணிய வேண்டும் நகை அணிகலன்களை?" அவள் கடுப்பாகிக் கேட்பாள். வாஹித் ஹுசேனால் பதிலளிக்க முடியாது. அவள் பதினேழு வயது நங்கையாக இருந்தபோது

நல்லாடைகளும், நகைகளும் அணிய விடவில்லை; ஏனெனில் அந்நாட்களில் பெண்களைச் சாதாரணமாகவே வைத்திருப் பார்கள். அன்னையும் தந்தையும் காலமாகிவிட்டதால், அவள் தானே எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்துவிட்டாள், திருமணத்திற்குப் பிறகு அவற்றை வெளியே எடுக்கலாம் என்று! கால் முறிந்த பிறகு மக்கள் கேலி செய்வார்களே என்று அவளே எதையும் அணியவில்லை; வெள்ளை ஆடைகளையே போட்டுக் கொள்வாள். கைகள் வெறுமையாக இருந்தன. கழுத்திலும் ஒன்றும் இருக்கவில்லை. இந்த வெறுமை அவளுடைய அழகான முகத்தின் மேல் பரவிவிட்டது. இளமை எல்லைக்குள் நுழைந்த நேரம் எது, எப்போது முதுமையை அடைந்துவிட்டாள் என்பதெல்லாம் அவளுக்கே தெரியாது. கவ்ஹர் பேகத்தின் முடியில் வெண்மை வந்துவிட்டது என்பதையும் வீட்டில் எவருமே கவனிக்கவில்லை. அவள் முகத்தில் சுருக்கங்களும் தெரிய ஆரம்பித்துவிட்டன. வேலை செய்யும் நேரங்களில் மூச்சு இறைத்தது. இதற்குப் பிறகும் அவள் எந்த ஆண் மகனையும் சிரித்துப் பார்க்கவில்லை; சுற்றுலாக்களுக்குச் செல்லவில்லை; எந்தவிதமான பழக்கத்தையும் மேற்கொள்ளவில்லை. யாரேனும் ஓர் ஆள் ஒருநாள் வந்து தன்னைப் பலவந்தமாக எடுத்துத் திருமண மண்டபத்தில் உட்கார வைப்பான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் போலும்!

வீட்டில் இத்தகைய பழைமைப் பற்றாளர்கள் நிரம்பிய சுற்றுச் சூழலில் சாந்தின் பொறுப்பற்ற போக்கு எல்லாரையும் திகைக்கவே செய்தது. வாஹித் ஹுசேன் இதற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்த போதெல்லாம் ரஷீத் அவரைச் சமாதானப்படுத்திவிடுவான்.

"சாந்த் டாக்டராக வந்துவிட்டால் நமது குலமதிப்பு பன் மடங்காக உயர்ந்துவிடும். நிலக்கிழார் குடும்பத்தில் ஒரு டாக்டரா என்று அனைவரும் வியப்புக் கொள்ளப் போகிறார்கள்!"

"ஆனால் இந்த ஆடலும் கூத்தும் என்னவாம்? உயர் குடியினர் இதை எத்தனை இழிவாக விமர்சிக்கிறார்கள் தெரியுமா?" கவ்ஹர் பேகம் தனது வெறுப்பை வெளிப்படுத்துவாள்.

"ஒரு குறை இருந்தால் பேசலாம்", வாஹித் ஹுசேனும் கவ்ஹர் பேகத்தை ஆதரித்துப் பேசுவார். "பேத்திக்கு இந்த அளவுக்கு சுதந்திரம் கொடுத்து விட்டீர்களே என்று ஒவ்வொருவரும் என்மீது குற்றம் சுமத்துகிறார்கள்..."

"அப்படி யார் சொல்கிறார்கள்?" ரஷீதுக்கு கோபம் வந்து விடும். "எனக்கு முன்னால் சொல்லட்டும். எனக்கு எல்லாரைப் பற்றியும் நன்றாகத் தெரியும். பஷீர் அக்கா, பதூல் ஆகியோரின் முடிவைப் பார்த்து விட்டீர்களே—எழுதப்படிக்கத் தெரிந்திருந்தால் அவர்களுக்கு இந்தக் கதி நேர்ந்திருக்குமா? அவர்கள் இத்தனை

துன்பங்களைச் சந்தித்திருப்பார்களா?”

ரஷீத் முற்போக்குவாதி அல்ல. ஆனால் அவன் நிலைமைகளுக்கேற்பச் சிந்திப்பவன். பொறியியல் பயிற்சி பெற்றுக் கட்டட நிர்மாண வேலையுடன் நிற்கவில்லை; வாணிபமும் தொடங்கி இருக்கிறான். மண், கல், சுண்ணாம்பு எல்லாம் விற்கிறான். வாணிப நுணுக்கங்கள் நன்கு தெரிந்தவன். சாந்த் போன்ற அழகான, பண்பாடுள்ள, நாகரிகமான மங்கையின் விலை சமூகத்தில் உயர்ந்திருப்பதை அவன் நன்கு அறிவான். எப்போதும் அவள் மூலம் லட்சக் கணக்கான மதிப்புள்ள ஒப்பந்தங்களைச் சுலபமாகப் பெற்றிட முடியும்.

“என் பெண்களின் முடிவு விதியின் கோலமாகும். அந்தஸ்தையும், குடும்ப மேன்மையையும் நன்கு ஆராய்ந்த பிறகே, திருமணங்கள் செய்து கொடுத்தோம். ஆனால் காலத்தின் சதியால் எல்லாம் அழிந்துவிட்டன” வாஹித் ஹுசேனின் குரல் துயரத்தால் அடைத்துக் கொண்டது.

சமையலறைக்கு அருகில் சமையற்காரி பிஸ்மில்லாஹ், தயிர்ப் பானைக்காக ஓர் உறியைத் தொங்க விட்டிருந்தாள். அங்கே இரண்டு காகங்கள் ஒரே ராகத்தில் கா...கா... என்று கத்தின. வெளியே சாலையில் சிவப்பு மண், ஊறுகாய் விற்பவர்களின் குரல்கள் ஒலித்தன. ரஜியாவின் முன்றானையைப் பிடித்தவாறு அவள் பின்னால் ஷாஹீன் சுற்றிக் கொண்டிருந்தான். பெட்டி போடப்படாத சீருடை அணிந்து பள்ளிக்குப்போக முடியாது என்று பிடிவாதம் பிடித்தான் அவன். ஷாஹீனுக்குப் பின்னால் அவனுடைய தடிப்பான கருப்பு ஆயா மிஸஸ் அந்தோணி கையில் சீருடையுடன் சுற்றிக்கொண்டிருந்தாள்.

சமையலறையில் பிஸ்மில்லாபீயின் முழக்கம் கேட்டது. “என்ன, இன்று சிலாரு கொத்திய இறைச்சி கொண்டு வர மாட்டானா? யாரைக் கொத்தி நான் சமையல் செய்வது?”

போர்வைக்குள் முகத்தை மறைத்துக் கொண்டிருந்த கஜலுக்குப், ‘பொழுது விடிந்துவிட்டது’ என்ற உணர்வு ஏற்பட்டது. கவிதாலயத்தில் இந்தக் கோலாகலத்துடன் பொழுது புலரும். போர்வையை அகற்றிச் சற்றே கண்களைத் திறந்து கஜல் வெளியே பார்த்தாள். தாத்தா முற்றத்தில் சப்போட்டா செடியின் கீழ் மண்ணெண்ணெய் அடுப்பு வைத்து சிவப்பு முள்ளங்கி ஊறுகாய் தயாரித்துக் கொண்டிருந்தார்; இல்லை, அதன் தயாரிப்பை மேற்பார்வை செய்து கொண்டிருந்தார். ஒரு கையில் தஸ்பி மணிமாலையும், இன்னொரு கையில் கரண்டியும் இருந்தன. வாயில் பழிப்புரைகள் வேறு. அவருக்கு என்றேனும் ஊறுகாய் போடும் ஆவல் வந்து விட்டால் அன்று வீடே அலங்கோல

மாகிவிடும்! அதனால், எப்போதும் கட்டில்மீது சாய்ந்திருக்கும் பீபியும் அன்று ஏற்பாடுகளில் முனைந்து விடுவார். குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பும் பணியையும் ரஜியா மறந்து, முற்றத்தில் இங்கும் அங்கும் ஓடுவாள். ஏதாவது தேவையானால் உடனே அனுப்பி வைப்பதற்காகக் கவ்ஹர் பேகம் பண்டக சாலையில் சாவியுடன் நிற்பார். வாஹித் ஹுசேனின் பலத்த கூச்சலில் சாந்தின் மென்மையான குரல் அமுங்கிவிடும். பீஸ்மில்லா பீக்குக் கைகால் ஓடாது. வாஹித் ஹுசேன் கரண்டி பிடிக்கும் விதமே அவளுக்குச் சிறிதும் பிடிப்பதில்லை. வாஹித் ஹுசேன் அவசரத்தில் சூடான கரண்டியைப் பிடிக்க முயன்றபோது உள்ளங் கையில் சூடு பட்டுவிட்டது. கையில் மட்டுமின்றி விரல்களிலிருந்து மணிக்கட்டு வரை யாரோ காய்ச்சிய இரும்பைப் பாய்ச்சி விட்டதுபோல் தெரிந்தது. இந்தக் குற்றத்தைப் பிஸ்மில்லாபீ மீது சுமத்துவதா அல்லது தவறான முறையில் ஊறவைத்ததாகக் குதிப்பதா என்று அவர் முடிவு செய்வதற்கு முன்னால் சாந்தின் குரல் அம்பைப்போல் அவர் காதுகளில் பாய்ந்தது.

“ஆ! கவிஞர் காலிப்பைத் திருத்தும் அளவுக்கு யாருக்குத் துணிவு வந்துவிட்டது. என்னே அறிவீனம்—காலிப்பின் கவிதையைத் தப்பும் தவறுமாகப் படிக்கிறார்கள்”.

“தவறு ஏதும் இல்லையே” சாந்த் பாடுவதை நிறுத்திவிட்டு பதில் கூறினாள். பிறகு மீண்டும் சுருதியைத் தேடினாள்.

“தவறு செய்துவிட்டு இல்லையென்று சாதிப்பதா, முட்டாளே! அது காதலின் ஆதரவற்ற நிலை (பேஹஸி)யாகும் உணர்ச்சியற்ற நிலை (பேஹிஸி) அல்ல!”

“இருக்கட்டுமே...” சாந்த் யோசனை செய்தாள். “அது ஆதர வற்ற நிலையோ, உணர்ச்சியற்ற நிலையோ, ஏதோ ஒரு நிலை... அழுகைதானே முக்கியம்?” என்றாள்.

“இதைக்கேட்டு எனது உயிர் பற்றி எரிகிறது” வாஹித் ஹுசேன் மணிமாலையை வேகமாக உருட்டினார். “இந்தப் பெண்கள் அறிவிலிகள்தான். டாக்டருக்குப் படிக்கிறாளாம்! காலிப்பின் ஈரடியைச் சரியாக சொல்ல முடியவில்லை. என்னே திறமை! என்னே ஞானம்!” விரல்களில் பட்ட தீக்காயத்தின் எரிச்சல் இப்போது உடல் முழுவதும் பரவிவிட்டது. தனது சீற்றத்தை வெளிப்படுத்துவதற்கு ஏதேனுமொரு வழியைத் தேடினார். கூடத்தில் படுத்திருந்த கஜல் மீது அவருடைய பார்வை விழுந்தது. “ஓஹோ! அரசகுமாரி இதுவரை துயிலில் ஆழ்ந் திருக்கிறரோ?”

இதைக்கேட்டதும் கஜல் கலவரமடைந்து போர்வைக்குள் நெளிந்தாள்.

"ஊம். கஜலை எதுவும் சொல்லாதீர்கள்", பீபி மெதுவாகக் கூறினார். எதிரில் உட்கார்ந்திருந்த மனைவியின் முகத்தைப் பார்த்து அவர் மௌனமாகி விட்டார். பிறகு ஊறுகாய் தயாரிப்பில் முனைந்தார்.

தப்பித்தோம் என்ற எண்ணத்துடன் கஜல் போர்வையை எறிந்துவிட்டு எழுந்தாள். அவசரமாகக் குளியலறைக்குள் நுழைந்தாள். குளியலறையில் முகம் கழுவுவதால் பல பலன்கள் உண்டு. பல்லைத் தேய்த்து விட்டாயா என்று யாரும் கேட்பதில்லை. சோப்பு எனும் மிளகாயும் கண்ணில் படுவதில்லை! அவள் வெகுநேரம் வரை 'சபக் சபக்' என்று ஒலி எழுப்பினாள். போர்வையை விட்டு வெளி வந்த உடல்மீது வெந்நீர்த் திவலைகள் பனிச் சிதறல்களாகத் தெரிந்தன. அவளுடைய முடியில் முத்துக் களைப்போல் நீர்த்திவலைகள் மின்னின. முழுவதும் நனைந்த எலி போல் அவள் வெளியே வந்தாள். ஆடையிலிருந்து தண்ணீர் விழ, மூக்கை உறிஞ்சியவாறு வெளியே வந்த அவள் பாதுகாப்பான புகலிடத்தைத் தேடினாள். இதற்குள் கோள்மூட்டும் ஃபவுசியா அவளைப் பிடித்துக் கொண்டாள்.

"மம்மி...மம்மி... கஜலைப் பாருங்கள்" ஃபவுசியா சிரிக்க லானாள்.

ஏனென்றால் அப்போது அவள் வெள்ளை நிற பிராக் அணிந்திருந்தாள். தலையில் பச்சைநிற அணியிழை இருந்தது. வெள்ளைக் காலணியின் சிவப்பு நாடாவை அசைத்தவாறு இங்கும் அங்கும் கர்வத்துடன் திரிந்தாள். கஜலின் பேச்சு வந்ததும் ஷாஹீனும் தனது பிடிவாதத்தை மறந்து அந்தத் திசையில் திரும்பினான். தனது சூல்சட்டையைக் காற்றில் சாட்டையாக வீசியவாறு அவன் கஜலைப் பார்த்தான். தனது தங்கை பவுசியாவை மகிழ்விப்பதற்காகவே அவன் சிரித்தான். அவனுடைய துணிகளும் அழுக்கடைந்திருந்தன. ஈரமான துணிகளில் நடுங்கிக் கொண்டிருந்த கஜலைப் பார்த்து, குழாயின் அடியில் உட்கார்ந்து, குறும்பு செய்ய வேண்டுமென்று அவன் மனம் விரும்பியது.

"பதூல் பேகம். சற்றுபாரும். உங்கள் குமாரத்தியின் நிலையை..." கஜலின் ஈரமான கால்கள் தரையை அசுத்தப் படுத்துவதைக் கண்ட ரஜியா முகம் சுளித்தாள். "என்னுடைய அறைக்குள் போகவேண்டாம். சமுக்காளம் அழுக்காகிவிடும்".

தாயின் குரலைக் கேட்டதும் கஜல் கண்களை மூடி, தலையில் இரு கைகளையும் வைத்துக்கொண்டு, அடி வாங்குவதற்குத் தயாராகிவிட்டாள். பதூலின் குத்துகள் விழுந்ததும் அவள் கூவினாள். தரையில் புரண்டாள். சாந்த் தனது வயலினை

வைத்துவிட்டாள். ஷாஹீனும் ஃபவுசியாவும் அருகில் நின்று அவள் அடிபடுவதை வேடிக்கை பார்த்தார்கள். ரஷீத் பத்திரிகை யிலிருந்து பார்வையை விலக்கி, ஒருமுறை பார்த்துவிட்டு மீண்டும் பத்திரிகையில் மூழ்கிவிட்டான்.

பிறகு வாஹித் ஹுசேன், "எனது தடியைக் கொண்டு வாருங்கள்" என்று முழங்கினார்.

திடீரென அமைதி நிலவியது. கஜல் மௌனமாகிவிட்டாள். தேகப் பயிற்சி செய்யும் தோரணையில் நின்றாள்; அப்படியே அம்மாவிடம் அவள் விரும்பாத ஆடையையும் வேண்டா வெறுப்பாக அணிந்து கொண்டாள். அப்பாவின் சட்டையை வெட்டித் தயாரிக்கப்பட்ட ஆடை அது.

ரஜியா முகத்தைச் சுளித்து நெற்றியில் கோடுகள் விழ, முற்றத்திற்கு வந்தாள். ஷாஹீன், ஃபவுசியா ஆகியோரின் கைகளைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்றாள். ஏனெனில் கஜலின் பிடிவாதக் குணம் அவர்களுடைய ஒழுக்கமான பிள்ளை களையும் கெடுத்துவிடும்.

சிற்றுண்டி மேசைமீது வழக்கம்போல் பவுசியா அடம் பிடித்தாள்; 'முட்டை சாப்பிட மாட்டேன்- ஒரு கோப்பையைவிட அதிகமான பால் குடிக்க மாட்டேன். இந்தத் தட்டு சுத்தமாக இல்லை. தாதி, சோப்பு போடாமலேயே கழுவி விட்டாள்..'

ரஜியா அவளைச் செல்லத்துடன் சமாதானப்படுத்தினாள். ரஷீதும் மெதுவாக அதட்டினான். ஆனால் வாஹித் ஹுசேன் அவனை உடனடியாகத் தடுத்து நிறுத்தினார்.

"எங்கள் பொம்மையை நீங்கள் அதட்டக் கூடாது"

ஃபவுசியாவுக்கு நான்கு வயது. பாட்டனார் பாட்டிக்கு மிகவும் செல்லமான பெண்.

ஷாஹீனுக்கு இப்போது வயது ஏழு. ஆதனால் அவன் தன்னைப் பெரியவனாகவும் அறிவாளியாகவும் நினைத்துப் பிடிவாதம் செய்ய மாட்டான்; சிற்றுண்டியின்போது வழக்கம் போல் அவன் பாட்டனாருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான். ஏழு வயது நிறைந்த, அழகான, கம்பீரமான, தனி முக்கியத்துவம் பெற்ற ஆண். தான் ஃபவுசியாவைவிட, கஜலைவிட மூன்று வயது மூத்தவன் என்ற உணர்வு அவனுக்கு இருந்தது. பல ஆங்கிலப் பாடல்களும் அவனுக்கு மனப்பாடமாக இருந்தன. தனது வகுப்பில் எப்போதும் முதலாவதாக வருவான். பாவம், ஃபவுசியாவுக்கு இப்போது ஏ-பி-சி-டியே முழுவதுமாகத் தெரியாது. தனது சிறிய மோட்டாரில் அவன் உட்கார்ந்து அதைச் செலுத்தும்போது, கஜலுக்கு அதை ஓட்டும் இரகசியமே தெரியாது. அவன் மிகுந்த அக்கறையுடன் வண்ணப்படங்கள் போட்ட

புத்தகத்திலிருந்த கதைகளை ஃபவுசியாவுக்குச் சொல்லுவான். அப்போது கஜல் வந்துவிட்டால் இருவரும் புத்தகத்தை மறைத்துக் கொள்வார்கள். வண்ணப்படங்களை அசைபோடும் ஆசை கஜலுக்கு நிறைய இருந்தது. அவை மிகவும் சுவையாக இருக்கின்றன என்பாள் அவள்.

ஒருநாள் சோதனை செய்வதற்காக அந்த மூவரும் சேர்ந்து ஷாஹீனின் ஒரு முழு புத்தகத்தையே சாப்பிட்டுவிட்டார்கள். அப்போது அவர்களுக்கு எந்தச் சுவையும் தெரியவில்லை. ஆனால் இதைக் கண்ட ரஜியா எல்லாருடைய தண்டனையையும் சேர்த்து ஷாஹீனுக்கே கொடுத்துவிட்டாள்.

கதைகள் சொல்லும் பாட்டனாரிடம் ஷாஹீனுக்குப் பிரியம் அதிகம். தானும் பெரியவனாகி வளர்ந்து தாடி வைத்துக்கொள்ள வேண்டும்; வட்டாட்சியராக வர வேண்டும்; கைகளை அசைத்து கவிதைகள் வாசிக்க வேண்டும் என்றெல்லாம் அவன் இப்போதே முடிவெடுத்துவிட்டான். சாப்பிடும்போது பாட்டனாரின் ஒவ்வொரு அசைவையும் பின்பற்றுவான். அவரைப்போலவே நான்கு விரல்களில் கவளம் பிடிப்பான்; புளிப்புப் பொருள்கள் எல்லாவற்றையும் விலக்கிவிடுவான்.

அந்த வீட்டில் உணவு வகைகளில் பெயரளவுக்கு உப்பு சேர்க்கப்படும். சிற்றுண்டிக்கு முன்பு லேகியமும் ஓவல்டினும் கொடுக்கப்படும். இத்தனை ஏற்பாடுகளுடன் வீட்டினர் தங்கள் காலை உணவை முடிப்பார்கள். கோப்பையை இடது கையில் எடுக்க வேண்டும். ஒரு குழம்பு முடியும்வரை வேறொரு குழம்பை எடுக்கக் கூடாது! இதனிடையே பாட்டனார் மருந்துகள் வேறு சாப்பிடுவார். உணவுக்கு முன்னால் ஒன்று, இடையில் மற்றொன்று, உணவு முடிந்த பிறகு இன்னொன்று சாப்பிட வேண்டும். இந்த நேரங்களை நினைவுபடுத்தும் பொறுப்பு ஷாஹீனுடையது.

மேசையைச் சுற்றிலும் சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்களைக் கஜல் ஒரு முறை நோக்கினாள். எனினும் அவள் சாப்பிடுவதில் முழுக்கவனமும் செலுத்தினாள். முதலில் அவள் முட்டைத் தட்டை எடுத்தாள். இரண்டு முட்டைகளை எடுத்து விழுங்கினாள். பிறகு கிச்சடியை எடுத்துக் கொட்டிக் கொண்டாள். பக்கத்திலிருந்த பொறித்த முட்டை, ஊறுகாய், சாம்பார் எல்லாவற்றையும் அதில் சேர்த்துக் கொண்டாள். சாந்த் தனது தட்டிலிருந்த பொறித்த முட்டையைச் சாப்பிடாமல் முள்ளும் கத்தியும் எடுத்து அதனுடன் விளையாடினாள். அவளுடைய கண்கள் பொங்கி இருந்தன; முகத்தில் சோகம் நிழலாடியது. கஜல் இங்கும் அங்கும் பார்த்தபோதெல்லாம் அவள் விரும்பும் பொருளை எடுத்துத் தந்தாள். ஆனால் சாந்த் அக்காவை இந்தச் சிரமத்திலிருந்து

மீட்பதற்காக, தானே எடுத்துக் கொள்வாள்.

நிறைய வெண்ணெய், முட்டை, ஊறுகாய் ஆகியவற்றைக் கிச்சடியில் கலந்து சாப்பிட்ட பிறகு மனம் நிரம்பி விட்டது. பிறகு அவள் சிந்தும் மூக்கை மணிக்கட்டினால் சுத்தப்படுத்தியவாறு பரோட்டாவை நோக்கிப் பாய்ந்தாள். ஆனால் திடீரென்று அம்மாவின் கை, விலங்குபோல் அவள் மணிக்கட்டைப் பிடித்துக் கொண்டது. வேகமாக ஓர் அறை முகத்தில் விழுந்தது. வாயிலிருந்த சாதம் வெளியே வந்துவிட்டது. அவள் தடுமாறி நாற்காலியிலிருந்து கீழே விழுந்தாள். மற்றவர்கள் எல்லாரும் பதூலைக் கடிந்து கொண்டார்கள்.

“அம்மா! பதூல் பேகத்திற்கு இரக்கமே இல்லை. என்னால் என் குழந்தைகளை அடிக்கவே முடியாது” ரஜியா கஜல் மீது இரக்கம் காட்டினாள்.

“தாயும் சேயும் முதல் தர முரடர்கள்...” வாஹித் ஹுசேன் நிம்மதியுடன் ஓவல்டினை உறிஞ்சினார். கஜல் அடிபடுவதைக் கண்டு ஃபவுசியாவும் ஷாஹீனும் பலமாகச் சிரித்தனர்.

“பார்த்துக் கொள்ளுங்கள். அசுத்தமான பிள்ளைகள் இப்படித்தான் இருப்பார்கள்.” ரஷீத் ஃபவுசியாவுக்கும் ஷாஹீனுக்கும் அறிவுரை வழங்கினார்.

சாந்த் தனது வெள்ளை ஜார்ஜெட் சேலையில் விழுந்த சாதத்தைத் தட்டிவிட்டு கறைகளைச் சுத்தப்படுத்தினாள். பீபி ஒன்றும் பேசாமல் இந்த வேடிக்கையைப் பார்த்தார். ரொட்டியின் சிறுசிறு துண்டுகளை மௌனமாக விழுங்க முயற்சி செய்தார். இன்று வீட்டின் சூழ்நிலையில் பயங்கரமான அமைதியும் கவலையும் குடி கொண்டிருந்தன. இதற்குக் காரணமே சாந்த்தான். டாக்டர் ரஹ்மான் மீண்டும் பம்பாய்க்குச் சென்றுவிட்டான் என்ற செய்தி எல்லாரயும் கலக்கிவிட்டது. சாந்த் தனிமையில் அழுது கொண்டிருந்தாள். ஆனால் எல்லாரும் ஒன்றும் தெரியாதவர்கள் போல் நடித்தார்கள்.

பதூல் யாருக்கும் பதில் சொல்லாமல், கஜலை அடித்த பிறகு தனது கண்ணீரைச் துடைத்தவாறு அறைக்குள் சென்றுவிட்டாள்.

“இது நமது வீடு என்பதால் கவலை இல்லை. ஆனால் பதூல் கஜலை அடங்காப்பிடாரியாக்கி விட்டாள்,” ரஷீத் சற்றே நிதானித்துத் தாழ்ந்த குரலில் பேசினான்.

ரஜியா சாந்தை எவ்வளவு விரும்புகிறாறோ, அதே அளவு பதூலையும் கஜலையும் வெறுக்கிறாள் என்பது ரஷீதுக்குத் தெரியும். ஆனால் தாய் தந்தையர் காரணமாக அவர்களைச் சகிக்க வேண்டி இருந்தது. குறிப்பாகத் தன் தாயின் முகத்திலிருந்த பரிதாபத்தைக் கண்டு அவன் மனம் வேதனைப்படும். பொதுவாக

மற்ற ஆண் குழந்தைகளைவிட அதிகமாகவே அவன் தனது தாயிடம் அன்பு காட்டினான். அவரைத் தேற்றுவதில் நேரத்தையும் செலலவிட்டான். எல்லாரும் சேர்ந்து பீபியைச் சிறையிலடைத்து, எல்லா வாயில்களிலும் பலத்த காவலை நியமித்து விட்டார்கள் என்றுதான் அவனுக்குத் தோன்றும். ஒரு மாது எத்தனை வயது வரை உயிர் வாழ முடியும் என்று பீபியைப் பார்த்து அவன் யோசனை செய்வான். பீபிக்குள் மறைந்திருந்த பிடிவாதமுள்ள பெண் எவரிடமும் தோல்வியை எப்படி ஒப்புக் கொள்ள முடியும். அவர் இதுவரை தாய், பாட்டி எனும் அலங்கார உருவங்களில் தென்படவில்லை என்றாலும் இந்தக் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வருகிறார்.

"பதூலுக்கு ஏதாவது கொடுக்க வேண்டுமானால் கொடுத்து விடுங்களேன்— பழிகேடு தீர்ந்துவிடும்," பீபி வாஹித் ஹுசேனிடம் மெதுவாகக் கூறினார்.

"என்னிடம் கருவூலமா இருக்கிறது..?" அவர் பொங்கி யெழுந்தார். "ஒவ்வொரு மாதமும் இருநூறு ரூபாய் எங்கிருந்து கொண்டு வருவது? உங்கள் மருமகனுக்கு வழக்கமாகப் போய் விட்டது. எப்போது பார்த்தாலும் கைநீட்டிக் கொண்டு நிற்கிறான்."

"அதற்கு பதூல் என்ன செய்ய முடியும்?" பீபியின் குரல் அடைத்துக் கொண்டது. "அவன் அவளை அடித்து அனுப்பு கிறான். பணம் கொண்டு போகாவிட்டால் மேலும் கொடுமைகள் இழைப்பான்..."

"என் குடலைப் பிடுங்கிக் கொடுத்துவிடுங்கள்," வாஹித் ஹுசேன் கூச்சலிட்டார்.

ரஜியாவும் ரஷீதும் கவனிக்காமல் ஒதுங்கினார்கள்.

உணவுப் பந்தியிலிருந்து எழுந்த பிறகு, வேதனைமிக்க சூழ்நிலையிலிருந்து விடுதலை பெற வேண்டுமென்று நினைத்த வாஹித் ஹுசேன், சுருட்டைப் பற்றவைத்துக் கொண்டு குறிப்பேடு எடுக்க அலமாரியைத் திறந்தார்.

பவுசியாவும் ஷாஹீனும் பள்ளி செல்வதற்காகத் தயாராகி விட்டார்கள். ரஜியாவும், கவ்ஹர் அத்தையும் கூடத்தில் இருந்த பலகை மீது உட்கார்ந்து வெற்றிலை போட்டவாறு விவாதிக்கத் தொடங்கினார்கள்.

"இது சாந்தின் தவறு என்றுதான் சொல்ல வேண்டும். அல்லாஹ்வின் சிறப்பு! பாத்திமா பேகத்தின் மகள் கைசர் கல்லூரியில் படிக்கிறாளாம். கியாமத் (இறுதித் தீர்ப்பு நாள்) நெருங்கிவிட்டதற்கான அறிகுறி இது. நீசர்களுக்கும் எத்தகைய துணிவு வந்துவிட்டது...!" நொண்டி அத்தை மூக்கில் விரலை வைத்துக் கொண்டார்.

“அது `தெரியுமோ? கால்நடையாகவே பேகம் கல்லூரிக்கு வருகை தருகிறாராம்!” ரஜியா எக்காளமாகச் சிரித்தாள். “பண வசதி இல்லாவிட்டாலும், உயர்மக்களுடன் போட்டியிட வேண்டும் என்ற மனப்பான்மை எதற்கு? பஷீர் அக்கா உயிரோடு இருந்தால் என்ன செய்திருப்பாரோ?”

“பாவம், என்ன செய்வாள் அவள்... மாளிகையின் பேகமாகவோ, முக்கிய வேலைக்காரியாகவோ வருவதற்கான முக இலட்சணங்கள் இல்லை” பீபியின் பேச்சைக்கேட்டு, அத்தை அவரைக் கூர்ந்து நோக்கினார். பிறகு பீபி அறையினுள் கேவிக் கேவி அழுது கொண்டிருந்த பதூரலிடம் கூறினார்.

“அழுதது போதும் பதூல் பாஷா. ஒருத்தி இப்படியே உருகிச் செத்துப் போவாள்.”

பீபியின் அருகில் விழுந்துவிட்ட பாக்குத் தூளையும் வெற்றிலைக் காம்பையும் எடுத்து வாயில் போட்டுக் கொண்டு கஜல், சாந்த் அறையை நோக்கிச் சென்றாள்.

வெள்ளைச் சேலையணிந்து தன் சிறு முடியை முகத்தில் பரப்பியவாறு, கைகள் இல்லாத ரவிக்கை அணிந்த சாந்த், நாற்காலி மீது அசைவற்றுக் கிடந்தாள். அப்போது அவள் தானே தீட்டிய ஓர் ஓவியமாகவே தென்பட்டாள்—கண்களில் கண்ணீரை மறைத்து. உதட்டுச் சாயமே கண் மையோ இல்லை!

சாந்த் மௌனமாக இருந்ததால், அவளுடைய மேசையின் மீது இருந்த வண்ண வண்ண சீசாக்களையும், டப்பாக்களையும் தொடுவதற்கான துணிவு கஜலுக்கு இருக்கவில்லை; வனதேவதைகளின் வாழ்விடம் போன்று சாந்தின் அறை அழகாக இருந்தது. கூடத்தின் வழியே செல்லும்போதும், அந்த அறையிலிருந்து நறுமணம் வீசும். சாந்த் குரல் கொடுப்பாள் என்ற நம்பிக்கையில் கஜல் கதவினருகில் நின்றாள். கவிதாலயத்தில், கஜலின் எந்தச் செயலைக் கண்டும் சிரிக்காதவள் சாந்த் மட்டும்தான். சாந்த் அவளை என்றுமே கடிந்துகொள்ளவில்லை; தனது அறையை விட்டு வெளியேறும்படி ஆணையிடவில்லை; அதற்கு மாறாகத் தன் அன்பளிப்பாக ‘ஹைபூன் ஸ்கார்ப்’ ஒன்றும் கஜலுக்குத் தந்தாள். கஜல் அதைத் தொழுகை விரிப்புப்போல் அக்கறையுடன் பாதுகாத்து வருகிறாள். சாந்த் கஜலுக்கு முன்மாதிரியாக விளங்குகிறாள் என்றாலும் கஜல் அவளை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புப் பெற முடிவதில்லை—ஏனெனில் பல மாதங்களில் ஒரு முறைதான் அவள் இந்த வீட்டிற்கு வர அனுமதிக்கப்படுகிறாள். ஆனால் சாந்துடன் எவ்வளவு நேரம் இருந்தாலும் கஜல் அவளைத் தொட்டுப் தொட்டுப் பார்ப்பாள். கஜலின் செயல் சாந்துக்குச் சிரிப்பை வரவழைத்துவிடும். சாந்த் சிரித்துக் கொண்டே

இருப்பாள்.

யாரோ சாந்த் எனப்பெயரிட்டு அவளை அவமதித்து விட்டார்கள்! அவள் முன்னால் ஆயிரம் ஞாயிறுகள் வந்தாலும் ஒளியிழந்துவிடும்! வெண்திரையில் ஓடும் படங்களைப் போலவே அவள் விளங்கினாள். நறுமணம் கமழும் ஆடைகள், வெட்டப் பட்ட பொன்நிற முடியிழைகள், கண்களில் ஒளிமிகுந்த பொன்னிற இமைகள்—நீரில் தங்கமீன்கள் நீந்துவதுபோல்! சாந்த் அக்காவைத் திருமணம் செய்துகொள்வது என்று கஜல் முடிவெடுத்துவிடுவாள். ஆனால் இந்தத் தகவலை அவள் ஃபவுசியாவுக்கும் தராமல் இரகசியமாகப் பாதுகாத்தாள். ஒருவேளை அவளும் இந்த முடிவுக்கு வந்துவிட்டால், சாந்த் அக்காவால் இருவரை எப்படிச் சமாளிக்க முடியும்? சாந்தின் இந்த அழகு காரணமாகவே ரஷீதின் பல காரியங்கள் வெற்றி பெற்றன. ஏனெனில் அவன் சாந்த் போன்ற தங்கப் பதுமையின் மாமா என்ற மேலான இடத்தில் வீற்றிருந்தான். பெரிய பெரிய அரசாங்க விழாக் குழுக்களில் சாந்துக்கு அங்கம் தரப்பட்டது; கல்லூரியின் ஒவ்வொரு நாடகத்தின் நாயகியும் அவளே. பத்திரிகைகள் அவளுடைய கலையைப் பாராட்டிக் கட்டுரைகள் வெளியிட்டன. அவள் இவ்வாறு உயர்மட்டத்திற்குத் தான் மட்டும் போகவில்லை; ரஷீதையும் தன்னுடன் அழைத்துச் சென்றாள்.

இத்தகைய சிறப்பும் மேன்மையும் பெற்ற சாந்த் அக்காவின் மீது மையல் கொண்டதில் கஜலின் தவறு ஏதும் இல்லை; சாந்துக்கு சிற்றுண்டியின்போது அப்பளம் பிடிக்காது; எனவே கஜலின் கைகளும் அப்பளத் தட்டைத் தொடாது. சாந்த் அக்கா பகல் முழுவதும் ஏதேனுமொரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டே இருப்பாள். கஜலும் அவளுடைய குரலுடன் தனது குரலை இணைத்துப் பாடுவாள்.

"அட கஜல், உன்னுடைய குரல் நன்றாக இருக்கிறது; நீயும் பாட்டுப்பாடக் கற்றுக்கொள்..."

"அப்படியா அக்கா. நீங்களே சொல்லிக் கொடுங்கள்..." தனது புகழைக்கேட்டு மகிழ்ந்து, அவள் சாந்த் அக்காவின் வெள்ளைச் சேலைமீது தனது அழுக்கான கைகளால் கறையாக்கி விடுவாள்.

"எனக்கு நேரம் எங்கே இருக்கிறது," கஜலின் உப்பிய கன்னங்களை அவள் கிள்ளினாள் "அல்லாஹ்! இந்தப் பெண் பெரியவளாகி, எத்தனை ஆபத்துக்கள் விளைவிக்கப் போகிறாளோ?" அழகான பொருள்கள் மீது காதல் கொள்ளுவது சாந்தின் குணங்களில் ஒன்று.

கஜலும் துக்கத்துடன் யோசனை செய்தாள்—உண்மை யாகவே சாந்த் அக்காவுக்கு நேரம் எங்கே இருக்கிறது? எப்போது

பார்த்தாலும் விருந்தினர் கூடத்தில் கூடி இருக்கிறார்கள். நாடக ஒத்திகைகள் நடக்கின்றன. சாந்த் அக்கா வயலினில் பாடுகிறாள்; தனது படங்களைக் காட்டுகிறாள். கூடம் முழுவதும் சிகரெட் புகை சிரிப்பொலிகளில் கரைகிறது.

சாந்த் அக்காவின் ஒவ்வொரு செயலிலும் மிக்க நேர்த்தியும், கல்வியறிவின் முத்திரையும் இருக்கும். உலகின் பல்வேறு நாகரிகங்களும் அவளுடைய அழகுக்கு மெருகு தந்தன. ரஷீத் சீமை சென்று வந்தவன். ரஜியா 'ஜூனியர் கேம்பிரிட்ஜ்' படித்தவள். ஆனால் சாந்தின் முயற்சியால் அவர்கள் உயர் மட்டங்களில் பழகும் நாகரிக முறைகளைக் கற்றுக் கொண்டார்கள். சிரித்துச் சிரித்து ஆண்களுடன் பேசுவது, ஒப்பனை செய்துகொண்டு விருந்துகளுக்குச் செல்வது போன்ற விஷயங்களை சாந்த் மூலமாகவே ரஜியா பழகிக் கொண்டாள். ஆனால் நவீன முறையில் முடி அலங்காரத்துடன் ஒப்பனை செய்யும்போது, மற்றவர்களைவிட, ரஷீதே மீண்டுமொரு முறை காதல் கொள்வான்.

சாந்த் பெயரளவுக்கு நடிகையாக வரவில்லை. உண்மை யாகவே அவளது கலைத்திறமைகளின் வட்டம் பெரிய அளவில் இருந்தது. மருத்துவக் கல்லூரியிலிருந்து திரும்பி வந்ததும், மாலையில் ஹைதராபாத்தின் தலைசிறந்த ஓவியரான ராஷிடம் அவள் ஓவியக்கலை பயின்று வந்தாள். இவ்வாறு அவளுடைய கலை—நடிப்பு, இசை, ஓவியம், மருத்துவம் ஆகியவற்றின் சங்கமமாகிவிட்டது. அவள் தனது மருத்துப் படிப்பை எப்போது முடித்து, நோய்கண்ட உடல் மீது களிம்பு தடவப் போகிறாள் என்று மக்கள் காத்திருந்தார்கள்! உலகத்தால் கண்டு கொள்ளப் படாத எத்தனையோ கலைஞர்களின் வாழ்வில், தனது பரிந்துரைகளால் அவள் விளக்கேற்றி இருக்கிறாள். கல்லூரியில் எத்தனையோ மாணவர்கள் சாந்தைச் சுற்றி வட்டமிட்டார்கள். அவர்கள் அனைவருமே அவளை அன்புடன் 'டாக்டர் சாந்த்னி' என்ற அழைப்பார்கள். இதெல்லாம் பழைய கதை. அப்போது வாஹித் ஹுசேன் கடன் புயல்களில் சிக்கித் தடுமாற்றம் கண்டிருந்தார். ரஷீத் பணம் சம்பாதிக்கும் புதிய வழிகளைத் தேடிக் கொண்டிருந்தான். ஏனெனில் அஹ்மத் ஹுசேன் கேடான வழியில் பிறந்த குழந்தை ஒன்றைத் தன்மகன் என்று நம்பிக் கொண்டு, அவர்களுக்குக் கட்டைவிரலைக் காட்டிவிட்டார். சொத்து கடன்களில் மூழ்கிக் கொண்டிருந்தது. ரஷீதின் ஆயிரம்—ஆயிரத்து ஐநூறு ரூபாய் வருமானத்தில் கவிதாலயத்தின் சிறப்பு தடுமாறியது. இந்த ஆபத்தைத் தவிர்க்கவே வாஹித் ஹுசேன் ரஷீதைக் காசோலையாகப் பயன்படுத்தினார். ரஜியா

தன்னுடன் அளவிலாச் செல்வமும் கொண்டு வந்தாள். ஆனால் வாஹித் ஹுசேனால் அந்தப் பணத்தை பிரியாணி, கத்தரிக்காய் வியாபாரத்திற்கு மூலதனமாகப் பயன்படுத்த முடியவில்லை. ஏனெனில் ரஷீத் தன் தந்தையைப்போல் 'வட்டாட்சியர் அனுபவ'ப்படி தனது மதியை இழந்துவிடவில்லை. அவன் தனது தொழிற்பணியுடன் காபி, பீடி, மருந்துகள் விற்பனையையும் தொடங்கியிருந்தான். அப்பொழுது உள்நாட்டுப் பொருள்களின் உற்பத்தி பெருக்கப்பட்டு வந்தது. வியாபாரிகளுக்கு அரசாங்கமும் பல உதவிகளைச் செய்தது. சில நாட்களிலேயே வெள்ளிச் சாமான்கள், சிகரெட், பீடிகளுக்கு இந்தியா முழுவதும் கிராக்கி ஏற்பட்டுவிட்டது. ஹைதராபாத் சிறிய மண்டலமாக இருந்தது. ஆனால் இங்கு தயாரான பொருள்களுக்கு இந்தியாவுக்குள் மட்டுமல்ல, வெளியிலும் நல்ல மதிப்பு இருந்தது. பெருகிப் பாய்ந்தோடும் கங்கையில் ரஷீதும் தனது கைகளை நனைத்துக் கொள்ள நினைத்தான்.

அவன் சாந்த் மூலம் பெரிய வணிகர்களுடன் நட்புறவை ஏற்படுத்திக் கொண்டான். சோலாப்பூர் வழியாகத் தனது சரக்கை கள்ளத்தனமாகக் கொண்டு சென்றான். சில மாதங் களிலேயே தனது பழைய உடைந்த பியூக்கை விற்றுவிட்டுப் புதிய ரோல்ஸ் ராய்ஸ் காரை வாங்கிக் கொண்டான். கவிதாலயத்தின் ஆடிப் போன கதவுகளையும் சுவர்களையும் பழுதுபார்த்தான். வட்டியும் கடன்களின் பல தவணைகளும் கட்டப்பட்டுவிட்டன. இப்போது மக்கள் சாந்த், ரஜியா ஆகியோரைப் பார்த்து விரல்களை நீட்டிய போது வாஹித் ஹுசேனின் குடும்பச் சிறப்பு சிறிதும் பாதிக்கப் படவில்லை! பழியுரை மொழிந்தவர்களைப் பார்த்து அவர் நகைத்தார். இவர்கள் கறையான்களாக, மரபு வழி மதிப்பைத் தாமே அரித்துக் கொண்டிருக்கிறார்கள். கடன், அறியாமையின் புதைமணலில் சிக்கித் தங்கள் அறிவை இழந்து விட்டார்கள். இவர்களின் பெண்மக்கள் 'குர்ஆன் ஷரீப்' முடித்த பிறகு, பெரிய வயதில் வேறு கல்வி கற்கச் செல்கிறார்கள்; ஆண் மக்கள் நாடோடிகளாகத் திரிகிறார்கள். மாளிகைகளில் இவர்கள் கவலைகளேயின்றிச் சதுரங்கம் விளையாடுகிறார்கள். திடீரென்று ஒருநாள் ஆபத்தான கட்டம் வரும்போது விழிப்புக் கொள்கிறார்கள். அதனால் என்ன பயன்?



தன் தந்தையின் மரணச் செய்தியைக் கேட்டு ஹுமாயூன் உள்ளே ஓடிச்சென்றபோது, தனக்கு நல்லகாலம் தொடங்கிவிட்டது என்று உறுதியாக நம்பினான். ஆனால் முன்பு 'அலீப் லைலா' விலிருந்து விரட்டப்பட்ட அவனது மாற்றாந்தாய்ச் சகோதரர்கள் எல்லாரும் வந்துவிட்டார்கள். தந்தையின் சவப் பெட்டிக்குத் தோள் கொடுக்கும் கலையை அவர்களுடைய பசியும் இடர்களும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தன. அவர்களில் ஒருவன் நீதிபதியாகவும், இன்னொருவன் வழக்கறிஞனாகவும், இன்னொருவன் மண்டலிகராகவும், மற்றும் ஒருவன் எழுத்தராகவும் இருந்தனர். எல்லாரும் சேர்ந்து ஹுமாயூன் தங்கள் தந்தையின் மகனே அல்ல என்பதை நிரூபித்து சட்டப்படி அவனுக்கு உரிமையில்லை என்பதையும் நீதிமன்றத்தில் நிலை நாட்டி விட்டார்கள். அவனுடைய தாய் பதினைந்து வயது முதல் அறுபது வயது வரை, மிஸ்கீன் அலி ஷாஹ்வின் காலணிகளைச் சுத்தப்படுத்திய உறவு தவிர வேறெந்த உறவும் இல்லை என்று சாதித்துவிட்டார்கள். ஆனால் ஹுமாயூன் மனஉறுதி இழக்க வில்லை; சூதாட்டத்திலும், மதுக்கோப்பைகளிலும், இழந்துவிட்ட தனது பேரரசைத் தேடினான்! ஒருநாள் ரஹ்மத் அலி ஷாஹ் தனது அருட்செயலால் அவனுடைய வாழ்வு முறையை மாற்றி விடுவார் என்ற நம்பிக்கையில் கைமீது கை வைத்தவாறு எதிர் நோக்கினான்.

ஹுமாயூனின் முடிவு ஒரு படிப்பினையாக அமைந்தது; வாஹித் ஹுசேனும் கல்வியின் மேன்மையை உணர்ந்தார். எனவே சாந்தின் ஆணைகளை நிறைவேற்றுவதும், அவள் சொற்படி நடப்பதும் இப்போது வீட்டில் ஒவ்வொருவரின் கடமையாக இருந்தது.

கவ்ஹர் அத்தையின் நல்லுரைகள் எல்லாப் பெண்களுக்கும் கடிவாளமாக அமைந்தன. ஆனால் சாந்தை சீர்திருத்த அவளால் முடியவில்லை; ஏனெனில் சாந்த் தன்னிச்சையுடன் செயல்பட்டு எல்லாத் திசைகளிலும் வலை வீசினாள். ஆயிரம் முறை அவள் இதயம் முறியும், மீண்டும் அது இணைந்தும்விடும். விலையுயர்ந்த சேலை ஒன்றை அணிந்து, ஓய்வு நேரங்களில் சாய்வுப் பலகைமீது சாய்ந்தவாறு அவள் பாடுவாள்.

'காதலன் அன்றிக் களிப்பு இல்லை
யாது செய்ய, அமைதி இல்லை...'

வேலை செய்யும்போது வெட்டப்பட்ட கூந்தல் நெற்றியின் மீது வந்துவிழும். பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் கஜல் சீக்கிரமாக அதைச் சரிப்படுத்திச் செருகிவிடுவாள்.

கஜலின் இந்தச் செய்கைகளைக் கண்டு சாந்துக்குச் சிரிப்பு

வந்துவிடும். அவள் கஜலின் மயக்கமூட்டும் கண்களில் மயங்கி இருந்தாள். வயதுக்கு வந்த பிறகு இவள் என்ன செய்யப் போகிறாளோ? இப்பொழுதே அவள் கண்களில் ஓர் ஈர்ப்பு, ஓர் அழைப்பு இருந்தது.

ஒருமுறை ஏதோ வேலையாக அவள் கஜலுக்குக் குரல் கொடுத்தாள்— "ஏ, மான் போன்ற கண்கள் கொண்ட பெண்ணே!"

இதைக்கேட்டு கஜல் கர்வ நடை போட்டாள்.

மக்களின் கண்களில் இருந்த வெறுப்பு, தந்தையின் சீற்றம், தாயின் கோபம் எல்லாவற்றையும் அவள் மறந்துவிட்டாள். சாந்த் அக்காவின்மீது தன்னை ஏழுமுறை சுற்றி வீசிஎறிந்துவிட வேண்டுமென அவள் மனம் விரும்பியது.

"சாந்த் அக்கா என்னுடையவராக்கும்" ஒருநாள் அவள் ஃபவுசியாவிடம் பெருமையாகச் சொல்லிக்கொண்டாள்.

"உன்னுடையதாக எப்படி இருக்க முடியும்", பவுசியா கலவரமடைந்தாள். "அவர் டாடிக்கும், மம்மிக்கும் சொந்தமானவர் அன்றோ?"

# 9

"இன்று வரை யாராவது சிவப்பு முள்ளங்கி ஊறுகாயில் கசகசா கோட்டிருக்கிறார்களா?" வெற்றிலையை மடித்தவாறு பீபி மெதுவாகக் கேட்டார்.

"போடாமல் இருக்கலாம். சிவப்பு முள்ளங்கி ஊறுகாயில் கசகசா போடக்கூடாது என்று எந்த வேதத்திலும் எழுதி இருக்கவில்லை!"

வழக்கம்போல் இன்றும் வாஹித் ஹுசேன் ஊறுகாய் தயாரிபிதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். ஏதேனுமொரு புதிய கவலை வந்துவிட்டால், கவிதை அவர் துணையை விட்டுவிடும். அப்போது அவர் இந்த மாதிரி ஊறுகாய் தயாரிப்பு விஷயங்களில் இறங்கிவிடுவார்.

பீபி வாஹித் ஹுசேனுடன் மிகக் குறைவாகவே வாதம் செய்வார். ஏனெனில் ரஜியாவின் திருமணத்திற்குப் பிறகு அவர் வீட்டின் தலைமைப் பொறுப்பேற்றிருந்தார். அதனால் அவர் வாஹித் ஹுசேனின் காதலுக்காக அச்சம் கொள்வதையும், கவ்ஹர் பேகத்தின் கசப்பான வார்த்தைகளுக்காக வருத்தப் படுவதையும் விட்டுவிட்டுத் தன் மருமகளின் திறமைகளைக் கண்டு

மகிழ்ச்சி அடைந்தார். வீட்டு வேலைகளின் சுமை பெரிதளவில் குறைந்துவிட்டது. பகல் முழுவதும் திரைபோட்ட காரில் உட்கார்ந்து உறவினர்களைச் சந்திக்கச் சென்றுவிடுவார். அல்லது வீட்டுக்கு வரும் பேகம்களுடன் உரையாடுவார். வெள்ளிப் பெட்டியைத் திறந்து எல்லாருக்கும் வெற்றிலை தருவார். சில நேரங்களில் ஷாஹீன்—ரஷீதுக்காக 'மல்மல்' துணியில் சொக்காய் தைப்பதற்கு உட்கார்ந்துவிடுவார்; தன்னுடைய இந்தக் கலையின் பெருமை அவருக்கு இருந்தது.

ரஜியாவுக்கும் சாந்துக்கும் பூவேலையின் புதிய புதிய மாதிரிப் படங்கள் செய்யத் தெரியும். சாந்த் தனது ரவிக்கைகளுக்காக மாதிரிப் படங்களைக் காகிதத்தில் வரைந்து தையல்காரனிடம் கொடுத்துவிடுவாள். குழந்தைகளுக்காகப் புதுப்புது வகைகளில் துணிகளைத் தயாரிப்பதில் ரஜியாவுக்கு விருப்பம் அதிகம். எனினும் தையல் எந்திரம் இல்லாமல் அவர்களால் ஒரு தையலும் போடமுடியாது. ஆனால் பீபியோ கையாலேயே தையலை முடித்துவிடுவார்; திருமணங்களுக்காகச் சரிகை வேலை செய்ய மக்கள் தூரத்திலிருந்து பீபியிடம் வருவார்கள். அவர் மிக நேர்த்தியாக முடித்துக் கொடுப்பார்; அந்த வேலைப்பாட்டின் அழகை மணிக்கணக்கில் பார்த்துக் கொண்டே இருக்கலாம். ஆனால் மணமகளின் திருமண ஆடைகளை மட்டும் தொடவே மாட்டார். ஒருமுறை அவருடைய சின்ன மாமியாரும் சொன்னார்: "உன்னைப் போன்ற நற்பேறு பெற்ற நங்கை யாராக இருக்க முடியும். அளவு மீறிய அன்பு செலுத்தும் கணவன்—மழலைச் செல்வங்கள்—செழிப்பான வீடு எல்லாமே உனக்குச் சொந்தம். நீ திருமண ஆடைகள் ஏன் தயாரிப்பதில்லை?"

"இல்லை அம்மா, அது தைப்பவரின் விதியையும் அத்துடன் இணைத்துவிடும் என்று சொல்கிறார்கள். புதிய மணமகளுக்கு என்னுடைய இத்தனை தொல்லைகளும், கவலைகளும் எதற்காகப் போய்ச்சேர வேண்டும்?"

சில நேரங்களில் வாஹித் ஹுசேனுக்குக் காதல் உணர்ச்சி வந்துவிடும். அப்போது பீபியுடன் உட்கார்ந்து சதுரங்கம் ஆடுவார். வாஹித் ஹுசேனை விடவும் பீபி அதிக தேர்ச்சி பெற்றவர் என்றாலும் ஒவ்வொரு முறையும் அவர் தோல்வியே அடைவார். அதற்காக ஒரு பூசலே வரும். இறுதியில் வாஹித் ஹுசேன் பலகையை எடுத்து வீசி எறிவார். இங்கும் அங்கும் பார்த்துவிட்டு பீபியைத் தன் மார்புடன் அணைத்துக் கொள்வார். அவர் ஓய்வு பெற்றுவிட்டார் என்றாலும் பீபி இல்லாமல் தனியாக அவருக்குத் தூக்கம் வருவதில்லை.

இன்றும் அவர் பீபியைப் புதிய மணமகளைப் போலவே

கூர்ந்து நோக்குவார். ஆயினும் பீபி மிகவும் குளிர்ச்சியாகவே அவரைச் சகித்துக்கொள்வார். உயிரற்ற பொம்மையைப்போல்!

இப்போது ஓய்வூதியம் வாங்கிய பிறகு வாஹித் ஹுசேனுக்கு வருத்தமாக இருந்தது. பணியிலிருந்து ஓய்வுபெறும்போது அவர் அழகான கனவுகளைக் கொண்டிருந்தார். பிறகு நிம்மதியாக வீட்டுக்கு வந்து உட்கார்ந்ததும் அவர் ஷேர்வானியையும், இறுகிய பைஜாமாவையும் விலக்கிவிட்டு, லுங்கி அணிந்து, மண் வெட்டியை எடுத்துக்கொண்டு கவிதாலயத்தை மலர்ச்சோலை ஆக்கி விட்டார். பின்னர் வீட்டைச் சீர்திருத்தும் பணியை மேற்கொண்டார். ஆனால் இந்த அழுத்தமும், சர்க்கரை நோயும் அவரைக் கடினமாக உழைக்க விடவில்லை. இப்போது புகழ்பெற்ற அவரது குரலின் முழக்கமும் கோபமும் அவரைவிட்டுப் பிரிந்துவிட்டன. ஆனால் உலகின் ஒவ்வொரு விஷயத்திலும் குறுக்கிடும் பழக்கம் வந்துவிட்டது. 'அந்தப் பணியாளன் எங்கே, எந்தக் காரியத்தைச் சாதிக்கச் சென்றான்? இன்று சாந்தைச் சந்திக்க யார் யார் வந்தார்கள்? இன்று என்னென்ன சமையல்?' முதுமைப் பருவம் எஃகு மனிதரை எப்படிக் கரைத்துவிட்டது!

வட்டாட்சியராக இருந்த முப்பது ஆண்டுகளில் தனது முக்கியத்துவத்தை உணர்த்தும் அவசியம் அவருக்கு என்றுமே இருந்ததில்லை. மாவட்டத்தின் மக்கள் அவருடைய அசைவுகளை யெல்லாம் புரிந்துகொண்டார்கள். கிராமப் பெண்கள் வாஹித் ஹுசேனின் பெயரைச் சொல்லித் தன் குழந்தைகளைப் பயமுறுத் தினார்கள் என்பது மக்களின் வாதம். தந்தை, பாட்டனார் சென்றவழியில் ஆட்சி புரிந்து அவருடைய பெருமையை நிலை நாட்டினார்—பிரதம ஆளுநர்களே வெட்கப்படும் அளவுக்கு!

'ஆ! அதுவும் எத்தகைய அருமையான காலம்!' வானத்தில் பறந்த குருவிகளைப் பார்த்து அவர் கண்களை மூடிக்கொண்டார்.



அன்று வீட்டிலிருந்து ரஷீதின் பிறப்புச் செய்தி, தந்தி வழியே வந்தடைந்தது. மகிழ்ச்சிப் பெருக்கில் அவர் பைத்தியமாகி விட்டார். முதல் முறையாகத் தந்தையாகி விட்டோம் என்பது அதற்குக் காரணம் அல்ல. பீபியின் கால்களில் இன்னொரு விலங்கு போட்டுவிட்டோம் என்பதுதான். இனி கவ்ஹர் அத்தையை ஏமாற்றி, தனது தந்தையின் குடிசைக்கு ஓடிச் சென்றுவிடுவாரோ என்ற அச்சம் அவரது இதயத்திலிருந்து வெளியேறி விட்டது.

வீட்டுக்குச் செல்லும் ஏற்பாடுகளில் முனைந்தார். இந்தச் செய்தி கேட்டதும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து வாழ்த்தினார்கள். பரிசுகளை வாரி வழங்கினார்கள். அவற்றை எடுத்துச் செல்வதற்கே அவருக்கு வழி ஏதும் தோன்றவில்லை.

அந்நாட்களில் ஒரு செய்தி தீவிரமாகப் பரவி இருந்தது. ஆட்சியில் பிரதமராக ஓர் இந்தியர் நியமிக்கப்படப்போகிறார் என்ற செய்தியே அது. இந்த இந்தியரும் ஆட்சியாளரின் அழைப்பின்பேரில் பலமுறை வருகை தந்துவிட்டார். இந்த 'மீன்' தனது வலையில் சிக்கிவிட்டது என்றே அவரும் நினைக்கலானார்.

'இந்த இந்தியர்கள் பொல்லாதவர்கள். காரியத்தில் வல்லவர்கள்' என்றே வாஹித் ஹுசேன் மக்களிடம் சொல்லுவார்.

அன்று 'பல்தா' செல்வதற்காக அந்தக் குறிப்பிட்ட ஆள் புகைவண்டியில் உட்கார்ந்தார். அந்தப் புகைவண்டி அவருடைய பொறுமையைச் சோதனை செய்வதுபோல் ஓடவே மறுத்தது. பயணிகள் தலைகளை வெளியே நீட்டிப் பார்த்தனர். அடுத்த நிலையத்தில் ஒரு வண்டி தடம்புரண்டு விட்டது என்றான் ஒருவன். கம்யூனிஸ்டுகள் இருப்புப் பாதைகளைத் தகர்த்து விட்டார்கள் என்று இன்னொருவன் சாதித்தான். நிலையத்தைச் சேர்ந்த பணியாளர்கள் இங்கும் அங்கும் கலவரத்துடன் ஓடினார்கள்.

பயணிகளின் ஆயிரக்கணக்கான வினாக்களுக்கு விடைமொழி தருவது வீணானது என்று அவர்கள் நினைத்தார்கள்.

பதினைந்து நிமிடம்—ஒருமணி—ஒன்றரை மணி நேரம் கழிந்துவிட்டது.

அந்தக் குறிப்பிட்ட ஆள் விசிறியைப் போட்டுச் சிந்தனை செய்தார். இத்தகைய அரசை அவரால் எப்படிச் சீரமைக்க முடியும். தகுந்த காரணம் இல்லாமலேயே புகைவண்டி ஒன்றரை மணி நேரம் தாமதமாகி விடுகிறதே...!

வெளியே ஆரவாரம் கேட்டு அவர் ஜன்னலருகில் வந்தார். அவருக்கு எதிரில் ஒரு மனித வெள்ளமே பாய்ந்தது. அவர்கள் கோஷங்கள் வேறு எழுப்பினார்கள். மலர் மாலைகள், இனிப்புக் கூடைகள், மனிதத் தலைகளைத் தவிர எதுவும் தெரியவில்லை. ஹைதராபாத்தைப் பற்றி அவர் நிறையப் படித்திருக்கிறார். நிரம்பக் கேள்விப்பட்டிருக்கிறார். ஒரு கிழவியின் முகத்தைப் பார்த்து அதில் எழுதப்பட்டிருக்கும் 'ஒரு மாளிகையின் கதை'யை அவரால் படிக்க முடியும்.

அவர் தனது கண்களை முழுமையாகத் திறந்து வைத்திருக்கிறார். தனது தகவல்களை அதிகப்படுத்த மென்மேலும் விசாரித்துக் கொண்டே இருப்பார்.

'இனிப்புப் பருப்பில் எவ்வளவு சர்க்கரைசேர்க்கப்படுகிறது? 'துர்ரம்கான்' (பெரிய பொம்பன் என்கிறோமே) ஹைதராபாத்தில் மன்னனாக இருந்தானா? கண்டிப்பேட்டில் தண்ணீர் எப்படி இருக்கும்? இங்கு கருவாடும் இராலும் சாப்பிடுவது அவசியந்தானா?

"நீங்கள் குடிநீரிலும் புளிச்சாறு கலந்து சாப்பிடுகிறீர்களா?" இப்படிப் பல வினாக்கள்.

திடீரென்று இந்த மனித வெள்ளம் அவர் இருந்த முதல் வகுப்புப் பெட்டியை அடைந்த சமயம் அவர் துள்ளிக் குதித்தார். பிறகு சிறிது அச்சமும் அடைந்தார். 'ஹைதராபாத்தின் அடுத்த பிரதமர் இங்கு இருக்கிறார் என்று அவர்களுக்குத் தெரிந்து விட்டதா என்ன? ஆனால் இத்தகையதொரு வரவேற்பா? இப்போது நான் என்ன செய்வது? சாபிர் நவாப் இதைப்பற்றி எதுவும் விளக்கம் தரவில்லையே..'

மலர் மாலைகளுக்காகத் தனது தலையை அவர் நீட்டிய போது, ஒரு பருமனான, இன்முகம் கொண்ட இளைஞன் ஒருவனை மக்கள் உள்ளே தள்ளிவிட்டார்கள். அவன் மாலை களில் மறைந்திருந்தான். மக்கள் அவனுடைய பரிசுப்பொருள்களை வைப்பதற்காக உள்ளே வந்தார்கள். அவர்கள் அந்தக் குறிப்பிட்ட ஆளையும், அவருடைய சாமான்களையும் நசுக்கியே விட்டார்கள். பக்கத்தில் இருந்த வேலைக்காரர்கள் பெட்டியில் சேவகர்கள் ஏறிக் கோழி கூண்டுகளையும், பழக்கூடைகளையும் ஏற்றிக் கொண்டதும் புகைவண்டி கிளம்பியது. இப்போது அவரும் தனது உணர்வுக ளைத் திரட்டி எதிரில் உட்கார்ந்திருந்த அந்த நற்பேறு பெற்ற வசீகரமான இளைஞனைப் பார்த்தார். முகலாய இளவரசனைப் போன்ற கம்பீரம் அவன் முகத்தில் களை கட்டியது. எனவே அந்தக் குறிப்பிட்ட ஆள் சாபிர் நவாப் சொல்லிக்கொடுத்த அரசவை ஒழுக்கத்தை மிகவும் கவனமாகக் கடைப்பிடித்தார்.

"மேன்மைமிக்கீர்! தாங்கள் எவ்விடம் செல்கிறீர்கள்?

"நான்.. பல்தாவுக்குப் போகிறேன்" வாஹித் ஹுசேன் மிக அலட்சியமாகப் பதிலளித்தார்.

"பல்தா...?" அந்தக் குறிப்பிட்ட ஆளுக்குத் தலை சுற்றியது. ஹைதராபாத் நிலப்படத்தை அவர் நன்றாக நினைவில் வைத்துக் கொண்டிருந்தார். அதில் பல்தா என்ற நகரம் எங்கும் இருக்கவில்லை.

"இந்தப் பல்தா ஹைதராபாத்திலிருந்து எத்தனை மைல் தொலைவில் இருக்கிறது?"

"என்ன?" வாஹித் ஹுசேன் திரும்பி அவரைப் பார்த்தார். சிறிது நேரம் வரை கூர்ந்து நோக்கினார். பிறகு கழுத்தை

அசைத்தவாறு கேட்டார்:

"எந்தக் கிராமத்திலிருந்து வருகிறீர்கள்? முதல் முறையாக ஹைதராபாத்தைப் பார்க்கிறீர்கள் போலும்!"

"ஆமாம் ஐயா" அந்தக் குறிப்பிட்ட ஆள் சிறிதும் யோசிக்காமல் பொய் பேசினார்.

இந்த இளவரசனிடம் தாம் ஏதோ தவறாக நடந்து கொண்டுவிட்டோம் என்ற உணர்வு அவர் மனதில் நிழலாடியது.

"நாங்கள் ஹைதரபாத்தையே பல்தா என்கிறோம்" என்று சொல்லிவிட்டு வாஹித் ஹுசேன் பலமாகச் சிரித்தார். அந்தக் குறிப்பிட்ட ஆளும் அதில் கலந்துகொண்டார்.

அதற்குப் பிறகு வாஹித் ஹுசேன் தனது செல்வச் செழிப்பு, குடும்ப மதிப்பு பற்றி விளக்கம் தந்தபோது வண்டி பல நிலையங்களைக் கடந்துவிட்டது.

(அந்த சாபிர் நவாப் எந்தச் சீரழிந்த நவாப்புகளைப் பற்றி அவரிடம் சொன்னாரோ, உண்மையான நிலக்கிழாருடன் இப்போதுதானே அறிமுகம் கிடைத்திருக்கிறது)

பிறகு வாஹித் ஹுசேன் அவரைப் பலவந்தமாகத் தனது உணவில் பங்குபெறச் செய்தார்.

"இல்லை, இல்லை" எனக்கூறி அநத் ஆள் தனது சிற்றுண்டித் தூக்கிலிருந்து பூரிகளும், அல்வாவும் எடுக்கச் செய்த முயற்சிகள் பயனற்றுப் போயின.

"வீட்டில் உணவு தயாரிப்பதில் தாமதம் ஏற்பட்டுவிட்டது. அதனால் புகைவண்டியை ஒரு மணிநேரம் நிறுத்த வேண்டிய நிலை..." வாஹித் ஹுசேன் அலட்சியமாகவே கூறினார்.

அந்தக் குறிப்பிட்ட ஆளுக்குப் பிரியாணி செய்யும் முறையை விளக்கியபோது அவர் அதைப் பாராட்டினார். அரிசி போன்ற சாதாரணமான தானியத்திற்கு இவர்கள் இவ்வளவு பெரிய இடம் தருகிறார்களே, மனிதர்களையும் உயர்ந்த இடங்களில்தான் அமர்த்துவார்கள்!

இதற்குப் பிறகு வாஹித் ஹுசேன் பிரியாணி டப்பாவைத் திறந்து நீட்டியபோது அவர் மறுத்துவிட்டார்.

"நீங்கள் சாப்பாடு சாப்பிடுவதில்லையா?"

"சாப்பாடு சாப்பிடுகிறேன்—அரிசி உண்பதில்லை"

"அரிசி? ஓ.. நீங்கள் சாப்பாட்டை அரிசி என்கிறீர்களா?"

"நீங்கள் மாட்டிறைச்சியைப் புசிப்பது உண்டா?"

"நீங்கள் சாப்பிட மாட்டீர்களா?" அந்தக் குறிப்பிட்ட ஆள் வியப்புடன் கேட்டார். அவருடைய கோப்பையை எடுப்பதற்காகக் கையை நீட்டிய வாஹித் ஹுசேன் தனது கையை இழுத்துக் கொண்டார். அப்போது ஒரு சிறு கல் அவர் வாயில் வந்துவிடவே

ஒரு பூகம்பமே வெடித்தது. பெட்டியே அவரது கூச்சலால் ஆடியது. ஒன்றின்பின் ஒன்றாக எல்லாத் தட்டுகளும் வெளியே காட்டில் வீசி எறியப்பட்டன.

அடுத்த நிலையத்தில் சமையற்காரன் வரவழைக்கப் பட்டான். வேறொரு பணியாளன் அவனுக்குச் செருப்படி கொடுத்தான். பிறகு 'இவனை இங்கேயே இறக்கிவிடுங்கள். பல்தா வரை கால்நடையாகவே வரவேண்டுமென்று சொல்லுங்கள்," என்று வாஹித் ஹுசேன் ஆணையிட்டார்.

அந்தக் குறிப்பிட்ட ஆள் வெகுநேரம் வரை தலையை வெளியே நீட்டி அந்த வயது முதிர்ந்த சமையல்காரனைப் பார்த்தார்; வாழ்வுப் பயணத்தின் முழு தொலைவையும் அரிசிக்கு மதிப்புத் தருவதற்காகவே அவன் வீணடித்துவிட்டான். ஆனால் இன்னும் அவன் பயணம் முடியவில்லை. இனி அவன் பல்தாவைக் கால்நடையாகவே அடைய வேண்டும். பல்தா ஒவ்வொரு ஏழையின் இலட்சியக் கனவாக இருந்தது. ஒவ்வொரு செல்வந்தனும் சேரும் இடமாக இருந்தது.

"அடியேனுக்குத் தங்கள் திருநாமத்தை அறிந்துகொள்ளும் வாய்ப்புக் கிடைக்கவில்லை"

"என்னை நவாப் வாஹித் ஹுசேன் என்பார்கள். நான் பிரபனி மாவட்டத்தில் வட்டாட்சியராக இருக்கிறேன்."

"வட்டாட்சியரா?" அந்தக் குறிப்பிட்ட ஆளுக்கு மயக்கமே வந்துவிட்டது.

"இறைவனின் அருள் ஐயா!" வாஹித் ஹுசேன் கைளைக் குவித்து, புகைவண்டியின் கூரையை நோக்கினார். "உண்மையில் என் குடும்பத்தில் நூறு தலைமுறைகளாக யாரும் வேலை செய்யவில்லை. ஆனால் இப்போது நிலைமைகள் மாறிவிட்டன. எங்களைப்போன்ற நிலக்கிழார்களும் மிகச் சாதாரணப் பணிகளை மேற்கொள்ள வேண்டிய இக்கட்டான காலநிலை—என்ன செய்வது?"

அந்தக் குறிப்பிட்ட ஆள் மௌனமாக இருப்பதைக் கண்டு வாஹித் ஹுசேன் மேலும் பேசினார். "ஹைதராபாத்தில் ஏதாவது வேலை இருந்தால் அடியேன் முடித்துத் தரக் காத்திருக்கிறேன். ஒரு காசு செலவில்லாமல் செய்து தருவேன். தங்கட்கு கவிதை ஆர்வம் இருப்பின், ஏழையின் குடிலுக்கு வருகை தரும் சிரமத்தை மேற்கொள்ளுமாறு வேண்டுகிறேன்."

பிறகு சுருட்டுப் பிடித்தவாறு, தனது காலை, மின்னும் காலணிகளுடன் அவருக்கு நேராக மேசையின்மீது வைத்தார்.

"தங்கள் பெயரைச் சொல்லவில்லையே"

"அடியேனை மப்ரூஜ் அஹ்மத் என்கிறார்கள். அரசு

என்னைப் பிரதமர் பதவிக்காக அழைத்திருக்கிறது"

"என்ன—என்ன—என்ன..." உலகம் உருளுகிறதா அல்லது வாஹித் ஹுசேனின் மூளை கலங்கிவிட்டதா, அவர் பலமுறை கலவரத்தில் உருண்டார். வெட்கத்தால் தனது கரங்களைக் குவித்தார். காலணிகளைக் கழற்றிவிட்டுத் தலைப்பாகையை அணிந்தார். குனிந்து குனிந்து அவரை வணங்கினார்.

ஆனால் அந்தக் குறிப்பிட்ட ஆள் தாழ்மையுடன் புன்சிரிப்பு ஒன்றை வெறிப்படுத்தினார். பிறகு மெதுவாகக் கூறினார்.

"எனக்கு வருத்தம் என்னவென்றால், அனாவசியமாகப் பிரதமர் பதவியைத் தேடி அலைந்தேன்—உண்மையில் இங்கு மண்டலிகராக வந்திருக்க வேண்டும்!"

# 10

வாஹித் ஹுசேன் பெருமூச்சு ஒன்றை வெளிப்படுத்தியவாறு கடந்த காலத்தை நினைவுபடுத்திக் கொண்டார்.

'வாழ்வின் எத்தனை எத்தனை சுகங்களை அனுபவித்து விட்டேன். ஆனால் இப்போது சர்க்கரை நோய் வாழ்வின் நம்பிக்கையை நசுக்கிவிட்டது. இங்கு பீபியும் டாக்டரின் சொற்படி உப்பு, மிளகாய், நெய், இறைச்சி எல்லாவற்றின் மீதும் தடை விதித்துவிட்டார்.'

பார்த்துக் கொண்டிருக்கும்போதே காலம் எவ்வளவு மாறி விட்டது — வேகமாக வீசும் காற்று, புத்தகத்தின் பல பக்கங்களைப் புரட்டிவிடுவது போல்.

வாஹித் ஹுசேன் லுங்கியை அணிந்து, சப்போட்டோ செடிக்குக் கீழே முற்றத்தில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார். வருபவர்கள் போகிறவர்கள் மீது பார்வை பதிந்திருந்தது.

பன்னிரெண்டு மணிக்குள் பகல் சாப்பாடு தயாராகிவிட வேண்டும் என்று பிஸ்மில்லாபீக்கு உத்திரவு போடப்பட்டிருந்தது. அடுப்பிலிருந்து பானை இறங்கியதும், கவ்ஹர் பேகம் வெந்த காய்கறி, காரம் இல்லாத சாம்பார். நெய் போடப்படாத சப்பாத்திகள் ஆகியவற்றை அவருடைய உணவுப் பந்தியில் வைத்துவிடுவார். இவை தவிர அவர் வேறெதுவும் சாப்பிடக் கூடாது. தாம் தயாரிக்கும் ஊறுகாய்களையும்கூட அவர்

மற்றவர்களுக்கு ஊட்டியே மகிழ்ச்சி அடைய வேண்டும்.

"வேறு என்ன சமைத்திருக்கிறாய்?" என்று அவர் பிஸ்மில்லா பீயிடம் கேட்பார்.

"இறால் வறுவல்—அகத்திக்கீரை—கத்திரிக்காய் கூட்டு".

"இராலில் சரியாக உப்புப்போட்டிருக்கமாட்டாய்—எங்கே, கொஞ்சம் சுவைத்துப் பார்க்கலாம், எப்படி இருக்கிறது..."

பிறகு அவர் கத்திரிக்காயையும் சுவைப்பார். இரண்டொரு மாமிசத் துண்டுகளையும் விழுங்கி விடுவார், சரியாக வெந்திருக்கிறதா என்று பார்க்க வேண்டாமா? பீபிக்கும் ரஷீதுக்கும் தெரிந்து விடக் கூடாது என்பதில் எச்சரிக்கையாக இருப்பார். ஏனென்றால் அவருடைய உடல்நிலை சரியாக இல்லாவிட்டால் எல்லாருக்கும் கத்தரிக்காய் பொறியலின் நினைவு வருகிறது. இறால் வறுவலும் தயாரிக்கப்படுகிறது...! சாப்பாடு முடிந்ததும் அவர் வெளியே வந்து உட்கார்ந்து சுருட்டைப் பற்ற வைப்பார். அவருக்கு அருகிலேயே நொண்டி அத்தை தரைமீது உட்கார்ந்ததும், நாட்டு நடப்புகள் குறித்து விமர்சனம் ஆரம்பமாகிவிடுகிறது. வாஹித் ஹுசேன் கல்வியறிவு பெற்றவர்; ஆனால் கவ்ஹர் பேகத்துடன் பேசும்போது, வேலைக்காரன் சிலாருவைப்போல் மாறிவிடுவார். தத்தம் குடும்பத்தின் பிடிவாதங்கள், பலவீனங்களின் கதைகள் பெருமையுடன் பேசப்படும். தங்கள் ஆணவம் பிடித்த, மரபு வரையறை மீறிய உறவினர்கள் மீது பழிப்புரைகள் சொல்லப்படும். குடும்பத்தில் சச்சரவுக்குரியவராகவே வாஹித் ஹுசேன் இருந்தார். அவருடைய நீதிமன்றத்தில் பொய் வழக்குகளுக்கும் சாதகமான தீர்ப்புகள் வழங்கப்பட்டன.

தன் கணவனைப் பற்றிக் குறைசொல்ல, அவருடைய தம்பியின் மனைவியான உஜாலா பேகம் வருகிறார். இரண்டாவது மாமியின் மருமகள், மாமியாருக்கு எதிரான குற்றச்சாட்டுப் பட்டியலுடன் வருகிறாள்; கன்னியர், காளையரின் இணைகள் சேர்க்கப்படுகின்றன. அதில் தன் பங்குக்குப் பல விஷயங்களையும் சேர்த்துவிடுகிறார்கள். எல்லாருமே வாஹித் ஹுசேனைப் புகழ்ந்தும் அவருடைய எதிரிகளைத் தாக்கியும் பேசுகிறார்கள்.

கவ்ஹர் பேகத்துடன் அவருடைய உறவு மிகவும் சுமுகமாக இருக்கிறது. வீட்டு வேலைகளைச் செய்து களைப்படையும் சமயத்தில் கவ்ஹர் பேகம் தனது அண்ணனிடம் வந்தமர்ந்து வம்பளப்பாள். அந்நேரத்திலும் அவளுடைய பார்வை வீட்டின் நான்கு திசைகளிலும் செல்லும். எந்தக் குழந்தை குறும்பு செய்கிறது. எந்தப் பொருள் எங்கு இருக்கிறது. எந்த வேலைக்காரன் வேலை செய்யாமல் இருக்கிறான் என்றெல்லாம் கவனித்துக் கொள்வாள். அவளுடைய முகத்தைக் கண்டதும் குழந்தைகள் பயந்து

நடுங்குவார்கள், கஜலைத் தவிர! எல்லாரையும் மேல் பலகணியின் உட்கார வைக்கும் அத்தையை, கஜல், மறதியின் சாளரத்தில் வைத்துவிட்டாள்.

இவ்வாறு இருப்பினும், நொண்டி அத்தை, குழந்தைகளுக்குக் கெட்டவளாகத் தெரியவில்லை. குறிப்பாக வியாழக்கிழமைகளில் அவளுடைய குரலில் தேன் சொட்டும். அன்று எல்லாக் குழந்தை களும் அவளைச் சுற்றிச் சுற்றி வருவார்கள். ஏனெனில் வியாழக் கிழமை அன்று நொண்டி அத்தை ஐந்து ரூபாய்க்கு இனிப்பு தருவித்து ஏதோ மந்திரம் படிப்பாள். கவ்ஹர் அத்தைக்கு இன்னும் திருமண ஆசை இருக்கிறது. யூசுப் சாஹிப் ஷரீப் சாஹிப் தர்காவில் அவருக்கு இந்த மந்திரத்தை ஒரு வேசி சொல்லிக்கொடுத்திருக் கிறாள். இதை அவள் வீட்டாரிடம் மறைக்கிறாள் என்பது ரஜியாவின் வாதம். யாராவது கேட்டால் தன் பெற்றோருடைய ஆன்மாக்களின் நற்பலனுக்காகப் பாத்திஹா ஓதுவதாகச் சொல்லுவார்.

இரகசியமாக இனிப்பு வாங்கிவரும் பொறுப்பை ஷேகு மியான் ஏற்றுக் கொண்டிருந்தார். ஷரீன் வத்திகளைக் கொளுத்தி வைப்பான். கஜலும் ஃபவுசியாவும் சேர்ந்து இனிப்பைத் தனித்தனி பங்குகளாகப் பிரிப்பார்கள். ஷேகுமியாவுக்கு முதல் பங்கு கிடைக்கும். எல்லா உலகமும் வெறுத்து ஒதுக்கிவிட்ட ஷேகு மியானின்மீது நொண்டி அத்தைக்குச் சிறிது அதிகமாகவே அக்கறை இருந்தது. ஷேகு மியான் தூரத்து உறவில் அவருக்கு சகோதரர். ஆனால் ஊர் சுற்றி; ஒழுக்கங்கெட்டவர்; குடிகாரர்; முட்டாள்; அப்படி இருந்தும் அவருக்குத் திருமணம் செய்துவைக்க நொண்டி அத்தை எண்ணிலாத முயற்சிகள் செய்தார். நல்ல குடும்பங்களில் பெண் கிடைக்காமற் போகவே ஏழைக்குடும்பங் களில் பெண் தேடினார். ஆனால் இந்த மக்களுக்கு என்ன ஆகி விட்டதோ, யாரும் தனது மகளை ஷேகு மியாவுக்குப் படையலாகச் சமர்ப்பிக்கச் சம்மதிக்கவில்லை! இத்தகைய ஆடவர்கள் திருமணத்திற்குப் பிறகு திருந்தி விடுகிறார்கள் என்று கவ்ஹர் அத்தை நினைத்தாள். திருமணம் நடந்திருந்தால் அவருடைய வாழ்க்கை சீர்பட்டிருக்கும் என்று பலமுறை சொல்லி இருக்கிறாள்.

நான்கு ஐந்து நாட்களுக்கு ஒருமுறை தயங்கியவாறு ஷேகு மியான் வந்து சேருவார். வெளியே வேலைக்காரர்கள் அறையில் பலநாள்கள் வரை கிடப்பார். குழந்தைகள் மூலம் தகவல் சொல்லி அனுப்புவார்.

“கவ்ஹர் அக்காவிடம் சொல்லுங்கள். நான் மூன்று நாட் களாகப் பட்டினி கிடக்கிறேன்”

சகோதரர் பட்டினி கிடக்கிறார் என்றதும், கவ்ஹர் பேகம் உடனடியாக உணவுத் தட்டைத் தயாரிக்கும் பணியில் ஈடுபடுவார்.

வாஹித் ஹுசேனும், ரஷீதும் ஷேகுமியான் வருகையைத் சிறிதும் விரும்புவதில்லை. யாருக்குத் தெரியும். இரவு நேரத்தில் வாயிலைத் திறந்து உள்ளே வந்து, ஏதாவது பொருளை எடுத்துக் கொண்டு ஓடிவிடலாம்!

முடிச்சு மாறிகள் குடும்பத்தைச் சார்ந்தவர் அல்லர் என்பது வேறு விஷயம். அவருடைய மூதாதையரின் பெரும் சொத்து இருந்தது. அதை ஷேகுமியாவின் தந்தையும், அவருக்குப் பின்னால் ஷேகுமியாவும் அழித்துவிட்டனர். கவ்ஹர் பேகத்தின் தந்தை உயிருடன் இருந்தவரை அவருடைய உணவு உடைக்கான ஏற்பாடு களைச் செய்துவிடுவார். அதனால் தனது ஆதரவில்லாத தம்பியின் வயிற்றை நிரப்புவது தனது கடமை என்று கவ்ஹர் பேகம் நம்பினார்.

ஒரு முறை பெரிய ஆடம்பரத்துடன் ஷேகுமியாவுக்காகப் பொம்மை போன்ற மணமகள் ஒருத்தியை அவர் கொண்டுவந்தார். ஓராண்டு காலத்தில் குடித்தும் சாப்பிட்டும் அவர் அவளைத் தீர்த்துவிட்டார். பிறகு ஷேகுமியாவே தனது விருப்பப்படி எங்கிருந்தோ ஒருத்தியை மணம் செய்து கொண்டு வந்தார். அவளை இவர் சுவைக்கு முன்பே, அவள் இவரை விழுங்க ஆரம் பித்தாள். கவ்ஹர் பேகம் அழுதழுது எல்லாரிடமும் முறையிடுவார். சின்னஞ்சிறு விஷயத்திற்கும் அவள் செருப்பை எடுத்து ஷேகு மியாவைத் தாக்குவாளாம். நான்கைந்து வருட முயற்சிக்குப் பிறகு ஷேகுமியான் அவளிடமிருந்து விடுதலை பெற்றார். இந்த இரண்டு அனுபவங்களுக்குப் பிறகும் மீண்டும் திருமணம் செய்துகொள்ளும் ஆசை அவருக்கு இருந்தது. வரப்போகும் மணமகளை எதிர்பார்த்து அவர் தேவதாஸாகி விட்டார். காலையில் படுக்கையைவிட்டு எழுந்ததும், தலைமுடி, கண் இமை முதல் உடல் முழுவதையும் கத்தியால் அவர் சிரைத்துவிடுவார். பிறகு லுங்கியை அணிந்து ஒரு மூலையில் வழுக்கைத் தலையைத் தடவிப் பார்த்துக் கொள்வார். அணைந்துவிட்ட கரிபோன்ற முகத்தில் செந்நிறக் கண்கள் தீபங்களைப்போல் காணப்பட்டன. கறைபடிந்த பற்களில் எப்போதும் அழுக்கு இருக்கும். குழந்தைகளுக்கு அவருடைய தோற்றம் வேடிக்கையாகவே இருக்கும். மது மயக்கத்தில் இல்லாத போது அவர் குழந்தைகளுக்குப் பேய்க்கதைகள் சொல்லுவார். மயக்க நிலையில் அவரது வாயிலிருந்து வசைமொழிகள் வரும். கைகளை அசைத்துக் காற்றுடன் போரிடுவார்; அழுவார்; பாடுவார்; இதைக் குழந்தைகள் பெரிதும் ரசிப்பார்கள். அதனால் ஷாஹீன், ஃபவுசியா, சாந்த், கைசர் எல்லாக் குழந்தைகளும்

அவரைச் சுற்றிச் சுற்றி வருவார்கள். ஆனால் கஜலுக்கு அவரைப் பார்த்ததும் குமட்டும்.

ஷேகுமியாவின் கல்வி, அவர் பெயரை எழுத முடிந்த அளவில் இருந்தது. ஒருமுறை ஏதோ ஒரு வேலைக்கான பேட்டியில் கலந்து கொண்டார். தனது பெயரை செ-க்-கு-தா-வ்-வூ-து என்று எழுதினார்.

சில நேரங்களில் தனது திறமையைக் காட்டுவதற்காக அவர் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க முயல்வார். தாம் பி.ஏ. படித்திருப்பதாகப் பிதற்றுவார். ஆனால் இறுதித் தேர்வு எழுதும் அவகாசம் கிட்டவில்லை என்பார். ஷாஹீனின் 'கிங்பிரைம'ரைத் திறந்து படங்களை உற்று நோக்குவார். பிறகு குழந்தைகள் ஆவலுடன் அவரை எதிர்நோக்குவதைக் கண்டு கேள்வி கேட்பார்.

"கோழியை ஆங்கிலத்தில் என்ன சொல்கிறார்கள்?"

"கோழி!" என்பாள் கஜல்.

"ஆ... ஆ..." ஷாஹீன் கூச்சலிடுவான்.

"உஷ்... உங்களுக்கு எல்லாம் ஒன்றும் தெரியாது".

"எக்..." என்று ஃபவுசியா பதிலளிப்பாள்.

"ஹென்... ஹென்... இதோ பாருங்கள்" ஷாஹீன் படத்தைக் காட்டுவான்.

"பார் மகனே, சத்தியமாகச் சொல்ல வேண்டும்..." அவர் சந்தேகப் பார்வையுடன் நோக்குவார்.

"ஆமாம், சத்தியமாக" ஷாஹின் தலையசைப்பான்.

"அப்படியானால் மேலே படிக்கலாம்" அவரும் அமைதியாக பக்கத்தைத் திருப்புவார்.

அவருக்குக் கவிதைப் பைத்தியமும் இருந்தது. ஆடி அசைந்து தனது கவிதைகளைப் பாடுவார். "நான் வாஹித் ஹுசேனின் சீடன்" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வார். இரண்டு மூன்று மாதங்களில் ஒருமுறை அவருடைய மேசைமீது ஒரு காகிதக்கட்டு வைத்துவிட்டுச் சென்றுவிடுவார். ஆனால் வாஹித் ஹுசேனுக்குக் கோபம் வந்துவிடும்.

"ஓர் அடியும் எழுதத் தெரியவில்லை, முட்டாள்— என்னமோ பிதற்றுகிறான்."

இரவில் அவர் தள்ளாடியபடி வரும்போது சுவரைத் தாங்கிக் கொண்டு நிற்பார். குழந்தைகளின் கூட்டத்தைப் பார்த்துக் கேட்பார்.

"குழந்தைகளே, நீங்கள் குடித்திருக்கிறீர்களா? எப்போதும் குடிக்கக் கூடாது. அல்லாஹ்வுக்குக் கோபம் வந்துவிடும். உலகமும் முகத்தைத் திருப்பிக் கொள்ளும்..."

பிறகு அவர் வேலைக்காரர்களின் அறைகளில் ஒன்றில், தரையிலேயே படுத்துவிடுவார்.

"அட, யாராவது தண்ணீர் கொடுங்கள்" அவர் அடிக்கடி கத்துவார்; ஆனால் யாரும் கேட்க மாட்டார்கள். அப்போது அவர் அருகில் செல்லவும் குழந்தைகள் பயப்படுவார்கள்.

ஒருமுறை அவருடைய முனகலைக் கேட்டுக் கஜலுக்கு இரக்கம் வந்துவிட்டது. அவள் தண்ணீரை எடுத்துச் சென்றாள். தண்ணீரை வாங்கிக் கொண்ட அவர், "இந்த மகள் யார்? அல்லாஹ் அவளுக்கு அழகான மருமகன் கொடுப்பான். மாளிகையில் பேகமாக இருப்பாள்" என்றார்.

'மதுவின் வண்ணம் வெள்ளை—

குடிகாரனுக்குக் கொள்ளை'

என்று தன் கஜலைப் பாட ஆரம்பித்துவிடுவார்.

அவருடைய ஆசீர்வாதத்தைக் கேட்ட ஃபவுசியா சொல்ல ஆரம்பித்தாள். 'கஜலுக்கு அழகான மணமகன் வேண்டுமாம். அதனால் ஷேகுமியாவுக்கு தண்ணீர் கொண்டு போகிறாள்'

அதனால் பீபியின் வீட்டுக்கு வரும்போதெல்லாம் கஜல், ஷேகுமியான் இருக்கும் திசையைத் திரும்பியும் பார்க்க மாட்டாள்; சுருக்கமாகக் கூறினால் பீபியின் வீட்டிலேயே அவளுக்கு எவ்வித ஈடுபாடும் இருக்கவில்லை.



கவிதாலயம் தீ நிறைந்த தட்டு போலவே இருந்தது. எதைத் தொட்டாலும் 'ஹே,ஹே' என்று வீடு முழுவதும் ஓடிவரும். அதனால் அயாஸூம் ஷஹ்ஜாதும் இங்கு வருவதே இல்லை.

கஜலைப் பார்த்ததும் ரஜியா கட்டிலை விட்டு எழுந்து உட்காருவாள். வாஹித் ஹுசேன் தனது செடிகளைக் காப்பாற்ற முற்றத்திற்கு வந்துநிற்பார். கவ்ஹர் அத்தை பரவிக் கிடக்கும் பொருள்களை அவசர அவசரமாக ஒன்று சேர்க்க ஆரம்பிப்பார். ஃபவுசியாவும் ஷாஹீனும் தங்கள் விளையாட்டுப் பொருள்களை மறைக்க முனைவார்கள்.

பாட்டனார் பலவந்தப்படுத்தி முதலில் பற்களைத் தேய்த்து முகத்தைக் கழுவச் சொல்லுவார். பிறகு ஒன்று முதல் நூறுவரை எண்களைச் சொல்ல வைப்பார். இத்தனை விரைவில் எண்களை எப்படி மறந்துவிடுகிறரோ என்று கஜலுக்கு வியப்பாக இருக்கும். மலையைப் போன்ற அவருடைய உடலும், செந்நிறக் கண்களும், விளக்குமாறு போன்ற தாடியும் கஜலுக்கு அச்சத்தைக் கொடுத்தன.

“அம்மா, அம்மா, தாத்தாவின் தாடி ஏன் அசைகிறது?” என்று ஒருநாள் அவள் கேட்டாள்.

“சும்மா இரு. தாத்தாவின் காதில் விழுந்து விடப்போகிறது..” அம்மா அவளை அதட்டினாள்.

“அப்படியானால் தாத்தா தன் தாடியைப் பார்க்கவே இல்லையா?” அவள் வியப்புடன் வினவினாள்.

ஆனால் அவள் வீட்டில் மட்டும் அமைதி எங்கே இருந்தது?

ஹுமாயூனுக்கும் பதூலுக்கும் இடையில் சண்டை வரும் போது கஜலுக்கு ஆபத்துவரும். அம்மாவைக் காக்கும் முயற்சியில் நான்கைந்து உதைகள் அவள் மீது விழும். பிறகு எஞ்சி நிற்கும் கோபத்தை அப்பா அவள்மீது தீர்ப்பார். அத்தகைய நேரங்களில் அயாஸும், ஷஹ்ஜாதும் தூரத்தில் நின்றபடியே வேடிக்கை பார்ப்பார்கள். பிறகு மௌனமாக அங்கிருந்து தப்பி வெளியே சென்று விடுவார்கள். அடிபடும்போது அவர்கள் எப்போதும் அழுவதில்லை; அப்பாவோ அடி குத்து என்று தொடர்ச்சியாகத் தாக்குதல் நடத்துவார். அவர்களோ சில சமயங்களில் சிரித்து விடுவார்கள். அண்ணன்கள் உதைபடும் காட்சி கஜலை மணிக் கணக்கில் அழ வைக்கும். ஹுமாயூன், மனைவி மக்களை விட்டு வீட்டிலிருந்த கிருத்துவ ஆயாவை அக்கறையுடன் கவனித்தான். அலுவலகத்திலிருந்து அவன் திரும்பி வந்ததும் சாயா ஹுமா யூனுக்காக தேநீர் எடுத்துக்கொண்டு அறைக்குள் செல்வாள்; பிறகு இரவில்தான் கதவு திறக்கும்.

“அப்பா எவ்வளவு நேரம் தேநீர் குடிக்கிறார்..” கதவு எப்போது திறக்கும் என்று எதிர்பார்க்கும் கஜலுக்கு அலுப்புத் தட்டிவிடும். அம்மா அவளை அடிப்பதற்காக ஓடுவாள்.

“இனி இப்படிப் பேசக்கூடாது. ஜாக்கிரதை. உனக்கு இந்தப் பேச்சுகள் எதற்கு?”

அம்மாவுக்கும் இந்தப் பேச்சுகளில் ஈடுபாடு இல்லை போலும்; அவள் உள்ளுக்குள் புகைந்து கொண்டிருந்தாள்.

ஒவ்வொரு முறையும் ஹுமாயூன் பதூலை அடித்து உதைத்துப் பணம் கொண்டு வருமாறு அவள் தாய் வீட்டிற்கு அனுப்புவான். ஆனால் இங்கு நடக்கும் அட்டகாசங்கள் வாஹித் ஹுசேனுக்குத் தெரிவிக்கப்படுவதில்லை; ஒருமுறை தனது அவல நிலையை விளக்கக் கஜல் தனது முதுகிலிருந்த தழும்பை ஃபவுசியாவுக்கு காட்ட, அவள் தாத்தாவிடம் சொல்ல, கஜலும் “அம்மாவைக் காப்பாற்றும்போது அப்பாவின் உதை எனக்குப் பட்டது” என்று சொன்னாள்.

அன்று வீடு முழுவதும் ஒரே அமளிதான்.

கஜல் மிகுந்த ஆர்வத்துடன் பார்த்தாள். பாட்டனார்

கோபத்தில் நடுங்கியவாறு கைகளால் துருவேறிய துப்பாக்கியைத் துடைத்துக்கொண்டிருந்தார். அழுகிற அம்மாவை ரஜியா மாமி தாங்கிக் கொண்டிருந்தார். அன்று எல்லாருமே, தாத்தாவுக்குத் தனது முதுகின் தழும்பை எதற்காகக் காட்டினாய் என்று கஜலைக் கடிந்து கொண்டார்கள் - சாந்தைத் தவிர! அவள் தனது அறையில், இந்த அமளியில் பங்கு பெறாமல் தனியாக உட்கார்ந்து அழுது கொண்டிருந்தாள்.

கஜல் முகத்தைச் சுளித்தவாறு, மாமியின் வெள்ளைப் படுக்கையைத் தனது அழுக்கடைந்த குதிகால்களால் தேய்த்து, விரலால் மூக்கைத் துளைத்துக் கொண்டிருந்தாள். இந்த நேரங்களில் அழுவது மிகவும் ஆபத்தானது. அம்மாவுக்குக் கோபம் தலைக்கு ஏறிவிடும். அவள் தனது கோபத்தைக் குழந்தைகளை அடித்தே தீர்த்துக் கொள்வாள். மறுபுறம், ரஜியாவுக்குக் கஜலைச் சிறிதும் பிடிக்கவில்லை. அழுக்கான சாக்கடையைப் பார்ப்பது போலவே அவள் கஜலைப் பார்ப்பாள். அவளுடைய பிள்ளைகளும் ஒன்றும் சுத்தமாக இருப்பதில்லை. ஃபவுசியா காலையில் வெகுநேரம்வரை படுக்கையில் விழுந்துகிடப்பாள். கஜலைப் பார்த்து, கரிவண்டி செல்வதுபோல், தனது பிராக்கை ஒதுக்கிப் பார்ப்பாள். ஷாஹீன் முட்டாளாக இருந்தான். துரிதமும் வேகமும் அவனிடம் இல்லை; ஒவ்வொரு காரியத்தையும் அம்மாவைக் கேட்டுத்தான் செய்வான். கீழே கிடக்கும் மாங்கனியையும் அம்மாவின் அனுமதி பெறாமல் அவன் எடுப்பதில்லை.

இந்த முட்டாள் பையனை 'ஷாஹீன் அண்ணா" என்றுதான் அழைக்க வேண்டும் என்று மாமி வற்புறுத்துவாள்.

என்றாலும் ஆண்டவன் பெயரால், இந்த ஃபவுசியாவுக்கும் ஷாஹீனுக்கும் சில அவசியமில்லாத பொருள்களின் பலன்களை கஜல் சொல்லிக் கொடுத்தாள். பச்சைப் பரங்கிக் காய்களையும், ரோசாப் பூக்களையும் பறித்துத் தய்யாவின் பையனுக்குக் கொடுத்து விட்டால் அவன் டப்பா நிறைய இலந்தைப் பழம் கொடுக்கிறான்... போலீஸ்-திருடன் விளையாட்டில் ரஷீதின் 'டை'கள் கைகளைக் கட்டுவதற்காகப் பயன்படும்... மாமியின் உதட்டுச் சாயத்தால் கைகளில் மருதாணிபோல் வரையலாம்... சுவர்களிலும் ஓவியங்கள் தீட்டலாம்... சாந்த் அக்காவின் பற்பசையைப் பற்களில் தடவி துப்பிவிடக் கூடாது... அது சாப்பிடும் பொருளாகும்... கஜல் பல முறை குளியலறையில் ஒளிந்துநின்று பற்பசையைச் சாப்பிட்டிருக்கிறாள். ஐஸ்கிரிமைப் போல் சுவையாக இருந்தது அது... இப்படிப் பலதை சொல்லிக் கொடுத்தாள். ஆனால் இந்தப் புத்தியில்லாத ஷாஹீனோ, புதிய முறைகளைக் கேட்டறிந்த பின்னர் அம்மாவிடம் ஆலோசனை

பெறப்போய் நிற்கிறான்.

"அம்மா! அலமாரி சீசாவை உடைத்துப் பிஸ்கெட் எடுத்துக் கொள்ளவா?"

அம்மாவின் அனல் கக்கும் பார்வை அவனை நடுங்கச் செய்கிறது.

"கஜல் சொல்லிக் கொடுத்தாள்..."

இதைக் கேட்டதும் பதூல் எழுந்து வருவாள். கஜலின் முதுகில் தொடர்ச்சியாகக் குத்துகள் விழும். பீபியின் வீட்டுக்கு வருவதற்கு முன்னால் ஒழுக்கமாக நடக்க வேண்டுமென்று பல உறுதி மொழிகளை அம்மா வாங்கிக் கொள்வாள்; கஜலும் தன்னால் முடிந்த அளவுக்கு அதை நிறைவேற்றி வைக்கவே முயன்றாள்.

"எங்கும் இடம் இல்லை என்றால் ஆண்டவன் மரணத்தை ஏன் தருவதில்லை?" அம்மா அவளை அடித்துவிட்டு, களைப் படைந்து, அழுவதற்காக உட்கார்ந்துவிடுவாள். எல்லாக் குத்துகளும் அவளுடைய இதயத்தின் மேல் விழுந்து விட்டதுபோல்!

அதனால் கஜலுக்குத் தன்னுடைய வீடே மிகவும் பிடித்தது. அங்கு அண்ணன்களுடன் சேர்ந்து மூவரும் தங்கள் இச்சைப்படி நடப்பார்கள். நான்கு புறங்களிலும் தொல்லைகளைத் தாங்கி அம்மா வெறுத்துப்போய்விட்டாள். பதூலைப் பார்த்துப் பீபி மறைந்து மறைந்து அழுவார். அல்லாஹ் அவருடைய பெண்களின் தலைவிதியை எப்படி அமைத்துவிட்டான். இப்போது பதூலின் கைகள் பலவீனமடைந்துவிட்டன. கஜலின் பருத்த உடலின் மேல் அதன் அடி சிறிதும் விழுவதில்லை; ஆனால் அம்மா அழும் போதெல்லாம் அயாஸ், ஷஹ்ஜாதைப்போல் அம்மாவுக்கு அழகு காட்டாமல் தானும் துக்கம் கொள்ளுவாள் அவளுடன் உட்கார்ந்து அழுவாள்.

நாள் முழுவதும் அவர்களுடைய அட்டகாசம் சொல்ல முடியாது. ஆனால். மாலையில் அப்பா அலுவலகத்திலிருந்து திரும்பி வரும்போது எல்லாரும் மூலைகளில் பதுங்கிக் கொள்வார்கள்.

பகலில் அம்மா தூங்கிவிடும்போது கஜலுக்குத் தன்னுணர்வு வரும். எல்லா உலகமும் அவள் கைக்கு வந்துவிடும். அப்போது யாரும் அவளுடன் இருக்க மாட்டார்கள். அப்போது அவள் பல குறும்புகள் செய்வாள். எல்லாத் தடைகளும் நீங்கித் தன் சுதந்திரத்தை எண்ணிப் பெருமை கொள்வாள்.

அவள் மெதுவாகக் கதவைத் திறந்து வெளியே போவாள். அந்தப் பகுதியைச் சுற்றி வருவாள். கடும் வெயிலில், சூடான

காலை வேளையில், காலணி இல்லாத வெறுங்கால்களால் நடக்கும்போது, எவ்வளவு சுகமாக இருக்கும். கஷ்மீர்ப் பள்ளத் தாக்கிலும்கூட அந்தச் சுகம் கிடைக்காது! அப்பா, அம்மாவின் அடிகளை எல்லாம் அவள் மறந்துவிடுவாள். பிள்ளை பிடிக்கும் மந்திரவாதி யாராவது தன்னையும் எடுத்துக்கொண்டு மாந்திரிக உலகத்திற்குச் சென்றுவிடவேண்டும் என்று அவள் மனம் விரும்பும். அங்கே வைரக் குவியல்கள் இருக்குமே. அவள் வைரங்களை எடுத்துக்கொண்டு ஓடிவிடுவாள். சிலவற்றை விற்று மினுமினுக்கும் சொக்காயை வாங்குவாள். ஈரலைத் தீயில் சுட்டுச் சாப்பிடுவாள். ஒரு நாள் ரஜியா மாமி செய்தாளே, அப்படி! பிறகு அப்பாவும் அவளை அடிக்க மாட்டார். வைரங்களைத் துடைத்துச் சுத்தமாக்கவே அவருக்கு நேரம் சரியாக இருக்கும். தன்னுடைய அப்பா தன்னை அடிப்பதில்லை என்று ஃபவுசியா பொய் சொல்கிறாள். ஆனால் பீபி வீட்டில் பல வேடிக்கைகள் நடக்கும். மாமா ஃபவுசியாவைக் கைகளில் தூக்கித் தூக்கி முத்தமிடுவார். ஷாஹீன் காலணிகளுக்குப் பதிலாக செருப்புப் போட்டுக்கொண்டு போனால் போகட்டுமே, எதற்காகத் தடுக்கிறாய் என்று அவர் மாமியைக் கடிந்துகொள்வார். ஷாஹீன் தன் அப்பாவுக்கு முன்னால் பலமாகச் சிரிக்கிறான். மாமாவும், தன் அப்பாவைப்போல் அடிக்காமல் அவனுடன் சேர்ந்து தானும் சிரிக்கிறார்.

"டாடி.. என்னால் இதற்கு விடைகாண முடியவில்லை." பவுசியா பிணக்குடன் நோட்டுப் புத்தகத்தை வீசி எறிவாள்.

"வா, நான் சொல்லித் தருகிறேன்" மாமா குனிந்து அதை எடுப்பார்.

கஜலுக்கும் ஃபவுசியாவுக்கும் வயதில் சில மாதங்கள் வித்தியாசமே இருந்தது. அதனால் ஃபவுசியாவின் பல செய்கைகளைப் பின்பற்ற வேண்டும், தனது அப்பாவையும் மகிழச் செய்ய வேண்டுமென்று அவள் ஒருநாள் நினைத்துக் கொண்டாள்.

"அப்பா—அப்பா— என்னால் இந்தப் பாடத்தைப் படிக்க முடியவில்லை", அப்பாவுக்கு எதிரில் புத்தகத்தை வீசி எறிந்தாள்.

"அப்படியா, இப்போதே படிக்க வைக்கிறேன்" அவன் தடியை எடுத்துக்கொண்டு பாய்ந்தான்.

அவள் எவ்வளவு இனிமையான குரலில் இனிமையான பாட்டுகளைப் பாடினாலும், சாந்த் அக்காவைப்போல் ஒழுங்காக, சுத்தமாக இருந்தாலும், அம்மாவுக்கு அவள்மேல் பிரியம் ஏற்படுவதே இல்லை.

அவள் இரவும் பகலும் முகத்தை மூடிக்கொண்டு படுத் திருப்பாள். பிறகு திடீரென்று எழுந்து உட்காருவாள்.

மக்காவிலிருக்கும் 'காபா' படத்தைத் தனது சேலைத் தலைப்பால் சுத்தம் செய்வாள். எலுமிச்சம்பழமும், இனிப்பும் சாப்பிடுவதைப் பார்த்து எல்லாருடைய வாயிலும் நீர் சுரக்கத்தான் செய்கிறது. அதைப் போலவே ஒரு குழந்தையை அதன் தாய் அன்புடன் தழுவி முத்தமிடுவதைப் பார்க்கும்போது கஜலின் பசி அதிகரித்து விடும். அன்றிரவு அவள் பல கனவுகளைக் காணுவாள். மாமியைப் போல் பளபளக்கும் சேலையை அணிந்து, உதடுகளுக்கு வண்ணம் பூசி, அவள் எங்கேயோ செல்லும்போது திடீரென்று அன்னை, 'ஜான்சிராணி'போல் வருவாள். (ஒருமுறை சாந்த் அக்கா நாடகத்தில் அவ்வாறு நடித்தாள்) பிறகு அவளைத் தன் மார்புடன் அணைத்துக் கெள்வாள். முத்தமாரி பொழிவாள். அவளுக்கே மூச்சுத் திணறும்... கண்களைத் திறக்கும்போது அவளுடைய மோசமான துணிகளின் நினைவு வரும். கல்யாணத்திற்கு முன்னால் அம்மா உடுத்திய ஆடைகளைத் கத்தரித்துத் துணி களாகப் பாதுகாத்து வந்திருக்கிறாள். அவளால் முடிந்தால் கஜலின் சீர்வரிசையிலும் அவற்றையே அனுப்பி வைப்பாள். கஜல் வேண்டுமென்றே அவற்றில் பல ஓட்டைகளைச் செய்து விடுவாள். கசக்கிக் கசக்கி அழுக்காக்குவாள். அதனால் மாமி அவற்றைத் தன் அலமாரியில் வைத்துக் கொள்ளவே மறுத்துவிட்டாள்.

"எவ்வளவு துர்நாற்றம் வருகிறது. இவை அழுக்காகிவிட்டன; உன் வீட்டுக்கே எடுத்துச் சென்று பெட்டியில் வைத்துக்கொள்". மாமி துணிகளை எடுத்துப் படுக்கையின் மேல் வீசும்போது அவை தரையில் விழுந்தன. கஜலின் இதயமே வெடித்துவிட்டது.

"இந்த உயர்ந்த ஆடைகளை நான் உங்கள் அலமாரியில்தான் வைப்பேன். எங்கேயாவது போக வேண்டுமென்றால் வீட்டுக்குப் போய் எடுத்து வரமுடியுமா?"

"நான் வைக்கமாட்டேன்" மாமி முகத்தைச் சுளித்தாள். "இவ்வளவு பெரியவளாகிவிட்டாய். ஆடைகள் அணியத் தெரியவில்லை; எங்கள் ஃபவுசியாவும் இருக்கிறாளே. வெள்ளை பிராக்கில் கறை ஏதும் படாமல் வைத்திருப்பாள். நீ அலீப் லைலாவின் அரச குமாரி அல்லவா. எதுவும் தெரியவில்லை."

பிறகு அவளுடைய 'பிஸ்மில்லாஹ்' வைபவம் நடந்தது. பீபி மட்டும் அந்த நாளை நினைவில் வைத்திருந்தார். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் இன்று கஜலின் 'பிஸ்மில்லாஹ்' நாள் என்பதும் தெரிந்திருக்கவில்லை. ஆனால் மாலையில் பீபி வந்தாள். கொப்பரை நிறையப் பிரியாணி. நான்கு தட்டுகளில் இனிப்புகள், பூ, செந்நிற சாட்டின் பைஜாமா, சரிகை போட்ட மேலாடை, மின்னும் சிவப்புச் சொக்காய். இந்த ஆடைகளைக் கஜல் தனது இதயத்தினுள் வைத்துக் கொண்டாள். தன் உடலைவிட்டு

அவற்றை எடுக்கவே கூடாது என்று அவள் மனம் விரும்பியது.

இந்த ஆடையை அவள் ஈகைப் பெருநாளிலும் அணிந்தாள். பக்ரீத் பண்டிகையிலும், ஃபவுசியாவின் பொம்மைக் கல்யாணத்திலும், பிறகு சாந்த் அக்காவுடன் நாடகம் பார்க்கச் சென்றபோதும் இந்த ஆடை கிடைத்தது. ஷாஹீனும் அவனுடைய நண்பர்களும் கவிதாலயத்தில் குழந்தைகள் கவியரங்கம் நடத்தியபோது இதே ஆடையணிந்து பாட்டனார் எழுதிய கவிதையைப் படித்தாள்.

குழந்தைகளின் வேடிக்கையைப் பார்க்க வீடு முழுவதும் கூடி விட்டது. கவ்ஹர் அத்தை சிரித்துச் சிரித்து வயிற்றைப் புண்ணாக்கிக் கொண்டாள். ஷாஹீன் பாட்டனாரைப் போலவே நடித்தான். உரத்த குரலில் செய்யுளைப் படித்தான். ஒவ்வொரு வரியிலும் தானே அசைந்தாடினான். ஃபவுசியா மட்டும் நாணமடைந்தாள். தனது கவிதையை மறந்துவிட்டாள். ஆனால் கஜல், சாந்த் அக்காவின் பாணியை மேற்கொண்டாள். அவளுடைய நடையில் ஒப்பனை செய்துகொண்டு தனது இனிமையான குரலில் கவிதை பாடியபோது, ரஜியா முகத்தைச் சுளித்தவாறு ரஷீதிடம் கூறினான். "இங்கே படங்களில் இருக்கும் உங்கள் மூதாதையர் இவள்மீது இன்று பெருமைப்படுவார்கள். இத்தகைய மோசமான நடையை இவள் எங்கிருந்து கற்றுக்கொண்டாளோ?"

ரஷீத் கவனமாக நோக்கினான். கவிதாலயத்தின் சுவர்களில் தங்கச் சட்டங்களில் அடைபட்டுக்கிடந்த எல்லாக் கவிஞர்களும் இன்று மலர்ச்சியுடன் காணப்பட்டார்கள். நீண்ட நாட்களுக்குப் பிறகு இங்கு புதியதொரு பிரளயம் ஏற்படப் போகிறது. இந்தக் கூடத்தில் இரவு என்றுமே வருவதில்லை; ஏனெனில் இரவு வந்ததும் மது பங்கிடுபவன் உதயமாகி விடுகிறானே!

அன்று சாந்த் தனது நறுமணம் நிறைந்த ஆடைகளுடன் அவளை அணைத்து முத்தமிட்டாள். "சபாஷ்! நல்ல நடிப்பு. நாடகங்களிலும் நான் உனக்குச் சிறிய பாத்திரங்கள் தருகிறேன்."

ஆனால் அப்பாவும் அம்மாவும் வழக்கம்போல் அன்றும் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அயாஸூக்காகவும், ஷஹ்ஜாதுக்காகவும் அப்பா சில நேரங்களில் துணிகள் கொண்டு வருவார். தின்பண்டங்களும் கொண்டு வருவார்; ஏனென்றால் அவர்கள் திருக்குமாரர்கள் அல்லவா? அலீப் லைலாவின் இழந்துவிட்ட பெருமையை அவர்கள் ஒருநாள் மீட்டுவருவார்கள் என்ற நம்பிக்கை ஹூமாயூனுக்கு இருந்தது. அதனால் அவன் ஆண் மக்களைப் பெரிதும் விரும்பினான். அவர்கள் மீது எந்தக் கொடுமையும் இழைப்பதில்லை; அவர்களுடைய ஒழுங்கீனங்களைப் பார்த்தும்

பாராததுபோல் விட்டுவிடுவான். ஆனால் கஜல் மீது அவனுக்கு வெறுப்பு இருந்தது. 'முர்ஷிதுகளுக்குப் பெண் நல்லது இல்லை' என்ற அம்மாவின் பேச்சு அவனுக்கு நினைவில் இருந்தது. ஆனால் உண்மையும் அதுதான். கஜல் பிறந்ததும் அலீப் லைலாவின் மீது துரதிருஷ்டத்தின் முகில்கள் பரவிவிட்டன. ஹுமாயூனுக்கு நற் பேறாக அமைய வேண்டிய மிஸ்கீன் அலிஷாஹ்வின் மரணம் அவனுக்கான வெற்றியின் எல்லாக் கதவுகளையும் மூடிவிட்டது. அலீப் லைலாவிருந்து கிளம்பி நூற்றைம்பது ரூபாய்க்கு எழுத்தர் வேலையைப் பார்க்கிறான். என்றுமே நோயாளியாக இருக்கும் மனைவியைச் சகித்துக் கொள்கிறான். கேடுகெட்ட மகளுக்கு உணவும் உடையும் தருகிறான். தன் தந்தையின் அழிவில் அவள் எவ்விதக் குறையும் வைக்கவில்லை...

ஆனால் கஜலின் இரண்டு சகோதர்களுமே தங்கள் சிறப்பைப் பற்றி எதுவும் உணர்ந்திருக்கவில்லை. பள்ளியிலிருந்து வந்ததும் பிடிவாதம் செய்து தலைக்கு இருபத்தைந்து காசு வாங்காமல் அம்மாவை விடமாட்டார்கள். அந்தக் காசு கிடைத்ததும் திரைப் படம் பார்க்க இருவரும் ஓடி விடுவார்கள். காலையில் எழுந்து நாடியா, ஜான்கவாஸைப்போல் மரவாள்களை எடுத்துக்கொண்டு சுவர்களில் ஏறிக் குதிப்பார்கள். அம்மாவின் சேலைகளை எடுத்து, கட்டிலை நிறுத்திக் குதிரைகள்போல் அமைப்பார்கள். அயாஸுக்கு பதினொன்று வயது, ஷஹ்ஜாத் பன்னிரெண்டு வயது. ஆனால் வயதைவிட வளர்ச்சி அடைந்தவர்கள். நல்ல உடலமைப்பு, நல்ல உயரம். ஹுமாயூனின் எல்லாக் குழந்தை களிலும் தங்கள் பாட்டனாரின் அழகும் கவர்ச்சியும் இருந்தன. கஜலின் கண்களில் அதே ஈர்ப்புச் சக்தி இருக்கிறது என்று ஹுமாயூனின் தாய் சொல்வார்—அந்தக் கவர்ச்சி மிஸ்கீன் அலி ஷாவைப் பெண்களினிடையே முக்கியத்துவம் அளித்தது. அதே செந்நிறத் தட்டு போன்ற முகம்—அதே ஈரமான பாதி திறந்த கண்கள்—அதே ஆழ்ந்த மௌனம். தாமே மயங்கும் குணம். ஆனால் இவள் தன்னுடைய பாட்டனாரின் நற்பேறும் பெற் றிருக்கிறாளா?

ஒரு நாள் கஜல் முற்றத்தில் உட்கார்ந்தவாறு அம்மாவிடம் திருக்குர்ஆனின் ஓர் அத்தியாயத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். கையில் வாளுடன் ஷஹ்ஜாத் குதித்தான். ஒரு கையில் கஜலை எடுத்துக்கொண்டு கட்டில் மீது ஏறி விட்டான். பிறகு இரண்டாவது கையை ஜான் கவாஸ் நடையில் மேலே எடுத்து 'ஹாய்' என்று கத்தினான்.

முதலில் கஜலுக்கு ஒன்றுமே புரியவில்லை; பருந்து ஒன்று மாமிசத் துண்டை எடுத்துக் கொண்டு பறந்துவிட்டதுபோல்

தெரிந்தது. பிறகு அவள் பெருங் கூக்குரல் எழுப்பி அழுது விட்டாள். ஆனால் இரண்டு சகோதரர்களும் மகிழ்ச்சியால் குதித்தனர்.

"கஜ்ஜு! இன்று நாம் உன்னை நாடியாவாக்கிவிட்டோம். திரைப்படத்தில் ஜான்கவாஸ் இதைப்போலவே நாடியாவைத் தூக்கிச் செல்வான்."

"வேண்டாம். நான் நாடியா ஆகமாட்டேன். அல்லாஹ் நாடியாவை நரகத்தில்தான் போடுவார்" அவளுக்கு அம்மாவின் அறிவுரை நினைவுக்கு வந்துவிட்டது.

ஆனால் மறுநாள் நடுங்கியவாறு தனது ஆடைகளைச் சரி செய்துகொண்டு முற்றத்தில் நின்றிருந்தாள். வாள் ஏந்தி ஷஹ்ஜாத் எப்போது சுவரிலிருந்து குதிப்பான். எப்போது தனது இடையைப் பற்றிக்கொண்டு பறந்து விடுவான் என்று காத்திருந்தாள். அவள்பால் சகோதரர்களின் கவனம் திரும்பி இருப்பது அவளைப் பெருமை கொள்ளச் செய்தது. தன் முக்கியத்துவத்தை உணர்ந்து, ஃபவுசியாவின் மேல் பொறாமை கொள்வதையும் மறந்துவிட்டாள். தன் இரண்டு அண்ணன்களையும் திரைப்பட நாயகர்களைவிடத் துணிவுள்ளவர்களாக நினைத்தாள். அவர்களுடைய எஃகு போன்ற குத்துகளையும், சகிக்க முடியாத உதைகளையும், கசப்பான அநீதிகளையும், அவள் சிரித்தவாறே சகித்துக் கொள்வாள். இந்தச் சிறிய வயதிலேயே அன்பு-வெறுப்பு கொண்ட பார்வைகளை உணரும் சக்தியை அவளுடைய உள்ளுணர்வு அவளுக்கு அளித்து விட்டது. தன்னை நோக்கி அன்புடன் பார்ப்பவர்களின் ஏழு கொலைகளையும் மன்னித்துவிடுவாள் அவள்! ஏனெனில் அத்தகைய பார்வை மிகக் குறைவாகவே கிடைக்கிறது. அந்த நபரின் எல்லாக் குறைபாடுகளும் இறக்கைகள் பெற்றுப் பறந்து விடுகின்றன. பிறகு அங்கே நம்பிக்கையின் ஒளிக்கதிர் தோன்றும். ஓர் இலை தலை தூக்கி இங்கும் அங்கும் பார்க்கும். பிறகு தனது கழுத்தை நீளமாக நீட்டும். பிறகு ஒரு மொக்கு தனது இதழ்களை விரிக்கும். பிறகு ஒரு கொடி கஜலின் நரம்புகள் அனைத்தையும் சுற்றிக்கொள்ளும்.

# 11

முந்தின நாள் நடுப்பகலில் தலையில் பேன்பார்க்கும்போது அம்மா சொன்ன அறிவுரைகள் கஜலுடைய நினைவில் பசுமையாக

இருந்தன. அவள் ஒரு கதை சொன்னாள்: ஒரு மகள் தன் தந்தைக்கு தண்ணீர் கொடுக்காததால் எப்படி ஆகிவிட்டாள்! இப்போது அது வானத்தில் ஒரு சொட்டுத் தண்ணீருக்காக, சுற்றிக்கொண்டு அலைகிறது. அதனுடைய தொண்டையில் ஒரு துவாரம் இருக்கிறது. மழை பெய்யும் நேரத்தில் அது வாயைத் திறந்து கொண்டு பறக்கும். தொண்டையில் தண்ணீர் விழுந்து அது நனையட்டும் என்று—மற்றொரு பெண் தன்னுடைய கணவனின் பேச்சைக் கேட்கவில்லை. அல்லாஹ் அவளை நரகத்தில் போட்டு விட்டான்; ஒருபெண் அந்நிய ஆண்களுக்கு முன்னால் செல்லுவாள்—அவளை ஒரு துறவி...

அப்படியென்றால் சாந்த் அக்காவும் அப்படி ஆகிவிடுவாரா? அவளுக்கு சாந்த் அக்காவின் மேல் கவலை அதிகமாக இருந்தது; ஆனால் அவளுடைய கேள்வியைக்கேட்டு அம்மா ஏனோ அவளை அறைந்து விட்டாள். உணவுண்ணும்போது கஜல் யோசனை செய்தாள். ஆனால் வீட்டில் அழுது புலம்பும் பெண்கள் அவளைச் சரியாக யோசனை செய்யவும் விடவில்லை. அவள் அடுப்புக்கு அருகில் தரையில் உட்கார்ந்திருந்தாள். சாயா பாலில் ரொட்டியை நனைத்து அவளுக்கு ஊட்டினாள் அப்போதும் அவள் இரவில் நடந்த நிகழ்ச்சியை மறக்கவில்லை. ஏதோ ஒரு விஷயத்தில் சண்டைபோடும்போது அப்பா காலால் உதைக்க, அம்மா முற்றத்தில் வந்து விழுந்தாள். கஜல் முழு பலத்துடன் அவளை எடுக்க முயன்றாள். முடியாமற் போகவே வெளியே விளையாடிக் கொண்டிருந்த ஷஹ்ஜாதையும் அயாஸையும் அழைத்துவந்தாள். பிறகு தெருவிலிருந்து எல்லாரும் வந்துவிட்டார்கள். அனைவரும் அம்மாவைத் திருப்பித் திருப்பிப் பார்த்தார்கள். பிறகு பீபி வீட்டிலிருந்து எல்லாரும் ஓலமிட்டவாறு வந்தார்கள். பீபி வந்தவுடன் முதலில் கஜலை கவிதாலயத்திற்கு அனுப்பிவிட்டார். அங்கு நொண்டி அத்தையும் இல்லை. ஃபவுசியாவும் ஷாஹீனும் மட்டுமே இருந்தார்கள். அவர்களும் கஜலை மிகவும் பரிதாபத்துடன் நோக்கினார்கள். அவளுடைய எந்த விஷயத்திற்கும் தடை சொல்லவில்லை. அவள் சப்போட்டாக் காய்களை மனம் விரும்பிய அளவுக்குப் பறித்து வீசி எறிந்தாள். கூடத்தில் கற்கள் மீது துப்பினாள். மாமியின் படுக்கை மீதேறிக் குதித்தாள். ஃபவுசியாவுடனும் ஷாஹீனுடனும் சண்டை போட்டாள்.

மாலையில் வீட்டுக்கு அழைக்கப்பட்டாள். நிறையப் பேர் வீட்டில் கூடி இருந்தார்கள். இருப்பினும் பயங்கரமான அமைதி குடிகொண்டிருந்தது. அயாஸும் ஷஹ்ஜாதும் சோகமான முகங்களுடன் பீபிக்குப் பக்கத்தில் அடக்கமாக உட்கார்ந்

திருந்தார்கள். அம்மா எங்கே போய்விட்டாள்? அவள் பலமுறை கேட்ட பிறகு பிபி அழுதவாறே, "அம்மா மருத்துவமனைக்குப் போய்விட்டாள்" என்று சொன்னார். கஜலும் இதைக்கேட்டு ஒரு மூலையில் உட்கார்ந்துவிட்டாள். ஏனோ ஒவ்வொரு பெண்ணும் அவளை இன்று அன்புடன் தடவிக் கொடுத்தாள். ஒவ்வொரு பெண்ணும் அவளைப் பலமுறை தன்னிடம் அழைத்து, மார்புடன் அணைத்து அழுதாள். அழுகையின் இந்தத் தொடர்ச்சி கஜலுக்குக் கசப்பாக இருந்தது. வேறொரு நேரமாக இருந்தால் இந்த அன்பாதரவுச் செயல் அவளைப் 'புறா'வாக்கி இருக்கும்.

பீபி தனது பார்வையை சூனியத்தில் பதித்தவாறு சிலையாகி இருந்தார். மாமி வேண்டுமென்றே கண்களைக் கசக்கி, சோகத்தை வெளிப்படுத்தினாள். நொண்டி அத்தை, பெண்கள் புடைசூழ ஓலமிட்டாள். தனது முடியைப் பேய்களைப்போல் விரித்துக் கொண்டார். மூகத்தை மூடிப்பெருங்குரல் எழுப்பினாள்.

"என்ன வயதாகிவிட்டது. அவளுடைய தோழிகள் இன்னும் கன்னியாகவே இருக்கிறார்கள். முர்ஷிதுகளின் முகங்களைத் தீ பொசுக்கட்டும். அவர்கள் நாசமாகப் போகட்டும். எனது மகளின் இதயத்தை வறுத்துச் சாப்பிட்டு விட்டார்களே... அடியே, பதூல்... உன்னை எங்கே காணப்போகிறேன்..." அவளுடன் சேர்ந்து எல்லாருமாகப் புலம்பினார்கள்.

"கஜல், கஜல், இப்போது எங்கள் வீட்டிற்கு நீ வந்தால் நான் என் பொம்மையை உனக்குக் கொடுத்துவிடுவேன்" ஃபவுசியா தனது தாராள மனப்பான்மையை வெளிப்படுத்தினாள்.

"ஏன், எனக்கு எதற்குத் தருவாயாம்?" கஜல் தனது மூக்கைச் சிந்தித் தரையில் துடைத்தாள்.

"ஏனென்றால் இன்று உனது அம்மா செத்துவிட்டார்களே"

"இல்லை மகளே, அப்படிச் சொல்வதில்லை" ரஜியா அவசரமாக ஃபவுசியாவின் கையைப் பிடித்து ஒரு மூலைக்குக் கொண்டு சென்று அவளுடைய காதில் ஏதோ கிசுகிசுத்தாள்.

'அம்மா செத்துவிட்டார்களா? செத்து எங்கே போய் விட்டாள்?' கஜலுக்கு எதுவும் புரியவில்லை. அவள் சோர்வுடன் ஆண்கள் பகுதிக்குச் சென்று விட்டாள்.

பாட்டனார் தனது இரு கைகளாலும் தலையைப் பிடித்தவாறு உட்கார்ந்திருந்தார். ரஷீத் மாமா தனது சிவந்த கண்களைக் கைக்குட்டையால் அடிக்கடி துடைத்துவிட்டுக் கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்பாவும் ஒன்றும் புரியாதவர்போல், முடியைக் கலைத்துவிட்டு, உட்கார்ந்தவாறே வேகமாகக் கால்களை அசைத்துக்கொண்டு இருந்தார். புதிய புதிய மனிதர்கள் இருந்தார்கள். ஆனால் எல்லாருமே மௌனமாக

இருந்தார்கள். சொல்ல வேண்டியவை அனைத்தையும் சொல்லி முடித்துவிட்டதுபோல். பிறகு அவளுடைய பார்வை சாந்த் அக்காவைக் கண்டது. கறுப்பு நிற மேல் துண்டுடன் உட்கார்ந் திருந்தார். அழுததால் அவளுடைய முகம் செந்தீயாகத் தகித்தது. அவளுடைய கண்களும் வீங்கி இருந்தன.

பிறகு அவள் இசையினிமை நிறைந்த தனது குரலில் பேசினாள்.

"ஷேக்ஸ்பியர் சரியாகவே சொல்லியிருக்கிறார். உலகம் ஒரு நாடக மேடை. ஒவ்வொருவரும் தனது பகுதியை முடித்துவிட்டுச் செல்கிறார்கள். ஆனால் பாவம் பதூல் சின்னம்மா... எத்தகைய சோகப் பாத்திரத்தைச் செய்து முடித்தார்..." அவள் மீண்டும் அழுவதற்குத் தயாரானாள். ஒரே நேரத்தில் அவளுக்குப் பலர் ஆறுதல் சொல்ல நெருங்கி வந்தார்கள்.

"கல்வியறிவு பெற்ற தாங்களே, இப்படி..."

"தாங்கள் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும் குமாரி சாந்தினி... இவ்வளவு துக்கம் கொண்டாடுவது நல்லதல்ல..."

பிறகு ரஷீதின் நண்பரான பான் சாஹிபுக்கு, தன் நாடகத்தில் சாந்த் நடிக்கிறாள் என்ற நினைவு வந்தது. அவள் இப்படித் துக்கம் கொண்டால் என்ன நாடகம் நடக்கும்? எனவே அவர் மெதுவாக ரஷீதிடம் பேசினார். "நீங்களும் சாந்தும் என்னுடன் வாருங்கள். வெளிக்காற்றில் சாந்துக்கு ஆறுதல் கிடைக்கும்." இதைக்கேட்டு ரஷீத் மெதுவாக சாந்திடம் கூறினான்: "நீ பான்சாஹிபுடன் வெளியே போய்விட்டு வா. நான் இங்கே அப்பாவுடன் இருக்க வேண்டும்."

பான் சாஹிப் நிறைய செல்வாக்குள்ளவர்—ஐயாயிரம், பத்தாயிரம் ரூபாய் ஒப்பந்தங்கள் பெற்றுத் தருவது அவருக்குச் சில நிமிட வேலையாக இருந்தது.

"அல்லாஹ்... வேண்டாம். எங்கு போகவும் எனக்கு மனநிலை சரியாக இல்லை" சாந்த் விசித்திரமாக முகபாவத்தை மாற்றினாள்.

பான் சாஹிப் மௌனமாகிவிட்டார். இளமையான ஓர் உடலைவிட்டு அகாலத்தில் ஆன்மா ஒன்று வெளியேறிச் சென்றுவிட்டதே என்பதற்காகவோ, அல்லது சாந்தின் சோகமான முகம் அறையிலிருந்த எல்லா ஆண்களின் இதயங்களிலும் இருளை நிரப்பிவிட்டது என்பதற்காகவோ தெரியவில்லை, எல்லாருமே கவலை கொண்டார்கள். சாந்தின் சின்னம்மா காலமாகிவிட்டார் என்ற செய்தி சாந்தின் எல்லா நண்பர்களையும் கொண்டு வந்துவிட்டது. நீளமான கார் ஒன்றிலிருந்து சாந்த் இறங்கி, ஹுமாயூனின் வீட்டுக்குள் செல்வதைக் கண்டு அண்டை அயலார் அனைவருமே ஹுமாயூனுக்கு ஆறுதல் சொல்ல வந்து

விட்டார்கள். அறையில் தரையின்மீது உட்காருவதற்கும் இடம் இல்லை. அதனால் பான் சாஹிப் தனது கம்பளிக் கால் சட்டையைப் பற்றிக் கவலைப்படாமல் சாந்த்துக்குப் பக்கத்தில் சமுக்காளத்தின்மீது உட்கார்ந்துவிட்டார். பதூலும் அவளுடைய புகுந்த வீட்டாரும், அவளது சாவின்போது ரஷீதின்—சாந்தின் இவ்வளவு நண்பர்கள் துக்கம் விசாரிக்க அவர்கள் இல்லத்திற்கு வருவார்கள் என்று நினைத்திருக்க முடியாது.

பான் சாஹிப் செல்வாக்குள்ளவர். சமூகத்தில் மதிப்பு வாய்ந்தவர் என்பதை ஹுமாயூன் அறிவான். அவரது தந்தையும் பாட்டனாரும் பேகம் பஜாரில் வட்டிக்கடை வைத்து நடத்து கிறார்கள். ரஷீதின் மரபுவழிச் சொத்தை மெதுவாகத் தங்கள் பக்கம் இழுத்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் குடும்பத்திலேயே பான் சாஹிப் மட்டும் துணிந்து, பெரிய அளவில் வாணிபம் செய்ய மூலதனமாகச் செலவிட்டார். எனவே தன் புகழை நிலை நாட்டவும், மக்களின் நன்மதிப்பைச் சம்பாதிக்கவும் அவர் பல திட்டங்களைத் தீட்டினார். மனிதன் மீது இழைக்கப்படும் கொடுமைகளைத் தடுத்து நிறுத்த இயக்கம் ஒன்றை ஆரம்பித்து, மாளிகைகளின் புற வீடுகளில் பிறந்த எல்லா ஆண்களையும் பெண்களையும் ஒன்று திரட்டினார். வாழ்நாள் முழுவதும் செருப்படி வாங்கி, சிவந்த இரும்புக் கம்பிகளால் சூடு போடப் பட்டு வாழ்வில் நலிந்த அவர்களும், வீட்டில் உள்ள இளம் ஆடவர்களால் சீரழிக்கப்பட்ட பெண்களும் அதில் சேர்ந்தார்கள். இத்தகைய பெண்கள் பின்னர் பேகம்களால் கொத்தடிமைகள் போல் துன்புறுத்தப்பட்டுச் செத்துப்போவார்கள்.

பான்சாஹிப் ஒரு கலாச்சார சங்கத்தின் தலைவராகவும் இருந்தார். மருத்துவக் கல்லூரியின் நாடகம் ஒன்றில் சாந்தைப் பார்த்தார். திடீரென்று தனது கலாச்சாரக் குழுவின் மீது படர்ந்துவிட்ட அமாவாசை இருள் விலகப் போகிறது என்பதை உணர்ந்தார். ஆனால் அவர் அறிவுத்திறன் படைத்தவர். எனவே நேரிடையாகச் சாந்திடம் மலர்க்கொத்தை நீட்டி வாழ்த்துரை கூறுவதற்குப் பதிலாக ரஷீதுடன் தொடர்பு கொண்டார். அவனுக்குப் பெரிய கட்டிட நிர்மாண வேலை ஒன்றின் ஒப்பந்தத்தை வாங்கிக் கொடுத்தார். பிறகு ரஷீதை அடிக்கடி சந்திக்க வருவார். அதற்கு ஈடாக, சாந்த் போன்ற நடிகையை வெள்ளிப் பெட்டியில் வைத்துப் பான்சாஹிபின் கலாச்சாரக் குழுவுக்காக அளிப்பது ரஷீதின் கடமையாகிவிட்டது. முதல் முறையாக பான் சாஹிப் சாந்தை மிகமிக ஒழுக்கமான முறையில் சந்தித்தார். சாந்தும் அதற்கு அதிக முக்கியத்துவம் தரவில்லை; ஏனெனில் பான் சாஹிப் நாற்பதைத் தாண்டிவிட்ட மனிதர்.

அவரது வழுக்கைத் தலையும், பருமனான உடலும், கருநிறமும், சாந்த் போன்ற மதிமுக அழகியின் கவனத்தைக் கவரும் அளவுக்கு வலுப்பெற்றிருக்கவில்லை. அதனால் சாந்துக்கு முன்னால் தனது சிறப்பு என்று தனது செல்வத்தைத் தவிர அவரால் வேறு எதைக் காட்ட முடியும்?

இன்று, அவர் சிறிது முயற்சிக்குப் பிறகு சாந்தை தன்னுடன் 'ஹோஷ் ரூபா' மாளிகை வரை வருவதற்கு இணங்கச் செய்து விட்டார்.

சாந்த் அக்கா அந்த வழுக்கைத் தலையுடன் நீண்ட பளபளப்பான காரில் உட்கார்ந்து சென்றுவிட்டதும் கஜல் மீண்டும் உள்ளே வந்தாள். ஈரமான தரை மீது அவள் சுற்றிச் சுற்றி வந்தாள். இறுதியில் பழைய துணிக் குவியல் மீது படுத்து கண்களைக் கசக்கினாள். அம்மா செத்துவிட்டார்களா? இதற்காக அவள் அழ ஆரம்பித்தால் அப்பா கண்டிப்பாக அடிப்பார். என்றாலும் அவளுக்கு அம்மாவின் நினைவு வரவே, அழுகை வந்துவிட்டது.

அவளுடைய அழுகுரல் கேட்டு எல்லாரும் ஓடி வந்தார்கள். இதற்கு முன்னால் அவள் அழுகையை யாரும் பார்க்காதது போல்! கஜலுடன் சேர்ந்து எல்லாரும் அழுதார்கள்.

"ஹுமாயூன் மியான்—நீங்கள் உங்கள் பையன்களை வைத் திருங்கள். நான் கஜலை என்னுடன் வைத்துக்கொள்கிறேன்," இது பாட்டி.

"ஆமாம். கஜல் கவிதாலயத்தில்தான் இனி இருப்பாள்," வாஹித் ஹுசேனும் வேகத்துடன் கூறினார்.

# 12

காலையில் ஹுமாயூன் சோகமான முகத்துடன் தனது தலையை இரண்டு கைகளிலும் தாங்கியவாறு உட்கார்ந்திருந்தான்.

சாயா தனது கருநிறக் கைகளால் இனிப்புக் கலந்து அவனுக்குத் தேநீர் ஊட்ட முயற்சி செய்தாள். ஆனால் இரு முறையும் அவளுடைய கையை அவன் தட்டிவிட்டான். பதூலால் அவனுக்குச் சுகம் கிடைக்கவில்லை என்றாலும் சமயங்களில் தன் வீட்டிலிருந்து நூறு இருநூறு வாங்கிவருவாள். அதனால் சிக்கல் இல்லாமல் செலவினங்கள் நடந்தன. இப்போது இப்படிப் பட்ட பணக்கார மனைவி எங்கே கிடைப்பாள்; இந்தக் கவலை

அவனைத் துன்புறுத்தியது.

பீபி தாமே அடுப்புக்குப் பக்கத்தில் உட்கார்ந்து அயாஸுக்கும் ஷாஹீனுக்கும் நெய்யில் பூரி செய்துகொடுத்தார். இவ்வாறு பூரி செய்து கொடுத்தால் ஒரு மாதத்திற்கான நெய் ஒரே நாளில் தீர்ந்துவிடுமே என்று ஹுமாயூன் கவலைப் பட்டான்.ஆனால் அவனுடைய மாமியாருக்கு இந்தக் கவலையே இல்லை. கவிதாலயத்தின் அரசி அல்லவா? தனது பேரக் குழந்தைகளை அவர் எவ்வளவு விரும்புகிறார் என்பதைத் தனது மருமகனுக்குக் கட்டவே அவர் இப்படிச் செய்கிறார்.

பூரி வாசனையை முகர்ந்து கஜலும் அழுக்குத் தலை யணையை விட்டு எழுந்தாள். அதில் இதுவரை அம்மாவின் நறுமணம் இருந்தது. கஜல் சமையலறையை நோக்கி ஓடினாள். ஆனால் ஹுமாயூனைப் பார்த்ததும் குழாயை நோக்கித் திரும்பிவிட்டாள். குழாயிலிருந்து விழுந்த நீர்த்துளிகளைச் சேகரித்து, முகம் கழுவியதுபோல் முகத்தை நனைத்துக் கொண்டாள். பிறகு ஈரமான கைகளுடன் பூரியைச் சாப்பிட ஆரம்பித்தாள்.

கஜலின் தாய் மடிந்துவிட்டாள். ஒல்லியான வாயில்லாத பெண் ஒருத்தி தனக்கு இத்தனை பெரிய தோல்வியை அளிக்க முடியும் என்பதை ஹுமாயூனால் நம்பவே முடியவில்லை. இந்த மூன்று அடங்காத பிள்ளைகளை அவன் என்ன செய்வது? கஜலுக்கு அவளுடைய பாட்டனார் வீட்டில் அடைக்கலம் கிடைத்துவிட்டது. ஆனால் அயாஸையும், ஷஹ்ஜாதையும் அனாதை ஆசிரமத்தில்தான் சேர்க்க வேண்டும். புதைகுழியில் கிடக்கும் பதூலுக்கு அவனால் எப்படி உதை கொடுக்க முடியும்?

அம்மா செத்துவிட்டாள்... சமையலறையில் அம்மாவின் முக்காலியில் பீபியைப் பார்த்த கஜலுக்கு மீண்டும் மீண்டும் அம்மாவின் நினைவு வந்தது. மீண்டும் மீண்டும் உணவு தொண்டைக்கே திரும்பி வந்தது. இந்த இனிப்பான பூரி ஏனோ இன்று சுவையாக இருக்கவில்லை. அம்மா எப்போது வருவாள். நானும் அம்மாவுடன் போகவேண்டும். இப்படிப் பிடிவாதம் செய்யும் முழு உரிமை அவளுக்கு இருந்தது. ஏனெனில் அம்மா மறுபடியும் அவளை ஏமாற்றிவிட்டுத் தனியாகவே சென்று விட்டாள்—தூங்க வைத்துவிட்டு, அவளுக்குத் தெரியாமல் கவிதாலயத்திற்குச் சென்றதுபோல்... அப்போதெல்லாம் காலைப் பொழுதில் கண் திறந்ததும் அவள் கூக்குரலிட்டு அழுவாள். இறுதியில் ஹுமாயூன் அவளை மடியில் எடுத்து அம்மாவிடம் கொண்டு போய்ச் சேர்த்துவிடுவான்.

"நானும் அம்மாவிடம் போக வேண்டும்" பூரி சாப்பிட்டு

முடிந்ததும் அவள் புலம்பினாள். இன்றும் அப்பாவின் மடியில் ஏறி அம்மா இருக்கும் இடத்திற்குச் செல்லலாம் என்ற எண்ணம்.

"பீபி..." ஹுமாயூன் கோபத்துடன் கஜலைப் பார்த்தான். "பீபி... இந்தக் கழுதையின் அழுகையை நிறுத்துங்கள். இல்லாவிட்டால் உண்மையாகவே இவளையும் இவள் அம்மாவிடம் அனுப்பிவிடுவேன். அந்த நாயின் குட்டிகளை என்னால் வளர்க்க முடியாது..."

இதைக் கேட்டதும் கஜல் தனது அழுகையை அடக்கிக் கொண்டு அங்கிருந்து ஓடிவிட்டாள்.

இரவில் தனியாக, பலவந்தமாக, ஊஞ்சலில் அவள் தூங்க வேண்டி வந்தது. அப்போது ஷேகு மியாவிடம் கேட்ட பேய்க் கதைகள் அவள் நினைவுக்கு வந்தன. அச்சம் மேலிட அவள் தலையணையை அணைத்துக் கொண்டாள். அதில் அவளது தாயின் வியர்வை மணம் வீசியது.



இன்று காலை நேரத்தில் வீட்டில் பெரிய ஆரவாரம் எழுந்தது.

அம்மா இருந்த காலத்திலேயே வீட்டு நிர்வாகம் சரியாக இருக்கவில்லை; இங்கு சாயாவின் ஆட்சி நடைபெற்றது. பதூல் மருத்துவமனையில் கிடப்பாள். அவள் நலம் பெற்று வரும் போதெல்லாம் ஏதேனுமொரு 'உதிரிப் பகுதி'யை உடைத்து அவளைத்தாய் வீட்டிற்கு அனுப்பிவிடுவான். தந்தையின் மரணத்திற்குப் பிறகு ஹுமாயூன் 'அலீப் லைலா'விலிருந்து விரட்டப்பட்டான். வாஹித் ஹுசேன் தனது செல்வாக்கைப் பயன்படுத்தி அவனை அலுவலகம் ஒன்றில் பணியில் அமர்த்தினார். சிறிது சிறிதாக வாழ்க்கையை நஞ்சாகவும், மனைவியைப் பெருந்துயரமாகவும் ஹுமாயூன் உணர ஆரம்பித்தான். குழந்தை வளர்ப்பும், வீட்டுப் பொறுப்புகளும் பெருஞ்சுமைகளே. அதன் காரணமாகத் தனது இன்பங்களைத் துறப்பது கடுமையான தண்டனையே என்று அவன் எண்ணலானான்.

அலீப் லைலாவிலிருந்து வெளிவந்தபிறகு, அடிதடி செய்து, சச்சரவிட்டு, எப்படியும் பதூலிடமிருந்தும் குழந்தைகளிடமிருந்தும் நிரந்தரமாக விடுதலை பெற்றுவிட வேண்டும் என்று அவன் முயற்சி செய்தான். ஆனால் பதூல் அவனுடைய கழுத்தைச் சுற்றிய மாலையாகிவிட்டாள். எத்தனை உதைகள் கொடுத்தாலும் அவன் கால்களிலேயே விழுந்து கிடப்பாள். ஆணையிட்ட நேரங்களில் எல்லாம் தந்தையிடமிருந்து நூறு

இருநூறு வாங்கி வருவாள். குழந்தைகளிடம் ஹுமாயூனுக்குப் பிரியம் இருக்கவில்லை. குறிப்பாக அவன் கஜலை மிகவும் வெறுத்தான். அலீப் லைலாவின் மாயவிளக்கை இந்தப் பேய் திருடி விட்டது! அவனை அவன் மாளிகையைவிட்டு, குடிசைக்குக் கொண்டுவந்துவிட்டாளே மூதேவி என்று மனம் புழுங்கினான்.

பதூலின் மரணத்திற்குப் பிறகு அயாஸுக்கும், ஷஹ்ஜாதுக்கும் முழு சுதந்திரம் கிடைத்துவிட்டது. தந்தையோ பகல் முழுவதும் அலுவலகத்தில் இருந்தார். சாயாவை அவர்கள் சிறிதும் மதிக்கவில்லை. அதனால் அம்மாவுடைய கண்மையின் வெள்ளி டப்பி முதல், தந்தையின் பழைய காலணிகள் வரை விற்றுச் சினிமா பார்த்துவிட்டார்கள். அயாஸுக்கு ஓரளவு கல்வி ஆர்வமும் இருந்தது. அதனால் அவன் ஒரு மூலையில் உட்கார்ந்து புத்தகம் படிப்பான்.

காலையில் மூவரும், துயில் கொண்டிருந்த பேராபத்துகளைப்போல் விழிப்பார்கள். சிற்றுண்டியின்போது பெரிய போராட்டமே நடக்கும். அதனால் ஹுமாயூன் சாப்பிடாமலேயே அலுவலகத்திற்குச் சென்று விடுவான். காலை உணவு கிடைக்கவில்லை என்ற துக்கத்தில் கஜல் கதறித் துடிப்பாள். ஆனால் பதூலின் சாவுக்குப் பிறகு கஜலுடைய அலறல்களை யாரும் செவி மடுத்துக் கேட்பதில்லை. அவள் பிறந்த நாள் அன்றே ஹுமாயூன் அவளைச் சபித்துவிட்டான். அயாஸும் ஷஹ்ஜாதும் அவளிடம பல ஜென்ம வன்மம் கொண்டிருந்தார்கள். எல்லாருமே அவளை ஒதுக்கிவிட்டதால் அன்னையின் பாலைநிலமாகிவிட்ட மார்பில் தலையைப் புதைத்து அவள் அமைதி பெறுவாள். ஹுமாயூனின் கருணையில்லாத கரங்களிலிருந்து அவளைக் காப்பாற்றுவதும் பதூலின் வேலையாக இருந்தது. ஆனால் பதூலின் மரணத்திற்குப் பிறகு கஜலை அடிப்பதைவிட வேறு வேலையே ஹுமாயூனுக்கு இல்லை. அவளைத் தன்னுடன் அழைத்துச் செல்வதாக பீபி பலமுறை கூறியும், ஹுமாயூன் அதற்குச் சம்மதிக்கவில்லை. கஜலை மட்டும் எதற்கு? அழைத்துச் செல்வதாக இருந்தால் மூவரையும் அழைத்துச் செல்லுங்கள் என்று சொல்லிவிட்டான். மூவரும் சென்றுவிட்டால் அவனுக்கு முழு விடுதலை கிடைத்துவிடும். இத்தகைய பிசாசுப் பட்டாளத்தைப் பீபி எப்படி வளர்க்க முடியும். அவர் அவ்வாறு முடிவு செய்தாலும் ரஜியா அதற்குச் சம்மதிக்கப் போவதில்லை.

எனவே பருந்தின் பிடியிருந்த புறாபோல் கஜல் ஏதேனுமொரு மூலையில் பதுங்கி நடுங்குவாள்.

இப்போது மிகவும் ஒல்லியான அத்தை ஒருத்தியும் சகோதரனின் பாழடைந்த வீட்டைச் சமாளிப்பதற்காக வந்து

விட்டாள். அவள மிக்க கவனத்துடன் அரிச்சுவடியில் இருந்த எல்லா நீதிகளையும் அயாஸுக்கும் ஷஹ்ஜாதுக்கும் போதித்தாள். தங்கையை அடிக்கக் கூடாது என்று அறிவுரை கூறுவாள். அவர்கள் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். எனவே வீட்டை விட்டுச் சென்று விடுவதாகப் பயமுறுத்துவாள். அதைக்கேட்டு அவர்கள் சிலநாட்கள் வரை அமைதியாக இருப்பார்கள். ஆனால் அவளுடைய மகனுக்கும் மருமகளுக்கும் இடையில் நடைபெற்ற சண்டையை நிறுத்தி, அமைதியை நிலைநாட்டி நல்லுறவை ஏற்படுத்துவதற்கு அவள் தன் வீட்டுக்குப் போகும் போதெல்லாம் இங்கு எல்லாமே சீர்குலைந்துவிடும். இப்படிப் பல பிரச்சினைகள். ஒவ்வொன்றாக எப்படி விவரிப்பது?

ஹுமாயூனைக் கவனிப்பதற்கே சாயாவுக்கு நேரம் போதவில்லை. பிறகு சமையல் எப்படிச் செய்ய முடியும்? அயாஸின் காலணி காணாமற் போய்விட்டது... ஷஹ்ஜாத் அயாஸின் புத்தகத்தைக் கிழித்துவிடவே இருவரும் சண்டையிட்டனர்... இந்த அமளியில் பீங்கான் கோப்பைகள் உடைந்துவிட்டன... ஊறுகாய் ஜாடி விழுந்துவிட்டது. அயாஸின் மூக்கு உடைபட்டுவிட்டது... இடையில் சமாதானம் பேச வந்த கஜலின் வயிற்றில் ஷஹ்ஜாதின் குத்து விழுந்தது...

இரண்டு சகோதரர்களும் வீறாப்புடன் குறும்புகள் செய்து சோர்வடையும்போது கஜலைச் சீண்டுவார்கள். பதூலை இதே கவலை சாப்பிட்டுவிட்டது. இரண்டு மாதங்கள்வரை வலிமை தரும் மருந்துகளைச் சாப்பிட்டு, இந்த வீட்டின் கடிவாளத்தை அத்தை தனது கையில் வைத்திருந்தார். கஜலின் உணவுத் தட்டிலிருந்து இறைச்சித்துண்டை அயாஸ் எடுத்துச் சாப்பிட்டுவிட்டால், பகைவர்கள் தன் இதயத்துண்டுகளைக் கடித்துவிட்டது போல் கஜல் குதிங்கால்களைத் தரையில் தேய்த்தவாறு பலமணி நேரம் அழுவாள்.

சந்தைக்குப் போகும் ஊமைப் பிச்சைக்காரியின் தோள் பையில் போட்டுவிடுவதாக சாயா அவளைப் பயமுறுத்துவாள். அந்த ஊமைப் பிச்சைக்காரியின் கண்களைப் பார்க்கும்போது கஜலுக்குப் பயம் வந்துவிடும். எனவே அவள் உரத்த குரலில் அழ ஆரம்பித்து விடுவாள். அவளுடைய இந்த அழுகையின் காரணமாகவே பதூல் செத்துப்போனாள் என்று பீபி சொல்லுவார். அந்த நேரங்களில் ஹுமாயூன் கோபத்துடன் அடுப்பிலிருந்து எரியும் கொள்ளியை எடுத்துவருமாறு அயாஸுக்கு ஆணையிடுவான். உடனடியாகத் துணிகளிலிருந்து தூசியைத் தட்டி, தனது மூக்கைப் புறங்கையால் சுத்தப் படுத்தியவாறு கஜல் எழுந்து நிற்பாள். விஷயம் இத்துடன்

முடிவடையாது. சில நேரங்களில் திடீரென்று, தாயில்லாத இந்தப் பெண்ணை வளர்க்கும் பொறுப்பு தன்னுடையது என்ற ஞானோதயம் ஹுமாயூனுக்குத் தோன்றும். பள்ளிக்குச் செல்வதற்காக முதலில் காலணிகளைத் தேடுவதும், காலணியைத் தேடும் முன்பு சாயாவிடம் தனது முடியைச் சரிப்படுத்திக் கொள்வதும், முடி அலங்காரத்துக்கு முன்னால் பழைய பாடம் படித்துக் கொள்வதும் எல்லாம் வீணான காரியங்களே. இவை அழுகையின் தண்டனையாக அவளுக்குக் கிடைக்கும். அதனால் எதையும் கேட்காத மாதிரி, மிகவும் அலட்சியமாக, சுவரிலிருந்து சுண்ணாம்பை அவள் சுரண்டி எடுப்பாள். அச்சுறுத்தும் அதிகாரத்திற்குக் கீழ்ப்படிவது அவளுக்குச் சிறிதும் பிடிக்காது. யாராவது அம்மாவைப்போல் அன்புடன் நான்கு குத்துகள் கொடுத்தாலும் தாங்கிக் கொள்வாள். அவள் நாள் முழுவதும் அவளை அடிப்பாள்; அடித்த பிறகு அவளை மார்புடன் அணைத்துக் கொள்வாள். அவளுடைய மடியில் முகத்தைப் புதைத்து அழ வேண்டும் என்று கஜல் நாள் முழுவதும் எதிர் நோக்குவாள். பகலும் இரவும் அழுத பிறகும் அவளுடைய கண்கள் கண்ணீர்ச்சுமையைத் தாங்கிக் கொண்டுதானிருந்தன. ஒருவருடைய ஆறுதலுரையைக் கேட்ட பிறகுதான் அந்தச் சுமையைக் குறைக்க முடியும்.

அப்படியும் ஆயிரம் கவலைகள் அம்மாவுக்கு. ரஜியாவைப் போல் தன் மகளின் கன்னங்களை முத்தமிட நேரம் கிடைப்பதில்லை. ஆனால் சில நேரங்களில் கஜலை மார்புடன் அணைத்துக் கொண்டு அழுவாள். கணவனிடம் அடிபடும் நேரங்கள் அவை. அப்போது கஜலுக்கு இதமாக இருக்கும். அம்மா இப்படி அழ வேண்டும். அவருடைய மார்புடன் இணைந்து தூங்கிவிட வேண்டும் என்று அவள் மனம் விருப்பங்கொள்ளும். ஆனால் இப்போது அத்தகையவர் எவருமிலர். அப்பா அவளைக் கண்களால் பார்த்தாலும் வானமும் பூமியும் நடுக்கம் கண்டுவிடும். இவ்வாறு அடிப்பவர்களைக் கொத்து இறைச்சியாக்கிப் பருந்துகளுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்று அவள் விரும்புவாள். எல்லோரும் அழிந்து சாந்த் அக்கா மட்டுமே உலகில் எஞ்சி நிற்க வேண்டும் என்பதே அவளுடைய ஆசை.

எல்லாத் திசைகளிலும் பழிப்புரைகள் கேட்ட பிறகு அழுக்குத் துணிக் குவியலின் மேல் படுத்துவிடுவாள். சொத்தில் பதூலின் உரிமையைப் பெறுவதற்காக ஹுமாயூனுக்கும் வாஹித் ஹுசேனுக்கும் இடையில் பயங்கரப் போராட்டம் நடந்தது. அதனால் கஜலுக்கும் கவிதாலயத்தின் கதவுகள் மூடப்பட்டுவிட்டன. பகல் முழுவதும் இரண்டு சூடான கால்களுடன் அந்தப்

பகுதியைப் பூனைபோல் சுற்றிச் சுற்றி வருவாள். இரவில் கனவுகள் காணுவாள்—தானும் சாந்த் அக்காவாகி விட்டது போல். அந்த நீண்ட முடியுடைய பாடகனான ஷஆதத் மண்டியிட்டு குனிந்து அவளை வணங்குவான். பிறகு அவளும் சாந்த் அக்காவைப்போல் தனது சேலையின் பொன்னிற முன்றானையை அவனுடைய அழுக்கடைந்த கரங்களிலிருந்து விடுவித்தபடி "உணர்வுக்குத் திரும்பி வா ஷஆதத்... இவ்வளவு குடிக்காதே" என்பாள்.

பிறகு நீண்டதொரு கார் வரும்... அது அவளைப் பாதாளத்தில் தள்ளிவிடும். பிறகு ரஷீத் மாமாவின் மடியில் உட்கார்ந்து சாக்லெட் சாப்பிடுவது போலவும், அவளுக்கு முத்தங்கள் கொடுப்பது போலவும், அவள் அழுவது போலவும், அழுகையால் விக்கல் ஏற்படுவது போலவும் பல கனவுகள் அவளுக்கு வரும்.

கண் திறக்கும்போது அவளுடைய தலையணை நனைந் திருக்கும். அவள் விம்மியழுதுகொண்டே இருப்பாள்.

பிறகு வெகுநேரம் சிந்தனை செய்வாள். சாந்த் அக்காவைப் போல் வருவதற்கு முதலில் வயலின் கற்றுக்கொள்ள வேண்டும். அவளுக்குப் புத்தகங்கள் படிக்கத் தெரியவில்லை. அவளால் நாடகங்களில் வேலை செய்ய முடியாது. சாந்த் அக்காவிடம் கேட்ட எல்லாப் பாடல்களும், அதே ராகத்தில் பாட அவளுக்குத் தெரியும். அவளைப்போலவே சிரிக்கவும் தெரியும். ஒருமுறை சாந்த் அக்கா கிடைத்துவிட்டால் அவளை முழு பலத்துடன் பிடித்துக் கொள்ள வேண்டும். அவளை எப்போதும் விடவே கூடாது என்று மனம் விரும்பியது. ஒருமுறை அம்மாவுக்குப் பக்கத்தில் படுத் திருந்தபோது அவள் அம்மாவைக் குலுக்கினாள்.

"அம்மா... சாந்த் அக்காவின் சிரிப்பில் மணியோசை எப்படிக் கேட்கிறது."

"ஊம்..." அம்மா திரும்பிப் படுத்துக்கொண்டாள்

"அம்மா... நானும் சாந்த் அக்காவைப்போல் சிரிப்பேன்"

"நல்லது... நீ என்னைப் புதைகுழியிலும் நிம்மதியாகப் படுக்க விடாதே."

அவள் பற்களைக் கடித்தவாறு இதைச் சொல்லிவிட்டு அழுதாள்.

கஜல் பயந்து விட்டாள். அம்மா சோப்புநுரை போலாகி விட்டார்; சிறிது சீண்டினாலும் உடைபட்டு விடுகிறது.

சாந்த் அக்காவாக வருவதற்கு நிறையப் படிக்க வேண்டும்...

அன்று முதல் காலையிலேயே எழுந்து, பள்ளிக்கு ஓடி விடுவாள். இரவில் வெகுநேரம்வரை ஸ்லேட்டைத் தனது எச்சிலால் சுத்தப்படுத்திவிட்டுப் பாடங்களை எழுதுவாள்.

# 13

ஹைதர் அலிகான் சாந்துடன் எல்லா உறவுகளையும் முறித்துக் கொண்டார். சாந்தின் நடவடிக்கைகளும், சமூகத் தொடர்புகளும் அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. பலமுறை தந்தைக்கும் மகளுக்கும் இடையே கடுமையான வாக்குவாதம் நடந்தது. அதற்குப் பிறகு சாந்துக்கு மாதம் நூறு ரூபாய் அனுப்புவதையும் ஹைதர் அலிகான் நிறுத்திவிட்டார். பிறகு அவரும் தனது தொழிலை நிறுத்திவிட்டுக் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்துவிட்டார். தெலுங்கானாவின் கொரில்லாக் கிளைகளுடன் இணைந்து சதித் திட்டங்களை உருவாக்குவதில் முழு நேரத்தையும் செலவிட்டார். வெளித்தோற்றத்திற்கு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் ஹைதராபாத் கிளையின் செயலாளராக இருந்தார். அதே அலுவலகத்தில் அமர்ந்து பணிகளைக் கவனிப்பார். சாந்த் இப்போது தன் வீட்டுக்குச் செல்வதில்லை. அவளுடைய மாற்றாந் தாய் ஒரு கம்யூனிஸ்ட் ஊழியர். அவள் ஹைதர் அலிகானைத் தனது வண்ணத்தில் முழுமையாகவே சேர்த்துக் கொண்டாள். அவர்கள் இருவரும் தங்கள் உணர்ச்சிகளையும் இன்பங்களையும் மறந்து கட்சி வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள்.

அந்நாட்களில் தெலுங்கானாவில் கொரில்லாக் குழுவினரின் கை ஓங்கி இருந்தது. அவர்கள் இராணுவப் பயிற்சி பெற்று, நிஜாமின் படைகளுடன் போரிட்டனர். பல இடங்களின் பெண்கள் முன்நின்று அவர்களை நடத்தினார்கள். அவர்கள் அரசுப் படைகளின் ஆயுதங்களை பிடுங்கிக் கொள்வார்கள். சில மாவட்டங்கள் அவர்களின் ஆதிக்கத்தில் இருந்தன. கட்சியின் மீது அரசு தடை விதித்து விட்டது. அதனால் கட்சியின் முக்கியமான தொண்டர்கள் தலைமறைவாகிவிட்டனர். வெளியில் இருந்தவர்கள் இலக்கிய மட்டத்தில் முற்போக்கு இயக்கத்தின் அங்கத்தினர்களாகப் பணியாற்றினார்கள். கிராமங்களில் தேஷ்முக்குகளும், ஜாகீர் தாரர்களும் கொள்ளையடிப்பதைத் தங்கள் உரிமையாகக் கருதிய காலம் அது. கிராமத்தில் எந்த உழவனின் மானமும் பணமும் பாதுகாப்பாக இருக்க முடியாது. பட்டப பகலிலேயே வயல்களில் வேலை செய்யும் பெண்களை

காரில் போட்டுக்கொண்டு செல்வார்கள்; மகசூலை அறுவடை செய்து கொண்டுபோய் விடுவார்கள். அதனால் கட்சியின் செல்வாக்குப் பன்மடங்காக அதிகரித்தது. குறிப்பாக கூலிவேலை செய்பவர்களும், உழவர்களும் கம்யூனிஸ்ட் கட்சியை ஆதரித்தார்கள் கடக்க முடியாத மலைப் பாதைகளில் அவர்கள் 'வல்லத்'தின் வீரர்களை அழைத்துச் சென்றார்கள். அரசுப் படைகளின் புலப்பெயர்ச்சிகளையும், இரகசியங்களையும் அறிந்து அவர்களுக்குத் தகவல் சொல்வார்கள். இந்தப் புயலைத் தடுப்பதற்காக நிஜாம் பல தடைகளை விதித்தார். உழவர்களின் இளைய தலைமுறையினரைப் பிடித்து அவர்கள் வீட்டு முற்றங்களில் இருந்த மரங்களிலேயே கழுவேற்றினார். பெண்களை அரசு சிப்பாய்கள் எல்லாருடைய முன்னிலையிலேயே தூக்கிச் சென்றார்கள். குடும்பத்தினருக்கு எதிரில் கிளர்ச்சிக்காரர்களைச் சுட்டு வீழ்த்தினார்கள். ஆனால் இந்தப் பாடம் புகட்டும் தண்டனைகள், அச்சமூட்டுவதற்குப் பதிலாக மக்களிடையே துன்பமும் கோபமும் கொண்ட உணர்ச்சிகளையே உண்டாக்கின. ஜாகீர்தாரர்களும் தேஷ்முக்களும் இந்தப் புயலைக் கண்டு நடுங்கினார்கள்.

வாஹித் ஹுசேனின் இரத்த அழுத்தம் அதிகரித்து விட்டது. அவரது சொந்த மருமகனே—நிலக்கிழார் குடும்பத்தின் மைந்தனே—உயர்கல்வி பெற்ற ஓர் அறிஞனே—இந்தக் குண்டர்களுடன் சேர்ந்து அவர்களுக்கு வழிகாட்டியாக விளங்கு கிறான் என்பது அவருக்குக் கலவரத்தை அளித்தது. கோபத்தால் ஹைதர் அலி கானுடன் பேச்சுத் தொடர்பையும் அவர் கத்தரித்து விட்டார்; ஏனெனில் அரசு சார்பில் அவரிடம் விசாரணை நடைபெற்று வந்தது. வாஹித் ஹுசேனுக்கும் அவருடைய மருமகனுக்கும் என்ன சம்பந்தம். ஹைதர் அலிகானின் மகள் கவிதாலயத்தில் ஏன் இருக்கிறாள் என்ற வினாக்கள் எழுந்தன. சாந்த் தனது தந்தையின் அரசியல் நடவடிக்கைகளைப் பற்றி ஒன்றும் அறியமாட்டாள். ஒப்பனையின் புதிய புதிய முறைகளைக் கற்றுக் கொள்ளவும், விருந்து உபசாரங்களில் காதலர்களின் குழுக்களை ஏய்க்கவுமே அவளுக்கு நேரம் போதவில்லை! தனது தந்தை இன்பமான வாழ்க்கையை விட்டுவிட்டு இந்த இன்னல்களில் எதற்காக ஈடுபடுகிறார் என்பதும், நேருவும் காந்தியும் என்ன அறைகூவல்கள் விடுக்கிறார்கள் என்பதும் அவளுடைய கவனத்தைக் கவரவில்லை; ஒருமுறை யாரோ மிக நேர்த்தியாக "உறுதி படைத்த ஒரு தந்தையின் மகள் இவர்" என்று குறிப்பிடவே தனது தந்தையின் வீரச் செயல்களுக்காகப் பெருமை கொள்ள வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது.

ஏழைகளை ஆதரவிப்பவராகப் பொதுமக்களிடைய அவர் போற்றப்படுகிறார் என்பது அவளுக்குத் தெரிந்தது.

அந்நாட்களில், மருத்துவக் கல்லூரிக் கட்டிடத் திறப்பு விழாவுக்காக மன்னர் வருகை தந்தருளினார். மாணவர் சங்கத் தலைவியாக வரவேற்புரை வாசிப்பதற்காக அவள் எழுந்தாள். பொதுவாக மன்னர் உலகை மிகக் கேவலமாகவே மதிப்பார். ஆனால் அழகான முகங்களைப் பார்த்ததும் தனது ரசனையைத் தெரிவிப்பது அவரது இயல்பாக இருந்தது. எனவே சாந்தைப் பற்றி விசாரணை ஆரம்பமாயிற்று. தனது பிரியமான கருநிறமான திருக்குமாரனுக்காக அவர் சாந்தைத் தேர்ந்தெடுத்துவிட்டார்.

அந்நாட்களில் சாந்த்—பான் சாஹிப் காதல்கதைகள் நகரம் முழுவதும் பரவி இருந்தன. அதனால் இந்த உறவுக்கு ஒப்புதல் தருவது என்று வாஹித் ஹுசேன் முடிவு செய்தார். சாந்த் அரச குடும்பத்தின் மருமகளாகிவிடுவார். இதைவிட வேறு என்ன பெருமை அவர் குடும்பத்திற்கு வேண்டும்? இவ்வாறு சாந்தின் தந்தை செய்த குற்றங்களுக்கும் மன்னிப்பு அளிக்கப்படும். வாஹித் ஹுசேனின் பொருளாதார நிலையும் சீர்படும். அப்படியும் 'அரச உறவு' என்றுமே திருப்பி அனுப்பப்படுவதில்லை. ஆலா ஹஜரத்தின் விருப்பம் ஒரு உறுதியான முடிச்சாகும். அதைக் காலம், சொந்த விருப்பு-வெறுப்பு என்ற எந்த வாளும் வெட்டி எறிய முடியாது.

இவை எல்லாம் தெரிந்த பிறகும் சாந்த், மிகவும் அலட்சிய மாக அந்த உறவுச் செய்தியை புறக்கணித்துவிட்டான்.

"தூ... நான் அந்தப் பாழடைந்த மூஞ்சியை ஏற்றுக் கொள்ளமுடியாது..."

வாஹித் ஹுசேனுக்கு இந்தப் பதில் திகிலை அளித்தது. வேந்தரின் சீற்றம் அவர் குடும்பத்தின்மீது பாயுமே.

ஒருநாள் மாலையில் சாந்த் ஒப்பனை செய்துகொண்டு வெளியே செல்வதற்காகத் தயாரானபோது நீண்ட முடியுடைய ஓர் இந்து வாலிபன் சாந்தின் பெயரிடப்பட்ட, ஹைதர் அலிகானின் கடிதம் ஒன்றைக் கொண்டு வந்தான். நீண்ட நாட்களுக்குப் பிறகு தந்தையின் கடிதத்தைப் படித்து சாந்த் சோகமுற்றாள். அவர் மிகவும் வேதனையுடன் எழுதி இருந்தார். சாந்த் இப்போது பெரியவளாகிவிட்டதாகவும் அதனால் ஆணை செலுத்தும் உரிமை அவருக்கு இல்லை என்றும், இருந்தாலும் அரச குடும்பத்தில் அவள் திருமணம் நடப்பதை அவர் சிறிதும் விரும்பவில்லை என்றும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

கடிதத்தைப் படித்து முடிந்ததும் அவள் பார்வையை உயர்த்தியபோது திடுக்கிட்டாள். அந்தக் கருநிற வாலிபன்

அவளைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தான். சில வினாடி களுக்குப் பிறகு, "அப்பா இப்போது எங்கே இருக்கிறார்" என்று விசாரித்தாள்.

"வெகு தூரத்தில்..." அவன் மூழ்கிய நிலையிலேயே பதில் தந்தான்.

"நீங்களும் அப்பாவின் தோழரா?"

"ஆம்; நான் ஒரு சிற்பி—என் வேலையை விட்டுவிட்டுக் கட்சியில் சேர்ந்துவிட்டேன். ஆனால் இன்று உங்களைப் பார்த்ததும் நான் என் வேலையை விட்டிருக்கக் கூடாது என்று தோன்றுகிறது..."

"ஏன்?" சாந்த் சிரித்துவிட்டாள். புதியவர்களுடன் கலகலப் பாகப் பேசுவதில் அவள் தனித்திறமை பெற்றிருந்தாள்.

"ஏனென்றால் நான் கவனமாக இல்லாதபோது ஆண்டவன் சிலைகளைச் செதுக்குவதில் மிகத்தேர்ச்சி பெற்றுவிட்டான். உங்களைப் போன்ற அழகான உருவங்களைப் படைத்துவிட்டான்."

சாந்த் சிரித்துவிட்டாள். இவ்வாறு புதுமையான முறையில் புகழ்ச்சியுரை பேசும் இந்த மயக்கக் கண்கள் கொண்ட அலட்சிய மான இளைஞன் எப்படியோ அவளுடைய உள்ளத்தைத் தொட்டுவிட்டான்.

"சரி, நான் போகிறேன்..." அவன் எழுந்து நின்றான்.

"ஏன், சிறிது நேரம் உட்காருங்கள். நீங்கள் அப்பாவின் நண்பர். அதனால் தேநீர் குடிக்காமல் போகமுடியாது..."

அவன் உட்கார்ந்துவிட்டான். பெரிய பழங்கால முறையிலிருந்த விருந்தினர் அறையில் இருந்த படங் களையும்,விலையுயர்ந்த பொருட்களையும் அவன் பார்த்தான்.

"வெளியிலிருந்து பார்க்கும்போது உங்கள் வீடு கவர்ச்சியாக இல்லை; உள்ளே வந்ததும் தெரிகிறது. இது ஆலயம்தான்; அதன் 'கவிதை' நீங்கள் என்று."

சாந்த் மறுபடியும் சிரித்தாள். (பான் சாஹிப் சொல்லுவார் சிரிக்கும்போது சாந்தின் அழகு இருமடங்கு கூடிவிடுகிறது. அதனால் நாடகங்களில் பலமுறை அவளுக்குச் சிரிப்பு மூட்டக் கூடிய கட்டங்கள் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு முறையும் வாலிபர்கள் கைகளைத் தட்டி 'மீண்டும் ஒருமுறை' என்று ஆரவாரம் செய்வார்கள்.)

"நீங்கள் மீண்டும் வரவேண்டும்" வாயில் வரை வந்த சாந்த் மிக்க அன்புடன் வேண்டினாள்.

"என்னை விரைவில் கைது செய்யப்போகிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். தப்பி இருந்தால், ஆண்டவனின் சிறபக் கலையைக் காண ஒருமுறை வருவேன்."

ஆனால் அவளால் அவனை மறக்க முடியவில்லை. யார் அவன்—எத்தனை குறும்புக்காரன். கிருஷ்ணனைப்போலவே இருந்தான். அவன் பெயரும் கேட்கவில்லையே.

ஹைதர் அலிகான் மீது இருந்த வழக்கு திரும்பப் பெற்றாயிற்று. அவர் வீட்டுக்கு வந்து விட்டார் என்று தெரிந்தது. எனவே சாந்த் அவரைச் சந்திக்க அவருடைய அலுவலகத்திற்குச் சென்றாள்.

தந்தையைச் சந்தித்து அழுதாள். அந்தக் கடிதத்தைக் குறிப்பிட்டாள். பிறகு அந்த இளைஞனைப் பற்றி விசாரித்தாள்.

"சஞ்சீவா! போலீஸ் அவனைத் தேடுகிறது. அவன் எங்கேயோ சென்று விட்டான்..." ஹைதர் அலிகான் கூறினார். "இது என்ன, சின்னக் குழந்தையைப் போலவே அழுகிறாய்" அவர் அவளுடைய தலையைத் தடவிக் கொடுத்தார். "உனக்கு நல்லது என்று எது படுகிறதோ, அதைச் செய். மக்கள் விரிக்கும் வலையில் விழுந்து விடாதே போ, வீட்டுக்குப் போ. என்னைச் சந்திக்க இனி இங்கு வராதே"

அவளை அனுப்புவதற்காக அவர் கீழே இறங்கிவிட்டார்.

"உங்கள் நலனைத் தெரிவிப்பதற்காகச் சஞ்சீவாவை அனுப்பி வையுங்கள்," அவள் மிக்க பணிவுடன் வேண்டினாள்.

பல மாதங்களுக்குப் பிறகு ரஷீத் மாமாவுடன் ஒரு கூட்டத்திலிருந்து வெளிவந்தபோது அவளுக்கு சஞ்சீவா தென் பட்டான். கூடத்தில் யாரோ ஒருவனுடன் அவன் பேசிக் கொண் டிருந்தான். சாந்தை ஒரு முறை பார்த்துவிட்டு, மீண்டும் தனது பேச்சில் மூழ்கி விட்டான். அவள் முன்னே சென்றுவிட்டாள், ஆனால் பின்னால் ஏதோ இழந்துவிட்டதுபோல் தோன்றியது. தன்னை அலட்சியப்படுத்திவிட்டான் என்ற உணர்வும் ஏற்பட்டது. இன்று வரை யாருமே அவளுடன் இப்படிப் பாராமுகமாக நடந்து கொள்ளவில்லை.

மறுநாள் அவள் தனது தந்தையைச் சந்திக்க அவருடைய அலுவலகத்திற்குச் சென்றாள். ஆனால் அவர் அங்கில்லை; யாருமே இல்லை. திரும்பிப் போகும்போது நுழைவாயிலில் சஞ்சீவா காட்சி தந்தான்.

"உங்கள் அப்பாவுக்கு உடல்நலம் இல்லை! அதனால் அவர் இங்கு வருவதில்லை."

"ஆனால் நீங்கள் ஏன் வரவில்லை. மீண்டும் வருவதாக எனக்கு வாக்களித்திருந்தீர்கள்..."

சாந்த் .முதல் முறையாக ஓர் ஆடவனுடன் இவ்வளவு மென்மையாகப்பேசுகிறாள்.

சாந்த் சஞ்சீவாவைக் கூர்ந்து நோக்கினாள். அவனது கலைந்த

முடி தலையில் கூடையைப்போல் இருந்தது. முக உறுப்புகள் ஆழமாக இருந்தன. பெரிய பெரிய கண்களில் இனம் புரியாத கவர்ச்சி இருந்தது. அதைச் சாந்த் மறக்கவே இல்லை. அவன் சாதாரணமான சொக்காய் அணிந்திருந்தான். (அவன் ஒரு பணக்கார வீட்டுப் பையன்; திறமையுள்ள சிற்பி என்று அப்பா சொல்லியிருந்தார்).

"வாக்களித்தது உண்மைதான்," அவன் சிகரெட்டைப் பற்ற வைத்தான். "ஆனால் மண்ணில் இருக்கும் வேலைகளிலிருந்தே ஓய்வு கிடைப்பதில்லை. வானத்தில் உள்ள சாந்தை (மதியை) எப்படிப் பார்ப்பது?"

சாந்துக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவள் மிக நயமான முறையில் சொன்னாள். "நீங்கள் வந்து பாருங்கள். நான் தரையிலேயே இருப்பேன். உங்களுடன் கலையைப் பற்றிச் சிறிது பேச வேண்டும்."

"இல்லை, இல்லை..." சஞ்சீவா அக்கறை கொள்ளாமல் சிகரெட் புகையை இழுத்தான். "உங்களைப்போன்ற நளினமான கலைஞர்களுடன் நான் விவாதிப்பதில்லை; ஏனென்றால் நான் முரடன்; கல் உடைப்பவன்."

சஞ்சீவாவின் பேச்சு சாந்தைக் கவர்ந்தது. அவனை மறுநாளே கலாச்சாரக் குழுவின் அலுவலகத்திற்கு வருமாறு அவள் வற்புறுத்தினாள். பெரிய நாடகத்தைப் பற்றி அவனிடம் ஆலோசனை பெற வேண்டுமென்றாள்.

அன்றே சாந்தின் வேண்டுகோறுக்கிணங்கிப் பான் சாஹிப் சஞ்சீவாவைத் தனது குழுவின் உறுப்பினராக்கினார். அப்போது பான் சாஹிபின் சிந்தனை வேறு விதமாக இருந்தது—ஒரு கம்யூனிஸ்ட் தோழனின் வருகையால் வாலிபர்களின் கவனம் குழுவின் பக்கம் திரும்பும்; ஐரோப்பா சென்று திரும்பிய இத்தகைய இளைஞர்களால் நாடகங்களில் புதுப்புதுக் கருத்துகளைப் புகுத்த முடியும் என்று எண்ணமிட்டார் அவர். ஆனால் அவருக்கு அப்போது ஓர் உண்மை தெரியாமல் போய்விட்டது. இந்தக் கருத்த சாதாரணமான இளைஞன்மீது சாந்த் பைத்தியமாகி இருக்கிறாள். இனி அவள் தன்னைச் சிறுசிறு விஷயங்களிலும் அதட்டுவாள் என்ற உண்மைதான் அது!



சாந்துடைய மறுப்பு அரசின் சீற்றத்தைக் கொண்டு வந்தது. ஆனால் வாஹித் ஹுசேன் அதனுடைய இலக்காக இருக்க

வில்லை; அது ஹைதர் அலிகான் மீது பாய்ந்தது. அவரைச் சிறைப் பிடிக்க ஆணை பிறப்பிக்கப்பட்டது. அவர் தனது சகாக்களுடன் தலைமறைவாகிவிட்டார். சாந்த் 'எக்தாரா' இசை வாத்தியத்தை ஏந்தி, மீராபாயைப் போல் வெள்ளைச் சேலை உடுத்தி, தலை முடியை அவிழ்த்துவிட்டு, சஞ்சீவாவின் நினைவில் சோகப் பாடல்கள் பாட ஆரம்பித்துவிட்டாள்.

'எந்தத் தெருவுக்கு ஷியாம் போயிருக்கிறார்.

யாராவது சொல்லுங்களேன்...'

காலத்துடன் சாந்தின் உருவ மாற்றங்களைக் கண்ட வாஹித் ஹுசேன், வெள்ளம் தலைக்குமேல் போய்விட்டதை உணர்ந்தார். முளையிலேயே கிள்ளி எறிந்துவிடவில்லையே என்று கவலை கொண்டார். சாந்தின் முரண்பாடான குணத்தைச் சீர்படுத்த, அவளுக்கு முன்பே திருமணம் நடத்தியிருக்க வேண்டும். சாந்த் மூலம் பல காரியங்களை சாதித்துக் கொள்ளவே ரஷீத் விரும்பியதால் சாந்தின் திருமணம் குறித்து யாருமே கவலை கொள்ளாமல் இருந்துவிட்டார்கள்.

இன்று கவிதாலயத்தில் கவியரங்கம் நடைபெற இருந்தது. வேந்தரின் விருப்பத்திற்கிணங்கப் பிரபல கவிஞரான 'பானி பதாயூனி' அப்போது ஹைதராபாத்திற்கு வந்திருந்தார். ஆனால் சதிகாரர்கள் அவரை, அவையில் காலூன்றி நிற்க அனுமதிக்க மாட்டார்கள் என்பது வாஹித் ஹுசேனுக்குத் தெரியும். என்றாலும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கவியரங்கம் ஒன்றுக்கு அவர் ஏற்பாடு செய்துவிட்டார். அதில் ஹஸ்ரத் மோஹானி, பானி பதாயூனி, வேந்தரின் ஆசிரியரான ஜலீல் மானெக்புரி, அலி அஃக்தர், ஹஜரத் பதாயூனி போன்ற கவிஞர்கள் பங்குபெற இசைவு தெரிவித்தார்கள்.

ஆனால் இன்று எவ்வளவு முயற்சி செய்தும், வாஹித் ஹுசேனால் ஓர் அடியும் இயற்ற முடியவில்லை; கவியரங்கில் அவர்புதிய கவிதை படிக்க வேண்டும் என்ற வழக்கத்தைக் கையாண்டார்.

தனது குறிப்பேட்டை அவர் ஒருபுறம் ஒதுக்கிவிட்டார்; மூக்குக் கண்ணாடியைக் கழற்றிச் சுத்தம் செய்தார்; மீண்டும் அதனை அணிந்து சுற்றும் முற்றும் பார்வையைச் செலுத்தினார்; இவ்வாறு பார்ப்பதால் உலகமும் வேறு விதமாகத் தெரியும் என்று நினைத்தார் போலும். முதல் பார்வை ரஜியா மீது பதிந்தது. கூடத்தில் நாற்காலியில் அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் இருந்த அவள், தனது மாமியாரிடம் பேச முற்பட்டாள்.

"பீபி! கைசரின் விவாகத்தைச் சித்தப்பாவுடன் நடத்தி வையுங்கள்; இத்தனை பெண்களை உஜாலா சித்தி சேர்த்துக்

கொண்டிருக்கிறாரே, அங்கேயே கைசரின் ஆடை, உணவுக்கான வழி பிறந்துவிடும்."

"ஓ! முயற்சி செய்து பாருங்கள்," வாஹித் ஹுசேனும் அந்த விவாதத்தில் உடனடியாகப் பங்கு கொண்டார்.

"உங்கள் மூளையில் இது இப்போது உதித்திருக்கிறதா? என்ன விந்தை!" பீபி ஏதோ சொல்வதற்கு முன்பே வழக்கம்போல் கவ்ஹர் அத்தை குறுக்கிட்டார். "ஓராண்டுக்கு முன்பே சிறியவர் இதை முடிவு செய்துவிட்டார். கடந்த ஆண்டு ஃபவுசியாவின் பிறந்தநாள் விழாவில் அவர் கைசரைப் பார்த்தபோது மயங்கிவிட்டார்."

"அப்படியா? பிறகு.?" ரஜியா சிறுகுழந்தையைப்போல் முகத்தைத் தூக்கிச் சிரித்தாள்.

"பிறகென்ன?" பீபி நொண்டி அத்தையின் பேச்சைத் தொடர்ந்தார். "அஹ்மத் மியான், பாத்திமா பேகத்திடம் வேடிக்கையாகச் சொல்லிக் கொண்டிருந்தார். "உன் மகள் இப்போது பெரியவளாகிவிட்டாள். என் முன்னால் கொண்டு வராதே. இல்லாவிட்டால் ஒரு நாள் அவளைப் பிடித்து 'நிக்காஹ்' செய்து கொள்வேன்" என்றார்.

இதைக்கேட்டு பாத்திமா பேகம் மௌனமாகி விட்டாள். ஆனால் கைசர் மிகுந்த கோபத்துடன் முன்னே வந்தாள். 'என்னைத் தொட்டுப் பாருங்களேன். கையை உடைத்துவிடுவேன். என் அப்பாவைப் பயமுறுத்திக் கொத்தடிமையாக்கிக் கொண்டீர்கள். நான் இந்த அச்சுறுத்தலுக்கு அஞ்ச மாட்டேன்' என்றாள் அவள். இந்தப் பேச்சைக் கேட்டு எல்லாருமே திகைத்து நின்றார்கள்."

"தம்பி, அண்ணியாரிடம் மதிப்பு வைத்திருந்தார் என்றே சொல்ல வேண்டும்." கவ்ஹர் அத்தை தொடர்ந்தார். "இந்தச் சகோதரர்களின் கோபம்தான் எல்லாருக்கும் தெரியுமே. பாத்திமா பேகத்துக்கு எதிரிலேயே அவர் அவளை எடுத்துச் சென்றிருந்தால் யாரால் என்ன செய்திருக்க முடியும்?"

வாஹித் ஹுசேன் வாயைத் திறந்து முதல் முறையாகக் கைசர் பற்றிய சம்பவத்தைக் கேட்டார். ஒரு முறை அவர் கைக்குக் கைசர் கிடைத்து விட்டால் இந்தத் துடுக்கான பேச்சுக்குச் சரியான தண்டனை அளிக்க வேண்டும் என்று அவர் மனம் விரும்பியது.

"உஜாலா அண்ணி வரை இந்த விஷயம் போகவில்லை; இல்லையென்றால் அவர் உண்மையாகவே அவளைப் பிடித்துத் தன் கணவனிடம் ஒப்படைத்திருப்பார்."

"இந்தத் தாயும் பிள்ளையும் எவ்வளவு கேடு கெட்டவர்களாக இருக்கிறார்கள்," ரஜியாவுக்கு ஆத்திரம் வந்தது. இதுவரை கீழ்த்தரமான பெண்களிடம் இத்தகைய ஆணவத்தை கண்டதில்லை.

"இதெல்லாம் இறுதி நாளின் அறிகுறியே"

"பாருங்களேன். சாந்தைப் பார்த்துப் பொறாமையுடன் பாத்திமா பேகம் தனது மகளையும் கல்லூரிக்கு அனுப்புகிறாளாம். இத்தகைய கதியற்ற பெண்களுக்குக் கல்லூரிகளில் இடம் கொடுப்பார்களா? வாஹித் ஹுசேன் என் மாமா—ஷராபத்ஜங் என் தாத்தா என்று சொல்லி இருப்பாள்."

"ஹா... ஹா..." நொண்டி அத்தையின் பேச்சைக் கேட்டு ரஜியாவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவள் எழுந்து நின்றாள். "இந்த நீசமான பெண் நாசமாகப் போகட்டும். என் முன்னால் அவர்கள் பேச்சை எடுக்காதீர்கள்."

"ஆமாம். நம் வீட்டில் அந்த ஊர் சுற்றிப்பெண்களின் பேச்சு எதற்கு?" வாஹித் ஹுசேன் கலவரமடைந்த குரலில் கூறினார். "நிலைமை மோசமாக இருக்கின்றது. நாட்டில் என்ன நடக்கிறது என்று உங்களுக்கு என்ன தெரியும்?"

"ஏன், என்ன ஆகிவிட்டது?" பீபியின் கையிலிருந்த பாக்கு வெட்டி கீழே விழுந்துவிட்டது.

"என்னவா?" வாஹித் ஹுசேன் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு மெதுவாகக் கூறினார். "பல்குண்டா பகுதி கம்யூனிஸ்ட் ஆதிக்கத்திற்குச் சென்று விட்டது. இதில் உங்கள் மருமகன் பெரும்பங்கு கொண்டிருக்கிறார்."

"அம்மாடி...!" பீபி தனது இதயத்தின் மீது கையை வைத்துக் கொண்டார். ரஜியாவும் நொண்டி அத்தையும் சிலைகளாகி விட்டார்கள். "அங்கே அந்த இந்துஸ்தானிகள் இங்கிலீஷ்காரனை வெளியேற்றத் துணிந்து விட்டார்கள். இந்தியாவில் எத்தனை அணைகள் உடைக்கப்படுகின்றன. புகைவண்டிகளுக்குத் தீ வைக்கப்படுகிறது. இவை எல்லாம் நல்ல அறிகுறிகளாகத் தென்படவில்லை."

"கிரிப்ஸ் திட்டத்தை நேருவும், ஜின்னாவும் மறுத்து விட்டதாகச் சொல்கிறார்களே!"

இதுவரை உள்அறையிலிருந்த ரஷீத், இப்போது தந்தையுடன் பேசுவதற்காக வெளியே வந்து உட்கார்ந்தான்.

"ஆனால் அப்பா! ஆங்கிலேயர்கள் போய்விட்டால் காங்கிரஸ்காரர்களும், முஸ்லீம்லீக்காரர்களும் மக்களை வாழவிட மாட்டார்கள். பார்த்துக் கொண்டே இருங்கள். இந்த நேரு ரஷ்யாவைப்போலவே இந்தியாவிலும் கம்யூனிஸம் ஆட்சியைக் கொண்டுவந்துவிடுவார்."

"இல்லை மகனே, கா; சிரைங்கிரசும். முஸ்லீம் லீக்கும் ஜாகீர்தாரர்களை ஒழிக்கவேண்டும் என்று சொல்லவில்லை; இந்தக் கம்யூனிஸ்டுகளே எங்கள் எதிரிகள்."

இதைக்கேட்டு ரஷீத் தனது தலையைத் தடவினான்.

"நான் மட்டும் எங்கள் சேனையின் தளபதியாக இருந்தால் ஒரே நாளில் எல்லாக் குண்டர்களையும் நசுக்கிவிடுவேன்..." வாஹித் ஹுசேன் ஆவேசத்தில் தனது கைமுட்டியை இறுக்கினார்.

"இந்தக் காலத்து இளைஞர்களுக்கு அறிவே இல்லை. நாம் ஆங்கில ரெசிடென்டை நமது கைக்குள் வைத்திருந்தோம். வாயைத் திறக்கும் துணிவு யாருக்கும் இருந்ததில்லை" வாஹித் ஹுசேன் சொல்லிக்கொண்டே இருந்தார். ரஷீத் தலைகுனிந்த வாறு கேட்டுக் கொண்டிருந்தான்.

சிறிது நேரம் வரை சூனியத்தை நோக்கிய பிறகு ரஷீத் பேசினான். "எஃகுடன் மோதுவதற்கான சக்தி மனிதனிடம் எங்கு இருக்கிறது என்று ஒருநாள் சஞ்சீவா சொல்லிக் கொண்டிருந்தான். நீங்கள் எந்தத் தளபதி பற்றிப் பேசுகிறீர்கள்? 'கிராமங்களில் பாறைகள் எங்களைத் தாங்கள் மடிகளில் மறைத்துக் கொள் கின்றன. மலைகள் எதிரிகள்மீது எங்கள் பீரங்கிக் குண்டுகளைப் போல் வீசுகின்றன. பல நூற்றாண்டுகளாக ஓய்வெடுத்திருந்த கைகள், பல நூற்றாண்டுகளாக வேலை செய்யும் சக்தியை எதிர்க்க முடியாது' என்று சஞ்சீவா சொன்னான்."

"ஓஹோ, நீங்களும் செங்காடி ஏந்தி தல்லம் படையில் சேருவதைப்போல் அல்லவா சஞ்சீவாவின் பேச்சைச் சொல்கிறீர்கள்."

வாஹித் ஹுசேனின் குற்றச்சாட்டு ரஜியாவுக்குச் சிரிப்பைத் தந்தது. ரஷீதும் வெட்கமடைந்தான்.

"ஆனால் இது உண்மை அல்லவா அப்பா," ரஷீத் வேதனை யுடன் கேட்டான்.

"நீசன் ஒருவன் துப்பாக்கி சுட்டதாக முன்பு கேட்டதில்லை; ஆனால் இன்று ஒரு முழுமாவட்டத்தையே அவர்கள் கைப்பற்றி விட்டார்கள். அவர்களுடைய ஆட்சியும் நடக்கிறது." பேச்சை முடிக்கும்போது அவனுடைய முகத்தில் கசப்பான ஏமாற்றம் பரவி விட்டது.

"நாங்கள் கிராமங்களுக்கு ஏதேனுமொரு செயல்திட்டத் திற்காகப் போகும்போது கல்லுடைக்கும் பெண்களும் எங்களை எதிர்த்துப் பதில் பேசுகிறார்கள்."

ரஷீதின் பேச்சைக்கேட்டு ரஜியா சிரித்துவிட்டார். சுற்றுப் பயணங்களின்போது ஒவ்வொரு இரவும், கல்உடைக்கும் பெண் ஒருத்தி அவர்களுக்காகப் பிடித்துக்கொண்டு வரப்படுகிறாள் என்றுதான் அவள் கேள்விப்பட்டிருந்தாள்.

நொண்டி அத்தை சமையலறையில் உணவு தயாரிக்கும் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தாள். கல் உடைக்கும்

பெண்களைப் பற்றிய பேச்சு வந்ததும், அவள் திரும்பி வந்தாள்.

"ரஷீத் மியான் என்ன சொன்னார். கல் உடைக்கும் பெண்கள் என்ன செய்கிறார்களாம்?"

"ஆட்சி செய்கிறார்கள் அத்தை... பேனா எடுத்து புத்தகம் எழுதுகிறார்கள்."

"சீ, போ," நொண்டி அத்தையால் சிரிக்கவும் முடியவில்லை. "அந்த அழுமூஞ்சிகள் பேகம்களாகி விட்டார்களா?"

"ஆமாம், அத்தை—பேகம்களாகிக் கிராமங்களை ஆட்டிப் படைக்கிறார்கள்."

"அப்படியா, அங்கு யார் கல் உடைக்கிறார்களாம்?"

"நமது தலைவிதியை உடைக்கிறார்கள்," வாஹித் ஹுசேன் இப்போது அழும் நிலையில் இருந்தார். இரவில் கவியரங்கம் இருந்தது. இதுவரை ஓர் ஈரடியும் அமையவில்லை. பிறகு கூடத்தைச் சுத்தப்படுத்திக் கம்பளங்கள் விரித்துத் தேநீருக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும்...

"இந்தாருங்கள், உங்களுக்குக் கடிதம்!"

ரஷீத் அதைத் திருப்பிப் பார்த்துவிட்டு ரஜியாவின் கையில் கொடுத்துவிட்டான்.

"எல்லாம் நலந்தானே! உங்கள் அப்பா எழுதி இருக்கிறாரோ?" நொண்டி அத்தை எப்போதும் ரஜியாவின் தந்தையுடைய சாவை எதிர்நோக்கினாள். அப்போதுதானே ஒரே வாரிசும் மருமகனுமான ரஷீத் அவருடைய சொத்துக்கு உரிமையாளனாக முடியும்...!

"ஹமீத் அண்ணா எழுதி இருக்கிறார்" ரஜியா ஏனோ புன்முறுவல் செய்து கொண்டிருந்தாள்.

"உங்கள் அப்பாவின் உடம்பு எப்படி இருக்கிறது?"

"நீங்கள் சரியாகக் கேட்கவில்லை. அந்தத் தடித்த பருமனான ஹமீத் அண்ணா இருக்கிறாரே, அவருடைய திருமணம் நடக்கப் போகிறது!" நொண்டி அத்தைக்கு விடை தருவதற்குப் பதிலாக அவள் ரஷீதிடம் பேசினாள்.

"ஹா.. ஹா.. ஹா..." ரஷீதுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"உண்மையாகவா?" தூங்கிக் கொண்டிருந்த வாஹித் ஹுசேனும், வாயில் வெற்றிலை போடப்போன பீபியும் ஆர்வத்துடன் கேட்டார்கள்.

"பேச்சு வார்த்தை நடந்து வருகிறதாம். பெண்வீட்டுக்காரர்கள் மூவாயிரம் தருவதாகச் சொல்கிறார்களாம். நாமெல்லாம் அங்கு சென்று, அவர்களைச் சந்தித்து, உண்மையாகவே மூவாயிரம் தருவார்களா இல்லையா என்று எடைபோட்டு முடிவு செய்ய வேண்டும் என்று ஹமீத் அண்ணா கேட்டுக்கொண்டிருக்கிறார்."

"சரியாகவே எழுதியுள்ளார்." நொண்டி அத்தை பீபியைப் பார்த்து முகத்தைச் சுளித்தார். "யாருக்குத் தெரியும். யாராவது பக்கிரிகள், சுமை தூக்கிகள், பணியாளர்களாக இருக்கலாம். பாவம் ஹமீத் ஹுசேன் ஏமாற்றப்படலாம்."

"வெற்றுப்பேச்சு எதற்கு?" வாஹித் ஹுசேனுக்கு எரிச்சலாக இருந்தது. "கடைசியில் திருமணத்திற்குப் பணம் செலவு செய்யவும், மனைவியின் செலவுகளை ஏற்கவும் ஹமீத் மியான் தயாராகி விட்டாரே, அது போதாதா?"

ஹமீத் உண்மையில் ஆதரவற்றவர். தனது கருமித்தனத் திற்காகக் குடும்பத்தில் பேர் பெற்றிருந்தார். குடும்பத்தில் யாரும் அவரைச் சகோதரராக ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. ரஜியாவின் அப்பா மெட்ரிக் வரை படிக்க வைத்தார். அதற்குப் பிறகு பள்ளிக் கட்டணச் சலுகை பெற்று அவர் பட்டமும் வாங்கிவிட்டார். மதுபான வரித்துறை போன்ற செழிப்பான துறையில் வாஹித் ஹுசேனின் முயற்சியால் வேலை கிடைத்து விட்டது. அங்கு ஹமீத் மியானுக்குப் பணம் பண்ணுவதைவிட வேறு பணி ஏதும் இருக்கவில்லை. குழந்தைப் பருவத்தில் தான் பட்ட கஷ்டங்களையும் நிரந்தரமான ஏழ்மையின் இடர்களையும் சந்தித்த ஹமீதுக்கு, உலகத்தில் பணமே மிகப் பெரிய உண்மை என்று புரிந்தது. அப்போது சாப்பிட ஏதும் கிடைக்காததால் பட்டினியாகத் தூங்குவார். ஆனால் இப்போது பணம் செலவழிந்து விடக்கூடாதே என்று வெறும் வயிற்றுடன் தூங்கச் செல்வார். எல்லாரும் அவரைக் கேலி செய்வார்கள். ஆனால் அவர் சிரித்து மழுப்பி விடுவார். குடும்பத்தில் அவருடைய கஞ்சத்தனம் பற்றிய வேடிக்கைத் துணுக்குகளை சிறு குழந்தைகளும் சொல்லிச் சொல்லிச் சிரிப்பர். ஆனால் கேலி பேசுபவர்களை அவர் சிரித்து மழுப்புவார். 'இன்னும் சில நாள் சிரித்துக் கொள்ளுங்கள். பிறகு நான் காரில் உட்கார்ந்து வந்து உங்கள் சொந்த அண்ணன் மகனாகிவிடுவேன். அப்போது எல்லாருடைய முகங்களிலிருந்தும் சிரிப்புக் காணாமற்போய்விட, நான் அப்போது சிரிப்பேன்' என்று அவர் யோசனை செய்வது போல் இருந்தது.

அப்படியும் ஹமீதுக்கு வேறு ஏதாவது பிரச்சினை என்றால் யாரும் திரும்பிப் பார்க்க மாட்டார்கள். ஆனால் இது திருமண விஷயமாயிற்றே. இதில் சம்பந்தியாகப் பெருமைகாட்டி, விருந்து உபசாரங்களை அனுபவிக்கும் வாய்ப்புகள் நிறைய வரும். ஒன்று, பெண்வீட்டாரும் விழுந்து விழுந்து வரவேற்புத் தருவார்கள்; இரண்டாவதாக ஹமீத் மியான் மீதும் அதிகாரத்தை நிலை நாட்டலாம்; உங்களுடைய வாழ்வை நாம் அல்லவா செழிப்பாக்கி விட்டோம் என்று!

எனவே வீடு அமர்க்களப்பட்டது.

பீபி ஒருநாள் பாதுகாப்புப் பெட்டகத்திலிருந்து நகைப் பெட்டியை எடுத்தார்.

சம்பந்தியாகச் செல்லும்போது நகைகளை முக்கியமாக அணிந்துகொள்ள வேண்டும். சாந்தும் அந்தத் திருமணத்தில் அக்கறை காட்டினாள். அவள் எப்போதும் ஹமீத் அண்ணனின் கருமித்தனத்தை எள்ளி நகையாடுவாள். அவருடன் நிறைய வேடிக்கை செய்வாள். எனவே அவர் கடிதத்தில் குறிப்பாகச் சாந்துக்கும் அழைப்பு விடுத்திருந்தார். ஹமீத் மியாவின் குலப் பெருமையைப் பெண் வீட்டார் உணர வேண்டுமே! எனவே சாந்த் தையற்காரனை அழைத்து, ரவிக்கையின் நவீன வரை படத்தைக் கொடுத்து எப்படித் தைப்பது என்பதை விளக்கினாள். ரஜியாவும் புதிய காஞ்சிபுரம் பட்டுச் சேலையை வாங்க ரஷீதுடன் துணிக்கடைக்குச் சென்றாள்.

ஒரு வாரத்திற்குப் பிறகு மணமகள் வீட்டிலிருந்து மண மகளின் சகோதரன், இவர்களை அழைத்துச் செல்ல வந்தபோது, இவர்கள் எல்லா ஆயுதங்களுடன் தயாராக இருந்தனர். நொண்டி அத்தையும் சல்வார் கமீசை விட்டு, தனது சீர்வரிசையில் இருந்த ரோசா நிறப் பனாரஸ் சேலையை அணிந்தாள். நொண்டி அத்தை கன்னியாக இருந்ததால் பைஜாமாவும் கமீசும்தான் அணிவாள். ஆனால் நாற்பது வயதைத் தாண்டி விட்டதால் விசேஷமான நேரங்களில் சேலையும் கட்டிக் கொள்வாள். பீபியின் கூற்றுப்படி இந்த ஆடையில் அவருடைய அழகு பொலிவு பெற்றுத் திகழும். இன்று அவர் ரஜியாவின் பெட்டகத்திலிருந்த தனது நகைகளில் சிலவற்றை எடுத்து அணிந்து கொண்டார். வெள்ளையும் கறுப்பும் கலந்த தனது முடியை அடிக்கடி புடவைத் தலைப்பால் மூடினார். பீபியும் பச்சை நிறச் சேலையை அணிந்து கொண்டார். அவருடைய முகம் தங்கம்போல் பிரகாசித்தது. பீபி தனது அழகை எங்கு மறைத்து வைக்கிறாளோ, அதனுடைய ஒளி சிறிதும் மங்கலடைவதே இல்லை; அப்படியும் தனது அழகை அவர் பதூலுக்கும் பஷீருக்கும் பங்கு போட்டுக் கொடுத்தார். அதிலிருந்து சாந்தும் ஒரு பங்கு பெற்றாள். ஆனால் பீபியின் சிரிப்பில் இன்னும் தனிக் கவர்ச்சி இருந்தது. அதற்காகவே வாஹித் ஹுசேன் பல கவிதைகளைப் பாடிவிட்டார்.

பிறகு நொண்டி அத்தை வந்தார். அவர் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவாறு பீபிக்கு அவசியமான நகைகளை அணிவித்தார். வெளியே செல்லும்போதெல்லாம் அண்ணிகளுக்கு ஒப்பனை செய்வது நாத்தனார்களின் கடமையாகும். இதை நொண்டி அத்தை எப்போதும் மிகுந்த மகிழ்ச்சியுடன் நிறைவேற்றினார். கழுத்தில்

ஏழு வரிசை மாலை, சந்திர மாலை, பத்து விரல்களிலும் பத்து மோதிரங்கள், கை வளையல்களுக்கு முன்னும் பின்னும் காப்புகள். இத்தனை நகைகள் எடுத்த பிறகும் நகைப்பெட்டி நிரம்பி இருந்தது. ரஜியா கருமணி மாலையுடன் சந்திர வடிவில் காதணிகள் அணிந் திருந்தாள். இன்னும் சில நகைகளைப் போட்டுக்கொள் என்று சொண்டி அத்தை வற்புறுத்தினாள். ஆனால் இதைத் தவிர வேறு எந்த நகையும் இந்த அலங்காரத்திற்குச் சேராது. எனவே அணிய வேண்டாம் என்று சாந்த் ஆலோசனை கூறியிருந்ததால் எதையும் ரஜியா அணியவில்லை.

"பீபி, உங்கள் நகைப்பெட்டியை உடன் எடுத்துச் செல்லுங்கள். எல்லோருக்கும் காட்டிவிடலாம்" என்று கஜல் சொன்னதும் பீபிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. நொண்டி அத்தைக்குப் கோபம் வந்தது.

"ஒன்றும் தெரியாத சிறுமியாக இருக்கிறாள். எல்லாருக்கும் காட்டுவதற்காகவா நாம் நகைகளை அணிகிறோம்?"

சாந்த் மட்டுமே, எவ்வளவு சொல்லியும் எந்த நகையையும் தொடவில்லை. இன்று அவள் நடிகை பேகம் பாராவைப்போல் பெரிய கழுத்துடைய, ஆனால் கைகள் இல்லாத, பொன்னிறப் பிளவுஸ் அணிந்து இருந்தாள். அது உயரமாகவும் இருந்தது. அதனால் நீலநிற ஜார்ஜெட் சேலையில் அவளுடைய அழகான இடுப்பு தெரிந்தது. ஏதாவது வேலக்காக அவள் சிறிது குனிந்தாலும் கஜல் இங்கும் அங்கும் பார்க்க ஆரம்பித்துவிடுவாள். சாந்த் அக்காவின் உடல்மீது கண்பட்டுவிடக் கூடாது என்று! இன்று சாந்த் முடி அலங்கார நிலையத்தில் இரண்டு மணிநேரம் உட்கார்ந் திருந்தாள். அவளுடைய முடி முன்பக்கத்திலிருந்து கிரீடத்தைப் போல் மேலே எறி இருந்தது. பின்புறத்தில் முடிச்சுருள்கள் அலைகளாகவும் வட்டங்களாகவும் விழுந்தன! துடித்தன! சாந்தின் தகித்துக் கொண்டிருந்த கன்னங்களைத் தொடுவதற்காகத் துள்ளின! வெள்ளையான, ஒன்றுமில்லாத மணிக்கட்டில் கறுப்புப் பட்டையுள்ள சிறியதொரு கடிகாரம் இருந்தது. கறுப்பான பட்டுப்போன்ற மிதியடி—இந்தச் சாதாரணமான அலங்காரத்தில் சாந்தின் கவர்ச்சியைக் கண்ட ரஜியா வியப்படைந்தாள்.

"அல்லாஹ்! சாந்த் இன்று எவ்வளவு ஒளி தருகிறாள்..." அவள் சாந்தை அணைத்துக் கொண்டாள். தனது கன்னங்களையும் கழுத்தையும் ரஜியாவின் சாயம் பூசிய உதடுகளிலிருந்து சாந்த் மிகவும் சிரமத்துடன் காப்பாற்றினாள். சாந்த் வெளியே வந்தபோது நொண்டி அத்தையும் கண்களைத் திறந்து மந்திரத்தால் வசீகரப் பட்டவள்போல் அவளைப் பார்த்தாள்.

"ஓ அம்மா! இதென்ன நாகரிகமோ... முடி முகத்தின் மேல்

படர்ந்து இருக்கிறது. வெறுங்கையை அசைத்துக் கொண்டு வருகிறாள்..." நொண்டி அத்தைக்கு அப்போது சாந்த் மிகவும் அழகாகத் தெரிந்தாள் என்றாலும் குறை கூறுவது அவர் குணமாகி விட்டது.

ஃபவுசியாவை அவள் ஆயா முன்பே தயார் செய்துவிட்டாள். பட்டுப்போன்ற மென்மையான துணியால் செய்யப்பட்ட சிவப்பு பிராக் அணிந்திருந்தாள். தலையில் செந்நிற அணியிழை இருந்தது. சிவப்புக் காலணியில் நாடா அசைந்தாட அவள் இங்கும் அங்கும் பெருமையுடன் நடந்தாள். இன்று பெண்களே போவதால், ஷாஹீன் அங்கு செல்வதை விரும்பவில்லை. அவன் பள்ளிக்கே போய்விட்டான். கஜல் மட்டும் ஃபவுசியாவைப் பொறாமையுடன் பலமுறை நோக்கினாள். பிறகு தான் அணிந்திருந்த பழைய பிராக்கையும் பார்த்துக் கொண்டாள். இதுவும் ஃபவுசியா வுடையதே. பீபி ரஜியாவிடம் கேட்டுவாங்கி அவளுக்கு அணிவித் திருந்தாள். அதனால் ஃபவுசியா கஜலின் ஒவ்வொரு செயலையும் கூர்ந்து கவனித்தாள். வழக்கம் போல் கஜல் பிராக்கின் ஓரத்தைப் பற்களால் கடிக்கும் போதும், மணமகளின் தம்பியை அடிக்க ஓடும்போதும் "ஐயோ, என் பிராக் கிழிந்து விடுமே" என்று சொன்னாள்.

ஆனால் அப்போது கஜல் மணமகளின் தம்பியைத் துன்புறுத்துவதே தனது முதல் வேலை என்று நினைத்தாள். அவன் பதினொன்று பன்னிரெண்டு வயது நிரம்பிய ஒல்லியான சிறுவன். அசடாகத் தெரிந்தான். கூடத்தில் ஒரு நாற்காலியின்மீது உட்கார்ந்த வாறு கஜலின் குத்துகளையும் அடிகளையும் அவன் பொறுத்துக் கொண்டான். தனது அக்காளின் பிரியமான நாத்தனாராக அவள் வரப்போகிறாள் என்று நினைத்தாள். அதனால் கஜல் தன் தொப்பியைப் பிடுங்கிக் கொண்டு ஓடும்போது அவன் ஒன்றும் சொல்லவில்லை.

பீபி அவனுக்குக் குலாப்ஜாமுன், கேக், பிஸ்கெட் கொடுத்து உபசரித்தபோது அவன் பணிவுடன், "நீங்கள் எதற்காக இவ்வளவு செலவழித்து விட்டீர்கள்..?" என்று கேட்டான்.

இதைக்கேட்ட ரஜியா சிரித்துவிட்டாள். அவள் மெதுவாகப் பீபியிடம் சொன்னாள். "ஹமீத் அண்ணாவுக்கு ஏற்ற இடம்தான் இது. மைத்துனன் இப்போதே ஒவ்வொரு பொருளின் விலையையும் யோசனை செய்கிறான். அக்காவும் அப்படியே இருப்பாள்.

பீபி அந்தப் பையனுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். இதுவரை மனம் திறந்து சிரிக்காதவன்போல் அவனது முகத்தில் வேதனை தரும் நற்பண்பு இருந்தது. வயிறு நிறைய உண்ணுவதும்

இல்லை போலும். அவன் மிகுந்த அடக்கமும் பணிவும் உடையவனாக இருந்தான். சாதாரணப் பருத்தி ஷேர்வானியே அணிந்திருந்தான். வீட்டில் துவைத்த அழுக்கடைந்த பைஜாமா, கான்வாஸ் காலணி, துருக்கியத் தொப்பி—அதில் தொங்கலும் இல்லை. வந்தவுடன் அவன் குனிந்து எல்லாருக்கும் வணக்கம் தெரிவித்தான். பிஸ்மில்லா பீக்கும், பிறகு ஷாஹீனுக்கும் 'சலாம்' செய்துவிட்டு அவன் எழுந்து நின்றபோது கஜலுடன் சாந்துக்கும் சிரிப்பு வந்துவிட்டது.

அவன் எல்லாருடனும் கலகலப்பாகப் பழகினான். அண்ணி, சின்னம்மா, அத்தை, பாட்டி என்று உறவு முறை கொண்டாடினான். அதனால் கஜல் இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி நாற்காலியிலிருந்து குதித்து தனது வீர சாகசங்களைக் காட்டினாள். இந்த விளையாட்டு அலுத்துவிட்டதும் கேலியாக அவனை அடிக்க ஆரம்பித்தாள். அவனுடைய தொப்பியைப் பிடுங்கிக்கொண்டு ஓடினாள். அவன் மிகுந்த சோகத்துடன் பணிவாகச் சொன்னான்:

"என் தொப்பியைக் கொடுத்துவிடுங்கள்; பாருங்கள்… உங்கள் அம்மா வருகிறார்கள்".

"எனது அம்மா செத்துவிட்டார்கள்", அவள் மிக அலட்சியமாகப் பதிலளித்துவிட்டு அவனது முதுகில் குத்துவிட்டாள்.

"நீங்கள் எந்தப் பள்ளியில் படிக்கிறீர்கள்?"

"அவள் என் பிராக்கை அணிந்திருக்கிறாள்…" ஃபவுசியா அவனுக்குத் தகவல் தெரிவித்தாள்.

"இல்லை; அப்படிச் சொல்லக்கூடாது. அது தவறு" மணமகளின் தம்பி ஃபவுசியாவுக்கு அறிவுரைகூறினான்.

"ஏன்? ஏன் சொல்லக் கூடாது?" பவுசியா கேட்டாள்.

"சிறிது நேரத்திற்காக ஒருவருடைய துணியை வாங்கிக் கொண்டால் அது தவறு இல்லையே!" என்றான் அவன். அதற்குள் கஜல் அவனுடைய ஷேர்வானி மீது ஒரு குத்துவிட்டாள். பிறகு சிரித்தவாறு பின்நோக்கி ஓடினாள். படிக்கட்டுகளின் மீது உருண்டு முற்றத்தில்போய் விழுந்தாள். அந்தப் பையன் எழுந்து ஓடி வந்தான். அழுது கொண்டிருந்த கஜலை எடுத்து அணைத்துக் கொண்டான்.

"இல்லை, அழக்கூடாது. உங்கள் கண்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன. நீங்கள் அழுதால் அது கெட்டுவிடும்"

கஜலைத் தேற்றிவிட்டு அவன் பீபியிடம் சென்றான்.

"சீக்கிரம் கிளம்புங்கள். எங்கள் அக்கா பகல் உணவைத் தயாரித்திருப்பார்."

"இல்லை தம்பி, நாங்கள் எதுவும் சாப்பிடமாட்டோம்." என்றாள் ரஜியா.

“நீங்கள் அவசியம் சாப்பிட வேண்டும். அதற்காக நிறைய பணம் செலவாகி இருக்கிறதே!”

“சரி, மாலையில் சாப்பிட்டுக் கொள்ளலாம்”, பீபி அவசரமாகச் சொன்னார். அவனுடைய மனம் புண்பட்டு விடக் கூடாதே என்றே எண்ணம்.

“நீங்கள் மாலை வரை எங்கள் வீட்டில் இருந்தால், அந்தத் தட்டுகள்...”

“தட்டுகளுக்கு என்ன?” ரஜியா கலவரமடைந்தாள்.

“நான்கு மணிக்குள் தட்டுகளைத் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறார்களே”

“உங்களுக்கு எத்தனை சகோதரிகள்” இப்போது ரஜியா சிறிது கவலையுடன் கேட்டாள்.

“இரண்டு. பெரிய அக்கா பள்ளி ஆசிரியையாக இருக்கிறாள்!”

“அவருக்குத்தான் கல்யாணமா?”

“இல்லை...” அந்தச் சிறுவன் தடுமாறினான். “இனி நான் திருமணம் செய்து கொள்வதில்லை என்று அவர்கள் சொல்லி விட்டார்கள். சிறிய அக்காவுக்காகத் தன் சம்பளத்தில் சீர் சேர்க்கிறார்கள்.”

“அப்படியா? அவர்தான் மூவாயிரம் ரூபாய் வரதட்சணை தருகிறாரா?”

“ஆமாம்; இந்தத் திருமணத்திற்காக அண்ணாவும் எழுநூறு ரூபாய் சேர்த்திருக்கிறார்...”

“ஓ! அதற்காகவே இவ்வளவு சீக்கிரமாகத் திருமணம் நடத்துகின்றீர்களா? சீர்வரிசை எல்லாம் தயாரா?”

“ஆம். சின்ன அக்காவுக்குச் சீக்கிரம் திருமணம் நடத்திவிட வேண்டும். இல்லாவிட்டால் பெரிய அக்காவைப்போல் நானும் திருமணம் செய்து கொள்வதில்லை என்று அவரும் சொல்லி விடுவார் என்று அம்மாவுக்குக் கவலை...”

அவர்கள் எல்லாரும் கார்களில் ஏறிப்புறப்பட்டார்கள். ரஜியாவுக்கு வெறுத்துவிட்டது. இத்தகைய ஏழைகள் மூவாயிரம் ரூபாய் ரொக்கம் கொடுக்க முடியாது என்று அவள் நினைத்தாள்.

அங்கு ஒரு சிறிய, பழைய, ஆடம்பரமற்ற, சுத்தமான வீட்டில் அவர்கள் இறங்கினார்கள். ஒல்லியான, களையற்ற முகங்கள் கொண்ட, ஏழ்மையான நிலையிலிருந்த இரண்டு பெண்கள் அவர்களை வரவேற்றார்கள். ஒருவர் மணமகளின் தாய்; வேறொருவர் அவளுடைய அக்காள். இருவரும் வலுவற்றவர்கள். ஃபவுசியாவுக்கும் சாந்துக்கும் தங்கள் மினுமினுப்பு, தங்கள் நாகரிகத்தைப் பாராட்ட யாரும் இல்லையே என்று ஏமாற்றமாக இருந்தது. மணமகளின் அக்கா முப்பது முப்பத்தைந்து வயதுடைய

ஒல்லியான பெண். மிகவும் அவசியமான சமயத்தில் புன்முறுவல் செய்ய முயன்றாலும், அழுவதற்காக முயன்று தோல்வி கண்டவர்போல் தெரிந்தது. இத்தனை அமைதியான, களிப்பற்ற சூழலைக் கண்டதும், அக்கம் பக்கத்திலிருந்து, இந்த ஆடம்பர மங்கையரைப் பார்ப்பதற்காகக் கூடியிருந்த மங்கையருடன் கஜல் உடனடியாகக் கலந்து விட்டாள். இப்போது அவள் கவலை யில்லாமல் முற்றத்தில் உட்கார்ந்து பீபியையும், நொண்டி அத்தையையும் நையாண்டி செய்துகொண்டிருந்தாள். பிறகு மாமரத்தில் காய்கள் இருப்பதைப் பார்த்துக் குரங்குபோல் அதன்மீது ஏறினாள். இதைப் பார்த்து மணமகனின் தம்பி சர்வர் கூச்சலிட்டான். ஃபவுசியாவுக்குத் தன் பிராக்கின்மீது கவலை இருந்தது. சர்வருக்கு மாங்கனிகளின்மேல் கவலை.

"கஜல் பேகம் கீழே இறங்குங்கள்... இந்த ஆண்டின் மாம்பழ மகசூலை நாங்கள் ஏற்கெனவே விற்றுவிட்டோம். ஒன்று குறைந்து போனாலும் அவன் பணம் கொடுக்க மாட்டான்."

"சே... நீங்கள் இவ்வளவு கருமிகளா? நீங்களே ஏன் சாப்பிடுவதில்லை..."

கஜல் மரத்தின்மீது ஏறுவதைக் கண்டு பீபியும் ரஜியாவும் கலவரமடைந்து விட்டார்கள்.

"பீபி, இது காய்—இதைச் சாப்பிட்டால் இருமல் வரும்" மணமகளின் தாய் மிகவும் பணிவுடன் சொன்னாள். "உண்மையில் எங்கள் வீட்டில் யாருக்கும் மாம்பழம் பிடிக்காது. அதனால் மகசூலை விற்றுவிட்டோம். வீணடிப்பதால் என்ன பயன்?"

"ஆமாம்—நல்ல காரியம் செய்தீர்கள்" பீபியும் ஆமோதித்தார்.

"அடியே கஜல், கீழே இறங்கு, இன்று உன் கால்களை வெட்டி விடுகிறேன்" நொண்டி அத்தை பற்களைக் கடித்தாள்.

கீழே இறங்கி கஜல் உணவின்மீது தாக்குதல் நடத்தினாள். கோழி முதல் எல்லாப் பொருள்களையும் விழுங்கினாள். சாப்பிடும் போது மணமகளின் அக்கா விலைவாசி உயர்வின் அழுகையைத் தொடங்கினாள். "கோழியின் விலை இருபது ரூபாய். சாப்பாட் டுக்கு நூறு ரூபாய் செலவாகிவிட்டது" என்றாள்.

பிறகு கஜல் மூடப்பட்டிருந்த அறைகளைச் சோதனையிடத் தொடங்கினாள். அதில் வீட்டின் எல்லாப் பழைய சாமான்களும் போடப்பட்டு, அழுக்கடைந்த துணிகளால் மூடப்பட்டிருந்தன. அவள் படங்கள் போட்ட ஒரு புத்தகத்தை எடுக்க ஆரம்பித்தாள். மூன்று படங்கள் எடுப்பதற்கு முன்னால் சர்வர் வந்துவிட்டான். புத்தகத்தின் கதியைப் பார்த்து அவன் உடலில் தீப்பற்றி எரிந்தது.

"இதென்ன செய்துவிட்டாய்? இரண்டரை ரூபாய் விலை யுள்ள புத்தகம் இது."

கஜலின் கையிலிருந்த அந்தப் புத்தகத்தை அவன் பிடுங்கி னான். கஜல் அவனுக்கு அழகு காட்டினாள்—'கஞ்சன், கருமி'.

மணமகளின் அக்காளும் அம்மாவும் மணமகளை அழைத்து வர உள்ளே சென்றார்கள். நொண்டி அத்தை மெதுவாகக் கூறினாள்—"இவர்கள் மூவாயிரம் தருவார்கள் என்பது நிச்சயம் இல்லை. இவர்களிடமிருந்து ரொக்கப்பணம் சீர் வரிசைப் பட்டியலை எழுதி வாங்கிவிட வேண்டும். பிறகு ஏதாவது சாக்குப் போக்குச் சொல்வார்கள். பாவம் ஹமீத் மியான், அவரால் ஒன்றும் செய்யமுடியாது".

மணமகளும் தன் அக்காவைப்போல் எலும்பும் தோலுமாக இருந்தாள். தென்னை மர உயரம்—மூக்கும் முழியும் மிகச் சுமார்தான்.

''சீர் வரிசையில் பத்துத் தட்டுகள்—பதினொன்று சேலைகள்—நான் அணிந்திருக்கும் சேலையும் கொடுப்போம். இதன் விலை நாற்பது ரூபாயாகும்" மணமகளின் அக்காள் சீர் வரிசையை விவரித்துத் தங்கள் பெருமையைக் காட்டினார்.

"நல்லது. நீங்கள் சீர்வரிசையின் பட்டியலை இப்போதே எழுதிக் கொடுங்கள். அடுத்த வெள்ளிக்கிழமை நிச்சயதார்த்தம் வைத்துக் கொள்ளலாம். அப்போது மூவாயிரம் ரொக்கமாகக் கொடுத்துவிடுங்கள்" நொண்டி அத்தை மிகத் தெளிவாக ஒளிவு மறைவின்றிப் பேசிவிட்டாள்.

"அடுத்த வாரமா? இது எப்படி முடியும்?" மணமகளின் தாய் தடுமாறினார்.

''நாங்கள் சிறிது சிறிதாகச் சீர்வரிசையைச் சேர்த்து வருகிறோம். ஆனால் எங்கள் பேச்சை நம்புங்கள்—நாங்கள் ஒன்றும் கேடு கெட்டவர்கள் அல்ல. இவர்களுடைய அப்பா மட்டும் உயிரோடு இருந்திருந்தால் இலட்ச ரூபாய்க்குச் சீர்வரிசை கொடுத்திருப்பேன்..."

நொண்டி அத்தை முகத்தைச் சுளித்தவாறு இங்கும் அங்கும் பார்த்தாள்.

''வெற்றிலையைக் கொண்டு வாருங்கள். வெற்றிலை போடாமல் வாய் சரியாக இல்லை", பீபி கொட்டாவி விட்டார்.

"இப்பொழுதே தருவிக்கிறேன்" மணமகளின் அம்மா தனது பழைய துணிப்பையை எடுத்துப் பணம் தேடினாள். "என்ன சொல்வேன் சின்னம்மா, நான் வெற்றிலை போடுவதை நிறுத்தி விட்டேன். பெண்கள் எதிரில் நிற்கிறார்கள். வருங்காலத்தையும் யோசிக்க வேண்டும்."

அவர்கள் விடைபெற்று எழுந்தபோது மணமகளின் அம்மா மீண்டுமொரு முறை சீர்வரிசையை ஒப்புவித்தார். "இவர்களுடைய

சித்தப்பா வாக்குக் கொடுத்திருக்கிறார். மணமகனுக்குத் தங்க மோதிரம் போடுவாராம். இவர்களுடைய அத்தை 'லாக்கட்' கொடுக்கிறார்..."

"உண்மையைச் சொல்லட்டுமா?" மணமகளின் அக்கா சற்று தயங்கியவாறு பணிவுடன் சொன்னாள். "ஆயிரத்து ஐநூறு ரூபாயாகக் கொடுத்து விடுவோம்."

"எங்கள் வார்த்தையை நம்புங்கள். பெரிய மனிதர்களின் வாக்குத்தான் முக்கியம்," அவர்களுடைய அம்மா மன்றாடினாள்.

"கடனா? யாஹ் அல்லாஹ்! மக்கள் என்ன சொல்வார்கள். வரதட்சணையும் கடனா?" நொண்டி அத்தை முரண்டு பிடித்தாள்—"உங்கள் மகளின் சம்பளத்தை எப்படி நம்புவது? நாளைக்கு அவளுக்குத் திருமணம் நடந்துவிட்டால், அவளுடைய கணவன் எதற்காகக் கொடுப்பான். எங்களுக்குக் காகிதத்தில் எழுதிக் கொடுப்பீர்களா?"

"என் திருமணமா?" மணமகளின் அக்கா வானத்தை நோக்கினாள். "உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா என்ன... அதாவது என் கல்யாணம்...? நான் எங்கே போகமுடியும்?"

தன் பார்வையை உயர்த்தி அவள் ரஜியாவைக் கேட்டாள். ரஜியா அவளது தலையில் பரவும் வெயிலையும் நிழலையும் பார்த்தாள். அவளுடைய முகத்தில் பரவிய மாலையின் இருளைக் கண்டு பதில் சொல்லமுடியாத நிலையை அடைந்தாள். உண்மையாகவே காகிதத்தில் எழுதி வாங்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை.

போகும்போது கஜல் மீண்டும் சர்வரிடம் சென்று அவனைத் தள்ளினாள். 'கஞ்சன்—கருமி—பாழடைந்த மூஞ்சி—கழுதை—பன்றி—ஆந்தை..." பிறகு அவனை உதைக்கக் கால் எடுத்தபோது நொண்டி அத்தையின் உடைந்த கால் உதையும், குத்துகளும் அவள்மீது விழுந்தன.

"அடிக்காதீர்கள்... தாயில்லாப்பிள்ளை..." மணமகளின் தாய்க்குக் கருணை பிறந்தது. அவர் அழுதுகொண்டே பார்த்த போது சர்வரின் மூக்கிலிருந்து இரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது. அவன் மிகுந்த பொறுமையுடன் குழாய்க்கு அடியில் உட்கார்ந் தவாறு கஜலைப் பார்த்தான்.

கார் புறப்பட்டபோது அவன் ஓடோடியும் வந்தான். மன்றாடும் முறையில் கேட்டான். "இனி நீங்கள் அடிக்க மாட்டீர்களே!"

பதிலுக்குக் கஜல் அவனுக்கு அழகு காட்டினாள்.

கார் முன்னே சென்றதும் நொண்டி அத்தை கூறினாள்: "இவர்களுடைய பொறுப்பை யாரும் ஏற்க வேண்டாம். இவர்கள்

ஐநூறும் தருவார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை."

ஆனால் வீட்டுக்கு வந்தவுடன் ரஜியா, ஹமீத் அண்ண னுக்குக் கடிதம் எழுதினாள்.

"உங்கள் மாமனார் வீட்டுக்காரரர்கள் பெரிய மனிதர்கள். அவர்கள் மூவாயிரம் தருவார்கள். அதன் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்."

# 14

இத்தனை கண் கூசும் ஒளியை வாழ்வில் முதல் முறையாக அவள் பார்க்கிறாள்.

மேடைக்கு நடுவில் ஒளியின் வட்டத்தில், மாமியின் மேல் துண்டை அணிந்து, முடியை அவிழ்த்துவிட்டு, ஒரு குறிப்பிட்ட கோணத்தில் உட்கார்ந்திருந்தாள். கண் இமை அசைத்தாலும் எல்லாம் குழப்பமாகிவிடும் என்று சாந்த் அக்கா எச்சரித்திருந்தாள். உதட்டுச்சாயம் பூசியதால் அவளுக்கு அமைதி இருக்கவில்லை. பெரிய பெரிய மீசைகள் கொண்ட மனிதன் ஒருவன் அவள் முகத்தின் மீது எத்தனையோ வண்ணங்களைப் பூசிவிட்டான். மேல் துண்டின் சரிகை நாடா கழுத்தில் உரசியதால் அவளுக்குச் சிரிப்பு வந்தது. திடீரென்று மேடையின் விளக்குகள் அணைந்து விட்டன. எதிரில் இருந்த திரை மெதுவாக மேலே ஏறத் தொடங்கியது. மேடையின் ஒரு மூலையில் ஒலிபெருக்கிக்கு முன்னால் நின்றவாறு சாந்த் அக்கா இனிமையான குரலில் பாடினாள்.

"உன் உடலழகைப் பார்க்கிறேன்
மாபெரும் பிரளயம் ஒன்று
எனக்குள் எழுவதையே பார்க்கிறேன்."

சோம்பலை முறிக்கும் தோரணையில் அவள் சிலையாகி விட்டாளா அல்லது காற்றில் கலந்துவிட்டாளா... கண்களில் கண்ணீரைக் கசியச் செய்யும் கூர்மையான ஒளி மேல் திசையிலிருந்து வந்ததா அல்லது பின்புறத்திலிருந்து வந்ததா... அவளுக்கு எதுவுமே தெரியவில்லை. கீழே கூடத்தில் இருந்த கூட்டம் அவளைப் பார்த்து பிரமித்தது. ஆனால் இதை அவள் அறியவில்லை. மூடுபனியின் ஒரு மேகம்போல், இதயத்தில் கோடு கிழிக்கும் சாந்த் அக்காவின் குரல்...

மேடையில் திரை விழுந்துவிட்டது. வெளிச்சம் அணைந்து விட்டது. சாந்த் அக்காவின் சிரிப்பொலி இத்தனை ஆரவாரத்திலும் தெளிவாகக் கேட்டது.

"நீங்கள் உண்மையாகவே பிரளயத்தை இன்று எங்கிருந்து கொண்டு வந்தீர்கள்?"

''பிரமாதம்—சாந்தை நாம் இன்று ஒப்புக்கொண்டு விட்டோம்..."

"நன்றி... மிக்க நன்றி," சாந்த் மலர்ச்செண்டுகளைப் பெற்றுக் கொண்டாள். அவளுக்குக் களைப்பாக இருந்தது.

மாமியின் நகைகளைக் கழற்றும்போது அவள் மனம் வேதனையடைந்தது. எத்தனையோ பேர் அவளை முத்தமிட்டார்கள். ஆனால் சாந்த் அக்கா முத்தமிடவில்லை. பிறகு அதே நேரத்தில் கஜலை மார்புடன் அணைத்து முத்தமாரி பொழிய வேண்டுமென்றும், அப்போது கஜல் மிகவும் பெருமைப்பட வேண்டுமென்றும் அல்லாஹ் சாந்த் அக்காவுக்கு உத்தரவிட்டார். சாந்த் அக்காவின் தாகமுள்ள ஆன்மாவை அது மயக்கமடையச் செய்தது.

தூரத்தில் மேடையில் இருண்ட மூலை ஒன்றில் உட்கார்ந்திருந்த ஹுமாயூன், 'கஜல் நல்ல அழகு கொண்டவள்' என்பதை உணர்ந்தான்.

வெளியே வரும்போது கஜல் ஒவ்வொருவரிடமிருந்தும் புகழுரைகளையும், பாராட்டுகளையும் பெற்றாள். திடீரென்று யாரோ அவளைத் தூக்கி உயரமாக எடுத்தார்கள். அவளுடைய கன்னத்தில் முத்த முத்திரையைப் பதித்தார்கள்.

"உங்களுக்குத் தெரியுமா சஞ்சீவா, இந்தப் பெண்ணின் பெயர் கஜல்!'

"ஹைதராபாத் கவிஞர்கள் மீது இறைவன்தான் கருணை புரிய வேண்டும்!"

சாந்த் சிரித்தாள்.

"என்னை விடுங்கள்" அந்த மனிதனின் பிடியில் கஜல் பயந்தாள்.

"இல்லை, உன்னைவிடப் போவதில்லை"—அவளுடைய கன்னங்களில் முரட்டு மயிர்கள் உரசின.

''விட்டுவிடுங்கள் பான் சாஹிப்,'' சாந்தும் எரிச்சல் அடைந்தாள்.

"உங்கள் தங்கை மிகவும் அழகாக இருக்கிறாள். அவளுக்கு முன்னால், ஒரு பாட்டின்முதல் அடிதான் நீங்கள்!" ஓவியன் ஷஆதத் சாந்திடம் சொன்னான்.

"இல்லை, கடைசி அடி..." என்று யாரோ சொன்னதும்

எல்லாரும் சிரித்துவிட்டார்கள்.

"சகோதர, சகோதரிகளே! எல்லாரும் ஓட்டலுக்கு வாருங்கள். நமது புதிய நடிகையைக் கௌரவிக்க அங்கு உங்கள் அனை வருக்கும் விருந்து தருகிறோம்"

"நீங்கள் எல்லாரும் போங்கள். எனக்குச் சஞ்சீவாவுடன் சிறிது வேலை இருக்கிறது!"

சாந்த் சஞ்சீவாவின் கையைப் பிடித்து அவளைத் தள்ளிய வாறு சென்றாள்.

இந்த இடைப்பட்ட நேரத்தில் பான் சாஹிப் பல அழகான மங்கையரைத் தன் கரங்களில் அணைத்துக் கொண்டார்.

"நீங்கள் வாருங்கள். அவசியம் வாருங்கள்" பான் சாஹிப் குனிந்து வணக்கத்துடன் கஜலிடம் கூறினார்.

"இரவில் இவள் எங்கே போகமுடியும், தூங்கி விடுவாள்."

ரஷீதுக்கு எரிச்சலாக இருந்தது.

காரில் திரும்பும்போது ரஷீதும், ரஜியாவும் கோபமாக இருந்தார்கள்.

பலமுறை ரஷீத் வழிப்போக்கர்களை இடிக்க இருந்தான். பின்புறச் சீட்டில் உட்கார்ந்திருந்த கஜலை இருவருமே மறந்து விட்டார்கள். கஜலை மேடையில் அவர்கள் பார்க்கவில்லையா அல்லது இப்போது அவர்கள் காரில் போய்க்கொண்டிருக் கிறார்கள் என்பதை மறந்துவிட்டார்களா? இவர்கள் வாயிலிருந்து எவ்விதப் பாராட்டும் வரவில்லை. ரஷீத் மாமா மிகுந்த கோபத்தில் முணுமுணுத்துக் கொண்டிருந்தார்.

"எல்லாருடைய முன்னிலையில் நான் எப்படி மறுக்க முடியும்? நீங்களாவது சொல்லி இருக்க வேண்டும்!"

"நான் எப்படித் தடை சொல்ல முடியும்? சஞ்சீவாவைப் பார்த்ததும் அவள் அமைதி இழந்து விடுகிறாளே. 'மாமா தயவு செய்து என்னைத் தடுக்காதீர்கள்' என்று என்னிடம் சொல்லி விட்டாள்."

"அதனால் அவளைப் போகவிட்டீர்கள்... எல்லாம் நீங்கள் கொடுக்கும் செல்லம்தான் காரணம்!"

"நானா செல்லம் தருகிறேன். அல்லாஹ் அவளுடைய மாமாவையும், தாத்தாவையும் நன்றாக வைக்கட்டும்" ரஜியா கொந்தளித்தாள்.

"இதே நீசனுடன் அவள் திருமணம் செய்து கொள்வாள். எந்தத் தந்தையின் மகள் அவள் என்பது தெரியுமே. தந்தையாரும் ஓர் இந்துப பெண்ணை வீட்டுக்குக் கொண்டுவந்திருக்கிறாரே" ரஜியாவின் பேச்சில் நஞ்சு இருந்தது. ரஷீத் பதில் சொல்லவில்லை. காரின் வேகத்தை அதிகரித்துவிட்டான். ஏதேனுமொரு சுவரில்

மோதிச் சாகவிரும்புகிறவன்போல்!

சாந்த் அக்கா சஞ்சீவா சித்தப்பாவுடன் போயிருக்கிறார். அதனால் இருவரும் அவர்மீது கோபம் கொண்டிருக்கிறார்கள் என்பது கஜலுக்குப் புரிந்துவிட்டது.

"உன்னிடம் யார் சொன்னார்கள்," மாமா திரும்பிக் கேட்டார்.

"சாந்த் அக்கா மேடையில் ஏன் நடிக்கிறார் என்று நேற்று சஞ்சீவா சித்தப்பா கோபம் கொண்டார். அதனால் சாந்த் அக்கா இன்று நாள் முழுவதும் அழுது கொண்டிருந்தார்."

"என்ன— சஞ்சீவா தினமும் கலாச்சார குழு அலுவலகத்திற்கு வருகிறானா?" மாமி கேட்டாள். தானொரு முக்கியமான புள்ளி ஆகிவிட்டதைக் கஜல் உணர்ந்தாள். மாமாவும் மாமியும் வாழ்வில் முதல் முறையாக அவளுடைய பேச்சைக் கேட்கிறார்கள். சஞ்சீவா சித்தப்பா, சாந்த் அக்காவின் எல்லா விஷயங்களையும் சொல்லி விட .வேண்டும்... சாந்த் அக்காவின் திருமணத்தை மாமாவே முன்னின்று நடத்திட வேண்டும் என்று அவள் விரும்பினாள். ஒருநாள் வயலின் இசைக்கும் லூயிஸ், சாந்த் அக்காவிடம் ஏதோ சொல்லிவிடவே சஞ்சீவாவுடன் அவன் கைகலப்பு நடந்தது. வெகு நாட்களுக்குப் பிறது சஞ்சீவா வந்தபோது சாந்த் அக்கா ஒப்பனை அறையில் இருந்தார். நாடகம் தொடங்கும் நேரம் அது. ஆனால் சாந்த் அக்கா அதைப் பற்றிக் கவலைப்படாமல் சஞ்சீவாவுடன் போய்விட்டாள். பான் சாஹிப்புக்கு மிகவும் கோபம் வந்தது. சாந்தின் வசனப் புத்தகத்தை அவர் கஜல் மீது வீசினார். கஜலுடன் அங்கிருந்த எல்லா நடிகர்களுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. கோபத்தில் பான்சாஹிப் குதித்தார். அவருடைய வழுக்கைத் தலையில் வியர்வை முத்துகளைப்போல் மின்னியது.

கஜல் இந்த விஷயங்களை எல்லாம் மாமியிடம் சொல்லிவிட்டாள். சாந்த் அக்காவின் வைரமோதிரம் எங்கும் விழுந்துவிடவில்லை... அவர் அதைப் கட்டாயப்படுத்தி, ஆணையிட்டு சஞ்சீவா சித்தப்பாவுக்குக் கொடுத்திருக்கிறார் என்பதையும் கஜல் சொல்லிவிட்டாள்.

# 15

மேடையில் அணிந்த கருநிற பிராக்குடன், உயரே எழும்பிக் கண்ணாடியில் கஜல் தனது பிரதிபலிப்பைப் பார்த்துக்

கொள்வதை ஹுமாயூன் காலையில் கவனித்தான்.

"இந்தப் பிராக்கைத் திருப்பிக் கொடுத்தால் நான் உனக்குப் புதிய சட்டையைத் தைத்துத் தருகிறேன்" வாழ்க்கையிலேயே முதல் முறையாகத் தேன் கலந்த குரலில் ஹுமாயூன் பேசினான்.

"பான் சாஹிப் இதை எனக்குக் கொடுத்திருக்கிறார்" என்ற செய்தியை அவள் மகிழ்ச்சியுடன் வெளியிட்டாள். மிக்க அன்புடன் அதன் வழவழப்பான மேற்பகுதியைக் கையால் தடவினாள்.

"நான் இதே பிராக் அணிந்து இன்று பள்ளிக்குப் போவேன்".

இந்தப் பிராக்கை நன்றாக அழுக்காக்க வேண்டும் என்று அவள் துடித்தாள். அதனால் அறைக்குள் சென்று அழுக்கான தரையில் புரண்டாள். அதன்மீது தன் உரிமையின் முத்திரையைப் பதித்துவிட முயன்றாள். பற்களால் அதைக் கடிக்கவும் செய்தாள். அதற்குப் பிறகு குழாயடியில் சென்று பிராக்கின்மீது விழும் நீர்த்துளிகளின் காட்சியைக் கண்டாள்.

தன்னுடைய மைத்துனியின் கல்யறிவு பெற்ற, இந்த அழகான மகள் மீது தாம் வீணாகவே வன்மம் கொண்டிருந்தது இப்போது ஹுமாயூனுக்குப் புரிந்தது. அவள் தன் சின்னம்மா புருஷனைச் சிறிதும் மதிக்கவில்லை; கல்லூரியில் சில போக்கிரிகளுடன் சுற்றுகிறாள் என்பது உண்மையாக இருந்தாலும் அவளுடைய இதயம் அவ்வளவு கெட்டதல்ல. பாருங்களேன்! கஜலுக்கு வேலை வாங்கிக் கொடுத்து அவளுக்கு இலவசமாக ஒரு பிராக்கும், பேரும் புகழும் கிடைக்க வழிவகை செய்திருக்கிறாளே!

அவன் மீண்டும் கவிதாலயத்திற்குச் செல்ல ஆரம்பித்தான். மணிக்கணக்கில் சாந்திடம் உட்கார்ந்து கஜலுக்கு நடிப்பு சொல்லித் தருவது பற்றி உரையாடுவான்.

"மாமா! கஜலிடம் நடிப்புத் திறன் இருக்கின்றது. எங்கள் நாடகக் குழுவின் தலைவரான பான் சாஹிப், கஜல் நடிப்பிற் காகவே பிறந்தவள் என்கிறார். நீங்கள் கஜலை எனக்குக் கொடுத்து விடுங்கள். நான் அவளுக்குப் பயிற்சி அளிக்கிறேன்."

"ஆனால் முர்ஷிதுகளான நாம்... பெண்களை எப்படி...?"

"போதும்... போதும்... இந்தப் பழைய வாதங்கள் தாத்தாவை விடக் குறைந்தது அல்ல..." கோபத்தில் சாந்த் தனது மயிர்க் கற்றையை முறுக்கினாள். ஹுமாயூனும் பயந்து அடங்கிவிட்டான். கல்வியறிவு பெற்றவர்கள் எந்தக் கோணத்தில் சிந்திக்கிறார்கள் என்பது அவனுக்கு என்ன தெரியும்?

காலையில் கஜலை அழைத்துச் செல்ல சாந்த், பான் சாஹிபின் காரில் வந்தபோது ஹுமாயூனின் இருண்ட வீடு பிரகாசமடைந்தது. அவன் ஒன்றும் புரியாமல் இங்கும் அங்கும்

ஓடினான். தனது சட்டையால் நாற்காலியைத் துடைத்தான். காரின் கதவைத் திறந்து அவர்களை உள்ளே அழைத்து வந்தான். அயாஸைத் திட்டி தேநீர் விடுதியிலிருந்து இரண்டு கோப்பைத் தேநீர் கொண்டுவருமாறு விரட்டினான். ஆனால் அந்த இரண்டு கோப்பைகளும் அப்படியே வைக்கப்பட்டு, குளிர்ச்சியடைந்து, ஈக்கள் மொய்த்தன. ஏனெனில் சாந்த் இத்தனை அழுக்கான கோப்பையில் தேநீர் அருந்துவதில்லை. பான் சாஹிபோ குறித்த நேரங்களில் மட்டுமே தேநீர் பருகுவார். அவர் நின்றவாறே அடிக்கடி கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டார். அதனால் அவன் உள்ளே வந்து மிகவும் சோம்பலாக மெதுவாக ஆடையணிந்து கொண்டிருந்த கஜலின் முதுகில் உதைத்தான். கையைப் பிடித்து இழுத்துவந்து காரில் ஏற்றினான். வெகுநேரம் வரை கஜல் அழுதாள். அடிக்கடி மூக்கை உறிஞ்சினாள். அதனால் சாந்த் அவளைக் கடிந்து கொண்டாள்.

மாலையில் அவர்கள் திரும்பி வந்தபோது சாந்த் ஹுமாயூனுக்கு இருபத்தைந்து ரூபாயை ரொக்கமாகக் கொடுத்தாள்.

“இது கஜலின் தினப்படியாகும்.”

இன்று தேதி இருபத்தி ஒன்பது. அணைந்திருந்த அடுப்பை மூட்டுவதற்காக சாயா ஏதோ கேட்டபோது ஹுமாயூன் காலை யிலேயே அவளை அதட்டிவிட்டான். இப்போது ரூபாயையும் சாந்தையும் திரும்பித் திரும்பிப் பார்த்தான்.

இது உண்மையில் ரூபாய்தான்.

இப்போது அலுவலகத்திலிருந்து திரும்பி வந்து சாயாவின் காதல் பிணக்குகளை ரசிப்பதற்குப் பதிலாக ஹுமாயூன் முழு நேரத்தையும் கவிதாலயத்திலேயே கழித்தான். சாந்த் ஒரு நாடகத்தை உருவாக்கினாள். அதன் எல்லாப் பொறுப்புகளையும் ஹுமாயூன் ஏற்றுக் கொண்டான். நடிகர்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களை அழைத்துவந்தான். அவர்களுக்காகத் தேநீர் ஏற்பாடு செய்தான். கஜலை அடித்து வசனங்கள் சொல்லிக் கொடுத்தான். வாழ்வில் அளவிலாக் கசப்புகளைச் சுவைத்து விட்டதால், தன் பேச்சை மற்றவர்கள் மீது திணிக்க அவனுக்கு ஒருவழி மட்டுமே தெரிந்திருந்தது. தன்னைக் கீழ்படிந்தோர்மீது அவன் இதே அடி என்னும் ஆயுதத்தைப் பிரயோகித்தான்.

கஜலின் விதி மாற்றியமைக்கப்பட்டுவிட்டது. இப்போது அவளிடம் இரண்டு மூன்று பிராக்குகள் வந்துவிட்டன. அவை ஃபவுசியாவின் ஆடைகளைப்போல் மினுமினுப்புக் கொண்டவை யாக இருந்தன. அம்மா செத்ததும் அவளை எல்லாருமே ஒதுக்கித் தள்ளி விட்டார்கள். ஆனால் இப்போது ரஜியா தன்தோழியருடன்

கஜலின் பாட்டைக் கேட்டாள். சாந்தின் நண்பர்கள் அவளைத் தூக்கிச் சென்றார்கள். அவள் சாந்த் அக்காவுடன் காரில் உட்கார்ந்து குழுவின் செயலகத்திற்குச் சென்றாள். வேறு பல குழுவினரும் தங்களுடைய நாடகங்களில் கஜல் நடிக்க வேண்டும் என்று விரும்பினார்கள். ஏனெனில் மேடைக் காட்சிகளுக்குச் சிறுமியர் கிடைப்பது அரிதாக இருந்தது.

பொறாமை கொண்ட ஃபவுசியா மட்டுமே இதுவரை அவளை 'மூக்கொழுகி கஜல்' என்று நினைத்தாள். இப்போ தெல்லாம் ரஜியா ஃபவுசியாவின் தட்டில் மிச்சமாகிவிடும் முட்டையும் ரொட்டித் துண்டும் அவளுக்குக் கொடுத்துவிடுவாள். கஜலும் அந்த மிச்சத்தைச் சாப்பிடுவாள்.

இப்போது அவள் மிக நாகரிகமாக, தாத்தா முதல் ஷாஹீன் வரை எல்லாரையும் 'தாங்கள்' என்றே பேசுகிறாள். தனது சாக் லெட்டுகளைத் தாராளமாக ஷாஹீனுக்குக் கொடுக்கிறாள். அவளுக்குக் கிடைக்கும் பரிசுகளுக்கு அளவே இல்லை. சாக்லெட் டப்பாக்கள், பொம்மைகள், பிராக்குகள் எல்லாம் அதில் அடங்கும்.

அயாஸுக்கும் ஷஹ்ஜாதுக்கும் பொறாமை வந்துவிட்டது. அயாஸும் திரைப்படப் பாடல்களை நன்றாகப் பாடுவான். ஆனால் அவன் பாட்டை யாருமே கேட்கவில்லை. கஜலுக்குப் பெருமை சொல்லி முடியாது.

"நேற்றிரவு சாந்த் அக்காவுடன் ஒரு ஓட்டலில் சிகப்பு எலுமிச்சைச் சாறு குடித்தேன்..."

"மருத்துவக் கல்லூரியில் பெரிய கேக் சாப்பிட்டேன்..."

"பான் மாமா எனக்குச் சேலை வாங்கித் தரப்போகிறார்..."

"சேலையா?" அயாஸ் வியப்புடன் கேட்டான். அவன் கஜலின் பேச்சுகளை எச்சிலை விழுங்கியவாறே உட்கார்ந்து கேட்டான். அப்பாவின் முழு கவனமும் கஜல் மீதே இருந்ததால் இரண்டு சகோதரர்களும் இங்கும் அங்கும் அலைந்து திரிந்தார்கள்.

"ஆமாம். சாந்த் அக்கா அவரிடம் சேலை வேண்டுமென்று கேட்டார். நானும் கேட்டுவிட்டேன். இனி நானும் நடிகை நாடியாவைப்போல் உண்மையாகவே குதிரை மீதேறிச் சண்டை செய்வேன்."

"அப்போது நீயும் நாடியாவைப்போல் நரகத்தில் எரிவாய்," அயாஸ் எரிச்சலுடன் கூறினான்.

"என்ன?" அவள் திகைத்து நின்றாள். அவள் கையிலிருந்த பிளாஸ்டிக் பொம்மை நழுவிக் கீழே விழுந்துவிட்டது. அவள் கட்டில் பட்டைகளை விரல்களால் கீறினாள்.

நாடியா நரகத் தீயில் எரிவாள் என்று அம்மா சொல்லுவார்.

பயத்தால் அவள் உடல் நடுங்கியது; ஆனால் அயாஸுக்கு எதிரில் பொறுமையைக் கடைப்பிடித்தாள். திடீரென்று சாந்த் அக்காவின் அன்பைப் பருந்து ஒன்று பிடுங்கிக் கொண்டு ஓடிவிட்டது. அவள் தனிமையில் நின்றாள். நரகத்தின் காவலன் அவளது தந்தையைப் போல், தோளைப் பிடித்து இழுத்துச் சென்று நரகத்தில் தள்ளினான். பெரிய பாம்புகள் வாய்களைத் திறந்தவாறு அவளை நோக்கிப் பாய்ந்தன. அவள் எழுந்து ஓடினாள். ஆனால் வழி ஏதும் இருக்கவில்லை. அப்பா ஒரு ரூபாயை அவள் மீது வீசினார். அது தீயைப் போல் அவள் தொடையைப் பொசுக்கியது. பிறகு அப்பா மற்றொன்று, இன்னும் ஒன்று என்று நாணயங்களை வீசிக் கொண்டேயிருக்கிறார். அவள் தீக்காயங்களுடன் அழுகிறாள்.

"என்ன நடந்தது?" முதல் முறையாக அப்பாவின் குரலில் பரிவு இருப்பதை உணருகிறாள். அந்த அன்பு நிறைந்த கைகளில் வெப்பம் இருக்கிறது. தனது மார்புடன் இணைத்து அவர் பாசத்துடன் கேட்டபோது அழாமல் எப்படி இருக்க முடியும்? அந்த அன்பைக்கண்டு, இந்நேரத்தில் அவளுக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. பலமுறை கேட்டும் அவளால் பேச முடியவில்லை.

"பிறகு ஏன் அழுகிறாய்?" அவர் கத்தினார்.

''நான் நாடகங்களில் வேலை செய்ய மாட்டேன். தேவதூதர்கள் என்னை நரகத்தில் போடுவார்கள்!"

"என்ன?" அப்பாவுக்கு ஒன்றும் புரியவில்லை.

"நாடியா நரகத்திற்குப் போவார் என்று அம்மா சொல் வார்கள்!"

"நீயும் உன் அம்மாவும்...!" அப்பா வசைமொழி ஒன்றை உதிர்த்தார். "நீங்கள் இருவரும் எனக்கு வேதனை தரும் காரியங் களையே செய்திருக்கிறீர்கள். பாவம் சாந்த், நமக்கு நாலு காசு கிடைக்க வழிவகை செய்திருக்கிறாள். ஆனால் இப்போது நீ முரண்டு பிடிக்கிறாய். ஏதாவது பிடிவாதம் செய்தால் பட்டினி போட்டுவிடுவேன், ஜாக்கிரதை!"

மறுநாள் இந்த நிகழ்ச்சியை நினைத்து அவளே சிரித்தாள்— "அடியே! நரகத்திலிருந்து தப்பிவிட நீ என்ன நல்ல காரியங்கள் செய்திருக்கிறாய்?"

இந்தப் பேச்சை அவள் சாந்த் அக்காவிடம் சொல்ல விரும்பினாள். ஆனால் அன்று சாந்த் அக்காவுக்கு மனநிலை சரியாக இல்லை. ஹுமாயூனுக்கும் அவளுக்கும் இடையில் ஏதோ தகராறு ஏற்பட்டு விட்டது.

"ஜாடியைப் போன்ற அந்தக் கிழட்டுக் கழுதை என்ன நினைக்கிறது...?"

சாந்த் கோபத்துடன் குதித்தாள். அலமாரியிலிருந்து துணிகளை எடுத்து எல்லாத் திசைகளிலும் வீசினாள். “என்னைக் காதலிக்கிறானாம்... முதலில் சாக்கடையில் அவன் முகம் கழுவி இருக்கவில்லை...?”

ரஜியா வெட்கத்துடன் அவளைச் சமாதானப்படுத்தினாள். “சும்மா இரு. உங்கள் மாமாவுக்குக் கேட்டுவிடப்போகிறது”

கூடத்தில் இருந்த கஜல் கண்களை அகலவிரித்துச் சாந்த் அக்காவை நோக்கினாள். அப்போது வெட்டப்பட்ட அவளது தலைமுடி முகத்தின் மீது படர்ந்திருந்தது. முகம் அடுப்பில் போடப் பட்ட இரும்புபோல் தகித்தது.

“சாந்த் அக்கா நான் வந்துவிட்டேன்...” கஜல் தன்னுடைய வருகையை அறிவித்தாள். கோபத்தை மறந்து சாந்த் அக்கா புன்முறுவல் செய்வார் என்று நினைத்தாள். ஆனால் கஜலைப் பார்த்ததும், அவளை யாரோ கொழுந்துவிட்டெரியும் ஜுவாலை களில் தள்ளிவிட்டார்கள்.

“இவளைக் கொக்கியாக என்னிடம் அனுப்புகிறானா அவன்? போ, வெளியே போ... உன் அப்பாவிடம் போ!” கஜலின் கையைப் பிடித்து வெளியில் தள்ளிவிட்டாள். “ஜாக்கிரதை! இனி என் அறைக்குள் கால் வைத்தால், காலை முறித்துவிடுவேன்”.

கஜலுக்குப் இதயமே வெடித்துவிட்டது. இதைவிடக் கசப்பான சொல்லாயினும் அவள் சிரித்தவாறே அதைச் சகித்துக் கொள்வாள். அறையிலிருந்து வெளியே போகச் சொல்வது அப்படி ஒன்றும் தவறான விஷயம் அல்ல. ஆனால் அப்போது சாந்த் அக்காவின் கோபத்தைத் தன்னால் பொறுத்துக்கொள்ள முடியாது என்று அவளுக்குத் தோன்றியது. முதல் முறையாக அவமான உணர்ச்சி ஏற்பட்டது. தான் அவமதிக்கப்பட்டு விட்டோம் என்று அவள் உணர்ந்தாள். குறும்புக்கார ஷாஹீனும் கோள்மூட்டும் ஃபவுசியாவும் அங்கே நின்று வேடிக்கை பார்த்தார்கள். கெக்-கெக்... என்று சிரித்தார்கள். தாழ்வாரத்தில் தூணைப் பிடித்தவாறு அவள் அழுதாள். தன் தாயின் மரணத்தின்போதும் அவள் அவ்வாறு அழவில்லை.

“அந்த இழிவான சஞ்சீவாவைச் சந்திக்கக் கூடாது என்று அப்பா தடைபோட்ட நாள் முதல் சாந்தின் நிலைமையே இதுதான்” தனது அறையில் ரஜியா நொண்டி . அத்தையிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். “இருபது வயது ஆகிவிட்டது. இவளுக்குத் திருமணம் செய்யாவிட்டால் இப்படித்தான் நீசர்களுடன் போய்ச் சேருவாள்.”

நொண்டி அத்தையும் கிழிந்த மிருதங்கம் போன்ற குரலைத் தாழ்த்திப் பதில் சொன்னாள். “நானும் இதைத்தான் சொல்கிறேன்.

ஆனால் பலவந்தமாக யாரால் செய்து வைக்க முடியும்..?”

“அல்லாஹ்! சாந்த் அக்கா செத்துவிட வேண்டும். அம்மாவைப்போல் அவளுடைய கல்லறையையும் கட்ட வேண்டும். அல்லாஹ்! யாரும் சாந்த் அக்காவைத் திருமணம் செய்யக் கூடாது!”

பல நாட்களுக்குப் பிறகு வசைமொழி கூறக் கஜலுக்கு வாய்ப்பு கிடைத்துவிட்டது.

“சும்மா இரு. மஃரிப் (அந்திப்பொழுது) நேரத்தில் இப்படி வசைபாடுகிறாயே”, பீபி தொழுகையிலிருந்து எழுந்தவாறு கண்டித்தாள்.

அதற்குப் பிறகு கஜல் அனாதையைப்போல் முகத்தை வைத்துக்கொண்டு ஒவ்வொருவரையும் பார்த்தாள். யாராவது தன்மீது இரக்கம் காட்டமாட்டார்களா என்று நோக்கினாள். ஆனால் அவளுடைய நிலைமையைப் பற்றிச் சிந்திக்க யாருக்கும் நேரம் இருக்கவில்லை. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். ஃபவுசியா தன்னை மிகவும் நல்ல பெண்ணாக நினைப்பாள். ஆனால் தனது தோழியருடன் விளை யாடும்போது அவளைச் சேர்த்துக் கொள்வதில்லை. ஷாஹீனுக்கு அவளுடைய அழுக்கான ஆடைகள், தவறான பழக்கங்கள் காரணமாக அவள் மீது வெறுப்பு இருந்தது. எப்போதாவது அவள் ஷாஹீனின் கோப்பையை எடுத்து விட்டால் ஷாஹீன் அதைச் சோப்புப்போட்டுக் கழுவுவான். ஒருநாள் ஷாஹீன் வெள்ளைச் சட்டை, வெள்ளைக் கால்சட்டை, வெள்ளைக் காலணி அணிந்து டென்னிஸ் விளையாடுவதற்காகப் போகும்போது கஜல் அவனுடைய சட்டையைத் தொட்டுவிட்டாள். கோபத்தால் அவன் வீடு முழுவதும் குதித்தான். பிறகு சட்டையை மாற்றிக் கொண்டு வெளியே போய்விட்டான். இத்தகைய பையனுடன் யார் பேசுவது?

ஹுமாயூனுக்கு அவளுடைய முகமே வெறுத்துவிட்டது. சாயாவுக்கோ ஜென்மப் பகை. பதூல் உயிருடன் இருந்தபோது கஜல் தன்னிச்சைப்படி குறும்புகள் செய்து சாயாவைத் திணறடிப்பாள். ஆனால் அவளுக்கு வீட்டின் துணைத் தலைவா பட்டம் கிடைத்தது முதல் நிலைமை மாறிவிட்டது. வீட்டின் குழப்பமான நிலை அயாஸையும், ஷஹ்ஜாதையும் மேலும் திமிர் பிடிக்கச் செய்துவிட்டது. பலமுறை ஷஹ்ஜாத் வீட்டிலிருந்து ஏதாவது பொருளை எடுத்துக்கொண்டு ஓடிவிடுவான். ஹுமாயூன் அவனைத் தேடிப் பிடித்துக்கொண்டு வருவான். பிறகு ஒரு முறை ஹுமாயூனின் பையிலிருந்து முழு சம்பளப் பணத்தையும் எடுத்துக்கொண்டு ஓடிவிட்டான். பல மாதங்களுக்குப் பிறகு

பம்பாயின் காவல் நிலையம் ஒன்றிலிருந்து கடிதம் வந்தது. நூறு ரூபாய் உடனே அனுப்பாவிட்டால் ஐந்துமாதச் சிறை அவனுக்குக் கிடைக்கும் என்று.

"சிறையிலேயே சாகட்டும். அவன் அப்போதுதான் திருந்து வான். சிறைச்சாலையில் மூளையின் எல்லாப் புழுக்களும் விழுந்து விடும்!" ஹுமாயூன் அலட்சியமாகச் சொல்லிவிட்டான்.

ஷஹ்ஜாத் திருந்தி விடுவான் என்ற செய்தி கஜலுக்கு மகிழ்ச்சி அளித்தது. ஏனெனில் எல்லாருக்கும் அவளுடைய சகோதர்களின் கவலை பிடுங்கித் தின்றது. பாட்டனாரும் ரஷீத் மாமாவும், இந்த அயாஸும் ஷஹ்ஜாதும் எப்படித் திருந்தப் போகிறார்கள் என்றே விவாதிப்பார்கள்.

இப்போது அயாஸ் மட்டுமே இருந்தான். சாப்பாட்டு நேரங் களில் மட்டுமே வீட்டுக்கு வருவான். பிறகு தன் நண்பனின் வீட்டுக்குப் படிக்கச் சென்றுவிடுவான். தன்னுடன் அவனை வைத்துக் கொள்வதாகப் பீபி பலமுறை கூறியும் அயாஸ் மறுத்து விட்டான். "நான் எதற்காக இன்னொருவர் வீட்டில் இருப்பது. நானே நன்றாகப் படித்துப் பெரிய மனிதனாக வருவேன். நீ போ, கவிதாலயத்தின் மிச்சத்தைச் சாப்பிடு" என்று அவன் கஜலிடம் சொல்லிவிட்டான்.

இப்போது கஜலின் தட்டிலிருந்து துண்டுகளை எடுப்பதையும், அவளை அடிப்பதையும் அவன் விட்டுவிட்டான். அதற்கு மாறாக அவளைப் பற்றி அக்கறை காட்டினான். தந்தையின் துன்புறுத்தல் களைச் சகித்துக் கொண்டான். சாயாவின் வசைமொழிகளைக் கேட்டு அவளுடன் சண்டை போடுவதையும் நிறுத்திவிட்டான். ஒருநாள் அயாஸ் தன் பள்ளிக் கட்டணத்திற்காக ஹுமாயூனிடம் நின்றபோது, ஹுமாயூனின் மனநிலை சரியாக இல்லை. காலை யிலிருந்தே தன் மாமனார் வீட்டைச் சேர்ந்த ஒவ்வொருவரையும் திட்டிக்கொண்டிருந்தான். கஜல் மட்டுமே தனது தந்தையின் மனநிலை, சரியான வாய்ப்பு ஆகியவற்றைக் கவனித்துச் செயல் படுவாள். அது அயாஸுக்குத் தெரிந்திருக்கவில்லை. எனவே அதன் விளைவு பயங்கரமாக இருந்தது. ஹுமாயூன் அவனுடைய புத்தகங்களை எல்லாம் கிழித்தெறிந்துவிட்டு அயாஸை நையப் புடைத்துவிட்டான். தானும் சோர்வடைந்து உட்கார்ந்தான். சென்ற பிறகு அவள் அயாஸுக்கு அழகு காட்டினாள்.

"அண்ணா, இன்னும் கேளுங்கள் பள்ளிச் சம்பளத்தை!"

'அம்மா இருந்திருந்தால் உனக்குப் பாடம் புகட்டி இருப்பேன்"

"அண்ணா, பி.ஏ. படிக்கப் போகிறீர்களா?"

"ஆமாம். உனக்குப் படித்துக் காட்டத்தான் போகிறேன்."

ஜான் கவாஸ் நடையில் கையை அசைத்துவிட்டு, கிழிந்துபோன புத்தகங்களின் பக்கங்களைச் சேர்க்க ஆரம்பித்தான். இப்போது கஜலுக்குப் பன்னிரெண்டு வயது ஆகிவிட்டது. தன் தலை முடியைத் தானே அலங்கரித்துக்கொள்ளும் திறமை பெற்று விட்டாள். சாயாவின் உதவி இல்லாமலேயே தேநீர் தயாரிப்பாள்; அடுப்பு மூட்டுவாள். சாயாவிடமிருந்து மாவு பிடுங்கித் தானே ரொட்டி தயாரிக்க வேண்டும். ஃபவுசியாவைப்போல் சட்டத்தில் துணியை அமைத்து பூத்தையல் வேலை செய்ய வேண்டும் என்றெல்லாம் அவளுடைய மனம் விரும்பியது. ஃபவுசியா அழகான மலர்களைப் பின்னி, ரஷீத், ஷாஹீன் ஆகியோரின் தலையணை உறைகளாக்கிவிடுவாள். நொண்டி அத்தைக்கு ஊசியில் நூல் போட்டுக் கொடுப்பாள். யாராவது விருந்தாளிகள் வந்துவிட்டால் ரஜியா அவளையே தேநீர் தயாரிக்கச் சொல்லு வாள். பள்ளியின் மதிப்பெண் பட்டியல் வரும்போது ஷாஹீன் அதைப் படிக்கச் சொல்வான். எப்போதும் ஃபவுசியா முதலா வதாக இருப்பாள். ஃபவுசியாவும் உயரமாக வளர ஆரம்பித்தாள். அத்துடன் ரஜியாவின் கண்டிப்பும் இருந்தது. இப்போது அவளுக்கு இறுகிய பைஜாமாவும், மேல் அங்கியும், தலையில் தொப்பியும் கொடுக்கப்பட்டது. சில சமயங்களில் தொப்பிக்குப் பதிலாக மேல் துண்டு இருக்கும். இன்றைய நவீன வண்ணத்தில் என் மகளைத் திளைக்க விடமாட்டேன் என்று ரஜியா முடிவு செய்திருந்தாள். அதாவது தனது நாத்தனார்களின் பெண் மக்களைப் போன்ற சுதந்திரத்தைத் தனது மகளுக்கு அளிப்பதில்லை என்று பகிரங்க மாக அறிவிப்பதுபோல் இருந்தது. ரஜியாவின் முடிவு குறித்து பீபியும் சிந்தனை செய்தார். சாந்துக்கு முழு சுதந்திரத்தை எதற்காக அளித்தார்கள்—ரஷீதின் நண்பர்கள் வட்டம் பெரியதாக வேண்டும், அவனுடைய செல்வாக்கு வளர வேண்டும் என்பதற் காகத்தானே..! ரஷீத் கடுமையான கட்டுப்பாடுகள் விதித்திருந்தால் சாந்துக்கு இந்தத் துணிவு வந்திருக்காது. அவள் காரணமாகவே இப்போது வீட்டில் செல்வச் செழிப்பு இருக்கிறது. ஆனால் ரஜியா தனது மகளை மட்டும் இந்தச் சுதந்திரத்திலிருந்து காப்பாற்ற விரும்புகிறாள்.

சாந்துடன் பெயரளவுக்கு ஃபவுசியாவின் நட்பு இருந்தது. ஏனெனில் ஃபவுசியா கர்வமுற்றவள். தனது முகம், அழகு, செல்வம் ஆகியவற்றுடன் தனது நல்லொழுக்கத்தின் உணர்வும் அவளுக்கு இருந்தது. கேலிக்காவது அவளை யாராவது 'கெட்ட பெண்' என்று சொல்லிவிட்டால், அவள் மணிக்கணக்கில் அழுவாள். சாந்த், கஜல் ஆகியோரின் முன்மாதிரிகளைக் காட்டி, பர்தா இல்லாமல் சுற்றுவதும், ஆடுவதும் பாடுவதும் பெண்களுக்கு மிகவும் கெடுதல்

*விளைவிக்கக் கூடியவை என்று ரஜியா அவளுக்குச் சொல்லிக் கொடுத்தாள். ஆகவே அவள் தனது தாயைப் போலவே முகத்தைச் சுளித்துக் கஜலை ஏளனம் செய்வாள்.*

*"நீ இதுவரை ஆறாவது வகுப்பில் இருக்கிறாய். நான் இந்த ஆண்டு ஒன்பதாவதுக்குப்போய் விடுவேன்..."*

*"நான் திருமதி ரெட்டியிடம் துணி வெட்டும் கலையைக் கற்று வருகிறேன்..."*

*"அல்லாஹ்! உனக்குத் தேநீர் தயாரிக்கவும் தெரியவில்லை. நான் நேற்று முன்தினம் புட்டிங் செய்தேன்..."*

*கஜல் மிகவும் பெருமையுடன் பதில் சொல்லுவாள்— ''எனக்குச் சினிமாப் பாட்டு 'மலர்களிலே நீ மல்லிகை' முழுவதுமாக மனப்பாடமாகிவிட்டது..."*

*"அம்மா என்னைப் பாட விடுவதில்லை. பாட்டுப்பாடும் பெண்கள் நல்வழி தவறி விடுகிறார்கள் என்று அவர் சொல்கிறார்"*

*"அது எப்படி?" கஜல் வியப்புடன் கேட்பாள்.*

*''அது எனக்கு எப்படித் தெரியும். அம்மா அப்படிச் சொல்கிறார்களே!"*

*"பொய்... உனக்குப் பாடத் தெரியாது. அதனால் எரிச்சல் கொள்கிறாய்".*

*"சரி வா—அம்மாவிடமே கேட்டுவிடுவோம்."*

*"வேண்டாம். நான் வரமாட்டேன்" கஜல் தன் கையை விடுவித்துக் கொள்வாள். ஏனெனில் மாமியிடம் சென்றால் அவர் நல்லதும் பொல்லாததுமாகச் சொல்லி அறிவுரைகள் வழங்கத் தொடங்குவார்.*

*அதனால் அவள் சாந்த் அக்காவின் அறைக்குச் சென்று வானொலியைக் கேட்பாள். இந்த அறைக்கு வந்தால் அவளுக்கு நிம்மதி கிடைக்கும். எல்லாருடைய கசப்பும் மறந்துவிடும். இப்போது சாந்த் அக்கா அவளைப் பற்றி அக்கறை ஏதும் காட்டுவ தில்லை; பீபியும் அவள் இந்த வீட்டுக்கு மிகக் குறைவாகவே வரவேண்டும் என்று விரும்பினார். ஏனென்றால் ரஜியாவின் வெறுப்புக் கலந்த நடை அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை; எனவே கஜல் வரும்போதெல்லாம் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி அவளைத் திருப்பி அனுப்பிவிடுவாள். அப்படியும் கவிதாலயத்தின் சூழ்நிலை சரியாக இல்லை. ரஷீத் ஒரு நிமிடமும் வீட்டில் தங்குவதில்லை. வாஹித் ஹுசேனும் இரவு பகல் என்று பாராமல் நண்பர்களுடன் உட்கார்ந்து அரசியல் நிலைமைகள் குறித்து விவாதங்கள் நடத்தினார்.*

*ஆங்கிலேயர்கள் பெட்டி படுக்கைகளைச் சுருட்டுகிறார்கள் என்ற செய்தி பரவியிருந்தது. சிற்றரசர்கள் வாழ்ந்த மண்டலங்களில்*

பெரும் பீதி பரவிவிட்டது. இத்திஹாதுல் முஸ்லிமீன் சங்கம் இந்திய இணைப்புக்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தது. நிஜாமுக்குத் தன் அரியணை பறிபோகும் என்ற உணர்வு இருந்தது. நேரு சமத்துவ சமுதாயக் கொள்கையைக் கடைப்பிடித்தார். அதனால் காங்கிரஸ் ஆட்சியில் ஆதீனங்கள் நிலைத்து நிற்குமா என்றே எல்லாரும் ஐயம் கொண்டார்கள்.

மவுன்ட் பேட்டன் தில்லியில் இருந்தார். என்றாலும் அவர் இந்த வாஹித் ஹுசேன்கள். ரஷீத்கள், இந்தியச் சிற்றரசர்கள், நிலக்கிழார்கள் ஆகியோரின் செழிப்பையும் அமைதியையும் ஜின்னாவுக்கும் நேருவுக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட முடிவு செய்தார்.

# 16

கவிதாலயத்தின் பெரிய கூடத்தில் சாய்வு நாற்காலியில் கண்களை மூடியவாறு வாஹித் ஹுசேன் படுத்திருந்தார். அவருக்கு நேராக கதவின் மேல் குலிகுதுப்ஷாவின் பெரிய வண்ண ஓவியம் தொங்கியது. அறையில் இன்னும் பலர் இருந்தார்கள். ஆனால் எல்லாருமே மௌனமாக இருந்தார்கள். வானொலியில் ஆச்சாரியா கிருபாளனி, லியாகத் அலிகான், பண்டித நேரு, ஜின்னா ஆகியோரின் சொற்பொழிவுகளைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவை இந்தியாவின் நாற்பது கோடி மக்களின் தலைவிதியை நிர்ணயிக்கப்போகின்றன.

வாஹித் ஹுசேன் கண்களைத் திறந்து எதிரில் இருந்த குலி குதுப்ஷாவின் ஓவியத்தைப் பார்த்தார். அதற்கு எதிரில் தங்க நிறச் சட்டத்தில் உஸ்மான் அலிகானின் ஆறடி உயரப் படம் இருந்தது. அவர் ஆஸிபியா அரசை ஓர் ஏடாகத் தன் மார்புடன் இணைத்திருந்தார். குலி குதுப்ஷாவின் கண்களில் அமைதி இருப்பதை வாஹித் ஹுசேன் பார்த்தார். மொழி வல்லுநரான இந்த மன்னர் நிறைந்த மன நிம்மதியுடன் ஒரு கஜலைத் தேடிக் கொண்டிருக்கிறார் போலும்... அல்லது அவர் வேறு விதமாக இப்படியும் சொல்வதாக இருக்கலாம். - அதாவது அவர் கோல்குண்டாவின் மேல் ஏறி, நான்கு திசைகளிலும் பரவியிருந்த காட்டில் அழகான நகரம் ஒன்று அமைத்திடும் கனவு கண்டார்.. பிறகு மூசா நதியின் கரைகளில் அந்தக் கனவின் வண்ணங்களைக் கலக்கத் துவங்கினார்... பிறகு பாக்மதி வசிப்பதற்காக ஒரு

தோட்டத்தைப் போல் ஒரு நகரை நிர்மாணித்தார்... அதில் தாமரைப் பூக்களைப்போல் ஆங்காங்கே அழகான கட்டடங்களை எழுப்பினார்... அதில் கலாச்சாரத்தின் தீபங்கள் எரிந்தன... உருதுவின் மொக்குகள் துளிர்த்தன... தீபத்திலிருந்து பல தீபங்கள் ஒளி பெறத் தொடங்கின. அவருடைய காதலி சொல்லிக் கொண்டிருந்தார். 'சீக்கிரமாக எழுந்து பெருமகிழ்ச்சி கொண் டாடுங்கள். நேரம் மிகக் குறைவாகவே இருக்கிறது. அங்கே சில நூற்றாண்டுகளாக மலைகளுக்குப் பின்புறத்திலிருந்து காலத்தின் கூட்டங்கள் முன்னேறி வருகின்றன. சிறிது காலத்திற்குப் பிறகு கொள்ளையர்கள் இங்கே திரண்டு வந்துவிடுவார்கள். பிறகு கோல்குண்டாவின் பாழடைந்த குவியல்களில் மக்கள் எங்கள் கதைகளைத் தேடுவார்கள். நமது பெருமையைக் கூறும் சிறுசிறு கற்களையும் வைரங்களாக நினைத்து எடுத்துச் செல்வார்கள். பிறகு அதில் ஒரு வைரம் ஏதேனுமொரு அரசியின் மணிமுடியில் இடம்பெற்று, அவரது அரசில் கதிரவனின் ஒளியை நிரந்தரமாக நிலைக்கச் செய்துவிடும்...'

உஸ்மான் அலி கான் முழு அதிகாரத்துடனும், கம்பீரத் துடனும் இன்னும் இருக்கிறார். குலி குதுப்ஷா வீணாகவே கவலை கொள்கிறார் என்று வாஹித் ஹுசேன் நினைத்தார். கொள்ளையர் கூட்டம் இங்கிருந்து வெகுதூரத்தில்—நூற்றுக்கணக்கான மைல் தொலைவில் சென்றுவிட்டது. தில்லியும் மீண்டுமொரு முறை தனது ஆடைகளை மாற்றிக் கொண்டது.

அவரது ஏக்கத்தையும் இதய ஒலியையும் வானொலி செய்தி யாகப் பரப்பியது. சாய்விருக்கையில் பாதி மூடிய கண்களுடன் வாஹித் ஹுசேன் சிந்தனைசெய்தார்—"இப்போது நேரம் வந்து விட்டது. எங்கள் மீது எந்த ரெசிடென்டின் அதிகாரமும் செல்லாது. இனி ஆஸிபியா அரசு இழந்துவிட்ட தன் உயர்வை மீண்டும் பெறும். தில்லியில் யார் மன்னராக வரப்போகிறாரோ? காந்தியா? நேருவா? ஆனால் வரப்போகும் மாமன்னரின் ஆடை அதே இராமர் அல்லது கிருஷ்ணரைப்போல் இருக்கும். ஆக்ராவிலிருந்து மயில் அரியாசனத்தை எடுத்துக் கொண்டு வருவார்கள். நேருவும் அக்பரின் காலடிச் சுவடுகளைப் பின்பற்ற லாம். ஆனால் சர்தார் பட்டேலோ ராமராஜ்யத்தையே விரும்பு கிறார். அல்லாஹ்வின் பெருமை... ஓராயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் ஆரியர்களின் ஆட்சி வருகிறது. பாண்டவர்களும், கௌரவர்களும் மோதப் போகிறார்கள்; யாருக்கு வெற்றி கிடைக்குமோ...?"

எப்படியாவது ஆலா ஹஜரத் தில்லியின் மீது படை யெடுத்துச் சென்று முழு இந்தியாவையும் கைப்பற்றிக்கொள்ள

வேண்டும். எங்கும் ஆஸிபியா அரசின் ஆதிக்கம் ஏற்பட்டுவிட வேண்டும் என்றுதான் வாஹித் ஹுசேன் விரும்பினார்.

வாஹித் ஹுசேனின் மதிப்பும் செல்வமும் அவரது குடும்ப உயர்வும் நிலைத்து நிற்க இது ஒன்றே சிறந்த வழியாகும். இது குறித்து அவர் பேசும்போது ரஷீத் ஆவேசப்படுவான்.

"நீங்கள் பேசாமல் உட்கார்ந்து வேடிக்கை பாருங்கள் அப்பா"

"ஆனால் ஒன்றும் செய்யாவிட்டால் அழிவு தானாகவே எங்களை நோக்கி வருமே"

கவிதாலயத்தில் உட்கார்ந்து ரஷீத் வேறு விவாதங்களில் ஈடுபட்டிருந்தான்.

"ராஜா, உங்களுக்கு என்ன, நாணயத்தின் இருபுறங்களும் உங்களுடையதே. ஆதினங்கள் போய்விட்டால் என்ன, உங்களுக்குப் பெரிய பதவிகளை அரசு கொடுத்துவிடும். நீங்கள் தில்லிக்கு உடனடியாகப் போகவேண்டும். அங்கு அமைச்சர்கள் தேர்வு நடைபெறுகிறதாம்..."

"என்ன சொல்கிறீர்கள் ரஷீத் நவாப்," மலிஷம் அலுப்புடன் கூறினார். "ஐயா! அது உங்களைப்போன்ற பெரிய மனிதர்களுக்குக் கிடைக்கும் நற்பேறு.. ஜாகீர் போனால் பெரிய பதவி கிடைத்து விடும். எங்களைப்போன்ற கீழ்சாதி இந்துக்களுக்குத்தான் இனிப் பிரச்சினை. தில்லியில் ராமராஜ்ஜியம் நிறுவப் போகிறார்கள் என்று நாம் கவலைப்படுகிறோம்" மலிஷமின் குரலில் சோகம் ததும்பி இருந்தது.

"இல்லை, உங்கள் ஆட்சிதான் வரும்," ரஷீத் கேலி செய்தான். "நேரு சமத்துவத்தை விரும்புகிறார். அதனால் சாதிகள் அழிந்து போகும். பறையர்—சக்கிலியர்—ரெட்டிகள்—முஸ்லிம்கள்—பிராமணர்கள் எல்லாரும் ஒரே சாதியினராகக் கருதப்படுவார்கள்."

உள்ளே கூடத்தில் நாற்காலியின்மீது சாய்ந்தவாறு வாஹித் ஹுசேன் ரஷீதின் பேச்சை செவியுற்றார். அவருடைய இதயம் துடித்தது. இரத்த அழுத்தமும் அதிகமாகி விட்டது.

"போங்கள் ஐயா, நீங்கள் எல்லாரும் தில்லிக்குப் போக வேண்டும்," ரஷீத் மலிஷமிடம் சொல்லிக்கொண்டிருந்தான். "உங்களுக்கு ஆஸிபியா அரசில் நீதி கிடைக்கவில்லை. இப்போது தில்லிப் பேரவையின் நவரத்தினங்களில் ஒன்றாக இடம் பெறுவீர்கள். இனி நாமும் ஒரு சுதந்திர அரசை உண்டாக்குவோம். இதில் தலையிடும் உரிமை எந்த ஆங்கிலேயனுக்கும் இராது..."

வாஹித் ஹுசேன் புன்சிரிப்பு ஒன்றை வெளிப்படுத்தினார். அவருடைய மைந்தன் உண்மையாகவே ஆஸிபியா அரசின் மணிமுடியை எடுத்துத் தன் தலையில் வைத்துக் கொண்டது போல்!

இப்போது பார்க்க வேண்டும். ஹைதராபாத்தைப் பொற்காசு காய்க்கும் செடியாக நினைத்து அதைக் குலுக்கிட வந்த இந்த இந்தியர்கள் அனைவரும் காணாமற் போய் விடுவார்கள். ஏனெனில் அவர்களுடைய நாட்டில் ஓர் அக்பர் அரியணையில் அமர்ந்து, இந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒரே இடத்தில் நீர்பருகச் செய்வான். இனி இந்து-முஸ்லிம் மதக் கலவரங்கள் அங்கு நடைபெறாது.

இந்தியர்கள் இனி மேன்மை பெறுவார்கள் என்ற நினைவு வாஹித் ஹுசேனின் வாயில் நீர் சுரக்கச் செய்தது. போகும்போது ரஷீதை ஏதேனுமொரு பெரிய பதவியில் அமர்த்திவிட்டுச் செல்லுமாறு தனது செல்வாக்கைப் பயன்படுத்தி ஆங்கிலேயர் களைக் கேட்டுக் கொள்ள வேண்டும்...

எதுவாயிருந்தால் நமக்கென்ன, மாம்பழத்தை எப்படியும் சாப்பிடுவது என்பதே குறிக்கோளாக இருக்க வேண்டும்...

ஆமாம், காலத்தை எப்படியும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்...

உள்ளே அறையில் ரஷீதும் மலிஷுமும் மௌனமாகி விட்டார்கள். எதிரில் ஆபத்து வரப்போகிறது என்பதை உணர்ந் திருக்கிறார்கள் போலும். சாந்த் தனது அறையில் முணுமுணுத் துக்கொண்டிருந்தாள்.

'மங்கலான நேரம்
பாய்ந்தோடும் நதி நின்றுவிட்டது.
காலை சென்று மாலையும் வந்துவிட்டது.
ஆனால்—இதயம் மட்டும் நிற்கவே இல்லை!'

அப்படியானால் மாலையாகிவிட்டதா? வாஹித் ஹுசேன் திடுக்கிட்டார். ஆம். அந்திப் பொழுதின் மஞ்சள் நிறம் அவருடைய தலைமுடியில் பரவிவிட்டது. வாலிபத்தின் சூடு தணிந்துவிட்டது. அதன் வெப்பத்தில் அவர் பதினான்கு குறிப்பேடுகளை எழுதிக் கறுப்பாக்கி விட்டார். சாந்த்—கஜல்—ஷாஹீன்—ஃபவுசியா சிறிய விண்மீன்களாக ஒளிர் விடுகின்றன. இரவு வருகிறது. இரவு வந்துவிட்டது என்று அவரிடம் கூறுகின்றன.

பொழுது புலர்ந்ததும் ரஷீத் ஏதோ வேலையாக வாரங்கல் எனும் ஊருக்குச் சென்றுவிட்டான். ஹமீத்தின் திருமணமும் முடிந்துவிட்டது. ரஜியா மிகுந்தவேலையில் ஈடுபட்டிருந்தாள். பீபிக்கு எதிரில் மினுக்கு மினுக்கென்று ஒளிவிடும் வண்ணத் துணிகள் பரவி இருந்தன. சிற்றுண்டி முடிந்ததும் குளிர்காலத்தின் வெயில்காய, முற்றத்தில் நாற்காலியை வாஹித் ஹுசேன் இழுத்து வந்தார். நொண்டி அத்தையும் வந்து உட்கார்ந்தார். வீட்டில் சில வேலைக்காரப் பெண்கள் இருக்க வேண்டும்.

வீட்டுக்காரர்களுக்குத் தங்கள் செல்வத்தின் மதிப்புத்தரம் தெரியும் என்று அத்தை பல நாட்களாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அப்போதுதானே அவரால் அவர்களைக் கடிந்து கொள்ளவும், வசைமொழிகள் பாடவும் முடியும். அதிகாரமும் நிலைநாட்டலாம். இப்போது வீட்டில் அல்லாஹ் அருளால் எல்லாமே இருக்கின்றன. ரஷீத் பான் சாஹிபுடன் சேர்ந்து பீடி சிகரெட் தொழிற்சாலையை நிறுவினான். கவிதாலயத்தின் நடுக்கங்கண்ட சுவர்கள் மீண்டும் உறுதி பெற்றுவிட்டன. சில நாட்களிலேயே பஞ்ஜாரா குன்றின் மீது அவன் ஒரு அழகிய பங்களாவைக் கட்டி வாடகைக்கு விட்டு விட்டான். புதிய காரும் வந்துவிட்டது. ஃபவுசியாவின் திருமணத்திற்காக வங்கியில் ஐம்பதினாயிரம் ரூபாய் போடப்பட்டு விட்டது.

"ஆமாம் அண்ணா, எனக்கு வேலைக்காரப் பெண்கள் வேண்டும். அல்லாஹ் நலமுடன் வைக்கட்டும். என் ஷாஹீன் வளர்ந்து வருகிறான். அவனை ரஷீத் மியாவைப்போல் ரசனையற்றவனாக வளர்க்க மாட்டேன். நீங்கள் ரஷீதை உங்களைப் போலவே மனைவிக்கு அடங்கிய கணவனாக ஆக்கிவிட்டீர்கள். இன்றே நீங்கள் அஹ்மத் நவாபுக்கு எழுதிவிடுங்கள்."

"அஹ்மத் நவாபிடம் பெண்கள் விளைகிறார்களா என்ன, நீங்கள் எல்லாம் பணிப்பெண்களை அடக்கி ஆண்டகாலம் இப்போது மாறிவிட்டது, கவ்ஹர் பேகம்.." வாஹித் ஹுசேனின் குரலில் சோர்வு தெரிந்தது.

"நீங்கள் எழுதிப் பாருங்களேன். உஜாலா அண்ணி பத்துப் பெண்களை அனுப்பி வைப்பார். இல்லாவிட்டால் அந்த கைசரையே அனுப்பட்டும். நான் மிதியடிகளின் கீழ் அவளை அழுத்திச் சரி செய்துவிடுவேன்."

அதே நேரத்தில் அஹ்மத் நவாபின் கடிதத்துடன் ஷாஹீன் உள்ளே வந்தான். அதை அவசரமாகப் பாட்டனாரிடம் கொடுத்து விட்டு வெளியே ஓடிவிட்டான். ஏனென்றால் ஆங்கிலப் பள்ளியில் படித்ததால், அஹ்மத் நவாபின் கிறுக்கலை அவனால் சரியாகப் படிக்க முடியவில்லை. அதனால் வாஹித் ஹுசேன், அவன் ஒவ்வொரு வரியைத் தவறாகப் படிக்கும் போதும் முட்டாள், கழுதை என்று திட்டுவார்.

"அண்ணி, உடனே வாருங்கள். அஹ்மத் நவாபின் கடிதம் வந்திருக்கிறது..." நொண்டி அத்தை தொழுகைக்குச் செல்வது போல் தலையில் துணியைப்போட்டுக்கொண்டாள்.

"அல்லாஹ் கருணை காட்டட்டும். சின்னநவாப், அவசியமாக இருந்தால் மட்டுமே மடல் அனுப்புவார்" பீபி வெற்றிலையை எடுத்தவாறு வாஹித் ஹுசேனுக்குப் பின்புறமாக வந்துநின்றார்.

*ஆனால் ஏனோ வாஹித் ஹுசேன் கடிதத்தைத் திறக்கவே பயந்தார். அதனால் அதைமடியில் வைத்துக்கொண்டு குச்சியால் பற்களைச் சுத்தப்படுத்தினார். பிறகு கைக்குட்டையை சட்டைப் பையிலிருந்து எடுத்து வியர்வையைத் துடைத்தார். பிறகு அதை மடித்துப் பையில் போட்டுக்கொண்டார். அதற்குப் பிறகு மூக்குக் கண்ணாடியை அணிந்து உரையில் எழுதியிருந்த முகவரியைச் சரியாகப் படித்தார்.*

*மேன்மை மிகு நவாப் வாஹித் ஹுசேன் கான் சாஹிப் (ஆண்டவன் அவர் நிழலை எங்கள் மீது நிலைத்து நிற்க அருளட்டும்) அவர்களின் மேலான பார்வைக்கு.*

*"லா ஹவ்லா வலா! இவனுடைய கையெழுத்து இவ்வளவு கிறுக்கலாகி விட்டதே—"*

*அவர் மூக்குக் கண்ணாடியைச் சரிப்படுத்தினார்.*

*"அல்லாஹ் தௌபா! நீங்கள் சீக்கிரம் படித்துச் சொல் லுங்கள்," பீபி பொறுமையை இழந்துவிட்டார்.*

*அவர் மிகவும் முன்னெச்சரிக்கையுடன் உறையைக் கிழித்து கடிதத்தை வெளியே எடுத்துப் படிக்கலானார்.*

*"பெருந்தகையீர்! அஸ்ஸலாமு அலைக்கும். தங்கள் மேலான சமூகத்திற்குத் தெரிவிப்பது யாதெனில் இங்கு நாங்கள் அனைவரும் நலத்துடன் இருக்கிறோம். தங்கள் அனைவருடைய நலனையும் வேண்டுகிறோம். இந்த மடலைத் தங்களின் மேலான பார்வைக்கு அனுப்பும்போது, இங்கு நாங்கள் மிகவும்கலவரமான நிலையில் உள்ளோம்..." படிப்படியாக வாஹித் ஹுசேனின் குரல் தணிந்து கொண்டே சென்றது. அவரது உதடுகள் மட்டுமே அசைந்தன. அஹ்மத் ஹுசேனின் எழுத்துகளை அவரது பார்வை மட்டுமே விழுங்கியது.*

*"ஏன் மௌனமாகிவிட்டீர்கள்..? உரக்கப் படியுங்கள்..." பீபிக்கு ஆத்திரம் வந்துவிட்டது.*

*'ஊம்...' வாஹித் ஹுசேனின் முகச் சுருக்கங்கள் ஆழமாகி விட்டன. பலமுறை அவர் கண்ணாடியின் கோணத்தை மாற்றிக் கடிதத்தைப் படித்தார். அஹ்மத் ஹுசேனின் கையெழுத்து மிகவும் கெட்டுவிட்டது. ஆனால் இன்று அவர் ஒரு வார்த்தைகூட ஐயத்திற்குரியதாக எழுதவில்லை.*

*"அல்லாஹ் கருணை புரிவானாக! என்ன விஷயமோ?" பீபியின் இதயம் படபடத்தது. நொண்டி அத்தையின் இதயத்தில் நம்பிக்கையின் ஒளிக்கதிர் தோன்றியது. அவருடைய செல்வத்தின் அதிபனான, அந்த முறை கேடாகப் பிறந்த வாரிசு செத்துப் போய்விட்டானா..? ஆனால் அல்லாஹ் இவ்வளவு பெரிய கருணை புரிவான் என்ற நம்பிக்கையும் அவருக்கு இல்லை.*

"ஏதாவது சொல்லுங்கள். எனக்கு மூச்சு அடைக்கிறது" நொண்டி அத்தை மிகவும் குழம்பிப்போய்விட்டார்.

அவர் கடிதத்தை மடித்து உறையினுள் வைத்தார். பிறகு மூக்குக் கண்ணாடியைக் கழற்றினார். வீட்டில் முழு அமைதி நிலவி விட்டால், உலகமே மயக்கத்தில் ஆழ்ந்து விடுகிறது. ஆனால் வாஹித் ஹுசேனுக்கு அப்போது வீடு முழுவதும் விழிப்புடனும், சிந்தனையில் மூழ்கி இருப்பது போலவும், மௌனமாகவே ஏதோ சொல்லிக் கொண்டிருப்பது போலவும் தெரிந்தது.

"என்ன ஆகும்? அதே கைசர், கேடு கெட்டவள்"

"கைசர்...?" எல்லாரும் திடுக்கிட்டார்கள்.

"என்ன ஆகிவிட்டது கைசருக்கு...? சொல்லுங்களேன். என்னிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்துவிடுங்கள்" பீபி கடிதம் எடுக்கவே வாஹித் ஹுசேன் அதைப் பிடுங்கிக் கொண்டார்.

"அந்தப் பெண் கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்துவிட்டாளாம். அங்கே குண்டர்களுடன் சேர்ந்து பெரிய ஆர்ப்பாட்டமே நடத்துகிறாளாம்!"

பீபி, நொண்டி அத்தை ஆகியோரின் வாய்கள் வியப்பு மேலிட திறந்துவிட்டன.

"வயதுக்கு வந்த வனிதையை வீணாகக் கம்யூனிஸ்டுகளிடம் அனுப்பிவிட்டாள். பாவி பாத்திமா பேகத்துக்கு என்ன நேர்ந்து விட்டது?"

"இந்தப் பாழாய்ப்போனவள் எங்கள் எதிரியாகிவிட்டாள் என்று அஹ்மத் ஹுசேன் எழுதி இருக்கிறார். இரவோடு இரவாக அவள் குலாம் ரசூலை அழைத்துச் சென்று மறைத்து வைத்திருக் கிறாள். குண்டர்களின் அட்டூழியம் அதிகரித்துவிட்டது. இரவு வேளைகளில் தூங்க முடிவதில்லையாம். இரண்டு வாரமாகப் பண்ணைக்கும் போகவில்லையாம்."

பீபி சூனியத்தில் பார்வையைப் பதித்திருந்தார். அவருடைய வாய் வியப்பால் திறந்த நிலையிலேயே இருந்தது. அவரது கழுத்தில் இருந்த முத்துமாலை மூச்சின் அசைவால் நடுங்கிக் கொண்டிருந்தது.

ரஜியா திருமண ஏற்பாடுகளுக்காகக் காலையிலே வெளியே சென்றிருந்தாள். அதனால் நொண்டி அத்தை மூச்சு இறைக்க, நடுங்கியவாறே சமையறைக்குச் சென்று, மசாலா அரைத்துக் கொண்டிருந்த ருக்குவிடம் சொன்னாள்—

"பார்த்தாயா? அந்தப் பெண் கம்யூனிஸ்டுகளை வைத்துக் கொண்டாளாம். பாழாய்ப்போனவள்... அவள் முகத்தைத் தீ பொசுக்கட்டும். சிறிய நவாபுக்கு கோபம் வந்துவிட்டது. அவளைப் பிடித்துவந்து உதைக்கச் சொல்கிறேன் என்றெழுதி இருக்கிறார்..."

"யார்—யார் அது பீபி?" ருக்கு தனது வேலையை நிறுத்தி விட்டுக் கேள்வி கேட்டதும் அத்தை திடுக்கிட்டாள்.

"இதெல்லாம் உனக்கு எதற்கு? சீக்கிரம் வேலையை முடி.." இதைச் சொல்லிவிட்டு கூடத்திற்கு வந்து ஆசனத்தில் அமர்ந்தாள். "இந்தக் கம்யூனிஸ்டுகள் யார்? அஹ்மத் நவாபுடன் அவர்களுக்கு என்ன பகை" என்று யோசித்தாள். அவள் முற்றத்திலிருந்து வீணாகவே இங்கு வந்து விட்டாள். அண்ணனிடம் மேலும் பல விபரங்களைக் கேட்டிருக்கலாம்.

திடீரென்று சாந்த் உள்ளே வருவது தெரிந்தது. நீலநிற ஜார்ஜெட் சேலை—கலைந்தமுடி—சோகம் நிறைந்த முகம். அவள் இரண்டு மூன்று நாட்களாக வீட்டுக்கு வரவில்லை; எனவே அவளை அதட்டும் உரிமை நொண்டி அத்தைக்கு இருந்தது. இதைத் தவிர வாஹித் ஹுசேனையும் ரஷீதையும் அவளுக் கெதிராகத் தூண்டி விட வேண்டும். அதனால் அவள் வெள்ளி யாலான வெற்றிலைப் பெட்டியைத் தனக்கு முன்னால் இழுத்துக் கொண்டு பீபியிடம பேசினாள்.

"நான்கு நாட்களுக்குப் பிறகு அந்தக் கிழட்டுக் காதலன் உங்கள் பேத்தி இங்கு வருவதற்கு அனுமதி தந்துவிட்டான்."

பீபி வேண்டா வெறுப்பாக முதலில் நொண்டி அத்தை யையும் பிறகு சாந்தின் அறையையும் பார்த்துவிட்டு ரஷீதுடன் பேச்சில் ஈடுபட்டாள்.

நொண்டி அத்தை மிகவும் கலவரமடைந்துவிட்டாள். ஏதோ முக்கியமான விஷயம் இருக்கிறது. அதனால்தான் சாந்த் திரும்பி வந்ததில் யாரும் அக்கறை காட்டவில்லை.

"என்ன ஆயிற்று? என்ன விஷயம்?"

"ஒன்றுமில்லை—" ஷார்ஸ்கின் வெள்ளை ஷேர்வானியின் மேல் இருந்த அவளுடைய கையை ரஷீத் உதறி விட்டான்.

"கவ்ஹரி பேகம்! நாலு கோப்பைத் தேநீர் தயாரித்து உடனடியாக அனுப்புங்கள்—" பீபி அவளை அங்கிருந்து அனுப்பு வதற்கு வழி கண்டுபிடித்துவிட்டார்.

"ஆனால் யார் வந்திருக்கிறார்கள்?" தகவலைத் தெரிந்து கொள்ளாமல் அவளும் அங்கிருந்து போகத் தயாராக இல்லை.

"வியாபாரிகள் வந்திருக்கிறார்கள். ரஷீத் நவாப் அவர்களிட மிருந்து துணியும் மருந்தும் வாங்குகிறார்" வாஹித் ஹுசேன் உடனடியாகப் பதில் தந்தார்.

"அப்படியா?" என்று சொல்லிவிட்டு நொண்டி அத்தை சமையலறை நோக்கிச் சென்றார். ஆனால் தன்னிடமிருந்து ஏதோ ஒன்று மறைக்கப்படுகிறது என்ற உணர்வு அவருக்கு இருந்தது.

இரண்டு மூன்று நாட்களில், பஞ்சாரா குன்றில் இருந்த வீடு

காலி செய்யப்பட்டு அதில் பெட்ரோல், மருந்துகள், ஆயுதங்கள் நிரப்பப்பட்டு விட்டன.

மாலையில் ஓய்வாக உட்காரும்போது ரஜியா நாளிதழ் கொண்டுவந்து பீபிக்கும் கவ்ஹர் அத்தைக்கும் பயங்கரமான செய்திகளை வாசித்துச் சொல்லுவாள். எல்லாருடைய இதயங் களும் துடிக்கும். அவ்வளவு கலவரங்கள் எல்லாத் திசைகளிலும் தினந்தோறும் நடந்துகொண்டிருந்தன.

"அட, சமாதானம் செய்துவைக்கும் நடுவர்கள் எல்லாம் செத்துப்போய்விட்டார்களா?" நொண்டி அத்தை மிகவும் கலவர மடைந்துவிட்டாள்.

"காந்திஜி அறிவுரைகள் சொல்கிறார். முஸ்லிம்களைக் கொல்வதற்காகக் கலவரம் நடக்கும் இடங்களுக்குத் தாமே செல்லாமல் இருப்பதுதான் பாக்கி", ரஜியா ரஷீதிடம் கேட்ட விஷயங்களை அப்படியே ஒப்புவித்தாள்.

"ஊம். இங்கு எல்லாம் அமைதியாக இருக்கிறது. சண்டை போடுபவர்கள் வராமல் இருப்பது நல்லது" பீபிக்கும் திகில் வந்து விட்டது.

நாள் முழுவதும் கண்களை மூடியவாறு, சாய்வு நாற்காலியில் படுத்தவாறு வாஹித் ஹுசேன் செய்திகள் கேட்டார். வானொலி முடிந்ததும் செய்தித் தாளை எடுத்துக்கொள்வார். இந்தியா முழுவதும் கலவரங்கள் நடந்து கொண்டிருந்தன. மக்கள் பெரும் அளவில் ஹைதராபாத்திற்குப் புகலிடம் தேடி வந்தார்கள். ஏனெனில் ஒவ்வொருவருக்கும் இந்த நகரம் தனது இதயத்தில் அன்புடன் இடம் தருகிறது என்று அகதிகளுக்குத் தெரியும். தில்லியின் உயர்குடியைச் சார்ந்த மக்கள், தனது மதிப்பிற்காக உயிரையும் கொடுக்கத் தயங்காத மக்கள் இவர்கள். ஆனால் அவர்களுடைய பெண்கள் தங்கள் குழந்தைகளைப் பாதுகாக்க மேல் துண்டால் முகங்களை மறைத்துக்கொண்டு கைகளை நீட்டியவாறு சாலைகளில் அலைகிறார்கள். நகரில் பல இடங்களில் அவர்களுக்காகக் கூடாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. மக்கள் தாராளமாக நன்கொடைகளும், துணிகளும், தானியங்களும் வழங்கினார்கள்.

ரஷீதும் விரைவிலேயே கலவரமடைந்துவிட்டான். ஒருபுறம் கம்யூனிஸ்டுகள் மாவட்டங்களில் பெருமளவில் சக்தி பெற்றிருந் தார்கள். மறுபுறம் இந்தியா, ஹைதராபாத்தின் இணைப்பை வற்புறுத்திக் கொண்டிருந்தது. இந்தப் பிரச்சினை பேச்சு வார்த்தைகளால் தீர்க்கப்படுவதற்குப் பதிலாக, வலிமை மிகுந்த மோதலாக உருவெடுத்துக் கொண்டிருந்தது. காசிம் ரஜ்வி எல்லா இடங்களிலும் ஆவேசமாகப் பேசி உணர்ச்சிகளைத் தூண்டி

விட்டார். ஒவ்வொரு இளைஞனும் ராணுவப் பயிற்சி பெற வேண்டுமென்ற கட்டாயம் வந்துவிட்டது.

பதின்மூன்று பதினான்கு வயது நிரம்பிய ஷாஹீனும் அதிகாலையிலேயே ரஜாக்கர் (தொண்டர்) ஆடைகளை அணிந்து என்.சி.சி. பயிற்சிக்காகச் சென்றான்.

ஷாஹீனை ரஜாக்கர் சீருடையில் காணும் போதெல்லாம் வாஹித் ஹுசேனின் இதயம் துடிக்கும். தனது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்கு இந்த ஒருவழிதான் எஞ்சி இருக்கிறதா? வாழ்வில் அவர் பல்வேறு போராட்டங்களை நடத்தியிருக்கிறார். ஆனால் ஒருநாள் தனது குழந்தைகளுக்கு எங்கும் புகலிடம் கிடைக்காது, அவர்கள் செல்லும் திசைகளிலெல்லாம் வாட்கள் அவர்களை எதிர்கொண்டு நிற்கும். மரணம் அவர்கள் போகும் வழிகளையெல்லாம் சூழ்ந்துகொள்ளும் என்று அவர் நினைக்கவில்லை. நாம் இந்த யுத்தத்தில் ஏன் பங்கேற்கிறோம் என்று புகையிலைக் குழாயைப் பற்றவைக்கும்போது சிந்திப்பார். என்னைப் போன்ற சாதாரணமான மனிதனுக்கு, அரசியலில் எந்தக் கட்சியிலும் சேராத, எந்தக் கொள்கையையும் சாராத ஒருவனுக்கு இந்த இக்கட்டான நிலை ஏன்? தன்னுடைய வீட்டினுள் அழகான தோட்டத்தை வளர்த்துக் கொண்டு, ஒரு மரத்தடியில் கஜல்கள் புனையும்—தனது மனைவி மக்களின் பிரச்சினைகளில் மூழ்கி இருக்கும் அவரைப்போன்ற மக்கள் இந்தப்போரில் என்ன பாத்திரம் ஏற்பார்கள்? யார் பக்கத்தில் நின்று சண்டை போடுவார்கள்?

பிறகு மிகுந்த ஏமாற்றத்துடன் ரஷீதை நோக்கி வினா ஒன்றை எழுப்புவார். "என்ன மகனே! உண்மையிலேயே ஆஸிபியா ஆட்சி முடிந்துவிடுமா?"

தனது குடும்பத்தினரின் உடல்களில் ஆசிபியா ஆட்சியின் விசுவாசம் குருதியாக ஓடுகிறது என்பது ரஷீதுக்குத் தெரியும். அதனால் அவன் தன் தந்தைக்கு ஆறுதல் கூறுவான். "கவலைப்பட வேண்டாம் அப்பா. காசிம் ரஜ்வி என்றும் தன் தோல்வியை ஒப்புக் கொள்ளவே மாட்டார்."

"ஆனால் இராணுவ நடவடிக்கை எடுப்போம் என்று காங்கிரஸ்காரர்கள் பயமுறுத்துகிறார்களே. அவர்கள் எல்லையோரங்களில் படைப்பிரிவுகளைக் குவித்திருக்கிறார்கள். நேற்று அகில இந்தி வானொலிச் செய்திகளில் சொன்னார்கள்."

"ஓ! இதெல்லாம் வெறும் மிரட்டல்தான்!" ரஷீத் அலட்சியமாகச் சொல்லிவிட்டு வெளியே ஓடுவான். ஹைதராபாத் மீது பொருளாதாரக் கட்டுப்பாடு வரும் என்று வதந்திகள் வந்து கொண்டிருந்தன.

"இந்தப் பாழாய்ப்போன குண்டர்கள், கொலைகார யஜீதின் சந்ததியினரே… நீங்கள் ஒரு ரூபாய்க்கு இனிப்பு கொண்டு வரச் சொல்லுங்கள் அண்ணா. நான் ஒரு வஜீபா (ஜெபம்) படிக்கப் போகிறேன்'' நொண்டி அத்தை சொல்லிவிட்டு பீபியை நோக்கினாள். "என் வஜீபா சக்தி வாய்ந்தது. இரவோடு இரவாக எல்லாத் தடைகளும் நீங்கிவிடும்."

அத்தையின் பேச்சைக் கேட்டு ரஷீத் தன் கையில் ரொட்டித் துண்டை எடுத்தவாறு, உணவுப் பந்தியிலிருந்து எழுந்து வந்தான். அத்தைக்கு முன்னால் தரையிலேயே உட்கார்ந்துவிட்டான்.

"கவ்ஹர் அத்தை—உங்களுக்காகவும், ஷாஹீனுக்காகவும் பஞ்சாராக் குன்றில் புதிதாக ஒரு பங்களா கட்டித் தரட்டுமா?"

"போதும். இதை இன்று என்னிடம் எதற்காகக் கேட்கிறீர்கள் மியான்!" அத்தையின் மனம் குளிர்ந்துவிட்டது. அண்ணன் மகன் இத்தனை விசுவாசமாக நடந்து கொள்கிறானே!

"ஃபவுசியாவுக்காக மேலும் ஐம்பதினாயிரம் கொண்டு வரவேண்டாமா?"

அத்தைக்குச் சிரிப்பு வந்துவிட்டது. 'இன்று ரஷீத் ஏன் இப்படி வேடிக்கையாகப் பேசுகிறான்?'

"ஃபவுசியா தனது சீர்வரிசையில் பங்களாவும், காரும் கொண்டு போக வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் எந்த வஜீபாவும் படிக்காதீர்கள்."

"ஐய, எதற்காக மியான்.." அத்தை வியப்புடன் கேட்டார்.

"பெட்ரோலும், மருந்துகளும், இதர பொருட்களும் நகருக்குள் வந்துவிட்டால், நாம் முன்னரே சேர்த்து வைத்திருக்கும் பொருள்கள் என்னவாகும்?" ரஷீத் தனது கையிலிருந்த ரொட்டித் துண்டை வாயில் போட்டுக் கொண்டான்.

"மருந்துகள் இல்லாவிட்டால் நோயாளிகளின் கதி என்ன வாகும்...?"

"அல்லாஹ்வின் விருப்பம்," ரஷீத் கைகளை விரித்து பயபக்தியுடன் கூரையைப் பார்த்தான். ''மரணம் வரும் நேரம் மருந்துகளால் தவறி விடுகிறது என்று நினைக்கிறீர்களா? இவை எல்லாம் மனதைத் தேற்றிக்கொள்ளும் பயிற்சிகள்தான்.. பேச்சுக்கள்தான்..".

"சரி, சரி… நான் வஜீபா படிப்பதில்லை; நீ ரொட்டி சாப்பிடு."

"என் பேச்சைக் கேளுங்கள், இந்தியப் படையினர் வந்து விட்டால் ஷாஹீனையும் அயாஸையும் பிடித்துச் செல்வார்கள். அவர்களின் தொண்டர் சீருடைகளைக் கழற்றிவிடுங்கள்" பீபி மிகவும் தாழ்ந்த குரலில் கருத்துத் தெரிவித்தார்.

"விடுங்கள் அம்மா. அவர்கள் வந்தாலும் எங்களை என்ன

செய்துவிட முடியும்? என்னை நம்புங்கள். நான் எல்லாத் திசைகளிலும் முன்னெச்சரிக்கையுடன் பார்த்துக் கொண்டிருக்கிறேன்" உண்மையாகவே அவன் எல்லாக் கோணங்களிலும் பார்வையைச் செலுத்தவே செய்தான்.

அவன் இத்திஹாதுல் முஸ்லிமீன் சங்கத்தில் அங்கத்தினன். பல கூட்டங்களை நடத்தியவன். நன்கொடைகள் வசூலித்தவன். அத்துடன் காங்கிரஸ் கமிட்டியின் தலைவனாகவும் இருந்தான். இணைப்பு சம்பந்தமாக நடந்த பேச்சு வார்த்தைகளில், தில்லிக்குச் சென்ற குழுவில் அங்கத்தினராகப் பங்கு பெற்றவன். பொருளாதாரக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டபோது அவனும் மலீஷும் நிறைய சம்பாதித்தார்கள். இத்திஹாதுல் முஸ்லிமீனுக்கு அவன் மதுபான விலைக்கு பெட்ரோல் விற்றான். மருந்துகள், தங்கத்தின் விலைக்குக் கொடுக்கப்பட்டன. வாஹித் ஹுசேன் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டுதான் இருந்தார். வானொலியின் பொத்தானை அழுத்தி ஒவ்வொரு அலை வரிசையையும் கேட்டார். வெளியில் செல்வதையே அவர் தவிர்த்துவிட்டார். ராணுவ வாகனங்களின் போக்குவரத்தும் பேரிரைச்சலும் அவருக்குத் திகிலைத்தரும். எல்லா நேரங்களிலும் மக்களிடையே பீதி காணப்பட்டது. இத்தகைய குழப்பமான நேரத்தில் யாருக்கும் கவியரங்கத்திலும், கலாச்சார நிகழ்ச்சிகளிலும் அக்கறை இருக்கவில்லை.

வீட்டில் நாள் முழுவதும் அயாஸும், ஷாஹீனும் 'ஹுக்.. ஹக்..' என்று குரலை எழுப்புவார்கள். இருவருக்கும் அது விளையாட்டாகி விட்டது. துப்பாக்கி சுடவும், வாள் வீசவும் அவர்கள் கற்றுக் கொண்டார்கள். பகல் முழுவதும் உரத்த குரலில் பாடுவார்கள்.

'இறைவா!
உலகம் உள்ள வரை
இந்த அரசு நீடிக்கட்டும்..!

நாங்கள் போர்வீரர்கள்,
சண்டையாளர்கள்,
கொடை தூக்குபவர்கள்,
வீரர்கள், தீரர்கள்,
அஞ்சா நெஞ்சர்கள்...'

# 17

தக்காண வானொலியிலிருந்து இப்ராஹீம் ஜலீஸ் ஒரு நிகழ்ச்சியை நடத்துவார். அதைக் கேட்பதற்காக வீட்டில் இருந்தவர்கள் அனைவரும் வாஹித் ஹுசேனைச் சுற்றிலும் உட்கார்ந்து கொள்வார்கள்.

பிறகு இரவில், ஹைதராபாத்துக்கூ வந்த அகதிகள் தங்கள் வீடுகளுக்கு வானொலி மூலம் செய்திகள் அனுப்புவதைக் கேட்டுப் பீபியும், நொண்டி அத்தையும் தங்கள் கண்ணீரைத் துடைத்துக் கொள்வார்கள். தன்னைச் சார்ந்தோரை விட்டுப்பிரிந்து இவ்வாறு அவதிப்படும் நிலையை அல்லாஹ் யாருக்கும் ஏற்படுத்தக்கூடாது என்று பிரார்த்தனை செய்வார்கள். பிறகு நொண்டி அத்தை அயாஸையும் ஷாஹீனையும் அதட்டுவாள். ஆனால் வீட்டின் இதர நபர்களைப் போலவே அவர்களும் இப்போது நொண்டி அத்தையின் பேச்சைக் கேட்பதை விட்டுவிட்டார்கள். ஷாஹீன் பதினைந்து, பதினாறு வயது நிரம்பிய, உயரமான, சுருள்முடி கொண்ட, அறிவுள்ள இளைஞனாகிவிட்டான். உயர்நிலைப் பள்ளியின் இறுதி ஆண்டுத் தேர்வு எழுதப் போகிறான். திடீரென்று அவனுடைய எல்லா ஆடைகளும், ஷேர்வானிகளும் சிறியதாகிவிட்டன. தனது சைக்கிளை விட்டுவிட்டு, மாலையில் கிரிக்கெட் மட்டையைக் கையிலெடுத்துக் கொண்டு தோட்டத்தின் வழியே செல்லும்போது மாங்கனிகளை 'ஹிட்' செய்வான். அயாஸுடன் அவனுக்கு நெருங்கிய தொடர்பு இருந்தது. வீட்டில் ஷாஹீன் உட்பட யாரும் அயாஸை மதிப்பதில்லை. அயாஸ் வசித்த இடத்தில் இத்திஹாதுல் முஸ்லிமீன் கூடாரம் இருந்தது. அங்கு ராணுவப் பயிற்சி அளிக்கப்பட்டது. அயாஸும் தொண்டர் படையில் சேர்ந்துவிட்டான். காசி ரஜ்வியின் எல்லா ஆவேசமான பேச்சுகளும் அவனுக்கு மனப்பாடமாக இருந்தன. அவன் தனது பகுதியிலிருந்த வாலிபர்களின் தலைவனாக இருந்தான். அவர்கள் ஆஸிபியா அரசுக்காகத் தங்கள் குருதியின் கடைசிச் சொட்டுவரை கொடுக்கத் தயாராக இருந்தார்கள். இராணுவ உடையில் தனது அறையை விட்டு அயாஸ் வெளியே வரும்போதெல்லாம்

உண்மையாகவே போர்க்களத்திற்கு அவன் போய்விடக்கூடாது என்று கஜல் அச்சம் கொண்டாள்.

பல வாரங்களுக்குப் பிறகு கவிதாலயத்திற்குக் கஜல் ஒருநாள் சென்றபோது அங்கு முழுவதும் அமைதியாக இருந்தது. நொண்டி அத்தையும் மௌனமாகப் பாக்கு வெட்டிக் கொண்டிருந்தார். யாரும் அவளுடைய வருகையைக் கண்டுகொள்ளவில்லை.

பிறகு அவள் ஃபவுசியாவுடன் தோட்டத்தின் ஒரு மூலையில் சென்று உட்கார்ந்தாள். இருவரும் கீழே சிதறிக் கிடக்கும் மலர் மொக்குகளையும் உலர்ந்த இலைகளையும் பொறுக்கினார்கள். குழந்தைப்பருவம் முதல் ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் அவர்கள் இந்த வேலையை மிகவும் அக்கறையுடன் செய்து வருகிறார்கள். எல்லாவற்றையும் சேர்த்து ஒரு மூலையில் குவியலாகப் போட்டுவிடுவார்கள். தோட்டத்தில் பணியாற்றிய லட்சுமா அவற்றைப் பெருக்கி எடுத்துக்கொண்டு போவாள்.

“சாந்த் அக்கா போய்விட்டார்!”

“எங்கே?” கஜலின் கைகள் உலர்ந்த தரையைப் பிடித்துக் கொண்டன.

“கல்யாணம் செய்து கொள்ள! அப்பாவுக்கு அவர் ஒரு கடிதம் எழுதி இருக்கிறார். சஞ்சீவாவைத் திருமணம் செய்து கொள்ளப் போவதாகவும், இனி அவருடனேயே இருக்கப் போவதாகவும் அறிவிப்புத் தந்திருக்கிறார்!”

“அல்லாஹ்! உண்மையாகவா..!” சாந்த் அக்காவின் திருமணச் செய்தி அவளை மகிழ்ச்சியால் துள்ளச் செய்தது.

“உஷ்..! இது மகிழ்ச்சிக்குரிய விஷயமா?” பவுசியா முகத்தைச் சுளித்தாள். இப்போது தன்மான உணர்வு ஃபவுசியாவின் உயரமான மூக்குக்கு மேல் உயர்ந்து நின்றது. பேசும்போது அவளுடைய புருவங்கள் இறுக்கப்பட்டுவிடும்.

“சஞ்சீவா கீழ் சாதிக்காரன். பாழடைந்த மூஞ்சி! இனி சாந்த் அக்கா இந்த வீட்டுக்கு வருவதை அப்பா அனுமதிக்கப் போவதில்லை. அன்று ஒருநாள் அப்பா, சாந்த் அக்காவை எப்படி அதட்டினார், தெரியுமல்லவா?”

அந்தக் காட்சி கஜலுக்கு நினைவுக்கு வந்தது. சஞ்சீவா வந்து உட்கார்ந்தபோது, ரஷீத் சாந்தின் கையைப் பிடித்து இழுத்து வந்தான். அவளைக் கட்டிலின்மேல் தள்ளினான்.

“அந்தக் கம்யூனிஸ்ட் போக்கிரிப் பயலை அழைத்து வந்து எங்கள் உயிர்களுக்கு ஆபத்து விளைவிக்கிறாய். நன்றாகக் கேட்டுக் கொள். இனி அவன் இங்கு வந்தால் உன்னையும் வெளியே துரத்திவிடுவேன்.”

துயரம் மேலிடக் கஜலின் இதயம் வெடித்துவிட்டது. சாந்த்

அக்காவுடன் இப்படியா பேசுவது? சாந்த் அக்கா அல்லவா அவர், கஜல் இல்லையே! மாமாவின் இந்த மாறுதல் அவளுக்குச் சிறிதும் புரியவில்லை. ஆனால் ஒருநாள் மாலையில் உணவுப் பந்தியில் உட்கார்ந்தபோது மாமாவே இதற்கு விளக்கமும் தந்தார்.

"பான் சாஹிப், சத்தர்லால் போன்றவர்களாக இருந்தால் பரவாயில்லை; அவர்கள் விஷயம் வேறு. அவர்கள் பெரிய மனிதர்கள். அவர்களுடன் உறவு வைத்துக்கொண்டால் எத்தனை காரியங்கள் ஆகின்றன..? ஆனால் இந்தக் கம்யூனிஸ்டுப் பயல் வீட்டுக்கு வரத் தொடங்கினால் என்ன ஆகும்?"

அன்று கட்டிலைவிட்டு எழுந்தபோது சாந்த் அக்காவின் கர்வமும் ஆணவமும் எங்கே போய்விட்டன என்பதே தெரிய வில்லை; அவள் புலம்பி அழுதாள். சாந்த் அக்காவின் இந்த இயலாமையைக் கண்டு கஜலுக்கும் அழுகை வந்துவிட்டது. ரஷீத் மாமாவின் நெஞ்சில் ஈரமே இல்லை. எத்தனை கொடுமைக்காரர் அவர். சஞ்சீவா அங்கிள் மிகவும் நல்லவர். சாந்தின் மற்ற நண்பர் களைப்போல அவர் சாந்தைச் சீண்டுவதோ, கிள்ளுவதோ இல்லை. அவள்மீது கோபமும் கொள்வதில்லை. அவர்கள் வெளியே போகும்போது சாந்த் அக்கா அவருடைய கையைப் பிடித்துக் கொண்டு உட்காருவாள். அவர் பலமுறை என்னுடன் வராதே என்று மறுப்பும் தெரிவித்திருக்கிறார். ஆனால் சாந்த் அக்கா பிடிவாதமாக அவருடன் செல்வாள். பிறகு சஞ்சீவாவின் மீது எப்படிக் குற்றம் சுமத்த முடியும்? மேலும் சஞ்சீவா கீழ் சாதிக் காரனைப்போல் காணப்படவில்லை. கம்பீரமாக, உயரமாக, திடமாக இருந்தார். ஆனால் சாந்த் அக்காவின் சிறப்புக்கே இப்போது வீட்டில் கிரகணம் ஏற்பட்டுவிட்டது. அவள் ஒவ்வொரு இரவும் சோகத்துன் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருப்பாள். ஒரு பழைய மிதியடி போலவே அவள் கஜலை மறந்துவிட்டாள். வீட்டில் அனைவரும் அவளை உதிர்ந்துபோன தலைமுடியாகவே நிராகரித்துவிட்டனர்.

அவளுடைய பெயரைக் கேட்கும் போதெல்லாம் பாட்ட னாரின் வாயில் கசப்பான பொருள் ஏதேனும் வந்துவிடும். அவர் அதை உடனே துப்பிவிடுவார். ரஷீத் மாமா அவளுடைய அறையின் திசையிலும் திரும்பிப் பார்ப்பதில்லை. இறந்துபோன தன் பெண்களின் பேச்சுவரும்போது செய்வதைப்போலவே சாந்த் அக்காவின் பெயர் வந்ததும், நீண்டதொரு பெருமூச்சு விட்டவாறு பீபி தலையில் சேலைத் தலைப்பைப் போட்டுக் கொள்வார். ரஜியாவும் சாந்துடன் பேசுவதில்லை. நொண்டி அத்தை மட்டும், தனது ஊன்றுகோலின் உதவியால், அவளுடைய அறைக்குச் சென்று தனது வாழ்வின் கசப்புகளையும், வசை மொழிகளையும்

கொட்டிவிட்டு வருவாள். நொண்டி அத்தையின் இத்தனை பழிப் புரைகளைக் கேட்டபிறகும் சாந்த் அக்காவின் கூர்மையான நாக்கு அடங்கியே இருக்கும். அவள் முகத்தை மறைத்துக்கொண்டு தன் தாய் சாவதற்கு முன்னால் அழுததைப்போல், குலுங்கிக் குலுங்கி அழுவாள். இத்தகைய நேரங்களில் கஜலும் அவளுடைய அறைக்குச் சென்று அவளைப் பார்த்துத் தானும் அழுதுவிடுவாள். இருவருமே முழங்கால்களில் தலையை வைத்து வெகுநேரம் வரை அழுவார்கள். ஆனால் இதுவரை சாந்த் அக்காவிடம் "இந்த அழுகை எதற்கு?" என்று அவள் கேட்கவில்லை. சாந்த் அக்காவும், "நீ எதற்காக என்னுடன் அழுகிறாய்" என்று விசாரிக்கவுமில்லை.

சாந்த் அக்கா போய்விட்டாள் என்ற செய்தி ஃபவுசியா மூலம் கிடைத்ததும் கஜலுக்கு ஆறுதலாக இருந்தது. அவள் மீண்டும் வீட்டுக்குள் வந்துவிட்டாள்.

கூடத்தில் ஆசனத்தின் மீது உட்கார்ந்தவாறு நொண்டி அத்தை மாங்கனிகளைச் சீவிக்கொண்டிருந்தாள். பக்கத்தில் நாற் காலியில் உட்கார்ந்திருந்த ரஷீத் மாமாவுடன் வம்பளக்க ஆரம்பித்தாள்.

"நான் வெயிலில் காய்ந்து முடியை வெள்ளையாக்கிக் கொள்ளவில்லை மியான்... பெண்ணுக்கு இவ்வளவு சுதந்திரம் கொடுக்கக் கூடாது என்று சொல்லிக் கொண்டே இருந்தேன்..." மாங்கனிகளையும் கத்தியையும் முறத்தில் வைத்துவிட்டு தனது கைகளை அழுத்திக் கொண்டாள். "பத்து நாட்களாகிவிட்டன. இதுவரை அந்தப் பயல் அவளைச் சின்னாபின்னமாக்கி இருப்பான்."

"போதும் அத்தை..." ரஜியா சீறியவாறே தனது அறையிலிருந்து வந்து அவள் பக்கத்தில் உட்கார்ந்தாள். "உங்கள் சாந்த் பெரிய கன்னி, கற்புக்கரசியா? இப்படி எத்தனையோ? மனம் நிரம்பி விட்டால் மறுபடியும் தன் மாமாவிடம் வந்துவிடுவாள்."

ரஷீத் ஒன்றும் பேசவில்லை. மாங்கனித் தோல்களுடன் விளையாடினான்.

"நீங்கள் சஞ்சீவாவை ஏன் சிறைப் பிடிக்கக்கூடாது?" ரஜியா கேட்டாள்.

"வேண்டாம் மகளே, இப்படிச் சொல்லவேண்டாம்," பீபியின் குரல் நடுங்கியது. "இப்போது அவன் சாந்தின் கணவனாகி விட்டான். இனி அவளுடைய வாழ்வும் மரணமும் அவனுடன் தான். இனி அவள் திரும்பிவரமாட்டாள். எந்தப் பாட்டனாரின் பேத்தி அவள் தெரியவில்லையா?" பீபியின் காயம் மீண்டும் கசிந்தது. வாஹித் ஹுசேனின் இறுக்கமான பிடியில் இன்னும் தாம் தத்தளிப்பதுபோல் தெரிந்தது.

“இருவரும் பதிவுத் திருமணம் செய்து கொண்டிருப்பார்கள்”— ரஷீத் அலட்சியமாகக் கூறினான்.

“ஆனால் சாந்தின் தேர்வு தவறானது. அவள் பெரிய செலவாளி. நாகரிகம் நிறைந்த பெண். தனக்காக, தனது இனிய வாழ்க்கைக்காக, ஒரு நவாப்பையோ ஒரு ஜாகீர்தாரரையோ தேடி இருக்க வேண்டும். இந்தப் பயலோ காடுகளில் சுற்றி அலைகிறவன். சாந்துக்கு என்ன ஊட்டுவான்?”

“அவளுடைய குடும்பத்தில் யாருமே இன்றுவரை இதைச் சிந்திக்கவில்லை. அவள் எப்படிச் சிந்திப்பாள்?” நொண்டி அத்தை மிகவும் ஏமாற்றத்துடன் பீபியை நோக்கினாள்.

“ஆனால் எல்லாக் குற்றமும் உங்களுடையதே”, ரஜியா சுற்றி வளைத்து மீண்டும் ரஷீதின் மேல் குற்றத்தைச் சுமத்திவிட்டாள். ரஷீத் கடுகடுப்புடன் நாளிதழை எடுத்துக் கொண்டான்—தான் குற்றமற்றவன் என்பதை மெய்யெனக் காட்டும் ஒரு செய்தியினைத் தேடுவதுபோல்! ‘அவன் குற்றம் ஏதும் செய்யவில்லையே. சாந்த் அவனுடைய காரியங்களை செய்து முடிக்கும்வரை சாந்தின் ஆதரவாளனாக அவன் இருந்தான். இப்போது ரஷீதை மட்டும் குறை கூற முடியாது. இது பொதுவாகவே எல்லாருக்கும் பொருந்தும். ஒரு காஜா நவாப் இருந்தார். அவர் தனது அழகான, பாரசீக நாட்டைச் சேர்ந்த மனைவியைத் தானே உயர் அதிகாரிகளின் அறைகளுக்குள் அனுப்பி வைப்பார். அவள் வெளியே வரும்போது முதலில் அவள் கையிலிருக்கும் காகிதத்தை வாங்கிப் படிப்பார். அதில் அவருடைய வேலை உயர்வு பற்றிய நற்செய்தி இருக்கும். அந்தக் கணவன் மனைவி இடையே ஆழமான அன்பு இருந்தது. பான் சாஹிப் அந்த அழகான ஜோடியைப் பார்த்துப் பொறாமை பாராட்டுவார். ரஷீதின் உடலில் தன்மதிப்புணர்வு இருந்தது. அதனால் அவன் தன் மனைவியை எந்த உயர் அதிகாரியிடமும் அழைத்துச் செல்லவில்லை. சாந்தைப் பார்த்து பான் சாஹிப் போன்ற முதலைகள் தாங்களே கவரப்பட்டு வந்தார்கள். அதில் அவனுடைய தவறு யாதோ?’ ஒருமுறை சாந்தைப் பார்த்துக் கவிஞன் ஒருவன் சொன்னான்—

“இது கவிதாலயத்தின் காதலிதான்!”

ரஷீத் இதைச் செவியுறாததுபோல் முகத்தைத் திருப்பிக் கொண்டான். சிறிது நேரத்திற்குப் பிறகு அந்தக் கவிஞனை யாரோ ரஷீதுக்கு அறிமுகம் செய்துவைத்தார்கள். அப்போது ரஷீத் கூறினான்:

“ஆம்! எங்கள் குடும்பத்தில் நூறு தலைமுறைகளாகக் கவிதை புனைகிறார்கள். ஆனால் நான் கவிஞனல்ல, ஒரு வியாபாரிதான்!”

பிறகு அந்தக் கவிஞன் தனது வேறொரு நண்பனிடம்

சொன்னான்: "தோழரே! மங்கையரை மக்கள் எந்தெந்த வகைகளிலெல்லாம் பயன்படுத்திக் கொள்கிறார்கள்." ஆனால் சாந்த் எப்படிப்பட்டவள் என்று யாருக்குத் தெரியும்? அவள் தானே கேடுகெட்டவளாக இருந்தாள். எல்லாத் திசைகளிலும் பார்த்துக் கொண்டே இருந்தாள். ஆனால் இறுதியில் யாரைத் தேர்ந்தெடுத்தாள்? ஓர் இழிவான கலைஞனை—அவன் ஏதேதோ வசனங்கள் எழுதி அவளை மயக்கி விட்டான் போலும்.

அன்று கஜல் சந்தோஷமாக இருந்தாள். ஷஹ்ஜாதி அக்காவைப்போல் சாந்தும் மணமகளாகி இருப்பாள். வாத்தியக் குழுவினர் இசை எழுப்பி இருப்பார்கள். ஆனால் அவள் கைக்கு மருதாணியை யார் போடுவார்கள்? ஷஹ்ஜாதி அக்காவின் தங்கைகளும் தங்கள் கைகளைச் செந்நிறமாக்கி இருந்தார்களே. ஒருவர் மற்றொருவருக்குச் சந்தனம் தடவிப் பாட்டுப் பாடினார்களே...

எல்லாத் திசைகளிலிருந்தும் களைப்படைந்துவிட்ட கஜல் பள்ளிப் பாடங்களில் மூழ்கிவிட்டாள். இப்போது அவள் எட்டாவது வகுப்பில் இருந்தாள். தனது வகுப்பு ஆசிரியையான குமாரி ரெட்டியின் அன்புக்குரிய மாணவியாகி விட்டாள். குமாரி ரெட்டி சாந்தைப்போல் அழகானவராக இல்லை. என்றாலும் பேச்சின் நடுவில் சாந்தைப்போலவே சிரிப்பொலியை எழுப்புவார். அவர் ஒவ்வொரு நாளும் ஒரு புதிய வண்ணச் சேலையை அணிவார். அதே வண்ணத்தில் பிளவுசும், கரையில் அதே நிறப் பூக்களும் இருக்கும். ஆனால் நறுமணம் மட்டும் தினமும் ஒரே மாதிரியாக இருக்கம். கஜலின் கண்களைக் கட்டி ஆயிரம் மாதர்களுக்கு இடையில் விட்டுவிட்டாலும் நறுமணத்தை முகர்ந்து குமாரி ரெட்டியை அடையாளம் காட்ட அவளால் முடியும்! குமாரி ரெட்டியும் அழகான பொருட்கள் மீது உயிரை வைத்திருந்தார். அதனால் அவருக்குக் கஜலின் மினுமினுக்கும் வண்ணம், சற்றே துயிலார்ந்த மயக்கும் கண்கள் மிகவும் பிடித்தன. எனவே குமாரி ரெட்டியிடம் அன்பாக நடந்துகொள்வது கஜலின் கடமையாகிவிட்டது. பள்ளியில் குமாரி ரெட்டியைப் பற்றி எப்போதும் முணுமுணுப்புப் பேச்சு இருக்கும். ஒல்லியான இதர ஆசிரியைகள் அவருடைய வாட்டசாட்டமான உடலைக் கண்டு சற்று ஒதுங்கியே செல்வார்கள். பெரிய மாணவிகள் அவர் வருவதைப் பார்த்து, ஏதோ ஒரு திருமண ஊர்வலம் வருவதுபோல் நின்றுவிடுவார்கள். அவர் சென்றதும் தாழ்ந்த சிரிப்பொலிகள் கேட்கும்.

"கழுத்துப் பட்டையைப் பார்த்தாயா—பள்ளிகூடத்தின் நுழை வாசல்போல்!"

"எல்லாருக்கும் உள்ளே செல்லும் அனுமதி உண்டு!"

பெரிய மாணவிகள் அவரைக் கண்டு பொறாமை கொண்டார்கள். ஆனால் சிறு பெண்களினிடையே அவருக்கு நல்ல செல்வாக்கு இருந்தது. பள்ளியில் ‘ஆலாஹஜ்ரத் ஆண்டு விழா’வின்போது நடக்கும் கலைநிகழ்ச்சிக்காக, ஒவ்வொரு வருடமும் குமாரி ரெட்டி ‘பாரினிலே உயர் நாடு எங்கள் பாரத நாடு’ பாட்டுக்கு ராகத்தைச் சொல்லிக் கொடுப்பார். கஜல் எல்லாப் பெண்களுக்கும் தலைமை தாங்கி இதைப் பாடுவாள். அவர் வேறு பெண்களைவிட கஜலுக்கு அதிக முக்கியத்துவம் தருவார். அவள் எல்லாப் பாடல்களையும் உடனடியாக மனப் பாடம் செய்து கொள்வாள். குமாரி ரெட்டி அவளுடைய நினைவுத் திறனைப் பாராட்டிப் பேசுவார். அது பாடமாக இருந்தாலும், கணிதமாக இருந்தாலும் கஜலின் நினைவில் பதிந்து விடுகிறது என்பார்.

சாந்த் அவள்பால் காட்டிய கோபமும், அப்பாவின் கொடுமைகளும் அவளுடைய இதயத்தில் வெறுப்புத் தீயை நிரப்பிவிட்டன. ஓர் அன்பு, ஒரு கனிவு அதில் உட்செல்ல வழி இருக்கவேயில்லை.

பலமாத விடுப்புக்குக் பிறகு குமாரி ரெட்டி இப்போது பள்ளிக்கு வந்தபோது அவரை அடையாளம் காணுவதே சிரமமாகிவிட்டது. அவர் தலையில் பூ இல்லை. ஆடைகளின் வண்ணமும் சீராக இல்லை. பிளவுசின் கழுத்து தொண்டை வரையில் இருந்தது. ஒருமணி நேரத்தில் ஒருமுறைதான் அவர் புன்முறுவல் செய்தார். ‘இப்போது அவர் திருமதி பிரகாசம் ஆகிவிட்டார்’ என்று இதர ஆசிரியைகள் மாணவியருக்குத் தகவல் சொன்னார்கள். பாடத்தைப் புகட்டிவிடும் இத்தகைய விவாக முடிவு கஜலுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவள் தனது பேச்சாலும், பாட்டாலும் அவரை மகிழ்வுறச் செய்ய விரும்பினாள். ஆனால் அதுவும் பலனளிக்கவில்லை.

ஓராண்டு காலம் கழிந்துவிட்டது.

கஜல் தனிமை எனம் பாலத்தில் தடுமாறிக் கொண்டிருந்தாள். கயிறு என்று நினைத்துப் பாம்பைப் பிடித்துக் கொள்ளும் குருடனைப்போல் அவளும் அன்பைத் தேடி எத்தனையோ இடர் களைச் சந்திக்க நேர்ந்தது.

பள்ளி ஆசிரியைகள் அவளைச் சிறிதும் விரும்புவதில்லை, ஏனென்றால் ஆடல், பாடல், துள்ளல் குதித்தலைத் தவிர அவளுக்கு நல்ல பேச்சு எதுவும் தெரியவில்லை. எனவே ஆசிரியை களின் நல்லெண்ணத்தைப் பெற அவள் புத்தகங்களிலேயே மூழ்கிவிட்டாள். சாயா தன்னிடம் எத்தனை அநீதியாக நடந்து கொள்கிறாள், அப்பா எத்தனை முறை அறைந்துவிட்டார் என்பது

எல்லாம் இப்போது அவளுக்கு நினைவில் இருப்பதில்லை. பான் சாஹிப் அன்பளிப்பாகத் தந்த பிராக் இப்போது அவளுக்கு சிறியதாகிவிட்டது என்ற கவலை இருந்தது. அதனால் தொடர்ச்சியாக ஃபவுசியாவின் பழைய ஆடைகளிலேயே வாழ்க்கையைக் கழிக்க வேண்டியிருந்தது. ஒருமுறை தலையில் பேன் பார்ப்பதற்காக நொண்டி அத்தை அவளுக்கு இரண்டு காசு கொடுத்தாள். அவளும் பவுசியாவைப்போல் ஒரு காசுக்கு உண்டியல் வாங்கி வந்தாள். இரண்டாவது காசை அதில் போட்டு விட்டாள். ஃபவுசியாவின் உண்டியல்போலவே ஓரிரு மாதங்களில் அதை உடைத்தால் அது நிரம்பி இருக்கும் என்று அவள் நினைத்தாள். ஆனால் ஷாஹீன் அவளை எள்ளி நகையாடினாள்.

"நீ இரண்டு காசுகளை வீணாக்கிவிட்டாயே".

இதைக்கேட்டு அவள் அழுதாள். ஷாஹீன் அந்த உண்டியலை உடைத்து இரண்டாவது காசை எடுத்துக் கொடுக்காமல் இருந்திருந்தால் நாள் முழுவதும் அவள் அழுதுகொண்டே இருந்திருப்பாள்.

ஒருநாள் மாலையில் கஜல் பள்ளியிலிருந்து வந்தபோது அயாஸ் தொண்டர் சீருடையை மாற்றிக் கொண்டு அவளிடம் வந்து உட்கார்ந்தான்—

"இன்று சாயா எதுவும் சமைக்கவில்லை..."

"அப்படியானால் நீங்கள் என்ன சாப்பிட்டீர்கள்..." கஜல் அம்மாவின் நடையில் கேட்டாள்.

"ஒன்றுமில்லை..." அயாஸ் கவலை தோய்ந்த முகத்துடன் கூறினான்.

கஜல் கவலை கொண்டாள். தொண்டர் படையில் அயாஸ் சேர்ந்தது முதல் அவர்களுடைய சண்டைகள் மிகவும் குறைந்து விட்டன. இரவு நேரங்களில் அயாஸ் ஒரு வண்ணக் கலைஞரின் கடையில் வேலை செய்து தனக்காகவும் கஜலுக்காகவும் பள்ளிக் கட்டணத்தைச் சேர்க்க ஆரம்பித்தான். தன் தலைக்கு மேலே அமைதியின், பாதுகாப்பின் கூரை அமைந்துவிட்டது என்ற உணர்வு கஜலுக்கு வந்துவிட்டது.

அவள் அவசரமாக எழுந்து சமையலறைக்குள் வீட்டுக் காரியைப்போல் நுழைந்தாள். எல்லா டப்பாக்களையும் திறந்து பார்த்தாள். ஆனால் எதிலும் ஒரு தானிய மணியும் இருக்கவில்லை.

"இருக்கட்டும். அப்பா கொண்டுவருவார்" என்று சோகத்துடன் அயாஸ் கூறினான். ஆனால் ஒரு காகிதப் பையில் ரவை கிடைத்துவிட்டது. நெய்யும் சர்க்கரையும் இருந்தன. பல நாட்களாகவே அல்வா சாப்பிட வேண்டும் என்று அயாஸின் மனம் விரும்பியது. இந்த மூன்று பொருட்களைச் சேர்த்துத்தான் அம்மா

அல்வா தயாரிப்பார்.

பொழுது சாய்ந்து கொண்டிருந்தது. அப்பாவும் சாயாவும் வரவேண்டிய நேரம் நெருங்கிவிட்டது. எனவே அவசர அவசர மாக மூன்று பொருள்களையும் சேர்த்து, தண்ணீர் ஊற்றிப் பெரிய பெண்களைப்போல் கஜல் கரண்டியால் கிளறினாள். அயாஸ் அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து தங்கையின் அறிவைப் பாராட்டினான். கஜல் சாயாவைப்போல் மணையில் அமர்ந்து கொண்டாள். அடுப்பை ஊதிக்கொண்டு இருந்ததால் அவள் தலைமுடியில் சாம்பல் படர்ந்துவிட்டது. பாவம் அயாஸ்—இரண்டு கைகளால் புகையை விலக்கிக்கொண்டு இருந்தான்.

'புகையே, புகையே, உன் குழந்தையைத் தேள் கடித்து விட்டதாம்...'

ஆனால் எந்த அபாய அறிவிப்பும் புகையை எங்கும் ஓடச் செய்யவில்லை.

சிறிது நேரம் வரை கஜல் சுலபமாகக் கரண்டியை அசைக்க முடிந்தது. ஆனால் அல்வாவுக்கு என்ன தோன்றிவிட்டதோ, சாந்த் அக்காவைப்போல் முரண்டு பிடித்தது. பாத்திரத்தில் கொப் புளங்கள் குதிக்க ஆரம்பித்தன. கஜல் எழுந்து நின்றாள். முழு சக்தியுடன் கரண்டியை ஆட்டினாள். அப்பா வருவதற்கு முன்னால் அல்வா தயாராகிவிட வேண்டுமென்று அவள் துடித்தாள். முதல் முறையாக ஒரு பொருளைத் தயாரித்துப் பெயர் வாங்கிவிடவேண்டுமென்று அவள் நினைத்தாள். இந்தக் குழப்பத்தில் அயாஸ் இடையில் வந்து தனது கையைச் சுட்டுக் கொண்டான். அவனைக் காப்பாற்றும் முயற்சியில் கஜல் அவனுடைய கைக்குப் பதிலாக கொள்ளியைப் பிடித்துக் கொண்டாள். கரண்டியை வீசி எறிந்துவிட்டுக் குழாயை நோக்கி ஓடினாள். கையைத் தண்ணீரில் நனைத்தாள். அயாஸ் அல்வாவை இறக்கி ஒரு தட்டில் போட்டுக் கொண்டான். கரண்டியால் அதில் எழுந்த குமிழிகளுடன் 'பில்லியர்ட்ஸ்' விளையாடினான். அல்வா தட்டில் இருப்பதைக் கண்ட பிறகு கஜலின் எரிச்சல் சற்று குறைந்தது. இந்த வெள்ளையான இனிப்புப் பண்டத்தைத் தானே தயாரித்த உணர்வும் இருந்தது. வாயால் ஊதி அதன் சூடு தணிக்கும் முயற்சியில் அவள் ஈடுபட்டாள். சாயா வருவதற்கு முன்னால் அதைச் சாப்பிட்டு முடித்துவிட வேண்டும். அயாஸ் அவளுக்காகவும் ஒரு சிறு கரண்டியை எடுத்துவந்தான். அவர்கள் அல்வாவை ஊதிக் கொண்டிருக்கும்போதே சாயா உள்ளே வந்தாள். அவளுடன் அவளுடைய நெருங்கிய தோழியான அலிபீயும் இருந்தாள். சாயாவுக்குத் தன்னுடைய அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டும் என்ற வெறி இருந்தது. அதனால்

அல்வாத்தட்டை எடுத்து சுவரில் வீசி எறிந்துவிட்டு இருவரையும் அறைந்தாள்.

"ஐயோ, அம்மாவையே விழுங்கிவிட்டார்கள். இத்தகைய போக்கிரிகளை நான் எங்கும் பார்த்ததில்லை."

அவள் கூச்சலிட்டு அலிபீயின் ஒத்துணர்வைப் பெற முயன்றாள். அலிபீயும் இத்தகைய விஷமிகளைத் தான் பார்த்ததே யில்லை என்று உறுதிப்படுத்தினாள்.

அயாஸ் புத்தகங்களை எடுத்துக்கொண்டு வெளியே போய் விட்டான். கஜல் அழுக்குத் துணிகளின் குவியல்மேல் விழுந்து அழுதாள். விரல் காயத்தின் வேதனை உடல் முழுவதும் பரவி விட்டது. எதிரில் சுவரில் வெண்குஷ்ட நோய்போல் பரவியிருந்த அல்வா அவள் இதயத்தின் மேல் ஈட்டியாகப் பாய்ந்தது. அவளும் அயாஸைப்போல் நான்கைந்து கரண்டி அல்வா சாப்பிட்டி ருந்தால் இந்த அளவில் ஏமாற்றத்தின் உணர்வு உண்டாகியிராது.

"அயாஸ்— ஓ, அயாஸ் அலி ஷா...!" வெளியே ஷாஹீன் கத்தினான்.

கஜல் கண்ணீரைத் துடைத்துவிட்டு எழுந்தாள். முன்பு ஒல்லியான சிறுவனாக இருந்த ஷாஹீன் இப்போது நாகரிகமான, புத்திக்கூர்மையுள்ள இளைஞனாக மாறிக் கொண்டிருந்தான். அவன் ஒவ்வொரு முறையும் கஜலை முட்டாள் என்று நிரூபித்து விட்டான். தான் அழுது அல்வா கதையைச் சொன்னால் அவன் எள்ளி நகையாடுவான்; அதனால் கஜல் கண்ணீரைத் துடைத்த வாறு எழுந்துநின்றாள்.

"அயாஸ் எங்கே?" சைக்கிளை வைத்துவிட்டு ஷாஹீன் உள்ளே வந்தான்.

"வெளியில் போய் இருக்கிறார்" கஜல் தன்னைச் சமாளிக்க முயன்றாள்.

ஷாஹீன் கஜலைக் கூர்ந்து நோக்கினான். கஜலைக் கேலி செய்வதற்குப் பதிலாக அவன் மெதுவாகக் கூறினான்.

"லாஹவ்லா வலா—எங்கு போனாலும் கண்ணீர்— அழுகை— புலம்பல்... இன்று சாந்த் அக்கா வந்திருக்கிறார். அவரும் அழுது கொண்டே இருக்கிறார்"

"என்ன, சாந்த் அக்கா வந்துவிட்டாரா?" கஜல் மகிழ்ச்சியால் குதித்தாள். மிதிவண்டியின் பின்னால் உட்காரவைத்துக் கவிதாலயத்தில் விட்டுவிடுமாறு அவனை வேண்டினாள். வழக்கம்போல் ஷாஹீன் தட்டிக் கழிக்க முயன்றான். பிறகு சொன்னான்—

"ஆனால் ஒரு நிபந்தனை. நீ உனது அழுக்கான கைகளால் என் சட்டையைத் தொடக்கூடாது".

“அல்லாஹ்! நான் உன்னைப் பிடிக்காவிட்டால் விழுந்து விடுவேனே...”

“அதெல்லாம் எனக்குத் தெரியாது.” அவன் வெகு அலட்சியமாகப் பதிலளித்தான்.

“சரி வாருங்கள், பாழடைந்த மூஞ்சி! எனக்குச் சகோதரர்கள் கிடைத்திருந்தாலும் ராட்சசர்கள்” அவள் முணுமுணுத்தாள்.

“ஓ போக்கிரி! இப்படிப் பேசினால் வழியிலேயே வீசி எறிவேன்,” ஷாஹீன் பயமுறுத்தினான்.

“வீசி எறிந்து பாரேன். உன் வெள்ளைச் சொக்காயை என் கைகளால் அழுக்கடையச் செய்துவிடுவேன்”

வழி நெடுக அவள் ஷாஹீனுடன் சண்டை போட்டாள். கவிதாலயத்தை அடைந்ததும் ஷாஹீன் பலவந்தமாகக் கொண்டு வந்ததாகப் பறை சாற்றினாள். சாப்பாட்டின்போது நொண்டி அத்தை விலைவாசி உயர்வு என்ற பல்லவியை ஆரம்பித்து விடக் கூடாதே என்ற முன்னெச்சரிக்கை. சாந்த் அக்கா ரஜியாவின் அறையில் உட்கார்ந்து ஏதோ எழுதி எழுதி அழித்துக் கொண்டிருந்தாள். கஜலுக்குத் தடுமாற்றமாக இருந்தது. இவரை சாந்த் அக்கா என்று நினைப்பதா அல்லது அணையப் போகும் விண்மீனாகக் கருதுவதா? அவரது முகத்தில் ஒளிவிட்ட வண்ண அலைகளை யாரோ அழித்துவிட்டார்கள். அந்தச் சுருள் முடிகள் இப்போது செத்த பாம்புகளைப்போல் நீட்டிக் கொண்டிருந்தன. பிரகாசமான கன்னங்களில் கருநிறக் கறைகள் இருந்தன. யாரோ சாந்த் அக்காவை மஞ்சள் நீரில் நனைத்துவிட்டதுபோல் தெரிந்தது. அவள் வெகுநேரம் வரை சாந்த் அக்காவின் எதிரில் கொட்டாவி விட்டாள். கை கால்களை உதறினாள். ஆனால் அவள் தனது குனிந்த தலையை மேலே எடுக்கவே மறந்து விட்டாள். தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த ஃபவுசியா மிக அலட்சியமாக, பீபியின் சேலையில் பூத்தையல் வேலை செய்துகொண்டு இருந்தாள். பீபி, ரஜியா, நொண்டி அத்தை தத்தம் அறைகளில் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். கஜலும் ஃபவுசியாவுக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்தாள்.

“சாந்த் அக்காவின் மணமகன் எங்கே?” அவள் மெதுவாகக் கேட்டாள்.

“மணமகனா?” ஃபவுசியா, நொண்டி அத்தையைப்போல் மூக்கின் மேல் விரலை வைத்தாள். “சாந்த் அக்காவின் திருமணம் எங்கே நடந்தது?”

“சரி... ஏன்...?” கஜல் மனதுக்குள் மகிழ்ச்சி அடைந்தாள். சாந்த் அக்காவின் திருமணத்தில் சந்தனம் பூசி, மத்தளம் அடித்து, மணமகனின் காலணியைத் திருடும் ஆசை நிறைவேறி விடும்.

“தாத்தா இவருடைய திருமணத்தை ஒரு செம்மானுடன்தான் இனி நடத்துவார்” ஃபவுசியா சிரித்துவிட்டாள்.

அப்படியென்றால் இத்தனைநாள் சாந்த் அக்கா எங்கே இருந்தாள்? அவளுடைய அழகு எங்கே போய்விட்டது? அவள் தலைகுனிந்து எதற்காக உட்கார்ந்திருக்கிறாள்? இப்படிப் பல வினாக்கள் கஜலின் மூளையில் உதித்தன.

“சாந்த் அக்கா சஞ்சீவாவைத் தேடி அலைந்தாள். கட்சிப் பணிகளை விட்டுவிடுமாறும், பான்சாஹிபிடம் சொல்லி நல்ல வேலை வாங்கித் தருவதாகவும் அவனிடம் சொன்னாள். ஆனால் சஞ்சீவா கேட்கவில்லை; இறுதியில் அவன் ஒரு கடிதம் எழுதி விட்டான். பெரிய மனிதன் ஒருவனைத் திருமணம் செய்து கொண்டு இன்பமாக வாழுமாறு அறிவுரையும் அதில் வழங்கி னான். இதைப் படித்த சாந்த் அக்கா நோய்வாய்ப்பட்டாள். அவளுக்குச் சயரோகம் வந்துவிட்டது. இறுதியில் அப்பா அவரை பம்பாய் மருத்துவமனை ஒன்றிலிருந்து அழைத்து வந்திருக்கிறார். அப்பாவின் நண்பர் ஒருவர் வந்து சொன்ன தகவலின்பேரில் பீபி பலவந்தமாக அவரை அனுப்பி வைத்தார்.”

ஃபவுசியா தாழ்ந்த குரலில் எல்லாத்தகவலையும் சொல்லி விட்டாள். அவளுடைய வெறுப்பு, அவளுடைய இகழ்ச்சி அந்தக் குரலில் தெரிந்தது. கஜல் அவளுடைய வாய்க்கு அருகில் குனிந்து இந்தக் கிசுகிசுவைக் கேட்டாள். அவளுடைய இதயம் வேகமாகத் துடித்தது. நன்றாக அழுதுவிட வேண்டும் என்று மனம் விரும்பியது. சாந்த் அக்காவின் திருமணம் நடந்தால், பச்சைப்பட்டாடை தயாரிப்பதாக வேண்டுதலும் செய்துகொண்டாள்.

ஃபவுசியா மேல் துண்டைத் தனது மார்பின் மீது பரப்பி னாள். நிறைய விஷயங்களை மறைத்துவைத்திருப்பதுபோல்! கஜலும் இதை நம்பினாள். ஆனால் பச்சைப் பாவாடை நூறு முறை செத்தாலும் அவளுக்குக் கிடைக்காது. அதனால் அவள் அன்புடன் கூறினாள்.

“ஆம்; நாம் இருவரும் மருதாணி பூசி, பாட்டுப்பாடுவோம்!”

இன்று ஏனோ ஃபவுசியா அவளுடைய பேச்சை ஒப்புக் கொண்டாள். சேலையின் மேல் ஊசியும் நூலும் போட்டுவிட்டு, தோட்டத்தில் மலர்களைப் பொறுக்க ஓடினார்கள். ஆனால் இன்று ஏனோ அதுவும் அலுத்துவிட்டது. எனவே மேல் கூரையை நோக்கி ஓடினார்கள். பதின்மூன்று பதினான்கு வயது நிரம்பிய ஃபவுசியா இப்போது படிக்கட்டுகளில் ஏறினாள். அவளுடைய பளுவால் அதன் மரக்கட்டைகள் ஆடின. கஜலும் அவளைவிடக் குறைந் தவள் அல்ல. இருவரும் ஏதோ ஒரு சக்தியால் ஈர்க்கப்பட்டார்கள். இருவரும் ஒருவரையொருவர் முந்திச் செல்லும் முயற்சியில்

மேல்மட்டத்தை அடைந்தார்கள். அப்போதுதான் இங்கு ஏன் வந்தோம் என்பது புரிந்தது. ஃபவுசியா அங்கு சுவர்மீது உட்கார்ந்து கீழே இருந்த வேலைக்காரர்களின் இருப்பிடங்களை அலசினாள்.

"எப்போது நடக்கும் சாந்த் அக்காவின் திருமணம்?" கஜல் பரவி இருந்த வானத்தை வெகு தொலைவு வரை பார்த்துக் கொண்டே கேட்டாள்.

"உஷ், யார் அந்த அம்மாஞ்சி, என்னையே வெறித்துப் பார்க்கிறான்" ஃபவுசியா முகத்தைச் சுளித்தவாறு, மேல் துண்டை மார்பின்மீது சரி செய்தவாறு கஜலுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்—"இந்த நொண்டி அத்தை இருக்கிறார்களே, மிகவும் கெட்டவர்கள்.

"ஏன்? அவர் என்ன சொல்லிவிட்டார்?" இன்று ஃபவுசியாவின் ஒவ்வொரு பேச்சைக் கேட்கவும் கஜலுக்குத் திகைப்பாகவே இருந்தது.

"இனி எவனும் சாந்த் அக்காளைத் திருமணம் செய்து கொள்ள மாட்டான் என்கிறார்", ஃபவுசியா தயங்கித் தயங்கிச் சொன்னாள்.

"சீ, அவர் சொல்வதால் அப்படி நடந்துவிடுமா? அல்லாஹ்! அவர் திருமணம் எப்போதுமே நடக்கக் கூடாது!" கஜல் இந்த வசைமொழியை நொண்டி அத்தையிடமிருந்துதான் கற்றுக் கொண்டாள்.

"ஃபவுசியாவின் திருமணத்தை விரைவில் நடத்திவிடுங்கள் என்று அப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார்" இதைச் சொல்லும்போது ஃபவுசியாவின் முகம் சிவந்துவிட்டது. "ஹா, ஹா, ஹா." என்று கஜல் வாய்விட்டுப் பலமாகச் சிரித்தாள்.

"தாத்தாவும் அப்படித்தான்", ஃபவுசியா தடையின்றித் தன் பேச்சைத் தொடர்ந்தாள். "கவ்ஹர் பேகம் சரியாகவே சொல்கிறார். பெண்கள் நீரிலிருந்து வெளியே எடுத்த மீன்கள். ஒருநாள் வைத்திருந்தால் வீடு முழுவதும் துர்நாற்றம் பரவிவிடுமாம்..." ஃபவுசியாவின் பேச்சைக் கேட்டுக் கஜலுக்குச் சாந்த் அக்காவின் அழுகிவிட்ட மீன்போன்ற முகம் நினைவுக்கு வந்தது. அவள் மௌனமாகிவிட்டாள்.

பிறகு ஃபவுசியா கஜலுக்குப் பக்கத்தில் இன்னும் நெருங்கி வந்தாள். அவளுடைய கைகளைத் தன் குளிர்ந்த கைகளில் எடுத்துக்கொண்டு தனக்கு மாப்பிள்ளையாக வரப்போகிறவனின் குணங்கள், குறைகள் எப்படி இருக்க வேண்டும் என்பதை விளக்கினாள். இப்படித்தன் மனதில் இருந்ததை வெளிப் படுத்தியதால் ஃபவுசியாவின் தலையிலிருந்த பெரும் சுமை கஜலின் இதயத்தில் போய் விழுந்தது. கஜலைவிட இரண்டு மாதம்

மூத்தவள் அவள். இருந்தாலும் இந்த உலகைப் பற்றிக் கஜல் இதுவரை எதுவும் நினைத்ததில்லை; ஆனால் ஃபவுசியா எத்தனை காலமாக இதைப் பற்றியே சிந்தனை செய்கிறாள். தனது வீடு, கணவனின் அன்பு, குழந்தைகளின் எண்ணிக்கை இவற்றைப் பற்றித் திட்டவட்டமாக முடிவு செய்திருக்கிறாள். தன்னுடைய திருமணம் நடக்குமா என்பதைப் பற்றிக் கஜல் இதுவரை எண்ண மிடவில்லை. அதிகமாக அடக்கி வைக்கப்படும் பெண்களும் மீனைப் போலவே அழுகிவிடுகிறார்கள் என்பதை அப்பா நன்றாகவே அறிந்திருப்பார்.

அவர்கள் இருவரும் கீழே இறங்கி வந்தனர். கஜலின் கண்களில் புதிய புதிய வண்ணங்கள் தோன்றின. சாந்த் அக்காவின் சோகமான முகத்தை மறந்துவிட்டாள். முற்றத்தில் தானியத்தைச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்த வேலைக்காரிகள், நொண்டி அத்தை, உலகச் செய்திகளை அறியாமல் ஆசனத்தில் உட்கார்ந்து இருக்கும் பீபி எல்லாரும் அவளுடைய கண்களில் மங்கலடைந்தார்கள். அவள் நிலை தவறித் தடுமாற்றம் கண்டாள். சுவர்களும், கதவுகளும் மது மயக்கத்தில் இருப்பதுபோல் தெரிந்தன.

"கஜ்ஜூ", இங்கே வா", சாந்த் அக்கா பலவீனமான குரலில் அழைத்தாள்.

"உஷ், அவளிடம் போகாதே, சயரோகம்", நொண்டி அத்தை மெதுவாகச் சொன்னாள். ஆனால் கஜல் பற்களை இளித்தவாறு அவளிடம் ஓடிச் சென்றாள். தனது துடிப்பால் அவரது முகத்தில் கீறல் ஏதும் ஏற்பட்டுவிடக்கூடாது என்று எச்சரிக்கையும் கொண்டிருந்தாள்.

"நீ குழுவுக்குப் போகிறாயா?"

"இல்லை" கஜல் தலையசைத்து மறுப்புத் தெரிவித்தாள். "தங்களுடன் ஒன்று இரண்டு முறை போனேனே, அதுதான்."

"சரி, இன்று போய்வா- ஆனால் தனியாகப் போக வேண்டும். இந்தக் கடிதத்தை பான் சாஹிபுக்குக் கொடுத்துவிட்டு, இன்றே அப்பாவுக்கு அனுப்பும்படி சொல்லிவிட்டுவா.." அவள் இங்கும் அங்கும் பார்த்துவிட்டுக் கடிதத்தை கஜலின் உள்ளங்கையில் திணித்து ஒரு ரூபாய் நோட்டும் வைத்துவிட்டாள். சாந்தின் ஆணையை நிறைவேற்றுவது கஜலின் முதல் கடமையாகிவிட்டதே. ஆனால் தனியாகக் கலாச்சாரக் குழுவுக்குச் செல்வதும் சாதாரணமான விஷயம் அல்ல. இந்த ரகசியத்தில் ஷாஹீனையும் இணைக்க முடியாது. இது ரஜியா மாமிக்குத் தெரிந்துவிட்டால், சாந்த் அக்காவைப் படாதபாடு படுத்திவிடுவாள். இந்த வீட்டில் இப்போது யாருமே சாந்த் அக்காவிடம் அன்பு செலுத்தவில்லை என்பது கஜலுக்கு நன்றாகப் புரிந்தது.

இறுதியில் மிக்க துணிவுடன் வீட்டுக்குச் செல்வதாகச் சொல்லிவிட்டுக் குதிரை வண்டியை வரவழைத்தாள். குழு அலுவலகத்தில் ஐந்து நிமிடங்கள் காத்திருக்கச் சொல்லிவிட்டு உள்ளே சென்றாள்.

எத்தனையோ வேலைக்காரர்கள், எழுத்தாளர்களுக்குப் பதில் சொல்லிவிட்டு 'நுழைவு அனுமதி' பெற்றாள். அவளைப் பார்த்தும் பான்சாஹிப் எழுந்து நின்றார். தனது வழுக்கைத் தலையில் முடியைத் தேடியவாறு புன்முறுவல் செய்தார்.

"நீங்கள் வளர்ந்து விட்டீர்கள். உண்மையிலேயே 'கஜல்' ஆகிவிட்டீர்கள்."

அவர் சிரித்தார். கஜலுக்கும் சிரிப்பு வந்தது, என்றாலும் பான் சாஹிபின் பார்வை அவளுக்கு அச்சமூட்டியது.

பிறகு அவர் ஐஸ்கிரீம் கொண்டுவரச் சொன்னார். 'சான்ட்விச்' வரவழைத்தார். பிஸ்கட், கேக், பால் எல்லாம் வந்தன. ஐந்து நிமிடங்களுக்குப் பதிலாக ஒரு மணிநேரம் ஆகிவிட்டது. சாந்தின் கடிதத்தை அவர் திறந்து படிக்காமலேயே மேசையினுள் வைத்துவிட்டார். பிறகு புரிந்துகொள்ளாத ஒரு செய்யுளைப் படிப்பதுபோல் கஜலைப் பாாத்துப் பார்த்து முறுவலித்தார். மிகவும் சிரமத்துடன் அவரிடமிருந்து விடைபெற்றபோது, சாந்த் அக்காவுக்கு என்ன பதில் சொல்வது என்று கேட்டாள். பான் சாஹிப் குழாயைப் பற்ற வைத்தாவறு கூறினார்:

"சஞ்சீவா சிறையில் இருந்தால் கடிதத்தைச் சேர்ப்பிக்க முயற்சி செய்யலாம். அவன்தான் தலைமறைவாகிவிட்டானே!"

கஜல் தனது வீட்டிற்குத் திரும்பி வந்தபோது, அப்பாவும் சாயாவும் கதவை மூடிக்கொண்டு தூங்கப் போய்விட்டார்கள். அயாஸ் மண்ணெண்ணெய் விளக்கை எதிரில் வைத்துக்கொண்டு தூக்கக்கலக்கத்தில் இருந்தான். தன்னுடைய குட்டு வெளிப்பட்டு விடக்கூடாதே என்று தொழுகையை முடித்துவிட்டு, துடிக்கும் இதயத்துடன் கட்டிலில போய் உட்கார்ந்தாள். பான் மாமாவின் வழுக்கைத் தலை அவளுக்கு முன்னால் பிரகாசித்துக் கொண் டிருந்தது. ஐஸ்கிரீம் ஏப்பம் இதுவரை தொடர்ந்து வந்தது. சாந்த் அக்காவின் எந்த நரம்பை ஹுமாயூன் தொட்டுவிட்டானோ, அன்று முதல் சாந்த் அக்கா அவனை மறந்துவிட்டாள் என்று கஜல் நினைவுபடுத்திக் கொண்டாள். இல்லாவிட்டால் இதுவரை அவளும் சாந்த் அக்காவைப்போல் நூற்றுக்கணக்கான நாடகங்களில் நடித்து இருப்பாள்.

மறுநாள் அவள் பொம்மையின முடியைச் சரிசெய்து கொண்டிருந்தபோது வெளியே கார் வந்து நிற்கும் ஒலி கேட்டது.

"இன்று பீபி எதற்காக வந்திருக்கிறார்?" அவள் வெளியே

சென்று அவரை வரவேற்க நினைத்தாள். ஆனால் தயங்கி நின்றுவிட்டாள். அம்மாவைப்போலவே திரை வழியே வெளியே பார்த்தாள்.

பான்சாஹிப் அப்பாவிடம் பேசிக்கொண்டிருந்தாள். 'பாரத் கலா மண்டல்' மீண்டுமொருமுறை கஜலைத் தனது நாடகங்களில் நடிக்கும் வாய்ப்புத் தர விரும்புகிறது என்றும், அவருடைய பாது காப்பில் கஜல் இருப்பாள் என்றும் அவர் உறுதி தந்தார்.

உடனடியாக எல்லாத் தடைகளையும் கடந்து ஓடிச்சென்று, பான் மாமாவைத் தழுவிக்கொள்ள வேண்டும் என்று அவள் மனம் விரும்பியது. ஆனால் அப்பா எதிரில் இருக்கிறாரே என்று தயங்கி நின்றாள்.

குருடனுக்கு என்ன வேண்டும், இரண்டு கண்கள்தானே? அப்பாவும் மகிழ்ச்சியை மறைத்தவாறு புன்னகை பூத்தார். அத்துடன் சாக்குப் போக்குகளும் சொல்லிப் பிகு செய்தார். "தங்கள் ஆணை என்னைக் கட்டுப்படுத்திவிட்டது. இல்லா விட்டால் எங்கள் முர்ஷிதுகள் குடும்பங்களில் பெண்களைக் கடுமையான பர்தாவில் வைத்திருப்போம்..."

பான் சாஹிப் தமது உடைகளில் என்ன நறுமணம் பூசி இருந்தாரோ, அறையே பூஞ்சோலையாகிவிட்டது. பான் சாஹிப் கம்பீரமாக வீற்றிருந்தார். அவரது வழுக்கைத் தலையில், அந்த அறையின் கருமையான கூரை தெளிவாகக் கஜலுக்குத் தெரிந்தது.

சாந்த் அக்கா இந்த வழுக்கைத் தலையை எள்ளி நகையாடுவது உண்டு. சாந்த் அக்கா சிறிதும் கருணையில்லாதவள். ரியாஜ் தமன்னாயி எனுமொரு கவிஞன் அவரது அழகைப் பாராட்டிக் கவிதைகள் எழுதி வாசித்துக் காட்டுவார். இவள் அதைக் கேலிசெய்வாள். பிறகு கவிதாயலத்தின் அந்நாட்களும் கஜலுக்கு நினைவு வந்தன. தன் கருநிற முகத்தின் மீது கருநிற முடியைப் பரப்பியவாறு ஏதேனுமொரு அறையில் உட்கார்ந்து சஞ்சீவா அலட்சியமாகச் சிகரெட் புகைப்பான். சாந்த் அக்கா அவனைச் சுற்றிச் சுற்றி வட்டமிடுவாள். ஒருமுறை சஞ்சீவாவுக்குப் பின்னால் வந்து, அவன் கழுத்தில் கையை மாலையாகப் போட்டபோது சஞ்சீவா அவளைத் தனது கைகளால் விலக்கி விட்டான்.

"சாந்த்! நீங்கள் என்னுடன் இப்படி எவ்வளவு தூரம் வரமுடியும் என்பதை முதலில் நன்றாகச் சிந்தனை செய்யுங்கள்."

கஜல் எதிரில் இருந்ததையும் கவனிக்காமல், சாந்த் சஞ்சீவாவின் தலைமுடியை முத்தமிட்டவாறு கூறினாள்.

"நீங்கள் எதிரில் இருந்தால் நான் எதையும் சிந்திப்பதில்லை. எது நடந்தாலும் நடக்கட்டும்!"

சாந்த் அக்காவுக்கு அந்தக் கருநிறப் பிசாசு எப்படிப் பிடித்ததோ? அவன் அவரைச் சிறிதும் மதிக்கவில்லை. ஆனால் பான் மாமா இப்பொழுதும் எத்தனை வசீகரமாக, எத்தனை நயமும் பண்பும் உள்ளவராக இருக்கிறார்.

அவருடைய பெருமையை ஹுமாயூனும் கஜலும் காலம் கழித்தே உணர்ந்தார்கள். கஜலை அவர் தமது கலைக் குழுவில் அங்கத்தினராக்கி, சாந்தை தீச்சுவாலைகளில் புரளச் செய்து விட்டார். இதைத்தவிர பான் சாஹிப், வீட்டு வாடகை கொடுக் காததால் பிறப்பிக்கப்பட்ட நீதிமன்ற ஆணையை நிறுத்தி வைத்தார். ஹுமாயூனுக்குப் பதவி உயர்வு வாங்கித் தருவதாகவும் வாக்களித்தார். அலீப்லைலாவில் ஹுமாயூனின் பங்கை அவரது மாற்றாந்தாயின் சகோதரர்களிடமிருந்து வாங்கித்தர ஏற்பாடுகள் செய்வதாகவும் சொன்னார்.

கஜலுக்கோ கொண்டாட்டமாகிவிட்டது. அவள் பான் சாஹிபின் வாகனத்தில் எல்லா இடங்களுக்கும் போய்வந்தாள். கலைக்குழுவின் எல்லா அங்கத்தினர்களும் அவளுடைய முக்கியத் துவத்தை உணர்ந்தார்கள்.

பில்கிராமியும் அவளைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தான். அவனது ஈரானிய அழகு அவனுக்குப் பெண்களிடையே ஒரு தனி மதிப்பைத் தந்தது. பில்கிராமியை ஒரு திரைப்பட இயக்குநர் பார்த்துவிட்டால் பம்பாய்க்கு அடுத்த விமானத்திலேயே அழைத்துச் சென்று விடுவார் என்று ஒவ்வொரு பெண்ணும் நம்பினாள். அதனால் வருங்கால அசோக்குமாரான அவனுடன் நெருங்கிய உறவு வைத்துக்கொள்ள ஒவ்வொருத்தியும் முயன்றாள். பில்கிராமியின் தங்க நிற முடி, சிவந்த மேனி, அழகான உடல்கட்டு ஆகியவற்றைக் காணும் பெண்கள் அமைதி இழந்தார்கள். ஆனால் கஜல் என்றுமே அவன் இருக்கும் திசையைத் திரும்பிப் பார்க்க வில்லை. ஏனெனில் அவன் பெரிய அயோக்கியன். அவனிட மிருந்து தப்பி இரு என்று பான் மாமா சொல்லியிருந்தார். அதனால் அவனுடைய நிழலும் தன் மீது படக்கூடாதென்று அவள் எச்சரிக்கையாக இருந்தாள். பான் மாமாவின் ஆணைக்குக் கீழ்ப்படிவது அவளுடைய கடமையன்றோ? அவளது தந்தையும் அவருக்கு நன்றிக்கடன் செலுத்த வேண்டும். பான் மாமா பல பரிசுகளைக் கஜலுக்கு அனுப்பினார். ஆடைகள், மேலாடைகள், தங்கப் பதக்கம், புதிய நாகரிகமான காலணிகள் என்று அனுப்பிக் கொண்டே இருந்தார்.

பிறகு ஒருமுறை சேலையை அணியுமாறு பான் மாமா ஆலோசனை கூறினார். அத்துடன் ஐந்து சேலைகளும் கொண்டு வந்துவிட்டார். இத்தகைய விலையுயர்ந்த நேர்த்தியான சேலை

களைச் சாந்த் அக்காவும் பார்த்திருக்க முடியாது. அத்துடன் உதட்டுச்சாயம், பவுடர், ஒப்பனைச் சாமான்கள் எல்லாமே வந்தன. இந்தப் பொருட்களை எங்கே எப்படிப் பயன்படுத்துவது என்பதும் கஜலுக்குத் தெரியவில்லை.

எப்பொழுதேனும் ஒருநாள் படத்திற்கு அழைத்துப்போகப் பான் மாமா வருவார். அப்பா பயந்தவாறே நீ போகக்கூடாது என்று கஜலிடம் சொல்லுவார். ஆனால் பான் மாமாவுக்கு எதிரில் தானே சீக்கிரம் வருமாறு கஜலைத் துரிதப்படுத்துவார். ஒருமுறை பான் மாமா அவளைத் தன் வீட்டுக்கும் பலவந்தமாக அழைத்துச் சென்றார்.

அது பங்களாவா அல்லது மாளிகையா என்பது கஜலுக்குப் புரியவில்லை. இத்தனை அழகான வீட்டை இதற்கு முன்னால் அவள் பார்த்ததில்லை. ஆனால் அந்த மாளிகையில் பணியாட் களைத் தவிர குடும்பத்தினர் எவரும் இல்லை. பான் சாஹிபுக்கும் அவருடைய மனைவிக்கும் ஒத்துவரவில்லை என்றும், அவர் தனியாக வேறொரு வீட்டில் தனது மூன்று குழந்தைகளுடன் வசிக்கிறார் என்பதும் தெரிந்தது. சாந்த் அக்காவின் மருத்துவக் கல்லூரியில் அவரும் ஒரு விரிவுரையாளராம். மூத்த பெண்ணும் அதே கல்லூரியில் படிக்கிறாள். ஒரு பையன்—இப்போது ஷாஹீனின் நெருங்கிய நண்பனாக இருக்கிறான். பான் சாஹிபைப் பற்றிப் பல கதைகளைக் கஜல் சாந்த் மூலம் கேட்டிருந்தாள். இத்தனை நல்ல அருமையான மனிதரை அவரது மனைவி வெறுக்கிறாரா..! சாந்த் அக்காவுடன் பான் சாஹிப் வெளியில் செல்வதே இந்த ஊடலுக்குக் காரணம் என்று ஒருமுறை ஷாஹீன் சொல்யிருக்கிறான்.

'கிழட்டுக் குரங்குக்குப் பச்சைக் கனிகள் மிகவும் பிடிக்கும்!' என்று அவரது மனைவி விமர்சனம் செய்தாளாம். இத்தகைய பண்புள்ள மனிதரை—தாராள குணம் கொண்டவரை ஏன் விட்டு விலகிவிட்டீர்கள், உங்களுக்கு வேறு என்ன வேண்டும் என்று கஜலுக்கு கேட்கத் தோன்றியது. அவரிடம் செல்வதற்காக ஒருநாள் அவள் தயாராகிவிட்டாள். ஆனால் தன் சார்பில் பேசினால் அவளுடைய கோபம் மேலும் அதிகரிக்கும் என்று பான் மாமா தடுத்துவிட்டார்.

இப்போது கஜலின் நேரத்தின் பெரும்பகுதி பான் மாமாவின் வீட்டிலேயே கழிந்தது. மாலைத் தேநீரை அவள் அங்கேயே குடித்தாள். அலுவலகத்திலிருந்து ஹுமாயூனும் நேராக அங்கே வந்துவிடுவான். பான்சாஹிபுக்கு எண்ணெய் தடவி மசாஜ் செய்வான். ஹுமாயூனின் அப்பாவுக்கு எதிரில் மக்கள் தலை வணங்கினார்கள். அவருடைய கைகளை எடுத்துக் கண்களில்

ஒற்றிக் கொள்வார்கள். அதனால் அவர்களுடைய கண்கள் ஒளி பெற்றுவிடும். ஏதோ ஒரு பேய் இந்த மாந்திரிக்ச் சக்தியை முறியடித்து விட்டது. அதுவே 'அலீப் லைலா'வின் இன்பமான வாழ்விலிருந்து வெளியேற்றிப் பேய் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிட்டது என்று ஹுமாயூன் நம்பினான். இங்கும் ஓர் இறைவனின் ஆட்சி நடந்தது. அதற்கு முன்னால் தலை வணங்க வேண்டும். அவரது கையின் பலனால் பதினான்கு தட்டுகளும் ஒளிபெற்றுவிடும்.

கஜல் இப்போது சமையல் வேலைகளும் செய்து வந்தாள். பான் மாமாவுக்காகத் தேநீர் தயாரிப்பாள். அவருடைய ஒழுக்கங் கெட்ட கிழட்டு நண்பர்களை உபசரிப்பாள். ஒருமுறை ஒரு நண்பர் கஜலை அவர் வீட்டில் பார்த்து பான் சாஹிபிடம் கேட்டார்.

"உங்கள் வீட்டுக்குப் புதிய கார் வந்துவிட்டதா?"

"இன்னும் இல்லை," அவர் அமைதியாகச் சிகரெட் பற்ற வைத்தார். "இந்த விஷயத்தில் அவசரப்படக் கூடாது."

"எந்தக் கார் மாமா?" கஜல் ஆர்வத்துடன் வினவினாள்.

"அந்தப் பழைய வண்டி?" அந்த நண்பர் கஜல் அங்கு இருப் பதையும் கவலைப்படாமல் வினா தொடுத்தார்.

"அது இப்போது மிகவும் பழையதாகிவிட்டது..."

"நோயாளியாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன்..."

"ஆமாம். ஒரு கம்யூனிஸ்ட் பயலின் காதலில்..."

பான் மாமா அவளை ஏதோ வேலையாக உள்ளே அனுப்பி விட்டார். அவள் கட்டிலின் ஓரத்தில் உட்கார்ந்தவாறு யோசனை செய்தாள். இங்கே சாந்த் அக்காவின் பேச்சு நடக்கிறது. அவள் இத்தனை அறிவில்லாத பெண்ணா? இந்தப் பான் சாஹிப் எத்தனை கொடியவர். எதிரில் சாந்த் அக்காவை எப்படிப் புகழ்ந்து பேசுகிறார். இன்று அவரை 'பழைய வண்டி'யாக்கிவிட்டார். இப்போது எந்தப் புதிய வண்டியை வாங்குகிறாராம்?

இனந்தெரியாத பயம் நான்கு திசைகளிலிருந்தும் அவளைச் சூழ்ந்து கொண்டது. இந்த அந்நியர்களுடன் நமக்கு என்ன உறவு என்று பீபி சரியாகவே சொல்கிறார். நான் இங்கே எதற்காக வந்தேன். ஏழைப் பெண் இவள்—நல்ல உணவு கிடைப்பதால் இங்கு வந்துவிடுகிறாள் என்று மக்கள் நினைப்பார்கள். பான் சாஹிப் இத்தனை அன்புடன் அழைக்கும்போது எவ்வாறு மறுக்க முடியும். அப்பாவின் எத்தனை காரியங்களைச் செய்து முடித் திருக்கிறார். எத்தனை நூறு ரூபாய்களை அப்பாவுக்கு இதுவரை கடனாகக் கொடுத்திருக்கிறார். அதனால் அவள் அவர் மீது மதிப்பு வைத்திருக்கிறாள். பான் மாமாவின் ஒவ்வொரு ஆணையையும் நிறைவேற்றுவது தனது கடமை என்று நினைக்கிறாள். அவருடைய

வெற்றுரைகளைக் கேட்டு வேண்டுமென்றே சிரிக்கிறாள். அவர் மயக்கத்தில் தள்ளாடியவாறு பிதற்றும்போதும் அவருடன் வேடிக்கையாகப் பேசுகிறாள். சில சமயங்களில் இங்கிருந்து ஓடிவிட வேண்டும் என்று அவளுடைய மனம் விரும்பும். அவர் கஜலை மிகவும துன்புறுத்துவார். சாப்பிடும்போது அவளுடைய தட்டைப் பிடுங்கிக் கொள்வார். பின்புறமாக வந்து அவளுடைய கண்களை மூடுவார். ஒருமுறை விளையாட்டுக்காக அவளைத் தூக்கிக் கொண்டதும் அவள் கலவரமடைந்து விட்டாள். எப்படியோ மாமாவைத் தள்ளி விட்டுப் பயத்துடன் அறையை விட்டு ஒடி வெளி வாயிலை அடைந்தாள்.

அன்று முதல் பான் மாமாவிடம் அவளுக்குப் பயம் வந்து விட்டது. இத்தனை நல்ல மனிதர் வேறொருவராக மாறிவிட்டது போல், அந்நியராக, பயங்கர முகம் கொண்டவராக இருந்தார். பிறகு பல நாட்கள் வரை அவள் பான்சாஹிபின் வீட்டுக்குப் போகவில்லை; ஒருநாள் அவரே வந்து முறையிட்டார்.

“கஜல் என்னுடன் கோபமாக இருக்கிறார். அதனால் நானும் சாப்பிடுவதில்லை—”

“இல்லை மாமா. எனக்கு உங்களிடத்தில் என்ன கோபம்?” அவள் தனது மனதிற்குள் வெட்கமடைந்தாள். மாமா எவ்வளவு நல்லவர். அவளை நன்றாகக் கவனித்துக் கொள்கிறார். ‘அடியே கஜல்! பாழடைந்த மூஞ்சி! உனக்கு யார் இந்த அளவுக்கு முக்கியத்துவம் கொடுத்தார்கள். நீ கோபப்பட்டால் அதற்காக தன் உணவை யார்விட்டுவிட முடியும்? நீ பெரிதும் கர்வம் கொள்கிறாயே! பார்த்தாயா சாந்த் அக்காவின் முடிவை? இவ்வளவு ஆணவம் கொள்ளாதே, துரதிருஷ்டக்கட்டையே...’

அவள் வெகுநேரம் வரை தன்னையே கடிந்து கொண்டாள். அவள் இதயம் நிமிர்ந்து அவளைப் பார்த்தபோதும், அனாவசிய மான எண்ணங்களை வெளியிட்ட போதும், கஜல் அதைச் சிந்தனைகளால் நசுக்கினாள். பிறகு சுமை குறைந்துவிட்டது. அப்பாவிடம் உதைபட்டுப் பிறகு திருந்துவது போல்!

சிந்தனையிலேயே அவள் தன்னை மிகப் பெரியவளாகப் பார்த்தாள். சாந்த் அக்காவைப்போல் உயரமான, முழுமையான பெண்ணாக—முக்கியத்துவம வாய்ந்த மங்கையாக. மக்கள் அவளுடைய கலைக்கு மதிப்புத் தருகிறார்கள். அவள் இல்லாத குறையை உணருகிறார்கள். இது எத்தகைய சிறந்த நிகழ்ச்சி? உலகத்தின் மிகப் பெரிய நம்ப முடியாத சம்பவம். அவள் இதற்காக இந்தப் பான் மாமாவுக்கு எப்படி நன்றி தெரிவிப்பது? அவரை எப்படிப் போற்றுவது? கஜலைப்போன்ற ஒன்றுமில்லாத பெண்ணுக்கு இவ்வளவு முக்கியத்துவம் தருகிறாரே!

இப்போது அவளுக்கும் சாந்த் அக்காவைப்போல் சமுதாயத்தில் பழகும் நாகரிக முறை வந்துவிட்டது. வாயால் உதித் தேநீர் சாப்பிடுவதை அவள் விட்டுவிட்டாள். எதிரில் எத்தனை சுவையான பொருள் இருந்தாலும் தொடுவதில்லை. ஒரு பொருள் முடியும் வரை வேறொரு பொருளை எடுப்பதில்லை. எல்லாரும் சாப்பிட்டு முடிந்ததும் அவளும் எலும்பு உறிஞ்சுவதை விட்டு விட்டு எழுந்துவிடுவாள்.

இப்போது பல நாடகங்களில் அவள் சேலை கட்டிக்கொள்ள வேண்டும். ஆனால் சேலை அணிவது மிகவும் கடினமான காரியமாகும். எவ்வளவு சுற்றிச் சுற்றினாலும் துணி எஞ்சி நிற்கும். இங்கும் அவளுக்குப் பான் சாஹிப் உதவி செய்தார். அவர் ஒரு வணிகர் மட்டுமல்ல; பாரத் கலைக்குழுவின் தலைவரும்கூட. இதைத் தவிர நாடகம் எழுதுவது முதல் ஒப்பனையில் புத்தம்புதிய முறைகள் வரை அவருக்கு எல்லாமே தெரியும். புதிய முறையில் உடலை ஒட்டிக்கொள்வதுபோல் சேலைகட்டும் கலையை அவரே கஜலுக்கு சொல்லிக் கொடுத்தார்.

சாவதற்கு முன்னர் 'அல்லாஹ் எங்கு இருக்கிறான், என் பேச்சை அவன் கேட்பதில்லையே!' என்று சொல்வார்கள். அம்மாவுக்குப் பிறகு ஆபத்து நேரங்களில் அவளும் வானத்தை நோக்கி அதன் பரப்பில் அல்லாஹ்வைத் தேடுவாள். அல்லாஹ் எங்குமே அவளுக்குத் தென்படவில்லை. அவர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறாரோ? யாருடைய முறையீடும் அவருக்குக் கேட்பதில்லையே. ஆனால் அல்லாஹ் அவளுடைய குறையை இப்போது கேட்டுவிட்டான். ஒவ்வொரு தொழுகையின்போதும் சஜ்தாவில் (தரை மீது நெற்றி வைத்தல்) அவள் அழுது தொழுகைக் கம்பளத்தைக் கண்ணீரால் நனைத்து விடுவாள். அல்லாஹ்விடம் அவள் என்ன வேண்டினாள்? அவளுடைய உதடுகள் மட்டுமே அசையும். கைகள் நீண்டிருக்கும். முகம் கண்ணீரால் நனைந்து விடும். அல்லாஹ்விடம் ஏதாவது சொல்ல வேண்டுமா? என்ன? ஆனால் தான் விரும்புவதுதான் எதை? முறைப்படி தனது விருப்பங்களின் அட்டவணையை நீட்ட வேண்டுமா? கஜல் இதையே இதுவரை முடிவு செய்யவில்லை. ஒருமுறை அப்பாவின் பேச்சுகளால் வருத்தமடைந்து தனது கட்டிலில் புரண்ட சமயம், யாரிடம் தனது துக்கத்தைச் சொல்வது என்று நினைத்து அழுகை வந்தது. இந்த உலகில் அவளுக்காக யார் இருக்கிறார்கள்? பிறகு ஏதோ ஒரு பயத்தால் அவள் எழுந்து உட்கார்ந்தாள். இருளில் நான்கு திசைகளிலும் நோக்கினாள். அப்பாவும் சாயாவும் வேறொரு அறையில் இருந்தார்கள். அவளுக்கு அருகில் வேறொரு கட்டிலில் அயாஸ் ஆழ்ந்த நித்திரையில் இருந்தான். அவனுடைய

முகம் எதிர்த்திசையில் இருந்தது. எல்லாருமே அவளைக் கண்டு முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள். இந்த இருண்ட காட்டில்— ஆழ்ந்த மௌனத்தில், கரையில்லாத சமுத்திரத்தில், அவள் தனியாக இருக்கிறாள். அவள் இதயத்தின்மீது ஏதோ சுமையான கல் வந்து விழுந்தது. அவள் தனியாக இருப்பதைக் கண்டு பூதங்களின் கூட்டங்கள் எதிர்த்திசையிலிருந்து வருகின்றன. அச்சந்தரும் விலங்குகள் அவளைப் பார்த்துக் கொண்டு நிற்கின்றன. ஒரு கருமையான சாத்தான், சிவப்பான நாக்கை நீட்டியவாறு அவளை நோக்கி வருகிறது. அதனுடைய கண்களில் தீச்சுவாலைகள் எரிகின்றன. கத்தியைப்போன்ற நகங்கள் வளைந்திருக்கின்றன. இல்லை, இல்லை... அப்பா... அயாஸ் அண்ணா... என்னைக் காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்... அவள் கூக்குரல் எழுப்பியவாறு மயக்கமடைந்தாள். எல்லாருமே எழுந்து வந்தார்கள். அன்று முதல் ஒரு புதிய ஆபத்து அவளைச் சூழ்ந்து கொண்டது. இரண்டு மூன்று நாட்களுக்கு ஒருமுறை அவள் பயந்து கூச்சலிடுவது வழக்கமாகிவிட்டது. அவள் தனியாக இருக்கும் போது பயங்கரமான கண்களைக்கொண்ட சாத்தான்கள் அவளை நான்கு புறங்களிலிருந்தும் சூழ்ந்து கொள்ளும்.

“வியாழக்கிழமை அன்று மாலையும் இரவும் சந்திக்கும் நேரத்தில், குளித்துவிட்டு மொட்டைமாடியில் உலாவி இருப்பாள். ஏதோ ஒரு நிழல் தாக்கிவிட்டது” பீபி உறுதியாகச் சொன்னார்.

“நான் ஷாஹ் சாஹீபிடம் அழைத்துச் செல்கிறேன், ஒரே தாயத்தில் சரியாகிவிடும்” என்று நொண்டி அத்தை ஆறுதல் கூறினாள்.

அதற்குப் பிறகு எத்தனையோ மந்திரச் சீட்டுகளை நீரில் கரைத்துக் குடித்துவிட்டாள். ஆனால் அந்தப் பூதங்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே போனது.

அதனால் அவள் பான் மாமாவின் பங்களாவில் அதிக நேரத்தைக் கழித்தாள். ஆனால் கவிதாலயத்தில் இது யாருக்கும் பிடிக்கவில்லை.

ஒருநாள் ஃபவுசியா தனது நீளமான மூச்சைச் சுளித்தவாறு கேட்டாள்—“சீ, அந்தப் பாழாய்ப்போன கிழவனை மணமகனாக ஏற்றுக்கொண்டாயே, அவன், அப்பாவைவிட வயதில் பெரியவனாம்...”

ஃபவுசியாவின் தவறான அபிப்பிராயத்தை அறிந்து அவள் சிரித்தாள்; கோபப்படவும் செய்தாள். பான் சாஹிப் அவளுடைய மாமா அல்லவா? தன்னுடைய மாமாவுடன் பேசினால் அவர் வீட்டுக்குச் சென்றால் அது தவறுதானா? இவர்களுக்கு என்ன தெரியும்? பான் மாமாவுக்கும் அவளுக்கும் என்ன உறவு என்று...

அவர் அவளுடைய துன்பங்களைப் போக்கியவர்... அன்புச் செயல்களின், நன்றிகளின் சுமையை அவர் அவளுடைய தலை மேல் ஏற்றிவிட்டாரே!

ஆனால் வீட்டுக்கு வந்த பிறகு ஃபவுசியாவின் பேச்சை நினைத்து அவள் அழுதாள். அல்லாஹ்வே! மக்கள் எவ்வளவு பொறாமைக்காரர்கள். அவளுடைய எந்த மகிழ்ச்சியையும் சகித்துக் கொள்ள அவர்களால் முடிவதில்லை. அன்று தொழுகைக்குப் பிறகு பான் சாஹிபின் மனைவி திரும்பி வந்துவிட வேண்டும் என்று அவள் பிரார்த்தனை செய்தாள். இனி பான் சாஹிபின் வீட்டுக்குச் செல்வதை நிறுத்திவிட வேண்டும் என்று பலமுறை எண்ணமிட்டாள், ஆனால் தன் வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. அயாஸைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் இப்போது அவள்மீது அன்பு வைத்திருக்கிறார்கள். வாழ்நாள் முழுவதும் தாங்கள் இழைத்த கொடுமைகளுக்குத் தண்டம் செலுத்துவதுபோல், அப்பாவும் அன்பு பொழிகிறார். கேட்காமலேயே சாயா உணவு தருகிறாள். ஆனால் அயாஸைப் பீபியும் ஃபவுசியாவும் ஏதோ சொல்லித் தூண்டி விட்டார்கள். கஜல் வெளியே சுற்றுவதும், பான் மாமா வீட்டுக்குச் செல்வதும் அவனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவன் பலமுறை அவளைத் தடுத்தான். அடித்தான். வீட்டைவிட்டுத் தானும் வெளியேறுவதாகப் பயமுறுத்தினான். ஷஹ்ஜாதும் ஒருமுறை வீட்டைவிட்டு ஓடிச் சென்றவன் திரும்பியே வரவில்லை. அதனால் அயாஸின் அச்சுறுத்தலைக் கேட்டு அவள் பயந்துவிட்டாள். அதே நேரத்தில் ஃபவுசியாதான் அயாஸைத் தூண்டிவிட்டவள் என்பதும் அவளுக்குத் தெரியும். ஏனெனில் கஜல் மீது அவள் பொறாமை பாராட்டினாள். எல்லாருக்குமே அவள்மீது கோபம் இருந்தது. பான் வீட்டுக்குக் கஜல் செல்வது சாந்துக்குப் பிடிக்கவில்லை. அவள் தனது பலவீனமான குரலில் கஜலைப் பலமுறை அதட்டினாள். பானைச் சந்திக்காதே, அவன் நல்ல மனிதன் அல்ல என்று எச்சரிக்கவும் செய்தாள்.

'அட போங்கள் சாந்த் அக்கா...' அவள் தன் மனதிற்குள் சொல்லிக் கொண்டாள்.

"பானைவிட நல்ல மனிதர் யாரோ? அவரை எனக்குக் காட்டுங்கள். நீங்கள் சண்டைப்பிரியர். எல்லாருடனும் சண்டை போட்டீர்கள். இப்போது நான் என்ன செய்வது? பான் மாமா இல்லாமல் இருந்தால் இதுவரை என்னைக் கொத்துக்கறியாக்கி அப்பா காகங்களுக்குப் போட்டிருப்பார்."

பிறகு ஒருநாள் சாந்த் ஹுமாயூனுக்கு கடிதம் எழுதி, கஜலை பான் சாஹிப் வீட்டிற்கு அனுப்பாதீர்கள், இடர்வரும் என்று

எச்சரிக்கை செய்தாள். பானின் ஒழுக்கங்கெட்ட நடத்தைகளை அதில் விவரித்திருந்தாள். ஹுமாயூன் அந்தக் கடிதத்தையும் பானுக்குக் காட்டினான். பிறகு ஒருநாள் நொண்டி அத்தையும் வந்து மோதினாள். பிறகு வாஹித் ஹுசேனும் ரஷீதும் அறிவுரை சொல்ல வீட்டுக்கு வந்துவிட்டுப் போனார்கள்.

'இவர்கள் ஃபவுசியாவின் பழைய துணிகளையே கஜல் அணிய வேண்டும் என்று விரும்புகிறார்கள். பிச்சைக்காரியைப் போல் அவர்கள் எச்சிலைச் சாப்பிட்டுவிட்டுக் காலம் கழிக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். என் மாமனார் வீட்டுக்காரர்கள் என் எதிரிகள்' என்று ஹுமாயூன் கூறினான். இது உண்மைதான் என்பதைக் கஜலும் உணரவே செய்தாள். பதூல் உயிருடன் இருந்தபோதே ஹுமாயூன் அலீப் லைலா விலிருந்து விரட்டப்பட்டான். அப்போது பாட்டிக்குக் குழந்தை களின் எதிர்காலம் பற்றிக் கவலை பிறக்கவில்லை. இப்போது கஜல் இத்தனை சிரமத்துடன் உயர்வு பெறத் துவங்கிவிட்டாள் என்றதும் எல்லாருடைய மார்புகள் மீதும் பாம்புகள் ஓடத் தொடங்கி விட்டன...

# 18

கஜல் ஒருநாள் பாரத் கலைக்குழு அலுவலகத்தில் பான் மாமாவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தபோது பில்கிராமி வந்துவிட்டான். பில்கிராமி பான் சாஹிபின் நண்பன். பாரத் கலைக்குழுவின் எல்லா நாடகங்களிலும் சாந்துடன் நாயகனாக நடித்தவன். மிகவும் அழகானவன். உறுதி படைத்தவன். கலகலப்பாகப் பழகுகிறவன். கஜல் சிறுமியாக இருந்தபோது சாந்த் அக்காவுடன் வந்த போதெல்லாம், ஓர் அழகான பொம்மையைப் பார்ப்பதுபோல் பில்கிராமியைப் பார்த்திருக்கிறாள். பில்கிராமியின் நடிப்புப் புகழ் பம்பாய்வரை பரவி இருப்பதாக அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். மேடையில் சாந்த் அக்காவுடன் அவன் காட்சி தரும்போது திரைப்பட நடிகர்களான, தேவதை முகம்கொண்ட நசீமும்-பிரேம் அதீபும் வந்துவிட்டதுபோல் தோன்றும். ஆனால் சாந்த் கலைக் குழுவை விட்டு வெளியேறிய பிறகு வேறொரு பெண்ணுடன் நடிப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஒவ்வொரு மங்கையுடனும் மலர்ந்த முகத்துடனும் பேசுவது அவன் இயல்பு. குறிப்பாக, கஜலை சிறு குழந்தையைப்போல் மடியில் எடுத்துக் கொள்வான். ஓரிரு

முறை அவன் பான் சாஹிபிடம் கூறினான். 'இப்போது கஜலை உயர்ந்த குதிங்கால் கொண்ட காலணிகளை அணிவித்து என்னுடன் நாயகியாக்கி விடுங்கள்' என்று வற்புறுத்தினான். ஆனால் பான் சாஹிப் அதற்கு ஒப்புதல் அளிக்கவில்லை. பெண் களைப்போலவே ஆண்களும் பில்கிராமியைக் காதலிக்கிறார்கள். அவனுடைய காதலர்கள் பட்டியலில் அவன் அழகை விரும்பும் ஆண்களும் இருக்கிறார்கள் என்று பான் சாஹிப் கேள்விப் பட்டிருந்தார். ஒருமுறை சாந்துக்காகவே பான் சாஹிபுடன் மோதினான் என்பதைக் கஜல் அறிவாள். ஆனால் கஜலுக்கு இத்தகைய விஷயங்களில் அக்கறை ஏதும் இல்லை. அப்படியும் கலைக்குழுவில் அடிக்கடி பூசல்கள் கிளம்பும். நேற்று அந்தப் பெண் சுதிய்யாவின் காரணமாக வ்யலின் ரவிக்கும், ஒப்பனைக்காரர் ஷஆதத்துக்கும் இடையில் சண்டை நடந்தது. பிறகு யாரோ பில் கிராமிக்கும்-பான் சாஹிபிற்கும் இடையே இருந்த உறவு பற்றிக் கேலி செய்தார்கள். பில்கிராமிக்கு முகம் சிவந்துவிட்டது. பில் கிராமி ஒருநாள் சாந்தைப் பற்றி பான் சாஹிபிடம் ஏதோ சொல்லி விடவே, பான் சாஹிப் ஒவ்வொருவரையும் மிக அழுத்தமாகக் கண்டித்துவிட்டார். அப்படியும் பில்கிராமி எல்லாருடைய கண்களிலும் முள்போல் தைத்தான். எல்லாருமே அவனது அழகையும், அவனது புகழையும் கேட்டு பொறாமைப்பட்டார்கள். அவன் தனது பெற்றோருக்கு ஒரே மைந்தன். தந்தை அரச குடும்பத்தைச் சார்ந்தவர். அன்னை பாரசீக நாட்டவர். ஏதோ ஒரு கல்லூரியில் பாரசீக மொழியின் போதகராக இருக்கிறார். பில்கிராமியிடம் பாரசீக அழகும், அரச குடும்பத்தின் கம்பீரமும், ஆணவமும் இணைந்து இருந்தன. அன்னையின் அறிவுக் கூர்மையும், தந்தையின் இன்ப வெறியும் அவனது குருதியில் கலந்து விட்டன. ஜாகீர்தார் கல்லூரியில் மூன்றுமுறை பி.ஏ. படிப்பில் தோல்வி கண்ட பிறகு, மேல்படிப்பை மறந்து, நடிப்பு, இசை எனும் கலைத்துறைக்கு வந்துவிட்டான். ஹைதராபாத்தின் எல்லா இசை நிகழ்ச்சிகளிலும் பங்கு பெற்றான். உஸ்மானியா சர்வ கலாசாலை மாணவர்கள் சேர்ந்து நாடகங்கள் நடத்தியபோது பில்கிராமியே அதன் நாயகனாக விளங்கினான். அவனுடைய பச்சை வண்ணக் கண்களும், பொன்னிற முடியும், பளிச்சிடும் பாரசீக அழகும், கவர்ச்சியான குரலும், மாந்திரிகச் சக்தி பெற்றிருந்தன. கன்னி யரையும் திருமணமான பெண்களையும் அந்தச் சக்தி அவனுடைய காலடியில் கொண்டு வந்து வீழ்த்தியது. கஜலுடன் சேர்ந்து அவன் பாட்டுப்பாடும்போது அவனுடைய கம்பீரமான குரலில், கஜலின் மென்மையான குரல் தடுமாற்றம் கண்டு வழி தவறிவிடும். என்றாலும் அவன் கஜலை மிகவும் புகழ்ந்து பேசுவான். இன்று

பில்கிராமி வந்தபோது, தனியாக உட்கார்ந்திருந்த கஜலின் சோகத்தைப் பார்த்துவிட்டான்.

"நீங்கள் சில நாட்களாகவே கவலையுடன் காணப் படுகிறீர்கள்!" அவளை 'நீங்கள்' என்று பண்புடன் அழைக்கும் ஒரே மனிதன் இவன். இவனால் கஜலுக்குத் தற்பெருமை உணர்வு கிடைக்கும்.

"இல்லையே!" நீண்ட காலமாக அமுங்கி இருந்த பெருமூச்சு அவள் இதயத்திலிருந்து வெளிவந்ததும் அவளே திகைத்து விட்டாள். என்ன, அவளுடைய சோகம் இவ்வளவு முக்கிய மானதா? சிலரோ அவளை அடித்தும் மறந்து விடுகிறார்கள். ஆனால் பில்கிராமி அவளை எததனை உன்னிப்பாகக் கவனித்து வருகிறான்! கஜல் மெழுகுபோல் உருகிவிட்டாள்.

"நீங்கள் வருங்காலத்தைப் பற்றிக் கவலை கொண்டிருக் கிறீர்கள் போலும். உங்களைப்போன்ற அழகான நடிகையின் வருங்காலம் உண்மையாகவே சிறப்பாக அமைய வேண்டும்."

அவன் கஜலுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். 'அல்லாஹ்... இவ்வளவு கருணை காட்ட வேண்டாம். இத்தனை இதமான இனிமையான குரலில் பேச வேண்டாம். இனிமையின் நஞ்சு என் நரம்புகளை காயப்படுத்திவிடும்' என்று அவள் எப்படிச் சொல்ல முடியும்?

"மிக மிகச் சிறப்பாக அமைய வேண்டும்..." அவன் கஜலைப் பார்த்துப் பேசினான். "இதெல்லாம் பான் சாஹிபின் முட்டாள் தனம். உங்களைப் போன்ற நடிகை என்னுடன் இருந்தால் இது வரை புகழின் உச்சிக்கே போயிருப்பாள்!" பான் சாஹிபைக் குறை சொல்வது அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் இன்று அவளுடைய குரலுக்கு என்ன ஆகிவிட்டது? எந்தப் பேச்சும் வெளிவருவதில்லையே.

"உண்மையைக் கேட்டால், பான் சாஹிபுக்குத் தன் காதல் விளையாட்டுகளிலிருந்து விடுபட நேரம் கிடைப்பதில்லை. அதனால் கலைக்குழுவில் சிறப்பான முறையில் காரியங்கள் நடக்கவில்லை"

"இப்போது மார்ச் மாதத்தில் ஷௌகத் தானவி எழுதிய நாடகம்..." அவள் வாய் சற்றே அசைந்தது.

"இல்லை. இவர்கள் காதல் கேளிக்கைகளைத் தவிர வேறு வேலை எதுவும் செய்யமாட்டார்கள்." பில்கிராமி கஜலின் பேச்சைத் துண்டித்துவிட்டுச் சிகரெட் பற்றவைத்தான். கஜல் தலைகுனிந்தவாறு தனது கைப்பையின் நட்சத்திரங்களைத் திருகினாள்.

"பாவம், சாந்தைப் பான் சாஹிப் சின்னா பின்னமாக்கி

விட்டார். இப்போது உங்கள் முறை வந்து…”

பிறகு அவன் தன் பேச்சை முடிக்காமலேயே வேறு விஷயங் களைப் பேசினான்.

“ஹைதராபாத் ஆர்ட் சொசைட்டியினர் இந்த ஆண்டு தங்கள் நாடகக் குழுவுடன் பம்பாய்க்குச் செல்கிறார்கள்.”

ஆனால் கஜலின் மார்பில் கத்தி செருகப்பட்டுவிட்டது. ‘சாந்த் அக்காவைப் பான் கெடுத்துவிட்டான். இப்போது என் முறையா? அப்படியானால் உண்மையாகவே பான் என்னை விரும்பு கிறானா? அல்லாஹ்! இப்போது என்ன நடக்கும்?’

‘ஹூம், அதனால் என்ன? அங்கிருந்து எழுந்து ஓடிவிட வேண்டும்’ என்று அவள் மனம் விரும்பியது. பில்கிராமி அவளைப் பற்றிய எல்லா உண்மைகளும் அறிந்திருந்தான்.

“ஹைதராபாத் ஆர்ட் சொசைட்டிக்கே போய்விடலாம் என்று நான் நினைக்கிறேன். இங்கு எதிர்காலம் இல்லை” தன் முகத்தில் அசோக்குமாரின் சோகத்தை உருவாக்கிக் கொண்டான்.

“ஏன்?” கஜலை யாரோ கீழே தள்ளிவிட்டதுபோல் இருந்தது. பான் சாஹிபை விட்டு அவள் எங்கு போகமுடியும்? அவளுக்கு இந்த அளவு மதிப்பு யார் தருவார்கள்?

“என்ன செய்வது? இங்கு எங்களை யார் மதிக்கிறார்கள்?”

அவன் கஜலின் முகத்தைக் கவனமாக நோக்கினான்.

“ஆனால் எல்லாருமே உங்கள் நடிப்பைப் பாராட்டு கிறார்கள்” அவள் மெதுவாகக் கூறினாள்.

“மக்களின் கருத்துப் பற்றி எனக்குச் சிறிதும் அக்கறையில்லை. நான் இங்கு உண்மையில் உங்களுக்காகவே இருக்கிறேன்.”

எனக்காக… எனக்காக… எனக்காக… இத்தனை அழகான மனிதன்… இத்தனை பெரிய மனிதன்… இத்தனை புகழ்பெற்ற மனிதன்… எனக்காகக் கிடக்கிறானா..! சாந்த் முதல் ரஜியா மாமி வரை அவனுடைய ஒவ்வொரு அசைவைக் கண்டும் அமைதி இழக்கிறார்கள். இந்த அழகான இளவரசனுக்குப் பின்னால் மங்கையர் கையெழுத்து வாங்க ஓடுகிறார்கள். இத்தகைய நாயகன் எனக்காக..? அல்லாஹ்… இது என்ன விந்தை.. நான் மடிந்து விடுவேன். பில்கிராமியின் இந்த வாக்கியம் எத்தனை வண்ணங்கள் கொண்டது… மதிபோல் அது பிரகாசித்தது… வானத்திலிருந்து மாரியாகப் பொழிந்தது… அது கஜலை முழுவதுமாக நனைத்து விட்டது… இனி அவளிடம் என்ன இருக்கிறது, மறைத்துவைக்க, காப்பாற்றி வைக்க.. சளிப்பிடித்துவிட்டது என்ற சாக்கில் அவள் பலமுறை தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். பில்கிராமி அமைதியாக அவளுடைய கைரேகைகளைப் பார்ப்பதிலும், தனக்கு இழைக்கப்பட்ட அநீதிகளை விவரிப்பதிலும் நேரத்தைக்

கழித்தான். கலைக்குழுவின் எல்லாக் கலைஞர்களும் எங்கு சென்று விட்டார்கள்...? ஒரே பார்வையில் பறந்து கொண்டிருக்கும் குருவியின் இறக்கைகளை எண்ணிவிடும் திறமை கொண்டவர்கள் அவர்கள்! இன்று கஜலின் கை பில்கிராமியின் கையில் இருந்தது. ஆனால் அந்த முட்டாளுக்கு எதுவும் புரியவில்லை. வெறுப்புப் பாலைநிலத்தில் அலையும் தாகமுள்ள இந்தக் குருவி அன்பின் ஒரு சொட்டு நீருக்காகத் தவிக்கிறது. அவன் பேச்சைக்கேட்டு அவள் அனைத்தையும் பறிகொடுத்துவிட்டாள் என்பதை அவன் உணரவில்லை. அவளுடைய கை ரேகைகளைப் படிக்கும் சாக்கில் அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டிருக்கிறான். கடுமை யான வெப்பநிலை இருந்தபோதிலும், கடுங்குளிராக இருப்பது போல் அவள் நடுக்கம் கண்டாள். அவளுடைய கை வியர்வை யால் நனைந்துவிட்டது. அவளால் ஏதும் பேச முடியவில்லை. பில்கிராமி தனது சோதிடக் கலையின் திறமைகளைக் காட்டி வம்பளந்தான்.

"உங்கள் கை தனி மாதிரிப் படிவமாய் அமைந்துள்ளது..." அவன் சமாளித்து உட்கார்ந்து கொண்டான். அவளுடைய கையை இப்படியும் அப்படியுமாகத் திருப்பிப் பார்த்தான். கஜல் கேட்ட பிறகு சில விஷயங்களை மட்டும் தயங்கித் தயங்கி சொன்னான்.

"உங்களுக்கு நல்லது செய்வான் என்று நீங்கள் நினைக்கும் மனிதன் சுயநலவாதியாக இருப்பான். உங்களுக்குக் குழந்தைப் பருவத்தில் எந்த மகிழ்ச்சியும் கிடைக்கவில்லை என்றாலும், சில நாட்களுக்குப் பிறகு சிறப்பான வருங்காலம் தொடரும்."

கஜல் சற்றே துணிவு பெற்றுப் பில்கிராமியைப் பார்த்தாள். தலைமுதல் கால் வரை நடுக்கம் ஏற்பட்டது. அவளுக்கு என்ன என்ன கிடைத்துவிட்டது என்பது அவனுக்குத் தெரியுமோ, தெரியவில்லையோ?

"உங்கள் மணமகன் நல்ல அழகனாக இருப்பான்..."

இதைக்கேட்டு அவள் தன்னுடைய கையை இழுத்துக் கொண்டாள். இரண்டு கைகளாலும் முகத்தை மறைத்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டாள்.

"ஆனால் உங்கள் இதயத்தில் அவன்மீது மதிப்பு இருக்காது." பில்கிராமி சோகத்துடன் கூறினான். பிறகு தன் கையை அவளுக்கு முன்னால் நீட்டினான்.

"எனது ஊதியத்தை உடனடியாகக் கொடுங்கள்."

அதே நேரத்தில் கோள்மூட்டும் ரவி உள்ளே வந்தான். அவர்கள் இருவரையும் அவனது பார்வை துளைத்து எடுத்தது.

"இது என்ன? என்னையும் கஜாலா சுல்தானாவையும் ஒருமணி நேரமாக இருக்கச் செய்துவிட்டு பான் சாஹிப்

எங்கேயோ உல்லாசமாக உலாவுகிறார்!”

பில்கிராமி ரவியிடம் கடுமையாகப் பேசிவிட்டு, அங்கிருந்து எழுந்து சென்ற கஜலின் கையைப் பிடித்துக் கொண்டான்.

“எனது ஊதியத்தை எடுங்கள்..”

“என்னிடம் எதுவும் இல்லையே” வருத்தத்துடன் அவள் கூறினாள். உண்மையாகவே நாகரிகம் எனக் கருதியே அவள் கைப் பையை எடுத்துக் கொண்டு திரிகிறாள். அப்பா இதுவரை ஒரு ரூபாயும் அவளுக்குக் கொடுக்கவில்லை.

“சரி, பிறகு வசூலித்துக் கொள்கிறேன்” அவன் தன்னுடைய சிகரெட் கேசை எடுத்தவாறு தாழ்ந்த குரலில் முணுமுணுத்தான்.

“சந்திப்பதற்கு ஏதேனுமொரு சாக்கு வேண்டுமே.. சரி, டாடா! நான் போகிறேன்.”

அன்று கஜலுக்குத் தூக்கமே வரவில்லை.

பெரியதொரு உற்சவத்தில் இருப்பதுபோல் அவள் உணர்ந்தாள். நான்கு திசைகளிலும் விமானங்களின் பேரொலி கேட்டது. ராட்சச சக்கரங்களின் ஒலி... எங்கேயோ பலமான மழை பொழிந்தது... பிறகு ஒரு காரின் டயர் வெடித்துவிட்டது... பிறகு ஒரே நிசப்தம். அந்த மௌனத்தில் பில்கிராமியின் குரல் ஒலித்தது—

‘எனது இதய பூமி நடுங்குகிறது
காதல் நினைவே
உன் பாதங்களை மெதுவாக வைத்து வா!’

அவள் எத்தனையோ முறை இந்த அழகான கவிதையை அவனது இனிமையான குரலில் கேட்டிருக்கிறாள். மக்களும் இந்தக் கவிதையில் மயங்கினார்கள். ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இதைப் பாடுமாறு வற்புறுத்துவார்கள். இத்தகையதொரு புகழ்பெற்ற பாடலை, அவன் அவளுக்காக, தனியாகப் பாடுவானா? இதை அவள் என்றுமே நினைக்கவில்லை.

அவளுடைய இதயத்தில் எழும் புயலுக்குக் காரணம் என்ன? கலவரமா அல்லது மகிழ்ச்சியா? தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டபோது அவளுக்குப் பான் சாஹிபின்மீது கோபம் வந்தது. சாந்த் அக்காவை அவர் அழிவு தேடும் நிலையில் விட்டுவிட்டார். சாந்த் அக்கா ஒரு மஞ்சள் துண்டுபோல் தனி அறையில் கிடக்கிறாள். அவள் உடல் நலத்தை விசாரிக்கப் பான் சாஹிப் ஒருநாளும் வரவில்லை. நானும் என் மணமகனை மதிக்க மாட்டேனா? அவளுக்குத் தன்மேல் கோபம் வந்தது. அவன் யாராக இருப்பான்? எங்கு இருப்பான்? எல்லாச் சிறு பெண்களும் செய்வதுபோல் அவள் தன் மணமகனின் உருவம் ஒன்றை அமைத்து அதற்கு வண்ணம் தீட்டவில்லை. அது வெறும் நிழலாக இருந்தது. ஒரு மங்கலான வரைபடம்போல் அவளுக்கு முன்னால்

அது வந்துநின்றது. சரியாகவும் தென்படவில்லை. ஆடவன் ஒருவனிடம் ஏதேனுமொரு முக்கியமான குணத்தைக் கண்டால் அதை அவள் தன் மணமகனின் சிந்தனையுடன் இணைத்து விடுவாள்.

இத்தகைய நல்லதொரு மனிதரை, நான் மதிக்க மாட்டேனா?

அவள் கலவரத்துடன் யோசனை செய்தாள். பாழாய்ப் போனவள். நான் எப்போதும் முட்டாளாகவே இருக்கிறேன் என்று அப்பா கூறுவது சரியாகவே இருக்கிறது. இந்த மடமையின் தொடர்ச்சி என்றுமே முடிவு பெறாதா?

எல்லா அச்சத்தையும், எல்லாத் துக்கத்தையும், வேறொருவரின் மனதில் கொட்டிவிட வேண்டும் என்று மனம் விரும்பியது. ஆனால் அவளுக்கு எந்தத் தோழியும் இல்லை. யாருடனும் அவள் பொம்மைக் கல்யாணமோ, சமையல் விளையாட்டோ நிகழ்த்தியதில்லை. இதற்கான நேரம் அவளுக்கு எங்கே கிடைத்தது.

அவளுக்கு உணர்வு வந்த காலத்திலிருந்து நான்கு திசைகளிலிருந்தும் வசைமொழிகளும் பழிப்புரைகளும்தான் செவியுறுகிறாள். அடியும் உதையும்தான் கிடைக்கப் பெறுகிறாள். அவளை மேடைவரை சாந்த் அக்கா அழைத்துச் செல்லாமல் இருந்திருந்தால், இன்று பில்கிராமியின் 'நான் உங்களுக்காகவே..' என்ற சொல்லைக் கேட்டிருக்க முடியாது.

அவளுக்குத் தோழியாக ஃபவுசியா மட்டும்தான் இருந்தாள். ஆனால் ரஜியா மாமி அவள்மீது கஜலின் நிழலும் பட்டுவிடக் கூடாதெனப் பாதுகாத்து வருகிறாள். மேலும் அவளும் கர்வம் நிறைந்த பெண்ணாகவே இருக்கிறாள். கல்லூரியின் பேச்சுப் போட்டிகளில் மட்டும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படுகிறாள். தினமும் திரைபோட்ட காரிலேயே கல்லூரிக்குச் செல்வாள். ஷாஹீனுடைய நண்பர்களுக்கு எதிரில் வருவதில்லை. உறவு முறையில் சகோதரர்களாக இருப்பவர்களையும் விட்டு ஒதுங்கி விட்டாள். சாந்தின் நிலை, ரஜியா மாமிக்கு இடர் எச்சரிக்கையாக அமைந்துவிட்டது.

டாக்டர் படிப்புக்காக ஷாஹீன் அலிகர் நகருக்குச் சென்று விட்டாள். அயாஸ் அவளை முழுவதுமாக வெறுத்து ஒதுக்கினான். படிப்பைவிட்டுவிட்டு இத்திஹாதுல் முஸ்லிமீனின் தீவிரத் தொண்டனாகிவிட்டான். இரவும் பகலும் அதே வேலைகளில் சுற்றினான். ஹுமாயூனுக்கும் கஜலுக்கும் அயாஸைப் பற்றிச் சிந்திக்கவே நேரம் இருக்கவில்லை.

பிறகு ஒரு முடிவுக்கு அவள் வந்துவிட்டாள். காலையில் பான் சாஹிப் வந்தால் ஒரு நாடகத்தில் பில்கிராமியின் நாயகியாகப் போடுங்கள் என்று அவரிடம் சொல்ல வேண்டும்.

ஆனால் அவர்தான் சுற்றுப்பயணத்திற்குச் சென்றுவிட்டாரே!

இந்தச் செய்தி, அன்று மாலையில் பில்கிராமி அவள் வீட்டுக்கு, தனது காரில் வந்தபோது தெரிந்தது. மிகச் சாதாரண மான அறையில் அழுக்கடைந்த கம்பளத்தின் மீது பில்கிராமியை உட்காரும்படி சொல்ல அவளுக்கு வெட்கமாக இருந்தது.

கஜல் ஒரு சாதாரணமான பெண். மிகவும் எழை என்று அவன் சிந்திக்கவே செய்வான். அவன் உல்லாசமாகக் காரில் பவனிவரும் நபர் அல்லவா. எத்தனை பெரிய தந்தையின் மகன். அத்தனை அறிவாளியான அன்னையின் அன்புக் குமாரன்...

'அல்லாஹ்..! அவன் இந்த வீட்டிற்கு எதற்காக வந்திருக்கிறான்?'

ஹுமாயூன் லுங்கியைக் கழற்றி விட்டுச் சொக்காயும் பைஜாமாவும் அணிந்து வருவதற்குள், பில்கிராமி கஜலை தன் காரில் உட்காரவைத்து அதைக் கிளப்பிவிட்டான்.

ஹுமாயூனுக்குக் கடுங்கோபம் வந்தது. பான் சாஹிபிற்கும் இந்த ஊர் சுற்றிப் பயல்களுக்கும் இடையே பெரிய வேற்றுமை இருக்கிறது. ஹுமாயூனின் அனுமதி பெறாமல் பான் சாஹிப் இதுவரை கஜலைத் தன்னுடன் அழைத்துச் செல்லவில்லை. ஆனால் இன்று புதிய நாடகத்தின் நடிகர்கள் ஒன்று சேருகிறார்கள். இதுவரை அவர்கள் இருவரும் அங்கு சென்றிருக்க வேண்டும் என்று ஹுமாயூன் எண்ணமிட்டான். அதனால் அவசரத்தில் பில்கிராமி சென்றுவிட்டான் போலும். எனவே அவனும் அவசர அவசரமாக ஆடைகளை மாற்றிக் கொண்டு தனது பழைய மிதி வண்டியை எடுத்தான். கலைக்குழு அலுவலகத்தை விரைவிலேயே அடைந்தான்.

ஆனால் அங்கு பான் சாஹிப் தனியாக உட்கார்ந்து சில காகிதங்களைப் பார்த்துக் கொண்டிருநதார். இன்னும் நான்கு மணி ஆகவில்லை. அதனால் எந்த நடிகரும் வரவில்லை. துர்கய்யா மட்டும் ஒரு மூலையில் உட்கார்ந்து ஆர்மோனியத்தை வாசித்துக் கொண்டிருந்தான்.

'இதயத்தின் தனிமையை நினைத்து<br>
இந்தத் துக்கம்<br>
அதனைச் சூழ்ந்த கொண்டதோ?'

ஹுமாயூன் வணக்கம் தெரிவித்துவிட்டு, கஜல் எங்கு இருக்கிறாள் என்று கேட்டான்.

"கஜல்...?"

"ஆம். சிறிது நேரத்திற்கு முன்பு பில்கிராமி தனது காரில் அவளை அழைத்து வந்தாரே!"

"பில்கிராமி? அவனுடைய காரில்...?" பான் சாஹிப் எழுந்து

நின்றார். பிறகு தள்ளாடியபடி உட்கார்ந்துவிட்டார். மாரடைப்பு ஏற்பட்டுவிட்டதா? அவர் அமைதியை இழந்து கைகால்களை அசைத்தார். அவரது கலவரத்தைக் கண்ட ஹுமாயூனும் கவலை கொண்டான்.

"இப்போது வந்துவிடுவார்கள்", பான் சாஹிபிற்கு அவன் ஆறுதல் சொல்ல முயன்றான்.

"இல்லை. நீங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். அவர்கள் அங்கேயே வருவார்கள்", பான் சாஹிபின் குரல் துக்கத்தால் கட்டி விட்டது.

"நீசமானவள், கேடுகெட்டவள், என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் போய்விட்டாளே. இன்று அவளைக் கொன்று விடுவேன்" ஹுமாயூனால் தனது குரலைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

"அவளை பில்கிராமியே கொன்றுவிடுவான்" பான் சாஹிப் துக்கத்தால் தன் தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டார்.

# 19

"அப்பா என்னை அடிப்பார். அவரிடமிருந்து அனுமதி பெற வேண்டும்..."

கஜலுடைய கையைப் பிடித்து அவளை பில்கிராமி காருக்குள் இழுத்தபோது கஜல் கலக்கம் அடைந்தாள். காரை இயக்கி விட்டு முறுவலித்தவாறு அவளை அவன் ஆழமாகப் பார்த்தான்.

"இன்று நானும் உங்களை அடிக்கப்போகிறேன்!"

"ஏன்?" தனது அழுக்கடைந்த ஆடைகளை மேல் துண்டால் மறைக்க அவள் முயன்றாள். உண்மையாகவே அவளுக்குப் பயம் வந்துவிட்டது.

"ஆறு மாதங்களாக என் அமைதியைக் கெடுத்துவிட்டீர்கள்"

"நானா?" அவளுக்கு வியப்பும் திகைப்பும் தோன்றின.

"வேறு யாராம்?" பில்கிராமி அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தான். எதிரில் வாகனங்கள் வரும்பொழுது பிரேக்போடும் நிலை ஏற்பட்டது.

"இத்தனை அலட்சியம்—இவ்வளவு பாராமுகம்... உங்களுக்கு உங்களைத் தவிர வேறெதுவும் தென்படுவதில்லை."

கஜலின் கைகால்கள் தளர்ச்சியடைந்துவிட்டன. யாரோ மயக்கமருந்து கொண்ட ஊசியைப் போட்டுவிட்டதுபோல்! நான் யார்? நான் எனது படைப்பின் பெருமையை உணர்ந்து கொள்ள வில்லை. என் பார்வையை யாராவது காவல் காத்து நிற்கிறார்களா?

"சரி என்னுடைய ஊதியம் எங்கே?" கஜல் மௌனமாக இருப்பதைக் கண்டு அவன் வினா விடுத்தான்.

எங்கேயோ மறைந்திருந்த சிரிப்பு கஜலிடம் வந்துவிட்டது. அவள் சிரித்துக் கொண்டே இருந்தாள்.

சார்மினார் வந்துவிட்டது. பிறகு முஅஜ்ஜம் ஜாஹி மார்க்கெட் வந்தது. வெற்றிலைக் கடை ஒன்றில் பல கவிஞர்களும், எழுத்தாளர்களும் நின்றிருந்தார்கள். கஜலின் சிரிப்பொலியைக் கேட்டு அவர்கள் இத்திசையில் பார்வைகளைச் செலுத்த, பில் கிராமி கைகளை அசைத்து எல்லோருக்கும் வணக்கம் தெரிவித்தான்.

பிறகு ஆபித் சாலை வந்துவிட்டது.

பாரத் கலைக்குழு அலுவலகம் வேறுதிசையில் அல்லவா இருக்கிறது. கஜல் சிரித்துக் கொண்டே கேட்டாள். பிறகு எதிரில் வந்த ஒரு திருமண உர்வலத்தைப் பார்க்கத் தலையை நீட்டினாள். பெரிய ஆடம்பரமான விவாகம் அது. ஏராளமான சீர்வரிசை. 'அல்லாஹ்! இவ்வளவு சீர் எங்கிருந்து வந்தது' என்று கஜல் சிந்தனை செய்தாள். கூட்டத்தின் காரணமாகப் பில்கிராமி காரின் வேகத்தைக் குறைத்துவிட்டான். மணமகன் குதிரை மீதேறி வந்தான். மலர்களால் அவன் முகம் மறைந்திருந்தது. அவனது கையில் சிவப்புத் துணியால் கட்டப்பட்ட கத்தி இருந்தது. அதே கையால் அவன் மக்களுக்கு வணக்கமும் தெரிவித்துக் கொண்டிருந்தான்.

"அவனுடைய மணவாட்டியை எடுத்துச்செல்ல மனம் துடிக்கிறது!" பில்கிராமிக்குக் கோபம் வந்துவிட்டது. ஒவ்வொரு மணவாளனைப் பார்க்கும்போதும் அவனுக்கு ஆத்திரம் வரும். எனவே மணமகளைக் கவர்ந்து செல்லப் பல வழிமுறைகளை அவன் யோசனை செய்வான்.

கஜலுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. பிறகு மக்கள் நிரம்பிய நகரப் பகுதிகளை விட்டு வெளியேறி கார் கோல்குண்டாவை நோக்கி ஓடியது. கஜல் அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டாள். மாலை நேரத்தின் குளிர்ச்சியான காற்று அவள் தலைமுடியுடன் விளையாடியது. இராணுவத்தினர் ஹாக்கி, கிரிக்கெட் விளையாட மைதானங்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். தூரத்தில் பாக்மதியின் மாளிகை தெரிந்தது. கோட்டைக்கு எதிரில் குன்றின்

மேல் அமைந்திருந்த மாளிகை அது. இங்கு உட்கார்ந்து அவள் பாடும்போது கோட்டைக்குள் துயிலிலாழ்ந்த குலிகுதுப்ஷா விழிப்புக் கொள்வானாம்.

"கஜல், நான் கோட்டைக்குள் சென்று உங்களை அழைத்தால் நீங்கள் கேட்பீர்கள்," பில்கிராமி அவள்மீது சாய்ந்தவாறு கேட்டான்.

"போதுமே..." அவள் மனதிற்குள் சொல்லிக்கொண்டாள்— 'நீங்கள் அழைக்காவிட்டாலும் உங்கள் குரலை கேட்டுக்கொண்டே இருப்பேன்...'

இருவரும் ஒரு திரைப்படத்தில் நடிப்பது போலவே இருந்தது. திரைப்படக் காட்சிதான் அது. நாயகனும் நாயகியும் காரில் அமர்ந்து காடுகளைக் கடந்து செல்கிறார்கள். திடீரென்று பெட்ரோல் தீர்ந்துவிடுகிறது, அல்லது சக்கரத்தில் காற்றுப்போய் விடுகிறது, அல்லது நாயகனுக்கு வழி மறந்துவிடுகிறது. ஆனால் பில்கிராமி இந்த வழிகளில் பலமுறை வந்திருக்கிறான். அதனால் உஸ்மான் சாகரின் ஒரு மூலையில் காரை நிறுத்தினான். அங்கு மக்கள் சந்தடி இல்லை. பிறகு அசோக்குமாரின் நடையில் அவளைப் பிடித்து கீழே இறக்கினான்.

'அல்லாஹ்! எவ்வளவு தண்ணீர்!'—கஜல் சிந்தனையிட்டாள். இந்தத்தண்ணீரும் அவளுடைய இதயத்தின் மகிழ்ச்சியைப் போலவே தடுக்கப்பட்டிருந்தது. இன்று நான்கு புறங்களிலும் பரவிக் குதிக்கிறது; மிளிர்கிறது. அடுக்கு அடுக்காக—நீரும் இப்படி ஒளிருமா? பொன் நிறமாக ஓடும் அலைகளைப் பார்த்து அவளுக்கு மயக்கம்போல் வந்துவிட்டது. இது கனவுபோன்ற நிலையாக இருந்தது. அவள் கலவரமடைந்து, பில்கிராமியைப் பிடித்துக் கொண்டாள். இது கனவா அல்லது நனவா என்ற குழப்பத்திலும் அவளுக்குச் சிரிப்பு வந்தது.

"அல்லாஹ்! எத்தனை அழகான இடம் இது" அவள் வானத்தின் பரப்புகளை முதல் முறையாக உணர்ந்தாள்.

"முன்பு இது இவ்வளவு அழகாக இருந்ததில்லை. இன்று உங்கள் வருகையால் பொலிவு பெற்றுத் திகழ்கிறது." பில்கிராமி அவளுக்கு அருகில் வந்தான். அவனுடைய வாயிலிருந்து பெட்ரோல் போன்ற நாற்றம் வீசியது. பான் சாஹிபின் வாயி லிருந்து வருவதுபோல். இந்த துர்நாற்றம் கஜலுக்கு வாந்தி எடுக்கச் செய்யும், அதனால் அவள் விலகி நின்றாள். பில்கிராமிக்கு இந்தச் செய்கை பிடிக்கவில்லை.

"நீங்கள் என்னை வெறுக்கிறீர்கள் என்று பான் சாஹிப் சரியாகவே சொல்கிறார்" அவன் வருத்தத்துடன் சிகரெட்டைப் பற்ற வைத்தவாறு ஒரு கல்லின்மீது உட்கார்ந்துவிட்டான்.

“வெறுப்பு?” சிரித்துக் கொண்டிருந்த அவள் திடீரென்று மௌனமாகிவிட்டாள். “எனக்கு உங்கள் மீது வெறுப்பு எதற்காக வரும்?” வாழ்நாள் முழுவதும் வெறுப்பின் நஞ்சு பருகி வந்த கஜல் நடுங்கிவிட்டாள். “இல்லை. இத்தனை பெரிய தண்டனையை நான் யாருக்குமே அளிக்க மாட்டேன். என்னுடைய எதிரிகளுக்கும் இல்லை.”

“சரி, வெறுப்பு இல்லையென்றால் என்னுடைய ஊதியத்தைக் கொடுத்துவிடுங்கள்,” அவன் தடுமாறியவாறு எழுந்தான். கையை நீட்டியவாறு அவள் எதிரில் வந்து நின்றான்.

“இந்தாருங்கள்,” அவள் பில்கிராமியின் கையில் அடித்து விட்டுப் பாறைகளை நோக்கி ஓடினாள். மிகவும் சிறிய குழந்தையைப்போல் அவள் சிரித்தாள். பில்கிராமியும் அவளுக்குப் பின்னால் ஓடினான். அவள் கற்கள், முட்கள் நிறைந்த பூமியில் ஓடினாள். பிறகு தண்ணீரில் மூழ்கியிருந்த, பாசி நிறைந்த பாறைகள் மேல் கால்களை ஊன்றி, நீரை எடுத்து பில்கிராமியின் மேல் வீசினாள். அதைத் தவிர அவளுக்கு வேறு பாதுகாப்பு எதுவும் இருக்கவில்லை. எதிரில் எங்கும் நீராகவே இருந்தது. மாலை நேரத்தின் மங்கலான வானத்தின் எல்லை அந்தத் தண்ணீருடன் கலந்துவிட்டது. தூரத்தில் குளத்தின் எதிர்க்கரையில் மீன் பிடிக்கும் இளைஞன் ஒருவன் தூண்டில் போட்டுக் காத்திருந்தான். இத்தனை பரந்த காட்சியில் அவன் சிறு அணுபோல் காட்சி தந்தான். செந்நிறமும் கருமையும் கலந்த மாலைநேர ஒளியில் வெகுதூரத்தில் இரண்டு மனித நிழல்கள் ஒன்றன் பின் ஒன்றாகச் செல்வதை அவன் பார்த்தான். ஒரு பாறைக்குப் பின்புறமாகச் சென்று அவை மறைந்துவிட்டன. பிறகு அவை வெளியே வரவில்லை. இரவும் வந்துவிட்டது. அவர்கள் வெளியே வந்தால் தானும் தூண்டிலை எடுக்க அவன் நினைத்தான். அவனுடைய வலையில் இரண்டு நிழல்கள் சிக்கிவிட்டதுபோல் அந்த மீனவச் சிறுவனுக்குத் தோன்றியது.

# 20

அன்றிரவு, வலித்துக் கொண்டிருந்த அவள் உடல் மீது அப்பா நான்கு உதைகளை விட்டார்.

அப்போதும் அவள் சிரித்துக் கொண்டே இருந்தாள். இன்று அப்பாவின் உதைகளும் மலர்களைப்போலவே அவளைத்

தாக்கின. இன்று அவள் மனதில் சுமையற்றவளாக இருந்தாள். பில்கிராமியின் எல்லா நன்றிக் கடன்களையும் செலுத்திவிட்டாள். அவள் தனது மணமகனுக்கு தன்னுடைய முதல் மதிப்பை நிரூபித்துவிட்டாள். நாளை பான் சாஹிபிடம் சொல்லி, அவர் மூலம் அப்பாவுக்கு முழு விவரமும் தெரிவித்துவிட வேண்டும். இத்தனை பெரிய, பணக்கார மணமகன் கிடைத்துவிட்டான் என்று அவரும் மகிழ்ச்சி அடைவார்.

எல்லாருடைய அடி உதைகளைச் சகித்துவிட்டேன். இனி இங்கு இருக்க மாட்டேன். விவகாகத்திற்கு விரைவில் ஏற்பாடு செய்யுங்கள் என்று பான் சாஹிபிடம் சொல்லிவிட வேண்டும். ஆனால் பான் சாஹிப் மறுநாளும் வரவில்லை. கஜலுக்கு தன் மகிழ்ச்சித் திளைப்பில் அவருடைய வருகையை எதிர்நோக்க வேண்டும் என்ற நினைவும் இருக்கவில்லை. பான் சாஹிபிடம் அவளுடைய இரண்டு விலையுயர்ந்த சேலைகளும் பவுடர் டப்பாவும் இருக்கின்றன. பில்கிராமி இன்று மீண்டும்...

நான்காவது நாளும் பான் சாஹிப் வரவில்லை. அவள் பயந்துவிட்டாள். ரவி அவரிடம் ஏதாவது சொல்லிவிட்டானோ, என்னவோ? அன்று கஜலுக்கு எதிரில் பில்கிராமி பான் சாஹிபைத் தாக்கிப் பேசிவிட்டானே, அவளும் மௌனமாக அதைக் கேட்டுக்கொண்டு இருந்தாளே! ஒருவாரத்திற்குப் பிறகு பான் சாஹிபின் காரோட்டி, ஓர் உறையை ஹுமாயூனுக்குக் கொடுத்துவிட்டுச் சென்றான். அதில் பத்து ரூபாய் நோட்டுகள் பத்து இருந்தன. இது கஜலின் எஞ்சி நின்ற ஊதியத் தொகையாகும். “வேலை மிகுதி காரணமாக அவர் கஜலுக்கும் ஹுமாயூனுக்கும் உதவி செய்ய இயலாது. அதனால் அவரைத் தேடிவரும் சிரமத்தை மேற்கொள்ளவேண்டாம்” என்ற குறிப்பும் அத்துடன் இணைக்கப் பட்டிருந்தது.

கஜலைப் பற்றி அதில் எதுவுமே இல்லை. ஹுமாயூன் கலவர மடைந்துவிட்டான். ஆனால் அவள் அழ ஆரம்பித்து விட்டாள். பான் சாஹிபின் ஆதரவுச் செயல்கள் அவள் நினைவுக்கு வந்தன. இனி ஹுமாயூனின் பதவி உயர்வு நடக்காது. அலீப் லைலாவில் பங்கு ஏதும் பெற முடியாது. கடன்கள் எப்படி அடைக்கப்படும்? மீண்டுமொருமுறை சாந்த் அக்கா அவள் கையைப் பிடித்து தனது அறைக்கு வெளியே தள்ளிவிட்டது போன்ற அதே இழிவான நிலை. பான் சாஹிப் எதிரில் இருந்தால் அவருடன் தலையை மோதி உயிர்விட்டு விடுவாள். இந்த நரக வேதனையிலிருந்து விடுதலை கிடைத்துவிடுமே.

பில்கிராமி வந்தால் அவனுடன் சென்று பான் மாமாவிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தாள்.

ஹுமாயூன் பான் சாஹிபின் குறிப்பைக் கட்டில்மீது வீசியெறிந்து விட்டான். உயர் வகுப்பினரைப் பார்த்த பிறகு அவனுக்கு ஓர் உண்மை தெரிந்திருந்தது—அங்கு கஜலைப் போன்ற அழகான பெண்களின் விலை எறி இருக்கிறது. பான் சாஹிப் போன்ற மூடர்கள் தெருத் தெருவாக அலைகிறார்கள். இப்போது அவனால் மக்களின் முன் தன் உயர்நிலையை நிலைநாட்ட முடியும். மிஸ்கீன் அலி ஷாஹ்வின் குமாரன் என்பதால் பத்துப் பன்னிரெண்டு இந்தியத் திரைப்படங்களை மட்டும் பார்த்திருக்கிறான். நாளிதழ் செய்திகளுக்கும் அவன் என்றும் முக்கியத்துவம் அளிக்கவில்லை. உலகின் மாறுபடும் நிலைகளைப் பற்றி அவன் என்றுமே சிந்திக்கவில்லை. அலீப் லைலாவிலிருந்து வெளியே வந்தபிறகு அலுவலக வேலைகளில் பகல் முழுவதும் மூழ்கி இருப்பான். மக்களோ, இந்தியாவின் கவலை தரும் அரசியல் நிலையைப் பற்றி வாதம் புரிவார்கள். மர்லின் மன்ரோவின் கால்கள், பிகாசோவின் ஓவியங்கள் பற்றிப் பேசுவார்கள். ஹுமாயூன் நாற்காலியைப் பின் புறமாக நகர்த்தி சிகரெட் புகைப்பான். முதன் முதலில் யாரும் ஹுமாயூனைப் பொருட்படுத்தவில்லை. கஜல், சாந்த்—பான் சாஹிப் ஆகியோருடன் விருந்து உபசாரங்களுக்குப் போய் விடுவாள். ஹுமாயூன் வெளியே புல்வெளியில் பணியாட்கள், உணவு பரிமாறுபவர்கள் ஆகியோருடன் உட்காருவான். கஜலை எங்கும் தனியாக அனுப்ப அவன் ஒத்துக்கொள்ளவில்லை. உள்ளே இருப்பவர்களுடன் கலந்து உரையாடும் திறமை அவனுக்கு இல்லை. எப்பொழுதாவது பான் சாஹிபின் பார்வை அவன்மீது விழுந்தால் யாரிடமாவது அவனை அறிமுகம் செய்துவைப்பார்.

"இவர் கஜல் பீபியின் தந்தை—ஹுமாயூன் அலி ஷா!"

ஒரு நடிகையின் தந்தை என்ற முறையில் அவன் தனது அறிவுத் திறனை வெளிப்படுத்துவான். நல்ல நடிகர்கள் இல்லாத குறை, நடிப்புக் கலையின் நுணுக்கங்கள், முக பாவங்கள், பாத்திர அமைப்பு, அங்க அசைவுகள், குரலின் ஏற்றத்தாழ்வு, மேடை அமைப்பு முதலியவைபற்றி, தான் கேட்டறிந்த பலவற்றைக் குறித்து விமர்சனம் செய்வான். மிஸ்கீன் அலி ஷாவின் மரபில் வந்து, மதக்கோட்பாடு ஆசிரியர் என்ற வகை முறைக்குப் பதிலாக மேடை, நாடகம், நடிப்பு ஆகியவற்றின் பயிற்சி அளிப்பதுபோல் தெரிந்தது.

இந்த வழுக்கைத் தலைக் கிழவனின் பிடியிலிருந்து கஜலை விடுவித்துக்கொள்ள வேண்டுமென ஹுமாயூன் விரும்பினான். பில்கிராமியை நம்பலாம். பஞ்சாரா குன்றில் வாழும் உயர் குடியினருடன் அவனுக்கு நட்புறவு இருக்கிறது. கஜலும் அவன் உதவியால் வானத்தைத் தொட்டுவிட முடியும் என்று நினைத்தாள்.

வெயில் முற்றத்தை விட்டு உயரே செல்வதற்கு முன்பே பில் கிராமியுடைய வாகனக் குழல் ஒலி, அவனைப் போலவே அமைதி இழந்து ஒலிக்கும். கஜல் தனது கையிலிருக்கும் சூடான தேநீர்க் கோப்பையை வைத்துவிடுவாள். மேல்துண்டு போடவும், தலை முடியைச் சரிப்படுத்தவும் நேரம் கிடைக்காது. மீனவச் சிறுவன் நீரில் தனது வலையைப் பரப்பியவாறு எதிர்த்திசையில் நிழலாடும் இரு உருவங்களையும், அவை பாறைகளுக்குப் பின்னால் மறைந்து விடுவதையும் காணுவான்.

தினமும் அவர்களை எதிர்நோக்கும் அவன் அலுப்படைந்து விட்டான் - பில்கிராமியைப் போல். பில்கிராமியும் தினம் ஒரே வழியில் நடந்து சோர்வடைந்தான். ஆனால் காற்றைப்போல் நான்கு புறங்களிலிருந்தும் கஜல் அவனைச் சூழ்ந்து கொண்டாள். இத்தனை அப்பாவியான, இத்தனை அழகான பெண் இவள். இவளுக்கு யாரால் துரோகம் செய்ய முடியும் என்று சிந்திக்கவும் பில்கிராமி அஞ்சினான்! அதே நாட்களில் சட்டா என்பவர் திரைப்படங்களுக்காகப் புதுமுகங்களைத் தேடி ஹைதராபாதிற்கு வந்திருந்தார். அவருடைய முகவரி அட்டையில் 'கூட்டுறவு கலை நிறுவனம்' என்று அச்சிடப்பட்டிருந்தது. அதிபர்—இயக்குநர்—கதாசிரியர் எல்லாம் அவரே. அதில் இசை அமைப்பாளரின் பெயர் அச்சிடப்படவில்லை; என்றாலும் ஹைதராபாத்தின் பலவேறு இசை நிகழ்ச்சிகளின்போது அவர் தனது இசைத்திறனை வெளிப்படுத்தி மக்களை வியப்பிலாழ்த்திவிட்டார். பிறகு தனது பெருமையை உறுதிப்படுத்த வியக்கத்தகுந்த பல நிகழ்ச்சிகளையும் விளக்கினார். சாதாரண பெட்டிக்காரனான நௌஷாத்தின் பிரபலமான பாடல்களின் இசையை அமைத்தவர் அவரே... தேவ் பர்மன் அவருடைய மாணாக்கர்களில் ஒருவரே... லதா, பாடுவதற்கான வாய்ப்புக் கேட்டு அவருடைய இல்லத்திற்கு அடிக்கடி வருவார்.

தனது வணிகம் தொடர்பாக அவர் எப்போதும் எங்காவது தூரத் தொலைபேசித் தொடர்புக்காக முயன்று கொண்டே இருப்பார். அவரது நாட்குறிப்பில் ஒவ்வொரு நிமிடத்திற்கான நிகழ்ச்சி நிரல் எழுதப்பட்டு இருந்தது.

இந்தத் திருவாளர் சட்டாவுக்குப் புதிய படத்திற்காக நாயகனும் நாயகியும் தேவைப்பட்டார்கள். சென்னை, தில்லி, கல்கத்தா ஆகிய நகரங்களில் ஆயிரக்கணக்கான இளைஞர் களையும், இள மங்கையரையும் பேட்டி கண்டு மறுப்புத் தெரிவித்துவிட்டார்.

ஆனால் அவர் ஹைதராபாத்திற்கு வந்ததும் பில்கிராமி தனது மாந்திரிகச் சக்தியால் அவரை மயக்கிவிடவே எல்லாரும்

திகைத்து நின்றார்கள். பான் சாஹிபுக்கு எரிச்சல் தாங்க முடிய வில்லை; இப்போது பான் சாஹிப் கலைக்குழு அலுவலகத்திற்கு வருவதில்லை. பொறியியலாளர் ஒருவரின் பெண்ணுக்குச் சமையல்கலை நுணுக்கங்களைக் கற்றுத் தருகிறார் என்ற பேச்சுப் பரவி இருந்தது.

பில்கிராமியைத் தொடர்ந்து நகரத்தில் இதர கலாச்சாரக் குழுக்கள், கலைஞர்கள், உயிர்குடியினர் திரு. சட்டாவுக்கு விருந்துகள் அளித்துக் கௌரவித்தார்கள். மிகச் சிறந்த தங்கப் பதுமைகளைக் காட்டினார்கள். இவ்வாறு கதாநாயகியின் தேர்வு மேலும் கடினமாகிவிட்டது. இரண்டு நாட்களுக்காக வந்த அவர் இரண்டு வாரங்களுக்குப் பிறகும் பயணத்தைத் தொடங்க முடிய வில்லை. மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டுவிட்டார்கள்.

இறுதியில் அவர் பில்கிராமியைக் கதாநாயகனாக முடிவு செய்து ஒப்பந்தப்படி மர்தம் ஆயிரத்து ஐநூறு ரூபாய் சம்பளம் தர இசைந்தார். அவனது நடிப்பின் முழு உரிமையும் அவருடைய நிறுவனத்திற்குரியதாகிவிட்டது. இந்த மகிழ்ச்சியைக் கொண்டாட பில்கிராமி, சிகந்தராபத்தில் ஒரு பெரிய விருந்து அளித்தபோது, கஜல் தன் வீட்டில் அழுதுகொண்டிருந்தாள். திரு. சட்டாவைக் கவருவதற்கு அவள் செய்த முயற்சிகள் பயனற்றுப் போயின. பில்கிராமியின் முன்னாள் காதலியான ஜமால் மீது அவர் மையல் கொண்டுவிட்டார். பில்கிராமியை அவர் தன்னுடன் அழைத்துச் செல்வதாக முடிவாகிவிட்டது. பில்கிராமி எறும்புகள் நிறைந்த இனிப்புப் பண்டம்போல் இருந்தான். அழகான மங்கையர் தங்களை மறந்து அவனை நோக்கிக் காந்த சக்தியால் இழுபடுவது போல் சென்றார்கள். ஒரு முறை ரவி மூலம் கஜலுக்கு ஒரு தகவல் தெரிந்தது. பஞ்சாரா குன்றில் எத்தனை மனைவியர் தங்கள் கணவர்களால் விவாகரத்து செய்யப்படுகிறார்களோ, அவர்களில் தொண்ணூறு சதவீதத்தினர் பில்கிராமியின் காதலிகளாம். எத்தனையோ முறை கஜல் அவனுடன் இருக்கும்போதும் வேறொரு அழகியைக் கண்டால் அவன் அமைதியை இழந்து விடுவான். அழகான மங்கையரைக் காண்பதில் தனி இன்பம் கிடைக்கிறது, ஆனால் தன் மனதில் மாசு ஏதும் இல்லை என்று பிறகு விளக்கம் தருவான். கஜல் பொறுமையைக் கடைப்பிடிப் பாள். கஜல் தன்னுடைய அழகான கணவனை மதிக்கமாட்டாள் என்று அவன் ஒருமுறை சொல்லி இருந்தான். அதற்கு நேர்மாறாக இப்போது தன் தலைவிதியை அவள் அனுபவித்துக் கொண்டிருக் கிறாள். ஓரிரு மாதத்தில் திருமணம் நடந்துவிட்டால் மாமியைப் போல் தனது உரிமையை நிலைநாட்ட முடியும். இப்போது பில்கிராமி பம்பாய்க்குப் போகிறான். அப்படியும் திருமணப்

பேச்சை அவன் அக்கறையுடன் கேட்பதில்லை. என் அம்மா கண்டிப்பானவர். அவரைச் சமாதானப் படுத்த நேரம் பிடிக்கும் என்பான். சில சமயங்களில், என்னை முதலில் நடிகனாக விடு. இல்லாவிட்டால் அப்பா செலவுக்குப் பணம் கொடுப்பதை நிறுத்தி விட்டால் நிலைமை மோசமாகிவிடும் என்பான்.

மறு நாள் பில்கிராமி ஓடோடி வந்து, சட்டா அவளைக் கதாநாயகியாக தேர்ந்தெடுத்துவிட்டார் என்ற செய்தியை அறிவித்தான். முதல் முறையாக இந்த மான்விழி அழகியைப் பார்த்தபோதே, அவர் மனதுக்குள் இந்த முடிவை எடுத்து விட்டாராம்!

ஹுமாயூனின் முகம் மலர்ந்து விட்டது. மகிழ்ச்சி மேலிட, கஜல் சிரிப்பையும் மறந்துவிட்டாள். ஆனால் பில்கிராமிக்கு ஏனோ இந்தத் தேர்வும் இசைவும் பிடிக்கவில்லை. சட்டா பல பெண் களிடம், உன்னைத்தான் தேர்வு செய்திருக்கிறேன் என்று தனித் தனியாகச் சொல்லி இருந்ததே இதற்குக் காரணம். எல்லாரையும் பம்பாய்க்கு அழைத்துச் சென்று ஒவ்வொரு பெண்ணையும் ஒவ்வொரு இயக்குநர்வசம் ஒப்படைத்துவிடலாம் என்று அவர் கருத்துத் தெரிவித்தாராம்.

அதனால் சட்டாவுடன் இப்போது தான் மட்டும் போவ தாகவும் கஜலைப் பின்னால் அழைத்துக் கொள்வதாகவும் பில் கிராமி சொன்னான். அன்று மனைவியைப்போல் முதல்முறையாக அவள் அவனுடன் சண்டை செய்தாள். சிறிது நேரத்தில் சமாதான மாகிவிடலாம் என்ற எண்ணமும் இருந்தது. அதனால் பில் கிராமியின் யோசனையை நிராகரித்துவிட்டுச் சட்டாவின் ஒப்பந்தத்தில் அவள் கையெழுத்துப் போட்டுவிட்டாள். அதற்காக ஓர் ஆயிரம் ரூபாயும் தேவைப்பட்டது. ஒப்பந்தத்தை மீறாமல் இருப்பதற்காக இந்த வைப்புத் தொகை வாங்கப்படுகிறது என்று சட்டா விளக்கம் தந்தார். இங்கு ஹுமாயூன் இதை மறுத்திருக் கலாம். ஆனால் பதூலிடமிருந்து பிடுங்கிச் சாயாவுக்குக் கொடுத்த நகைகள் இந்த இக்கட்டான நேரத்தில் அவனுக்குக் கை கொடுத்தன.

சட்டா பழகுவதற்கு மிகவும் இனிமையானவர். அவர் உட்கார்ந்திருந்த நேரங்களில் எல்லாரும் அவருடைய பேச்சையே கேட்பார்கள். அவருடைய கோணத்திலேயே எல்லாவற்றையும் பார்த்தார்கள். அவருடைய மூளையால் சிந்தனையும் செய்தார்கள். ஓரிரு சந்திப்புகளில் ஹுமாயூன் அவருடைய ஆற்றலையும் முக்கியத்துவத்தையும் உணர்ந்து விட்டான். அவர் ஹுமாயூனுடன் கஜலின் கலைத்திறமைகளைப் பற்றி விவாதித்தார். அவளுக்கு இன்னும் வயது குறைவாக இருக்கிறது. அதனால் பல மாதங்கள்

வரை தாம் பயிற்சி அளிக்கப்போவதாகக் கூறினார்.

ஆனால் பம்பாய்க்குப்போகும் நாள் அன்றே சட்டாவுக்கும் பில்கிராமிக்கும் இடையே ஏதோ வாக்குவாதம் எழுந்து பலமான சண்டை வந்துவிட்டது. அதனால் பில்கிராமி அவருடன் பம்பாய்க்குச் செல்வதில்லை என்று முடிவு செய்தான். ஹுமாயூனும் கஜலும் பயணச் செலவுகளுக்கான ஏற்பாடுகள் செய்ய முடியாமல் திண்டாடினார்கள். அதனால் மற்ற பெண்களுடன் சட்டா தனது பயணத்தைத் தொடங்கினார். கஜல் பின்னால் வந்து சேர்ந்துகொள்வதென்று முடிவாயிற்று. கஜல் பம்பாய்க்குப் போகப் போகிறாள் என்ற செய்தி ஹைதராபாத் ஆர்ட் சொசைட்டியிலும், பாரத் கலைக்குழுவிலும் பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணியது. கஜலின் எல்லாப் பிரச்சினை களினின்றும் தன்னை விடுவித்துக் கொண்ட பான் சாஹிபும் இந்தச் செய்தியைக் கேட்டுக் கவலை அடைந்தார் என்ற பேச்சு நகரம் முழுவதும் அடிபட்டது. ஆயினும் கஜலை விரும்புகிற வர்கள், அவளுக்காகப் பிரம்மாண்டமான பிரியாவிடை விருந் துக்கு ஏற்பாடு செய்துவிட்டார்கள். அதே நேரத்தில் ஒரு பத்திரிகைச் செய்தியும் நகரில் ஒரு பரபரப்பைத் தோற்றுவித்தது. வங்காளத்தைச் சார்ந்த மோசடிக்காரன் ஒருவன் ஹைதரா பாத்திலிருந்து பம்பாய்க்குச் செல்லும் வழியில் காவல் துறையினரால் சிறை பிடிக்கப்பட்டான். அவன் பெண்களை விற்கும் தொழில் செய்து வந்தான் என்ற செய்திதான் அது!

இந்தப் புயல் எத்தனை வேகமாகக் கிளம்பியதோ அத்தனை வேகமாகத் தணிந்தும்விட்டது. அது தன்னுடன் பில்கிராமியையும் ஹைதராபாத் ஆர்ட் சொசைட்டியையும் அடித்துச் சென்று விட்டது. கஜல் தனது விருப்பத்திற்கு மாறாக ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டாள் என்று பில்கிராமி குற்றம் சுமத்தினான். அதையே காரணமாகக் கொண்டு வேறுதிசையில் அவன் சென்றுவிட்டான்.

பில்கிராமி சென்றுவிட்டதும், ஹுமாயூன் மீண்டும் காலணியைக் கையிலெடுத்துக் கொண்டான். பிறகு என்னவாம்? ஆண்டவன் கொடுக்க அடியாள் பெற்றுக்கொள்ள வேண்டியது தானே. கஜலை அடிப்பதைத் தவிர ஹுமாயூனுக்கு வேறு வேலை எதுவும் இருக்கவில்லை. இதற்கு முன்பு இந்த அளவு கசப்பை அவள் சுவைத்துப் பார்த்ததில்லை. அவளுடைய மூளை பயங் கரமான அதிர்ச்சியால் துண்டு துண்டாகச் சிதறி விட்டது. அவள் மௌனமாக உட்கார்ந்து சூனியத்தை வெறித்துக் கொண்டு இருந்தாள். தன் எதிர்கால வாழ்வுக்காக எத்தனை அழகான திட்டத்தை அவள் வகுத்திருந்தாள்! பில்கிராமியின் வாழ்க்கைத்

துணைவி எனும் பதவி பெற்றுப் பஞ்சாரா குன்றில் வாழும் மங்கையரைப் பொறாமைத் தீயில் புரளச் செய்ய வேண்டும்! பில்கிராமியின் பொன்னிற முடியிலும், நீலக் கண்களிலும் மூழ்கித் திளைத்துக் குழந்தைகளின் மழலைகளில் நாடகம் நடிப்பு எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும்... நாள் முழுவதும் மாமியைப்போல் ஆசனத்தில் அமர்ந்து அதிகாரம் செலுத்த வேண்டும்... குழந்தைகளுக்காகப் பில்கிராமியிடம் சண்டை போட வேண்டும்... ஹுமாயூனைப்போல் குழந்தைகளை அடிக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றெல்லாம் அவள் கற்பனை செய்திருந்தாள். ஹுமாயூனின் கொடுமைகள் நினைவுக்கு வரும்போது அவள் நடுங்குவாள். தனது ஆன்மாவின் எல்லா காயங்களையும் நினைத்து, கலவரமடைந்து பில்கிராமிக்குக் குரல் கொடுப்பாள். குழந்தைகளை எப்போதும் அடிக்கக்கூடாது என்று வாக்குறுதி பெறுவாள்... தன்னை இல்லத்தரசியாகக் கற்பனை செய்யும்போது ரஜியா மாமியே எதிரில் வந்துநிற்பாள். மாமியாரின் அன்புக்குரியவர், மாமனாரின் 'இளவரசி'யாகத் திகழுபவர், எப்போதும் ரஷீத்துடன் காதல் பிணக்குகள், குழந்தைகள் அவரைச் சூழ்ந்து கொண்டு அட்டகாசம் செய்கின்றன...

பிறகு ஒருநாள் அவளும் பீபியைப்போல் களைப்படைந்து சமுக்காளம் விரித்த ஆசனத்தின்மேல் படுத்துக் கொள்வாள்... பில்கிராமியும் ஓய்வூதியம் பெற்றுத் தாத்தாவைப்போல் ஊறுகாய்கள் போடுவான்... அவன் அதில் கசகசாபோட்டாலும், தேங்காய் போட்டாலும் எனக்கு என்ன என்று பீபியைப்போல் அலட்சியமாகக் கஜல் படுத்துக் கிடப்பாள்... அவள் பில்கிராமியுடன் இணைவதாகத் திருமணக் கனவு காணாமலிருந்தால், பான் சாஹிபைப்போல் அவனையும் மறந்துவிடலாம். ஆனால் இப்போது விதவைக்கோலம் பூண்டு, துயரம் கொண்டாடி, உலகைத் தியாகம் செய்து விடுவது என்ற முடிவுக்கு வந்து விட்டாள். இன்று பதினான்காவது வயதிலேயே அவளுடைய மாங்கல்யம் பறிக்கப்பட்டுவிட்டது.

கண்ணாடியில் அவள் தனது முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். அழுததால் கன்னங்கள் சிவந்துவிட்டன. முடி கலைந்து கிடந்தது. பற்களும் விழுந்துவிட்டது போலவும், முடி வெள்ளை நிறமாகிவிட்டது போலவும் அவளுக்குத் தோன்றியது. விதவைகளின் தோற்றமும் இவ்வாறுதான் இருக்கும். அவளுடைய கையிலிருந்த வளையல்கள் குலுங்கின. அவள் தனது வளையல்களை உடைத்துவிட்டாள். வெகுநேரம் வரை அம்மாவின் பெட்டியில் தேடி, ஒரு வெள்ளைச் சேலையும், கருப்புநிற பிளவுசும் எடுத்துக் கொண்டாள்.

அவற்றை அணிந்து கண்ணாடியில் பார்த்தபோது மீண்டும் அழுகை வந்துவிட்டது. அல்லாஹ்! யாரும் அவளுக்கு ஆறுதல் சொல்லவும் வரவில்லை. அவளைப் பார்த்துச் சிரிப்பவர்கள் எல்லாம் எங்கே போய்விட்டார்கள். அம்மா—அம்மா உயிரோடு இருந்தால் அவளுடைய கோலத்தைப் பார்த்து, நெஞ்சு பிளக்கக் கதறித் துடித்திருப்பாள். பதினான்காவது வயதிலேயே விதவைக் கோலமா என்று ஒப்பாரி வைத்திருப்பாள்.

இந்த அழுகையில் பெரும் வேதனை இருந்தது. சாயா உள்ளே வந்து அவளை மார்புடன் அணைத்துக் கொண்டு தேற்றினாள்.

"நீ அழுதழுது செத்துவிடுவாய். உன் அப்பன் உன்னை ஓயாமல் அடிக்கிறானே," சாயாவின் ஆறுதல் மொழி எரிந்து கொண்டிருந்த அவளுடைய நெஞ்சில் குளிர்ந்த நீரைத் தெளித்தது. எத்தனை நேரம்வரை சாயாவின் மார்பில் சாய்ந்திருந்தாள் என்பது தெரியவில்லை. அவளுடைய கைகால்கள் குளிர்ச்சியடைந்து போகவே ஒரு பிணத்தைப்போல் அவள் கீழே சாய்ந்து விட்டாள்.

பீபியின் வீட்டுக்குத் தகவல் சென்றதும் வாஹித் ஹுசேன் ஓடோடியும் வந்தார். அவர் கஜலைப் பெரிதும் வெறுக்கவே செய்தார் என்றாலும் அவள் மடிவதை அவரால் பார்க்க முடிய வில்லை. டாக்டர் வந்தார். சாயா மருந்து கொடுத்தாள். அவளுக்கு மூர்ச்சை தெளிந்தது. பீபியும் ஃபவுசியாவும் அவளைப் பார்க்க வந்தார்கள்.

உலகம் கஜலைப் பார்த்து முகத்தைத் திருப்பிக் கொள்ளலாம். ஆனால் பீபியின் வயிற்று நெருப்பல்லவா? செத்துப்போன பெண்ணின் ஒரே நினைவுச் சின்னம். அவருடைய இரண்டு பெண்களும் ஒவ்வொரு பாம்பைப் பெற்று அவருக்காகவே விட்டு விட்டுப் போய்விட்டார்களே… அவளுடைய கல்லறைக்கு மாலை சூட்டுவதற்காகவே வந்திருப்பதுபோல் கஜல் பார்த்தாள்.

ஃபவுசியா அங்கு உட்கார்ந்திருந்த நேரம் முழுவதும் சிரித்துக் கொண்டே இருந்தாள். அவளுடைய அழகான கண்கள், நல்ல உடலமைப்பு, அமைதியில்லாக் கைகள் எல்லாமே சிரிப்பால் விரிவடைந்தன. அவளுக்கு அழவே தெரியவில்லை என்பது போல் இருந்தது.

இந்த மருமகன் தன் வீட்டுக்கு வந்த நேரத்தைச் சொல்லிச் சொல்லிப் பீபி அழுதார். எந்த வேசிக்குப் பிறந்தவனோ தனது மகளின் சம்பாத்தியத்தைச் சாப்பிடுகிறான் என்று ஓலமிட்டார். அன்று பீபிக்கும் ஹுமாயூனுக்கும் மீண்டுமொரு முறை சண்டை வந்தது. அவன் மகளை இழிவான வேலையில் ஈடுபடுத்தி வயிறு வளர்க்கிறான் என்று பீபி சொல்ல, ஹுமாயூனும் பல குற்றச் சாட்டுகளைச் சுமத்தினான். நீங்கள் மகளின் சீர்வரிசையில்

என்னை ஏமாற்றிவிட்டீர்கள்... வாஹித் ஹுசேனும் அஹமத் ஹுசேனும் நடத்திய காமவெறி ஆட்டங்களுக்கு அளவு ஏது... கவிதாலயத்தில் வாழ்ந்த எல்லாக் கவிஞர்களும் வேசிகளுக்குப் பிறந்தவர்களே.. அவர்கள் காமலீலைகள் தவிர வேறு என்ன சாதனை புரிந்திருக்கிறார்கள்..?

இந்தச் சச்சரவில், கவிதாலயத்தின் கதவுகள் மீண்டும் கஜலுக் காகத் திறந்துகொண்டன. அவள் பாட்டியை அணைத்துக் கொண்டு கதறி அழுதாள். பிறகு மாமி, நொண்டி அத்தை ஆகியே ாரிடம் ஒப்பாரிவைத்துத் தந்தையின் கொடுமைகளை விவரித்தாள். அவனே என்னை ஒவ்வொரு இடத்திற்கும் பலவந்தமாக அனுப்பி வைத்தான் என்று குற்றம் சுமத்தினாள். பிறகு பில்கிராமின் நிகழ்ச்சிகளையும் விரிவாகச் சொல்லவே நொண்டி அத்தை ஓர் அறை அறைந்து அவளுடைய வாயை மூடினாள். மாமி அழுத வாறே பீபியிடம் கூறினாள்.

"பீபி! ஆண்டவனுக்காகக் கஜலைப் பேசாமல் இருக்கச் சொல்லுங்கள். ஃபவுசியாவின் பாரத்தை நாங்கள் இறக்கிவிட வேண்டும்."

அன்று முதல் பீபியின் அறிவுரையின் பேரில் கஜல் இந்த நிகழ்ச்சிகளைப் பேசுவதில்லை. அவற்றை மறந்துவிடவும் முயன்றாள்.

அதற்குப் பிறகு ஃபவுசியா மெட்ரிக் தேர்வில் வெற்றி பெற்றதும், அதைக் கொண்டாட ஒரு விருந்து கொடுக்கப்பட்டது. கஜல் பில்கிராமியின் சோகத்தில் மூழ்கியிருந்தாள். ஆனால் அவள் யாருக்கும் எதுவும் சொல்லவில்லை.

சாதாரணமான சேலை ஒன்றை அணிந்து, வெறுங் கைகளுடன் கஜல் அந்த விருந்துக்குச் சென்றாள். மங்கையர் கூட்டத்தைக் காண அவளுக்கு அச்சமாக இருந்தது. கூச்சல், பூசல்கள், வசைமொழிகள், பொறாமை எல்லாம் அங்கு இருந்தன. ஆண்கள் வட்டத்தைப்போன்ற ஒற்றுமையும், பாச உணர்வும் பெண்டிரிடம் இருக்கவில்லை. அங்கு கஜலுக்குப் பெருமதிப்பு அளிக்கப்பட்டது. கண்காட்சியில் வைக்கப்படும் பத்துத் தலை களும் பன்னிரெண்டு கைகளும் கொண்டதொரு விசித்திரமான பொருளைப் போலவே அவளும் மங்கையர் கூட்டத்தில் பார்க்கப்பட்டாள்.

சாந்த் அக்கா இரண்டு மாத காலம் வரை அனந்தகிரியின் உடல்நலக் கூடத்தில் தங்கி இருந்துவிட்டு வந்திருந்தாள். ஆனால் இப்போதும் சஞ்சீவாவின் வருகையை எதிர்நோக்கினாள். இத்தனை அழகான ஆண்களை விட்டுவிட்டு சாந்த் அக்கா இந்த சஞ்சீவாவுக்காகத தன்னை அழித்துக்கொண்டுவிட்டாள்.

ஆனால் இது எத்தகைய உணர்வோ?

கஜலுக்கும் பான்மாமாவைப் பிடித்திருந்தது. பில்கிராமிக்கு அவள் அனைத்தையுமே கொடுத்துவிட்டாள். இதற்குப் பிறகும் பில்கிராமியின் நினைவு அவள் இதயத்தைத் துன்புறுத்தவில்லை. அதற்கு மாறாக இனி அவன் வந்தால் அவனுடைய முகத்தில் துப்பிவிட வேண்டுமென்று அவள் மனம் விரும்பியது.

இன்னும் விருந்தாளிகள் வரத் தொடங்கவில்லை. சாந்த் அக்கா தன் அறையில் சாய்வு நாற்காலியின்மீது படுத்தவாறு ஓர் ஆங்கில நவீனத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய முகம் எப்படி மாறிவிட்டது. சிறிய இறுகிய ரவிக்கையில் அவள் மார்பகம் முன்பு செழிப்பாக இருக்கும். கவர்ச்சியைத் தூண்டும். இப்போது அவை உலர்ந்துவிட்ட கைகளுக்கு இடையில் தொங்கின. அவளுடைய அழகு இப்போது நிழற்காட்சியாகி விட்டது. உலர்ந்த தலையில் செத்த எலியைப்போல் ஒரு சிறிய சடை தொங்கியது. கன்னங்களில் குழிகள் விழுந்துவிட்டன. உடல் மஞ்சளடைந்து விட்டது.

விருந்துக்கு வந்த வனிதைகள் அனைவரும் மிகுந்த வியப்புடன் ஒப்பனை இல்லாத பொலிவிழந்த சாந்தின் முகத்தைப் பார்த்துவிட்டு வண்ணமும் செழிப்பும் கொண்டிருந்த கஜலைக் கண்டார்கள். ஒருவருக்கொருவர் செவிகளில் கிசுகிசுத்துக் கொண்டார்கள்.

"ஆமாம், இங்கு எல்லாமே தாறுமாறாகவே இருக்கும்."

"கவிதாலயத்தில் என்றும் காதல் விளையாட்டுகளுக்குக் குறைவேயில்லை."

"இவ்வளவு வருமானம் வருகிறதே. அதற்காகவே இப்படி ஆடம்பரமாக விருந்துகள் நடத்துகிறார்கள்."

சாந்த் ஓர் இடத்தில் களைப்புடன் உட்கார்ந்து கொண்டாள். அதனால் அவள் எதையும் செவியுற வாய்ப்பில்லை. ஆனால் வேலை செய்வதற்குக் கஜல் இங்குமங்கும் ஓடிக் கொண்டிருந்தாள்.

பெண்கள் அவளை ஆர்வத்துடன் அருகில் அழைத்துப் பார்த்தார்கள்.

"இவள் மிஸ்கீன் அலி ஷாவின் பேத்தி, கஜல்"

"ஆமாம். பிரபல நாட்டிய நடிகை கஜாலா."

"இப்போது குமாரி கஜல் ஆகிவிட்டாளே!"

"திருமதி கஜலாகவும் இருக்கலாம்..."

எல்லாரும் சிரித்துவிட்டார்கள்.

"காதும் கைகளும் வெறுமையாக இருக்கின்றனவே, ஏனோ?"

"புதிய நாகரிகமே இதுதானோ, என்னவோ?"

"ஆனால் கௌரவமான பெண்களுக்கு மத்தியிலும் ஒப்பனை

செய்து கொண்டு குதிக்க வேண்டுமா?”

சாந்தைப்போல் முழுமையான சயரோகத்தைத் தானும் அடைந்துவிட வேண்டும். தன் தலைமீது கூரை விழுந்துவிட வேண்டும். பூமி வெடித்துத் தான் சமாதியாகிவிட வேண்டும் என்றெல்லாம் அவள் துடித்தாள். ஆனால் அப்படி எதுவும் நடைபெறவில்லை.

குழப்பத்துடன் புகலிடம் தேடி அவள் சாந்திடம் ஓடினாள். அவளை அணைத்துக் கொண்டு நன்றாக அழ வேண்டும். குடும்பத்தைச் சார்ந்த எல்லோருடைய பிணப்பெட்டிகளும் எதிரில் வைத்திருப்பதுபோல், கதறித் துடிக்க வேண்டும் என்று அவள் மனம் விரும்பியது.

இன்று, நீண்ட நாட்களுக்குப் பிறகு சாந்த் அக்கா அவளுடன் பேசினாள். பாரத் கலைக் குழுவைப் பற்றி விசாரித்தாள். கஜலும் எதையும் மறைக்காமல பான் சாஹிபின் சதிகள் முதல் பில் கிராமியின் துரோகம் வரை எல்லாவற்றையும் சொல்லி முடித்தாள். “பில்கிராமி கிடைத்துவிட்டால் அவனைத் துண்டு துண்டாக வெட்டிவிட வேண்டும் என்று மனம் துடிக்கிறது” அவள் ஆவேசத்துடன் கூறினாள்.

“ஹூம்...” சாந்த் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிவிட்டாள். “பில்கிராமிக்கு நீ உனது உடலை மட்டுமே கொடுத்தாய். வேறெதுவும் கொடுக்கவில்லை. இது நல்லதுதான்!”

அவள் என்ன சொல்கிறாள் என்பது கஜலுக்குப் புரியவில்லை. “இல்லாவிட்டால் என்னைப் போல் இரண்டு மடங்கு தீயில் வெந்திருப்பாய்!”

சாந்த் சொல்லிக்கொண்டிருந்தாள். “நான் அவனைப் பல முறை வேண்டியும் என்னை எப்போதும் தொடவில்லை, ஆனால் என்னுடைய எல்லாவற்றையும் கொண்டு சென்று விட்டானே!”

“உண்மையாகவா?” கஜலுக்கு வியப்பாக இருந்தது. சாந்தைப் போன்ற அழகான மங்கையைத் தொடாமல் போகும் ஒரு மனிதன் இருக்க முடியுமா?

“ஆமாம்—அவன் என்மீது நம்பிக்கை கொண்டிருக்கவில்லை.”

இன்று நிலைமையே எதிர்மாறாக இருக்கிறது. சாந்தின் கண்கள் உலர்ந்திருந்தன. கஜல் அழுது கொண்டிருந்தாள். தனது ஏமாற்றங்களுக்காகக் கண்ணீர் வடிக்கிறாள் என்று சாந்த் நினைத்தாள். “நான் எனது இருபத்தி ஆறாவது வயதிலேயே மரணத்தின் கரைகளில் நிற்கிறேன். கஜல்! நீ இப்படித் துயரப் படுவதை விட்டுவிடு. தன் தலைவிதியைத் தானே தீர்மானிக்கும் துணிவு ஒவ்வொரு பெண்ணிடமும் இருப்பதில்லை. அதனால் உன்னைப் பீபியின் கையில் ஒப்படைத்துவிடு. இல்லாவிட்டால்

ரஷீத் மாமாவும், உன் அப்பாவும் தங்கள் வெற்றிப்பூட்டுகளைத் திறக்க உன்னைச் சாவியாகப் பயன்படுத்துவார்கள். பிறகு குப்பையில் வீசியெறிந்து விடுவார்கள்.”

கஜலுக்கு எதுவுமே புரியவில்லை. அவள் சாந்தின் நடுங்கும் உதடுகளைப் பார்த்தாள். அவளுடைய வெள்ளைத்துணி போன்ற முகத்தில் மடிப்புகள் விழுந்துவிட்டன. பெரிய பெரிய பொன்னிறக் கண்கள், கறுப்பு வட்டங்களில் மூழ்கும் நிலையில் இருந்தன.

வீட்டிற்கு வந்ததும் கஜல் முதல் வேலையாக பில்கிராமியின் சோகத்தை அறவே மறந்துவிட்டாள். தன் கைகளில் வளையல் களைப் போட்டுக் கொண்டாள்.

பீபியின் வீட்டில் பெரிய ஆரவாரம் இருந்தது. சாந்த், கஜல் ஆகியோரின் முடிவைப் பார்த்தபிறகு, ஃபவுசியா, ரஜியாவுக்கும் பீபிக்கும் நெஞ்சச்சுமைபோல் ஆகிவிட்டாள். எப்படியும் விரைவில் அவளுடைய திருமணத்தை நடத்திவிட வேண்டும் என அவர்கள் விரும்பினார்கள். எப்போது பார்த்தாலும் ரஜியா, ரஷீத், வாஹித் ஹுசேனுக்கு இடையில் முணுமுணுப்புகள் நடக்கும். நிலைமை களும் சீர்கேடாகிவிட்டன. தொண்டர் படைக்கும் இந்தியப் படைகளுக்கும் இடையில் மோதல்கள் நடப்பதாகச் செய்திகள் வரத்தொடங்கின.

காசிம் ரஜ்வி, மைதானத்தில் தான் போரிடத்தயார் என்று அறிவித்து விட்டார். இத்திஹாதுல் முஸ்லிமீனின் பலத்தை அறிந்து ஆலாஹஜ்ரத்தும் அத்துடன் ஒப்பந்தம் செய்துகொள்ள நினைத்தார். ரஷீதுக்கு வெளியில் பல தொல்லைகள் இருந்தன. பையன்களின் வீட்டுக்காரர்கள் மறுப்புத் தெரிவிக்கும் ‘சிவப்பு உறை’களையே அனுப்பினார்கள் என்றாலும், ஒருநாள் ஃபவுசி யாவின் விதி நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. பையன் லண்டனி லிருந்து டாக்டர் பட்டம் பெற்று இப்போதுதான் விமானத்தை விட்டு இறங்கியிருக்கிறான். தந்தையின் குடும்பச் சொத்தும் இருந்தது. மதிப்புமிக்க பரம்பரைதான். ஐம்பதாயிரம் ரூபாய் வரதட்சணை, ஒரு பங்களா, நாற்பது தோலா தங்கம் என்று இந்தப் பேரம் படிந்தது.

ரஷீதும் ரஜியாவும் தங்கள் அதிருஷ்டத்தைக் கண்டு வியந்தார்கள்.

நிச்சயதார்த்தத்திற்காக நொண்டி அத்தை உறவினர்களுக்கு நூறு கடிதங்கள் வரை அனுப்ப வேண்டும் என்றார். அவர்கள் அனைவரும் இந்தக் குடும்பத்தின் பெண்களை இழிவாகக் கருதுபவர்கள். இப்போது இதே குடும்பத்தின் கற்புக்கரசி ஒருத்தி உயர்ந்த இடமொன்றின் மணமகளாகப் போகிறாள் என்று பறை சாற்றவே இம்மடல்கள் உதவும்.

வாஹித் ஹுசேன் கவிதைகளை மறந்து கடிதங்களை எழுதி னார். பிறகு ஆலோசனைக் குழுவில் படிக்கப்பட்டு, யாருக்கு எந்தக் கடிதம் என்று முடிவு செய்யப்பட்டது. எந்த உறவினருக்கு எந்த வாசகம் எழுதுவது, அழைப்பின் முறை எப்படி இருக்க வேண்டும் என்பதை எல்லாம் அந்தக் குழுவே தீர்மானித்தது.

இந்த நிகழ்ச்சிக்கு உஜாலா பேகம், அஹ்மத் ஹுசேனையும் நசீரையும் அழைத்துக்கொண்டு வரவேண்டும், நசீரின் பிறப்பு முதல் இரு குடும்பங்களுக்கு இடையில் ஏற்பட்டுவிட்ட விரிசல் இப்போது இணைக்கப்பட வேண்டும் என்று நொண்டி அத்தை விரும்பினார். அந்தக் கேடான வழியில் பிறந்தவன் பி.ஏ. தேர்வில் வெற்றிபெற்று வாலிபனாகிவிட்டான். ஆனால் உஜாலா பேகம் கவிதாலயத்தின் படியை அவன் தாண்ட அனுமதிக்கவில்லை. அது எதிரிகளின் பாசறை என்று ஆணையிட்டுச் சொல்லி இருந்தார். இந்தச் செய்தியின் இறகு ஒரு காகமாக மாறி வாஹித் ஹுசேனின் செவிகளை வந்தடைந்ததும் அவரும் அந்த வீட்டுக்குச் செல்வதில்லை என்று முடிவெடுத்தார். நோய், மரணம் சுப நிகழ்ச்சிகளின்போது கடிதங்கள் மட்டுமே அனுப்பப்பட்டன. ஆனால் நொண்டி அத்தை வரை சிறுசிறு தவல்களும் வந்துசேரும். அஹ்மத் ஹுசேன் நசீருக்கும் ஆட்சியின் நுணுக்கங்களைக் கற்றுத் தந்துவிட்டார். உஜாலா பேகம் அவனுக்குத் கவிதையார்வம் ஏற்படவேண்டும் என்று முயலுகின்றார். அப்போதுதானே இதே பரம்பரைதான் அவன் என்ற சான்றிதழ் கிடைக்கும், இல்லா விட்டால் ரஷீத்தைப் போன்ற கிளர்ச்சிக்காரனாக அவன் வர்ணிக்கப்படுவான்.

இந்தக் கடிதம் ஔரங்காபாத்தை அடைந்தபோது உஜாலா பேகம் ஏதோ ஒரு திட்டத்தில் நசீரை மட்டும் அனுப்பி வைத்தார்.

இப்போது ஃபவுசியாவின் நிச்சயதார்த்தத்துக்கு வேறு எந்த உறவினர் வந்தாலும் வராவிட்டாலும் கவலைஇல்லை என்ற நினைப்பில் எல்லாருமே நசீரை உபசரிக்கத் தொடங்கினார்கள். மேலும் பெரியப்பாவைச் சந்திக்க முதல் முறையாகத் தன் குடும்ப வீட்டிற்கு வந்திருக்கிறான் அவன்!

ரஜியா அவனுடைய கழுத்தை நெறித்து விடவேண்டும் என்றே துடித்தாள். ஆனால் வெளியுலகத்திற்காக நாடகம் ஆட வேண்டுமே! கஜலை வீட்டிற்கு அனுப்புமாறு ஹுமாயூன் விடுத்த வேண்டுகோளை பீபி நிராகரித்துவிட்டாள். 'இங்கே இவ்வளவு வேலைகள் இருக்கின்றன. கஜலாவது வீட்டில் இருக்க வேண்டும்' என்று சொல்லிவிட்டார்.

# 21

மூளையில் திடீரென ஒரு மின்னல் மின்னியது. பிறகு அது பரவியது. பிறகு சிவப்பு நிற நதியாக மாறிப் பாய்ந்தோடியது.

சற்றே வளைந்த செழிப்பான உதடுகளுக்கு அமைதி இல்லை.

பின்னணியில் பவுடர் பூசப்பட்ட முகத்தின் கவர்ச்சி, அதற்குப் பின்னால் கருநிற முடியின் குன்றுகள். அதனடியில் தங்க நிற முத்துக்களின் காதணி. நீர் ஊற்றுப்போல் வண்ணக் கதிர்கள் விழுகின்றன. கண்கள்- கண்கள்- காட்டுமான் போன்ற கண்கள்! மாந்திரிகச் சக்திநிறைந்த, கருணையில்லாத, அலட்சியப் போக்குக்கொண்ட கண்கள்! அந்தக் கண்கள் மட்டுமே நசீரின் சிந்தனையில் நிலைத்து நிற்கவில்லை. அவளுடைய அழகும் மயக்கியது. ஆனால் இந்த ஈர்ப்புச்சக்தி அவளுடைய நிறத்திலா, அல்லது கண் இமைகளிலா என்பதுதான் தெரியவில்லை. கண்கள் வெட்டுண்ட மதியைப்போல் சற்றே திறந்து இருந்தன. முதலில் பார்க்கும்போது, அவள் கண்ணீரைத் துடைத்துவிட்டு வந்திருப்பது போல் தோன்றும். ஆனால் அவளுடைய புன்சிரிப்புத் தவழும் உதடுகள் எப்போதும் அவன் கண்களைத் ஏமாற்றிவிடும்.

உள்ளே அறையில் கண்ணாடித் தட்டுகள் உடைந்தனவா- சமுக்காளத்தின்மீது உட்கார்ந்தவாறு எந்தெந்தப் பேச்சுக்கோ சிரித்து கொண்டிருந்தாள்.

அவன் இங்கே வந்தபோது ஷாஹீன் அவனுக்கு எச்சரிக்கை விடுத்திருந்தான். நகரச் சாலைகளில் சைக்கிள் ஓட்டக்கூடாது; கஜலுடன் நட்புப் பாராட்டக்கூடாது. சாலைகளில் சைக்கிள் ஓட்டாமல் இருப்பதும், கஜலுடன் நட்புக் கொள்ளாமல் இருப்பதும் பாதுகாப்பின் எல்லைகள்—அதை மீறும்போது வாழ்க்கைக்கு உத்திரவாதம் தரமுடியாது.

நசீர், ரஷீதின் தம்பி என்றாலும் ஒரே நாளில் ஷாஹீனின் சகோதரனாக மாறிவிட்டான். அவர்களுக்குள் எல்லை மீறிய நட்பு வளர்ந்தது. வேடிக்கைப் பேச்சுகள், வாலிபர்களின் இரகசியமான கிசுகிசுக்கள். இந்தத் தடைகளை எல்லாம் அவர்கள் தாண்டி

விட்டனர். ஷாஹீன் இரண்டு மூன்று நாட்களிலேயே உஸ்மானியா பல்கலைக் கழகத்திலிருந்து குன்டிபேட்டை வரை எல்லாவற்றையும் அவனுக்குக் காண்பித்துவிட்டான். இப்போது அவர்கள் தினமும் பம்பாய் டாக்கீஸின் 'கிஸ்மத்' திரைப்படத்தில் கிழவி மும்தாஜ் ஷாந்தியைப் பார்த்துப் பார்த்து அலுத்துவிட்டார்கள். அதனால் தடை விதிக்கப்பட்ட பொருட்களைச் சுவைத்துவிட வேண்டும் என்று நசீர் முடிவு செய்தான். இந்தத்தடைகள் அர்த்தமற்றவை என்பது அவனுக்குத் தெரியும். ஷாஹீனோ அவனைக் கிராமத்தானாக நினைத்து முட்டாளாக்கிவிட முயன்றான். நசீர் ஹைதராபாத்தைப் பார்க்கவில்லை என்றாலும் உலகத்தைப் பார்க்கவில்லையா, என்ன? ஆனால் எதை எதைப் பார்த்திருக்கிறான். எந்தெந்தச் சுவையை அனுபவித்திருக்கிறான் என்று ஷாஹீனிடம் எப்படிச் சொல்ல முடியும்? விடுமுறைகளில் இன்பங்களைத் தேடிப் பம்பாய்க்குச் செல்வான். ஏனெனில் அப்பாவும் அவன் எல்லா சுகங்களையும் சுவைத்துவிட வேண்டும் என்பதையே விரும்பினார். அம்மாவும் அவனுடைய லீலைகளைக் கண்டு மகிழ்ச்சி மேலிடச் சிரித்துவிடுவார். பிறகு இமைகளைச் சுருக்கிப் பொய்க்கோபத்தில் சொல்லுவார்.

"பாழடைந்த மூஞ்சி! நீ அப்பாவைப்போல் ஆகிவிட்டாய்."

ஆனால் அவன் வெளியே சுற்றுவது அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. மரபுப் பழக்க வழக்கங்களை அவர் விரும்பினார். ஆண்கள் பகுதியில் ஆரவாரமும், நாட்டியம், இசை, கூத்து முதலிய நிகழ்ச்சிகள் நடப்பதும் அவருக்குப் பிடித்தது. அதனால் இளம் பெண்களின் ஒரு படையை மாளிகையின் ஒவ்வொரு திசையிலும் நசீருக்காக நிறுத்தி வைத்திருந்தார்.

இந்த மாளிகை ஔரங்காபாத்தின் ஒரு கிராமத்தில் இருந்தது. அந்தக் கிராமத்தில் ஒரு சிறிய புகைவண்டி நிலையமும் இருந்தது. அங்கிருந்து இருப்புப்பாதை கஜலின் நகரம் வரை வந்தது என்றாலும் நசீர் அவ்வழியே என்றும் .வரவில்லை. இப்போது அவன் பி.ஏ. தேர்வில் வெற்றி பெற்றுவிட்டான். தன் தந்தையுடன் நகரத்தின் கவியரங்குகளுக்குச் சென்றான். தன் பண்ணையைச் சுற்றி வந்தான். கோதுமைக் கதிர்கள் முதல் நங்கையர் வரை எல்லாவற்றையும் அறிவான். இப்போது அம்மாவையும் அப்பாவையும் இணங்க வைத்து ஹைதராபாத் வரை வந்துவிட்டான். பிரபல கவிஞர்களின் ஈரடிகளுக்கு 'ஒட்டு' வைத்து கவிதை இயற்றித் தன் நகரில் புகழ்பெற்றிருந்தான். 'அவன் ஒரு வேளை குலாம் ரசூலின் மகன்தானோ' என்று நீண்ட காலமாக அஹ்மத் ஹுசேனின் மனதில் இருந்த அச்சமும் நசீரின் கவிதை ஆர்வத்தைக் கண்டு நீங்கிவிட்டது. ஏனெனில் கவிதை பாடுவது அஹ்மத் ஹுசேனின்

மரபு வழக்கமாகும். நசீர் தன் மகன் அல்ல என்ற ஐயம் இப்போது அவருக்கு இல்லை.

இன்று அவனுடைய கவிதை உள்ளம் எழுச்சி பெற்றிருந்தது. கஜலின் வளைந்த செழிப்பான உதடுகளை அவன் வர்ணிக்க விரும்பினான். ஏராளமான பெண்களை அவன் பார்த்துப் பேசிச் சுவைத்து மகிழ்ந்திருக்கிறான். உஜாலா பேகம் சுற்றி வளைத்து, பிடித்து வந்து அவனுக்காகச் சேகரித்த பெண்களிலிருந்து இவள் முற்றிலும் மாறுபட்டவளாக இருக்கிறாள். மின்னலைப்போல் ஒளிதரும் இந்தப் பெண்ணிடம் அவனுக்குப் பயமும் இருந்தது. ஏதோ ஒரு காந்தக் க்வர்ச்சி அவள் திசையில் இழுக்கவும் செய்தது.

இன்று ரஷீத் அவனிடம் நெருங்கிப் பழக வேண்டுமென விரும்பினான். பெரியவர்கள் போல வருங்காலத்தைப் பற்றிப் பேசினான். சிறிது கேலியும் செய்தான். கையைப் பிடித்து முதுகில் செல்லமாக அறைந்தான். ரஷீத் அண்ணனுடன் அவனும் வேடிக்கையில் பங்கு பெற்றான் என்றாலும் கஜலுடன் நெருக் கத்தை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டான்.

தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த ரஷீத் அண்ணன் தனது வீர சாகசங்களை அளந்து கொண்டிருந்தான். சீமைக் காரையின் ஆதாயம் குறித்தும், பெட்ரோலில் ஏற்வட்ட இழப்பைப் பற்றியும் விமர்சனம் செய்தான்.

பிறகு மருந்து விற்பனையில் எல்லாம் சரியாகி விட்டதுபோல் பேசி அவன் புன்னகை செய்தான். எதிரில் கஜல் நின்றுகொண் டிருப்பதைப் பார்த்ததும் நசீர் தடுமாறினான். அவள் கையைப் பிடித்து “நீ மிகவும் அழகாக இருக்கிறாய்” என்று சொல்லவேண்டும் என்று நினைத்தான்.

உண்மையிலேயே கலவரமடைந்த அவன் எழுந்து நின்றான்.

“என்ன ஆகிவிட்டது” மருந்துகளின் பளுவின் கீழ், மூச்சு இரைத்தவாறு ரஷீத் கேட்டான்.

“ஒன்றுமில்லை...” எழுந்துநின்றுவிட்ட செயலை மறைக்க அவன் வெட்கத்துடன் தனது ஆடைகளைத் தட்டிவிட்டான்.

“என்ன... என்ன...?” திடீரென எல்லாரும் கூடிவிட்டனர். உள்ளே சிரித்துக் கொண்டிருந்த பெண்களும் தாழ்வாரத்திற்கு வந்தார்கள். ஒருவரையொருவர் தள்ளியவாறு முன்னே வந்து ஆடைகளைத் தட்டிக் கொண்டிருந்த நசீரைப் பார்த்தார்கள். அவனுடைய சட்டையிலிருந்து பாம்பு வெளிவரும் என்று நினைத் தார்கள் போலும்! அவர்களுக்கு இடையில் இரண்டு உதடுகள் அசைந்தன ‘என்ன ஆயிற்று?’

“இன்று நீ அழகாக இருக்கிறாய்!” இம்முறையும் அவனால்

சொல்ல முடியவில்லை.

"எனக்குக் கவலை இல்லை. எங்கள் மீது பொருளாதாரக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டாலும் ஓர் ஆண்டுகாலம்வரை சீமைக்காரையின் பற்றாக்குறையை என்னால் சமாளிக்க முடியும்" ரஷீத் சிகரெட்டைப் பிடித்தவாறு பேச்சின் தொடர்ச்சிக்கு இணைப்புத் தந்தான்.

"ஆனால் ஒரு நிமிடம்கூட எந்த நஷ்டத்தையும் என்னால் சமாளிக்க முடியாது" என்று நசீர் சிந்தனைசெய்தான்.

இப்போது பெண்கள் நின்றுகொண்டிருந்த இடத்தில் வண்ணக் கறைகள் நர்த்தமாடின. நீல மலர்கள் அச்சிட்ட திரைக்கு அமைதியே இல்லை. காற்று வீசும் போதெல்லாம் திரை அசைவு கண்டது. அழகான மென்மையான கால்கள் இங்கும் அங்கும் ஓடுவது தெரிந்தது. எல்லாரும் அந்த அறையை நோக்கியே இழுக்கப்பட்டுச் சென்றார்கள். ஒரு பணியாளனின் கையில் மலர்க் கூடை இருந்தது. இன்னொருவன் சலவைத் துணிகளை எடுத்துச் சென்றான். பீபி ஒருபுறம் அமர்ந்து, தேங்காய், கல்கண்டு, வெற்றிலை ஆகியவற்றைத் தட்டுகளில் நிரப்பினார். நொண்டி அத்தை ஊன்றுகோலுடன் சமையல் வேலைகளை மேற்பார்வை இடுகிறார். விருந்தாளிகள் வருவதற்கு இன்னும் நேரம் இருக்கிறது என்றாலும் அந்தப் பகுதி வாழ் குழந்தைகள் இசை மேளத்தைக் கேட்க நுழைவாயிலில் காத்து நின்றார்கள். தெரு முழுவதும் கதவுகளிலும் ஜன்னல்களிலும் பெண்கள் வேடிக்கை பார்க்கக்கூடி விட்டார்கள்.

அடிக்கடி அறைக்குள் ஓடிச் சென்ற ஒரு சிறுமியை மடியில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நசீரின் இதயம் துடித்தது. அவளுடைய மூக்கு ஒழுகிக் கொண்டிருந்தது. ஆடைகளில் அழுக்கேறி விட்டது. அவளைப் பிடிக்க அவன் தாவிச் சென்ற போது தலையில் திரைமாட்டிக் கொண்டது. அவனுடைய பார்வை உள்ளே பாய்ந்து சென்றது. அங்கு கஜல் மற்ற பெண் களின் நடுவில் உட்கார்ந்தவாறு கேட்டாள்.

'நான் எப்படி இருக்கிறேன்?'

'நீ இன்று மிகவும் அழகாக இருக்கிறாய்...' ஆனால் எல்லாருக்கும் முன்னால் இதை அவன் எப்படிச் சொல்ல முடியும்?

"பீபி! ஃபவுசியாவுக்குச் சிவப்புச் சேலை கட்டிவிடவா? ரோசா நிற ஜார்ஜெட் சேலைதான் எடுப்பாக இருக்கும் என்று கஜல் சொல்கிறாள்!" ரஜியா மிகவும் குழப்பத்துடன் மாமியாரிடம் கேட்கிறாள்.

ஃபவுசியாவைப் பார்க்கச் சம்பந்திகள் வருகிறார்கள், எனவே

அவளை அலங்கரிக்கும் பொறுப்பைக் கஜல் ஏற்றுக் கொண் டிருந்தாள். அவளை ஒவ்வொரு கோணத்திலிருந்தும் அழகு படுத்தினாள். அத்துடன் பெண்களின் இடையே எழுந்த சிரிப்பொலிகளிலும் பங்கு கொண்டாள். .

பெண்களை அலங்கரிப்பது முட்டாள்தனமானது. எரியும் தீயின் மேல் உறை ஒன்று ஏற்றிவிடுவது போல்! முழு அலங்காரத் திற்குப் பிறகும் ஃபவுசியா கஜலுக்கு முன்னால், நடுப்பகலில் மினுமினுக்கும் விளக்கைப் போலவே இருந்தாள். அவர்கள் ஃபவுசியாவை விட்டுவிட்டு கஜலைத் தேர்ந்தெடுத்துவிடக்கூடும். இந்த அபாயத்தையும் நசீர் கஜலுக்கு உணர்த்திவிட விரும்பினான்.

அவன் ஒரு வினாடியில் கணக்கில்லாத முறை கத்தினான்— 'ஹலோ, ஹலோ..' உலகம் முழுவதிலும் உள்ள தந்தி நிலையங்களை விழிப்படையச் செய்தான்! எல்லா நாட்டு வானொலிகளின் மூலமும் இச்செய்தியை ஒலிபரப்பினான். ஆனால் அது கஜலுக்குக் கேட்கவில்லை.

பெண் சிரிக்கும்போது ஒளி எதற்கு? இருப்பினும் ரஜியா அவர்களின் தலைகளின் மேல் தொங்கல் விளக்கை ஏற்றி யிருந்தான். அவளுடைய சீர்வரிசையில் வந்த விளக்கு அது. கீழே சமுக்காளத்தின் மேல் நகைப்பெட்டிகள், வளையல்கள், வித விதமான புடவைகள் திறந்து கிடந்தன. இந்த வண்ணங்களுக்கு இடையில் அவள் உட்கார்ந்து சிரித்துக்கொண்டிருந்தாள். எத்தனை நாட்களுக்குப் பிறகு இன்று கஜலுக்கு சிரிக்கும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. இன்று தன்னையே மறந்துவிட வேண்டும்; ஃபவுசியாவையே பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று அவள் விரும்பினாள்.

எந்த மடையன் கஜல் என்று இவளுக்குப் பெயர்சூட்டி இருக்கிறான். அவள் உமர்கய்யாமின் முழுக் கவிதைத் தொகுதி யிலும் அடங்க மாட்டாள்! அவளுடைய உடலின் ஒவ்வொரு அங்கமும் ஒரு தனிக் கவிதைத் தலைப்பு என்று நசீர் சிந்தனை செய்தான்.

அவனுடைய கற்பனை மேலும் செழுமையடைந்தது. இன்றி லிருந்து ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு முதல் கவிஞன், முதல் ஈரடிச் செய்யுளை இயற்றியபோது, அவன் கஜலின் அழகில்தான் மயங்கி இருப்பான்! கவிதாலயத்தின் சுவர்களில் தொங்கும் எல்லாக் கிழட்டுக் கவிஞர்களும் கஜலுடைய வருகையை எதிர்நோக்கி மடிந்துவிட்டார்கள். இன்று வரை கவிதை என்பது அவளுடைய தேடுதலாகவே இருந்தது- அவன் உட்கார்ந் திருந்த நிலையிலேயே களைப்படைந்துவிட்டான். எண்ணற்ற கவிஞர்களின் கவிதைத் தொகுதிகள் அவன் முன்னால் திறந்து

கிடந்தன. தனது பாலைவன அலைச்சலைக் கண்டு அவனுக்கே வியப்பு மேலிட்டது. பல நூற்றாண்டுகளின் பயணத்தை, கஜலின் கருநிற முடியின் குளிர்ந்த நிழலில் தங்கி ஓய்வெடுக்கவே அவன் விருப்பம் கொண்டான் போலும்! கஜலின் ஒரு பார்வைக்காக நூற்றுக்கணக்கான உருவங்களில் மாறினான்! நம்பிக்கையின் தீபத்தைக் கையிலேந்தி நகரம் நகரமாக அவளைத் தேடினான்! இன்று எத்தனையோ நூற்றாண்டுகளின் எல்லையைக் கடந்து இன்று இந்த அறைக்கு எதிரில் வந்து உட்கார்ந்திருக்கிறான். கஜலுக்கும் அவனுக்கும் இடையே இப்போது மூன்று கெஜ தூரமே இருக்கிறது. இந்த இடைப்பட்ட நேரத்தில் ஒரு கவிதையே தயாராகிவிட்டது. பென்சிலால் சிகரெட் அட்டையின் மேல் எழுதி அதை ரஷீத் அண்ணனுக்குப் படித்துக்காட்ட முடிவு செய்தான். அவனோ செங்கல், சிமென்ட் வியாபாரத்தைப் பற்றிப் பேசி அவனுடைய கவனத்தைத் திருப்ப முயலுகின்றான். அதனால் அவன் பேரொலி எழுப்பி அவருடைய வாணிப முறைகளைப் பாராட்டினான். ரஷீத் அண்ணனும் இடியைப்போல் சிரித்து அவனது கவிதையைப் புகழ்ந்தான். அப்படி இருந்தும் உள்ளே இருந்த எவருக்கும் அவனுடைய பாடலைக்கேட்டு ரசிப்பதற்கான நேரம் கிடைக்கவில்லை. கஜல் ஒவ்வொரு நகையாகத் தன் முகத்தில் வைத்துப் பார்த்துவிட்டு ஃபவுசியாவுக்கு அணிவித்தாள்.

பெண்கள் அழகாக இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் எப்போதும் சிரித்துக் கொண்டே இருப்பார்கள். இதற்கு நேர் மாறாக ஆண்கள் சிரிப்பதற்குச் சிரமப்படவேண்டிய நிலை. அதற்காக நகைச்சுவைத் துணுக்குகளின், வியப்பிற்குரிய செய்திகளின் ஆழ்கிணறுகள் வெட்டப்பட வேண்டும்! அப்போதுதான் ஒரு சிரிப்பு மேலெழுந்து வருகிறது. பெண்களோ ஒரு மோதிர டப்பியைத் திறந்ததும், கவிஞன் ஒருவன் தன் கஜலைப் படிக்க மறந்துவிடும் அளவுக்குப் பெரிதாகச் சிரிக்கிறார்கள்!

ரஷீத் அண்ணன் கள்ளச் சந்தையில் வாங்கிய மருந்து வாகனங் களுடன் நிற்கிறார். ஆனால் இந்தச் சுவையை இறக்கி வைத்திட நசீருக்கு உணர்வு இல்லை. அவன் மீதே பல நூறு மணங்கு எடையுள்ள பாறை இருக்கிறதே...

சிறிது சிறிதாக விழுந்த தூறல் பலத்த மழையாகி விட்டதுபோல் பெண்களின் சிரிப்பு மேலும் அதிகரித்தது. மனிதன் விரும்பினால் ஒரு மோதிரத்தைப் பார்த்து கற்பனையிலேயே ஒரு திருமண ஊர்வலத்தைக் கொண்டு வந்துவிடலாம்! அப்போது ஃபவுசியாவைச் சுற்றி உட்கார்ந்திருந்த பெண்களும், அந்த வினாடிகளின் கற்பனையில் மூழ்கிவிட்டார்கள். ஒரு மணமகன் மோதிரத்துடன் தனது கையைப் பிடிப்பான். தப்பிச்

செல்வதற்கான வழிகள் எல்லாம் அப்போது அடைக்கப்பட்டு விடும் என்று எண்ணினார்கள்.

நசீர் மீண்டும் சிமென்டுப் பைகள், மருந்துப்பெட்டிகள் முதலியவற்றை அகற்றிவிட்டுத் திரைக்குப் பின்னால் எட்டிப் பார்க்க விரும்பினான்.

தன் காதுகளில் இதற்குள் தொங்கலை அணிந்திருப்பாள்...

சாடிகளுக்குப் பக்கத்தில் நின்றவாறு கண்களை அகல விரித்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவ்வழியே செல்லும்போது அவள் சற்றே தயங்கி நின்றாள். "உங்களுக்கு என்ன வேண்டும்" என்று கலவரம் அடைந்திருந்த நசீரிடம் கேட்டாள். அவன் குழம்பினான். கஜல் பலமாகச் சிரித்துவிட்டாள். அவளுடைய சிரிப்பொலியைக் கேட்டு இங்குமங்கும் போய்க் கொண்டு இருந்தவர்கள் நின்றார்கள். அவன் கலவரமடைந்து ஷாஹீனின் அறையினுள் புகலிடம் தேடினான்.

நடு இரவில் விழிப்படைந்து, ஷாஹீனின் அறையை விட்டு வெளிவந்து தோட்டத்தின் படிக்கட்டுகளில் உட்கார்ந்து சிகரெட் புகைக்கலானான்.

நடுவானத்தில் மதி முழு ஒளியுடன் திகழ்ந்தது. காற்றின் அசைவுகள் இல்லை. வெப்பத்தால் மூச்சுத் திணறியது. முற்றத்தில் யாருமில்லை. குழந்தைகள் தூங்கிவிட்டார்கள். பிரியாணி, கோழிக்கறி, சமைக்கப்பட்ட கொப்பரைகள் அனைத்தும் எடுக்கப் பட்டுவிட்டன. ஃபவுசியாவின் வருங்கால மாமியாரும், நாத்த னார்களும் அவளுடைய அறையில், அவளுடைய நரம்புகளைத் தேடி எண்ணிக் கொண்டிருக்க, அந்த இடத்தில் பெண்கள் கூடியிருந்தார்கள். கொடுக்கல்-வாங்கல் பேரம் நடந்தது. வாஹித் ஹுசேன், ரஷீத், ஷாஹீன் ஆகியோர் தூங்கிவிட்டார்கள் போலும்.

"நீங்கள் எழுந்துவிட்டீர்களா? நான் மூன்று முறை அறைக்குள் சென்று பார்த்தேன்."

நசீர் திடுக்கிட்டுப் பார்த்தான். எதிரில் கஜல் முழு அலங் காரத்துடன் நின்றிருந்தாள். கண்களில் தூக்கக் கலக்கம் இருந்தது.

"நீங்கள்.. நீங்கள் என்னுடைய அறைக்கு வந்தீர்களா..? உண்மையாகவா?"

"ஆமாம். நீங்கள் சாப்பிடவில்லையே. உங்களுக்குச் சாப்பாடு கொடுக்காமல் நான் தூங்கக்கூடாது என்று மாமி ஆணையிட்டு இருக்கிறார்..."

"அப்படியானால் வாருங்கள். இங்கு உட்கார்ந்து இன்று இரவைக் கழிப்போம்" என்றான் அவன். கஜலுக்கு சிரிப்பு வந்து விட்டது.

"ஏன், சாப்பிட மாட்டீர்களா?" கஜல் கலவரமடைந்தாள்.

“எதற்காகச் சாப்பிட வேண்டும். இங்கு யார் என்னைப் பற்றிக் கவலை கொள்கிறார்கள்?” அவன் பொய்க் கோபத்துடன் சொன்னான்.

“ஏன், என்ன நடந்துவிட்டது?” கஜல் திடுக்கிட்டாள். அவள் உஜாலா பேகம்-வாஹித் ஹுசேன் ஆகியோரின் கருத்து வேறுபாடுகளை நன்கறிவாள். நசீர் வருவதற்கு முன் ஒரு பொதுக்கூட்டமே நடந்தது. நசீரை நன்கு உபசரிப்பது, அவனை கௌவரத்துடன் வைப்பது என்ற தீர்மானம் அதில் நிறைவேறி இருந்தது.

“இதையே பாருங்கள். நான் வந்து நான்கு நாட்களாகி விட்டன. ஆனால் நீங்கள் என்னுடன் பேசவே இல்லை.”

‘ஆம். இது சரியான கூற்றுதான்’ என்று கஜல்நினைத்தாள். அவள் நசீரை வேண்டுமென்றே தவிர்த்து வந்தாள். அவளுக்குத் தன் சமூக மதிப்புநிலை தெரியும். அதனால் குடும்பத்தினருக்கு எதிரில் மிகக் குறைவாகவே வருவாள். அதுவும் உஜாலா பேகம் கடுகளவு விஷயத்தை மலையாக்கி விடுகிறார் என்றும் அவள் கேள்விப்பட்டிருந்தாள்.

“நானா?” அவள் விப்புடன் கேட்டாள். “நான் என்ன? தங்களை உபசரிக்க ரஷீத் மாமா, மாமி, ஷாஹீன் ஆகியோர் காத்து நிற்கிறார்கள். என்னைப் போன்ற குறைவான அந்தஸ்து உடையவர்கள் உங்களை என்ன சொல்லி அழைப்போம்; எதைக் காட்டுவோம்?” அவள் சோகத்துடன் கூறினாள்.

“நீங்களா ஏழை?” நசீர் வியப்புடன் கேட்டான். “உங்களைப் போன்ற செல்வம் படைத்த பெண்ணை இதுவரை நான் பார்க்கவில்லை. இந்த உருவமைப்பு, இத்தனை அழகு, இத்தனை கவர்ச்சி” அவனுடைய மயக்கநிலை மேலும் அதிகரித்தது.

சுவரைப் பிடித்துக் கொண்டிருந்த கஜலின் கைகள் கீழே விழுந்து விட்டன. அவள் ஏதோ ஒரு மந்திரச் சக்தியால் கட்டுண்டவள் போல் பேசினாள்.

“என்னிடம் கவிதை பேசாதீர்கள். இன்று தூக்கம் அதிகமாக வருகிறது.”

“இதைக் கவிதை என்கிறீர்களா?” நசீருக்கு எரிச்சலாக இருந்தது. “நீங்கள் போய்த் தூங்குங்கள். விழிப்புடன் இருக்கும் போது என் பேச்சைக் கேளுங்கள்.”

அவளுடைய கால்கள் கல்லாகிவிட்டன. ஆனால் எப்படியோ நடந்து ஒர் இருண்ட அறைக்குள் வந்தாள். அங்கு மீதமாக இருந்த உணவும், உணவுப் பாத்திரங்களும் தட்டுகளும் வைக்கப்பட்டிருந்தன. அங்கு கிடந்த அழுக்கடைந்த மேசை விரிப்புகளின் மீது விழுந்து இதயம் பிளந்தது போல் அழுதாள்.

அவளுடைய அழகின் வர்ணனையைக் கேட்கும்போது ஒரு மந்திரச் சக்தி அவளைச் சூழ்ந்து கொள்ளும். பேசுபவனின் குரல் அவள் இதயத்தில் தேனை நிரப்பிவிடும். பிறகு அதில் இருக்கும் நிறைவேறாத ஆசைகளின் நஞ்சு, நரம்புகளில் பரவி அவற்றைப் பாதித்துவிடும். கடந்த கால நிகழ்ச்சிகள், வெறுப்புகள் எல்லாம் வரிசையாக வந்து நிற்கும். இந்த அளவுக்கு வெறுப்பும் கருமையும் கண்டு அவள் அழுதுவிடுவாள். இனி என்ன நடக்கும்? அவன் என்னிடம் என்ன சொல்லப்போகிறான்?



மறுநாள் இரவிலும் நசீர் தோட்டத்துப் படிகளின் மேல் உட்கார்ந்தான். ஆனால் இன்றிரவு மதி அவனை நோக்கி வந்து விட்டது. அவனது செவிகளின் அருகில் தலையைக் குனிந்து கேட்டது. "இனி உங்கள் எண்ணம் என்னவோ, நசீர் மியான்?"

இப்போதுதான் கஜல் அவனிடமிருந்து எழுந்துபோய் இருக்கிறாள். தோட்டத்தின் திசையிலிருந்து வந்த மலர் மணம் உண்மையில் கஜலின் சிந்தனைகளில் மூழ்கி வருகிறது என்று அவன் உறுதியாக எண்ணினான். இந்த மூன்று மணி நேரத்தில் கஜல் அவனிடம் எவ்வளவோ பேசிவிட்டாள். தன் சொந்தத் தாயின் எதிர்பாராத மரணம், தந்தையின் அலட்சியப்போக்கு முதல் தனக்குத் துரோகம் இழைத்த ஆண்கள் வரை எல்லா வற்றையும் கஜல் சொல்லிவிட்டாள். இருப்பினும் நசீர் அவளுடைய கைகளை விடவில்லை. அவளுடன் தனது வாழ்வின் முழுத் திட்டத்தையம் வகுத்துவிட்டான். அவன் கஜலை எல்லா உருவங்களிலும் பார்த்தான். உஜாலா பேகத்தின் மருமகளாகவும், தன் உள்ளக் காதலியாகவும், தன் குழந்தைகளின் தாயாகவும் சிந்தித்துப் பார்த்தான். பிறகு தனது விரலில் இருந்த மோதிரத்தைக் கழற்றி அவளுக்கு அணிவித்தான். உஜாலா பேகத்தின் குடும்பத்தில் மணமகளின் கையில் அணிவிக்கும் மோதிரம் அது.

இந்த வைர மோதிரத்தை ஏழு தலைமுறையாக இளைஞர்கள் தங்கள் மணமகளின் முகத்தை முதல் முறையாகப் பார்க்கும்போது அவள் கையில் போடுவார்கள். ஆனால் நசீர் தன் அவசர முடிவுக்காக சிறிதும் அஞ்சவில்லை. மோதிரம் அணிந்த கையை அவன் தனது உதடுகளுக்கு அருகில் கொண்டுசென்றபோது பயத்துடன் கஜல் தன் கையை இழுத்துக்கொண்டாள்.

"என் அருகில் வரவேண்டாம்!"

"ஏன்?" அவன் பலவந்தமாக அவள் கையைப் பற்றினான்.

"ஏனெனில் நீங்கள் தீச்சுவாலை. நான் எரிந்து விடுவேன்" அவள் நடுங்கினாள்.

"இந்தத் தீயில் எரிவது உனக்குப் பிடிக்கவில்லையா?" அவன் கஜலின் கண்களைக் கூர்ந்து நோக்கினான்.

"நீங்கள் தீக்காயம் பெற்றிருந்தால் அல்லவா தீயைப் பற்றித் தெரிந்திருக்கும்," அவள் முகத்தை எதிர்த்திசையில் திருப்பிக் கொண்டாள்.

மறுநாள் காலையில், தொழுகை பாங்குக்கு முன்னால் அவள் நசீரின் அறைக்கு வந்தாள். மகிழ்ச்சியால் அவன் எழுந்து உட்கார்ந்தான். இரவில் கையை விடுவித்துக் கொண்டு ஓடிவிட்டதற்காக, இரவு முழுவதும் தூங்காமல் வருத்தம் தெரிவிக்க வந்திருக்கிறாள் போலும்...

"நசீர்! நான் இரவு முழுவதும் சிந்தித்தேன். ஆழ்ந்த யோசனை செய்தேன். இந்த மோதிரம் என்னை உங்களுடையவளாக்கிவிடும் என்று தெரிகிறது, கதைகளில் வருவதுபோல்!" அவள் தூக்கத்தில் முணுமுணுப்பதுபோல் தோன்றியது.

"கதைகளில் என்ன எழுதி இருக்கிறது?"

"மோதிரத்தில் இளவரசியின் ஆன்மா இருக்கும். அது வேறு ஒருவரின் கைக்குப் போய்விட்டால் அவள் இறந்துவிடுவாள்."

"அப்படியா?" கஜலின் இடுப்பில் கையைப்போட்டு தனக்குப் பக்கத்தில் உட்கார வைத்தான். "நீ எதற்காகப் பயப்படுகிறாய்?"

"இந்த மோதிரத்தை நீங்கள் திருப்பி வாங்கிக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் பேச்சு வெகுதூரம் வரைபோய்விடும்" அவள் மோதிரத்தைக் கழற்றினாள்.

"பேச்சு ஏற்கெனவே வெகுதூரம் வரை சென்றுவிட்டது. இந்த மோதிரம் மிகச் சாதாரணம். இது என் உயிர்ப் பிரச்சினை."

கஜல் திகைத்துவிட்டாள். நசீர் அவளுடைய தோளில் தனது முகத்தை வைத்துக்கொண்டான். "நீ எனக்குக் கிடைக்காவிட்டால் நான் இறந்து போவேன். நீ எனக்குத் துரோகம் இழைக்க மாட்டாயே!"

அன்பின் கசிவு சிறிது கிடைத்ததும் கல்கண்டுபோல் கரைந்து விடுவாள், எனவே உருகினாள். கரைந்துவிட்டாள். அவளுடைய இருப்பு சிறிது சிறிதாக அழிந்துவிட்டது. அவள் நசீருக்குள் ஒன்றிப்போனாள்.

நசீரின் கண்கள் திறந்தபோது ஓர் அழகான காலை அவனை எதிர்கொண்டு அழைத்தது. கஜல் அவனிடமிருந்து எப்போது எழுந்துசென்றாள் என்று தெரியவில்லை. ஆனால் தலையணையில் அவளுடைய சூடு இருந்தது. அந்த மணம் நசீருக்கு மயக்கம் தந்தது. அத்தகைய விநோதமான மயக்கம் இதுவரை அவனுக்குத்

தெரிந்திருக்கவில்லை. தன்மீதே பொறாமையும் ஐயமும் ஏற்பட்டு விட்டது. சமையலறையில் சுவரைப்பிடித்தவாறு கஜல் நின்று கொண்டிருந்தாள். மிகவும் சோர்வடைந்து, தன்னை மறந்த நிலையில் நின்றாள். அவளுடைய கலைந்த முடி முகத்தின் மேல் படர்ந்திருந்தது. கண்கள் வீங்கி இருந்தன. இரவு முழுவதும் அவள் அழுதிருக்கிறாள். கொதிக்கும் பானையின்மீது பார்வையைப் பதித்தவாறு அவள் ஏதோ யோசனையில் இருந்தாள். இந்தப் பெண்களிடம் எவ்வளவு கவர்ச்சி இருக்கிறது! மங்கலான வண்ணமிழந்த ஆடைகளிலும் அவள் தங்கப் பதுமையாக ஒளி தந்தாள். அவளைப் பார்த்ததும் நசீருக்கு ஏதோ ஆகிவிடுகிறது. அவன் திடுக்கிட்டுச் சமாளித்தான். எல்லாருடைய முன்னிலையை மறந்து கஜலின் கவலைகளை எல்லாம் தன் உதடுகளில் அணைத்துக் கொள்ள முடியுமா என்று அவன் எண்ணமிட்டான்.

இன்று வீட்டில் எல்லாரும் மௌனமாக இருந்தார்கள். இரவிலிருந்து சாந்தின் உடல்நிலை சரியில்லை. ஃபவுசியா முதல் வாஹித் ஹுசேன் வரை அனைவரும் அவளுடைய அறையில் டாக்டருடன் உட்கார்ந்திருந்தார்கள். நசீரும் சிறிதுநேரம் அங்கு உட்கார்ந்தான். ஆனால் அவனுடைய இதயத்தில் இன்று மகிழ்ச்சியின் ஊற்றுகள் பீறிட்டெழுந்தன. அதனால் அறையின் வேதனை தரும் சூழ்நிலையில் அவனால் வெகுநேரம்வரை உட்கார முடியவில்லை.

- பிறகு அவன் தன் அறைக்கு வந்து, இரவில் கஜல் தலை வைத்துப் படுத்த தலையணையை மார்புடன் அணைத்தவாறு படுத்துக் கொண்டான். விதி அவனுக்காக விலைமதிப்பில்லாத அரிதான வைரத்தை வைத்திருக்கிறது. இது நேற்றுவரை அவனுக்கே தெரிந்திருக்கவில்லை. ஆனால் இனி இந்த இரகசியத்தை எப்படி மறைத்து வைப்பது? அவன் அளித்த வைர மோதிரத்தை கஜல் அணிந்துகொண்டே திரிகிறாள். அவளுக்கு எவ்வித அச்சமும் இருக்கவில்லை.

பகலில் ஹுமாயூன் வந்து இன்று மாலை ஒரு நாடக ஒத்திகைக்குப்போக வேண்டும் என்று சொன்னான். கஜல் ஹுமாயூனுக்கு எதிரிலேயே நசீரிடம், "நீங்களும் ஒத்திகை பார்க்க வாருங்கள்" என்று சொன்னாள். மாலையில் நசீருக்காகத் தானே ஆடைகளைத் தேர்ந்தெடுத்தாள். அவனுடைய காலணிகளை பளபளப்பாக்கினாள். தன் நடிப்புக்காகக் கிடைத்த பரிசுகளையும் கேடயங்களையும் பார்க்க தன் வீட்டுக்கு வருமாறும் அழைப்பு விடுத்தாள்.

மறுநாள் முழுவதும் நசீர் கஜல் வீட்டிலேயே கழித்தான்.

இருவரும் நாள் முழுவதும் ஏதோ பேசிச் சிரித்துக் கொண்டார்கள். 'நஜ்மா' திரைப்படத்தின் பகல் காட்சி காணவும் சென்றார்கள்.

ஜம்ருத் மஹால் திரையரங்கின் மாடி முகப்பில் உட்கார்ந்த போது நசீருடன் பல ஆண்டுகள் கழித்துவிட்டது போன்ற உணர்வு கஜலுக்குத் தோன்றியது. நசீருடைய அன்பின் வெப்பம் அவளுக்கு பழைய விஷயமாகிவிட்டது. குடும்ப மனைவியரைப்போல் அவள் தன்னை அவனிடம் ஒப்படைத்து விடுவாள். காப்பாற்றி வைப்ப தற்கு அவள் உடலில் என்னதான் எஞ்சி இருக்கிறது? தன் ஆன்மா வையும் முதல் முறையாக அவள் ஓர் ஆணுக்குக் கொடுத்து விட்டாள். அதற்குப் பிறகு எல்லாவற்றையும் அவள் மறந்துவிடவே விரும்பினாள்.

வீட்டுக்குத் திரும்பி வந்தபோது ஹுமாயூன் தன்மீது சந்தேகப்படுவான் என்று நசீர் கவலை கொண்டான். ஆனால் எதுவுமே நடக்கவில்லை. கஜலின் கையில் ஒரு புதிய மோதிரத்தைப் பார்த்த பிறகும் அதைப்பற்றி யாரும் அக்கறை காட்டவில்லை. அவர்களுக்கு இது ஒரு புதிய விஷயம் அல்லவே.

மறுநாள் காலையில் நசீர் எழுந்து தாழ்வாரத்துக்கு வந்த போது ஷாஹீன் முகச்சவரம் செய்தவாறே. "இன்னும் சில நாள் தங்குவீர்கள்போல் இருக்கிறது" என்று கேட்டான்.

நசீர் வெட்கமடைந்து சிரித்தான். ஏனெனில் நேற்று முன் தினமே இன்னும் ஒருவாரமாவது தங்கி இருக்கும்படி ஷாஹீன் வற்புறுத்தியபோது அவன் மறுத்துவிட்டான். தான் திரும்பிச் செல்வது மிகமிக அவசியம் என்று வலியுறுத்தினான். ஆனால் நசீர் எந்தச் சுழலில் சிக்கி இருக்கிறான் என்பது ஷாஹீனுக்கு நன்றாகத் தெரிந்தது.

ஷாஹீனின் கூர்மையான புத்தியைக் கண்டு அவன் பொறாமைப்படவே செய்தான். ஷாஹீனுக்கு ஏறக்குறைய அவன் வயதுதான் இருக்கும். ஆனால் இந்த நகரத்து வாலிபர்கள் பறக்கும் பறவையின் சிறகுகளை எண்ணிவிடுகிறார்கள்...

"ஏன், என் கூற்றுச் சரிதானே! வாரும், கை குலுக்குவோம்." ஷாஹீன் கையை நீட்டினான். இருவரும் சிரித்துவிட்டார்கள்.

ரஷீதும் ரஜியாவும் ஃபவுசியாவின் சீர்வரிசையை வாங்கு வதற்காகப் போயிருந்தார்கள். சாந்த் தன் அறையில் முனகிக் கொண்டிருந்தாள். தாழ்வாரத்தில் ஃபவுசியாவும் நொண்டி அத்தையும் உட்கார்ந்து துணிகளை வெட்டிக் கொண்டிருந்தார்கள். அங்கு எப்படி உட்காருவது என்று நசீருக்குப் புரியவில்லை. தன்னருகில் அவன் நிற்பதைக் கண்டதும் நொண்டி அத்தை தன் மூக்குக் கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டாள். அவன் தடுமாற்றம் கண்டான்.

இப்போது அவனுடைய காதலின் மயக்கம் தெளிவிக்கப்படும். நொண்டி அத்தை தன் அறிவுரைகளின் பெட்டியைப் திறக்கப் போகிறாள்.

"நசீர்பாபா, நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்? உங்களுக்கு இங்கே சிறிதும் ஓய்வு கிடைக்கவில்லை."

"இல்லை அத்தை, நான் நன்றாக அனுபவிக்கிறேன்".

"அத்தை, இவர் தேவைக்கு மேலாகவே இங்கு அனுபவிக்கிறார்" ஷாஹீன் முகச் சவரம் செய்தவாறே முகத்தைத் திருப்பிச் சொன்னான். நசீருக்குச் சிரிப்பு வந்துவிடவே அவன் ஷாஹீனை அடிக்க ஓடினான்.

"என்னமோ தெரியவில்லை. சாந்துக்காக நான் மிகவும் கவலைப்படுகிறேன். நசீர் பாபாவைக் கவனித்துக் கொள்ளுமாறு கஜலிடம் சொல்லி இருந்தேன்", நொண்டி அத்தை துணியைப் பரப்பினாள்.

"நீங்கள் இப்படிச் செய்தது நல்லதாகிவிட்டது" ஷாஹீன் நசீரைப் பார்த்துக் கேலி செய்தான். "கஜல் இதுவரை நன்றாகக் கவனித்துக் கொண்டாள். இதுவரை அவள் என்னென்ன சாப்பிடக் கொடுத்தாள், கொஞ்சம் அத்தைக்கும் விவரமாகச் சொல்லும்" ஷாஹீன் நசீருடன் சேர்ந்துகொண்டு சிரித்தான்.

"இவன் ஒரு கோமாளி!" நொண்டி அத்தை சிரித்துவிட்டாள். "உங்களுக்கு என்ன பிடிக்கும் என்று சொல்லுங்கள். நான் அதையே செய்யச் சொல்கிறேன்" நொண்டி அத்தை மீண்டும கத்திரிக் கோலைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

"ஆஹாஹா.. அத்தை என்ன அருமையான நல்ல விஷயத்தைக் கேட்டுவிட்டார்." ஷாஹீன் குதித்தெழுந்தான். "பாரும் ஐயா! இத்தகைய வாய்ப்பு மீண்டும் கிட்டாது. உமக்கு என்ன பிடிக்கும், சீக்கிரம் சொல்லுங்கள்."

"நீங்கள் அமைதியாக உட்காருகிறீர்களா, அல்லது நான் வரட்டுமா?" நசீர் ஷாஹீனை அடிப்பதற்காக ஓடினான்.

நசீர் ஒரு மாத காலத்தை ஹைதராபாத்தில் கழித்துவிட்டான். நாட்கள் இறக்கைகள் கட்டிக்கொண்டு பறந்துவிட்டன. அப்பாவுக்குத் தெரியாமல் அம்மாவிடமிருந்து ஆயிரம் ரூபாய் வரவழைத்தான். ஒவ்வொரு காசாகச் சேர்த்துவைக்கும் உஜாலா பேகம், மகன் முதல் முறையாக ஹைதராபாத்துக்குப் போயிருக்கிறான்; வாஹித் ஹுசேனுக்கு எதிரில் அவன் ஆடம்பரமாக இருக்கவேண்டும் என்று நினைத்துப் பணம் அனுப்பினார். அவன் கஜலுடன் வாடகைக் கார்களில் சுற்றினான். அவளுக்காகப் பல பரிசுகள் வாங்கினான். கஜலை அதிக நாள் வரை பீபியின் வீட்டில் ஹுமாயூன் விட்டுவைப்பதில்லை. அதனால் நசீர் தினமும்

*மாலையில் கஜல் வீட்டுக்குப் பரிசுகளுடன் செல்வான். இதன் காரணமாக ஹுமாயூனும் கஜல் மீது கட்டுப்பாடுகள் விதிக்கவில்லை.*

*ஹைதராபாத்தில் எத்திசையில் சென்றாலும், நன்கு அறிமுக மானவர்கள் இருந்தார்கள். எனவே நசீருடன் தான் ஹைதரா பாத்தில் இருக்க முடியாது என்று கஜல் உணர்ந்தாள். அவளை நசீருடன் பார்த்தபோது மக்கள் புன்முறுவல் பூத்தார்கள். திருமணத்திற்குப் பிறகு நான் ஹைதராபாத்திற்கே வரமாட்டேன். அங்கே அஜந்தா குகைகளில் ஒரு குடிலை அமைத்துக் கொள்ளலாம் என்று அவள் நசீரிடம் சொல்லிவிட்டாள். நசீர் தனது சூழலை விளக்கத் தொடங்குவான். 'சிறியதொரு ஊர்... அதில் பழங்கால மாளிகை ஒன்று... அதில் நசீரின் கண்டிப்பான பிடி முரண்டான் அம்மா இருக்கிறாள்... அவளுடைய அனுமதியின்றி நசீர் ஓர் இலையையும் பறித்துவிட முடியாது... அங்கு நசீரின் நிலங்கள் இருக்கின்றன... நசீர் கஜலுடன் சேர்ந்து அங்கு டிராக்டர் ஓட்டுவான்... அந்த ஊர் மக்கள் இதுவரை 'கேக்' சாப்பிட்டதில்லை... மேடை நாடகங்கள் பார்த்ததில்லை... அங்கு 'போட்கிளப்' இல்லை... பில்கிராமி, பான் போன்ற சமூக சேவகர்களும் இல்லை...'*

*இவற்றைக் கேட்கும்போது கஜல் மகிழ்ச்சி அடைவாள். இத்தனை அழகான சுற்றுப்புறம்; இத்தனை மாசில்லாத மனிதர்கள். போட்கிளப், பாரத் கலைக்குழு ஆகியவற்றின் தூய்மையற்ற சூழ் நிலையிலிருந்து அந்த இடம் எவ்வளவு மாறுபட்டதாக இருக்கிறது. அங்கு அவளை யாரும் சுமையாகக் கருத மாட்டார்கள். அந்த வீட்டில் அவளை எல்லாரும் மதிப்பார்கள். அவளும் ஃபவுசியா வைப்போல் மணமகளாகிவிடுவாள்.*

*கஜல் ஒருநாள் தனது நீண்ட நகங்களின்மேல் பாலிஷ் போடுவதைப் பார்த்த நசீர் சிரித்துவிட்டான். ஔரங்காபாத் செல்வதற்கு முன்னால் இந்த நகங்களை வெட்டிவிட வேண்டும். அம்மாவுக்கு நகங்கள் சிறிதும் பிடிக்காது.*

*இதைக்கேட்டு கஜலுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. தாத்தாவும் பீபியும் அவளையும் ஃபவுசியாவையும் இந்த நகங்களுக்காகத் திட்டுவார்களே*

*அங்கு பெண்கள் பர்தா இல்லாமல் செல்வதில்லை. உதட்டுச் சாயமும் பூசிக்கொள்வதில்லை. பிறகு ஒருநாள் சாப்பிடும்போது நசீர் கேட்டான். "உனக்குப் பிரியாணி செய்யத் தெரியுமா?" அப்போது நசீருக்கு ஓர் ஒல்லியான அழகான பெண் நினைவுக்கு வந்தாள். அவளை மணமகளாக அறிவித்த அம்மா அடிக்கடி சொல்வாள். "இவளுடைய மேலான ஒழுக்கம் என்னைக் கவர்ந்து*

விட்டது. என்ன சொல்வேன்—அவள் இன்று தயாரித்த கோழி பிரியாணியை—அடாடா, என்ன சுவை, என்ன சுவை—நம் சமையல்காரனும் இருக்கிறானே, பாழாய்ப்போனவன்..." நசீருக்கும் அந்த அழகான முட்டாள் பெண் பிடித்துவிட்டாள். ஆனால் அந்த வீட்டுக்கு இன்னும் யாரும் செய்தி சொல்லி அனுப்பவில்லை.

"எனக்கு எதுவுமே சமைக்கத் தெரியாது" கஜல் பெருமையுடன் சொன்னாள். சாந்த் அக்காவுடன் இருந்த அவளும், 'என் அழகான கைகள் ரொட்டி தயாரிக்கவும், அடுப்பு மூட்டவும் செய்யப்பட்டவை அல்ல' என்றுதான் சாதிப்பாள்.

"அப்படியென்றால் உனது பெண்மையின் மீதே அம்மாவுக்கு சந்தேகம் வந்துவிடும்."

இதைக் கேட்டு கஜலுக்கும் சிரிப்பு வந்துவிட்டது.

நசீர் விடைபெற்றபோது இருவரும் அழுதார்கள். கஜல் அவனிடமிருந்து ஏராளமான வாக்குறுதிகளை வாங்கிக் கொண்டாள். "இனி எந்த நாடகத்திலும் நடிக்காதே. பர்தாவில் இரு. ஏனெனில் பர்தா இல்லாத பெண்களை அம்மா விலைமாது என்று கூறுவாள்" நசீரும் பல அறிவுரைகளை வழங்கினான்.

போவதற்கு முன்னால் நசீர் சிறிதுநேரம் பீபியிடம் வந்து உட்கார்ந்தான். விரைவிலேயே உஜாலா பேகம் கஜலுக்காக இங்கே செய்தி அனுப்புவார் என்று அறிவித்தான். பீபி இதைக்கேட்டு வியப்பும் திகைப்பு அடைந்தார். ரஷீதும் ரஜியாவும் கோபம் மேலிட முறைத்தார்கள்.

பூனையின் அதிர்ஷ்டம் உரி முறிந்துவிட்டது. இந்த ஊர் சுற்றி உஜாலா பேகத்தின் மருமகளாக ஆட்சி பெறுவாள் என்று யாரும் கனவிலும் நினைக்கவில்லை. வாஹித் ஹுசேன் இந்தத் திட்டத்தை முதலில் ஒத்துக்கொண்டார். இறுதியில்தான் ரஜியா இசைவு தெரிவித்தாள். ஆனால் மீண்டுமொரு முறை இங்கு நசீர் வரும்போது கஜலை நன்றாக உதைத்து ஃபவுசியாவின் அறையில் பூட்டிவிட வேண்டும் என்று மனதில் நினைத்துக் கொண்டாள். ஃபவுசியாவுக்காக நல்ல வீடு தேடி எங்கெங்கே அலைந்தோம். இறுதியில் ஒரு கிழட்டு டாக்டர்தான் கிடைத்தான். ஆனால் இங்கே, இந்த உலகம் முழுவதும் அலைந்து திரிந்த பெண், ரஜியாவின் வீட்டிலேயே உட்கார்ந்து நசீரைக் கவர்ந்து சென்று விட்டாளே!

# 22

*மறுநாள் அறையினுள் நசீரின் நினைவில் கஜல் அழுது கொண்டிருந்தபோது, சாந்த் தள்ளாடியவாறு அவளிடம் வந்து உட்கார்ந்தாள். உலர்ந்து போன தன் கைகளை அவள் தோள்மீது வைத்தாள்.*

*"நசீரின் நினைவை மறந்துவிடு கஜ்ஜு... குழந்தை கேட்டால் மதியை யார் கொண்டு வந்து கொடுக்கிறார்கள்?"*

*சாந்தின் பேச்சு கஜலைத் திடுக்கிட வைத்தது. அவள் சாந்த் அக்காவைக் கவனமாகப் பார்த்தாள்.*

*"நீ என்னைப் பைத்தியம் என்று நினைக்கிறாய். ஆனால் நீ இத்தனை நினைவுகளுடன் எப்படி வாழப் போகிறாய் என்று நினைக்கும்போது என் உள்ளம் நடுங்குகிறது."*

*அவள் களைப்படைந்த நிலையில் சொல்லிவிட்டுப் பக்கத்தில் இருந்த பலகையில் படுத்துக் கண்களை மூடினாள்.*

*இந்த் சாந்த் அக்கா எத்தனை கடுமையான பேச்சுகள் பேசுகிறார். கஜல் இப்போது அவளிடம் அன்பு பாராட்டவில்லை. இவள் ரஜியா மாமியைப்போல் கஜலுக்கு நல்ல எதிர்காலம் அமையக்கூடாது என்று நினைக்கிறாள்.*

*"ஆனால் சாந்த் அக்கா! என்னைப் பற்றிய குறிப்பு இல்லாத எந்த ஈரடிச் செய்யுளும் எழுதப் போவதில்லை என்று அவர் சொல்லியிருக்கிறார்."*

*"பைத்தியக்காரி..."சாந்த் அக்காவின் புன்சிரிப்பில் வேப்ப இலைகளின் கசப்புக் கலந்திருந்தது. "அந்த ஈரடிச் செய்யுளால் உனது வாழ்வு மலர்ந்துவிடுமா..?" அவள் தன் மூச்சைச் சரிப்படுத்திக் கொள்ளச் சற்றே தாமதித்தாள். "இந்தக் கலைஞர்களே சுயநலவாதிகள் கஜ்ஜு! இவர்களுக்கு யாருடைய தோழமையும் தேவையில்லை. வாழ்வின் எழிலூட்டும் நினைவுகளை மட்டும் இவர்கள் விரும்புகிறார்கள்."*

*'சரி, இந்தச் சாந்த் அக்கா ஏதோ பிதற்றுகிறாள். நசீரின் நினைவு அவளுடைய ஆன்மாவில் கலந்துவிட்டது. நசீர் பில்கிராமி அல்ல என்ற உறுதி அவளுக்கு இருந்தது. தன்னுடைய மணவாளன் இத்தனை பெரிய ஆதினத்திற்கு உரிமையாளன் என்பது நற்பேறுதான். ஆனால் அவள் ஏழை நசீரையும் ஏற்றுக்*

கொள்ளத் தயக்கம் காட்டமாட்டாள். அவன்தான் எவ்விதமான சீர்வரிசையும் தேவையில்லை என்று சொல்லி விட்டானே. ஃபவுசியாவின் வருங்காலக் கணவன் எழுநூறு ரூபாய் மாத வருமானம் பெறும் டாக்டராக இருந்தான். அவ்வாறு இருந்தும் அவன் குடும்பத்தினர் சீர்வரிசைப் பட்டியலை நீட்டிக்கொண்டே போகிறார்கள். இப்போது மாமியும் அலுத்து விட்டாள். ஏனெனில் மருத்துவ உயர்படிப்புக்காக ஷாஹீனை இப்பொழுது ஐரோப் பாவுக்கு அனுப்பி இருக்கிறார்கள். எனவே மகளின் திருமணத் திற்கு மேலும் பணம் ஒதுக்குவது கடினமாக இருந்தது. அவர்கள் சார்பில் நகை போடுவதும், 'வலீமா' விருந்து அளிப்பதும் அவர்களுக்கு ஒத்து வருவதில்லையாம். அதனால் மணமகளுக்குத் துணிகளை மட்டுமே கொண்டு வருவோம் என்று ஃபவுசியாவின் வருங்கால மாமியார் சொல்லிவிட்டார்.

ஃபவுசியா தனக்குக் கணவனாக வருபவனின் முகத்தைப் பார்க்கவில்லை. ஆனால் அவளுடைய செவிக்கு எட்டிய தகவல் களை வைத்து அவனது உருவ அமைப்பைச் சிந்தனையில் பார்த்துக் கொண்டாள். அவனுடைய பழக்க வழக்கங்கள், விருப்பு வெறுப்புகள் அனைத்தும் அவளுக்குத் தெரிந்திருந்தது.

"அவருக்கு மிஸ்ஸி (ஒருவகைப் பற்பொடி) பிடிக்காதாம். அதனால் எனது திருமண நாளில் மிஸ்ஸி தேவைஇல்லை".

"இறைச்சியை விருப்பத்துடன் உண்பாராம்—அநாவசியமான செலவு செய்வதில்லை. தூய்மையை மிகவும் விரும்புகிறார்".

இநதத் தகவல்களைக் கஜலிடம் மெதுவாக சொல்லிவிட்டு, ஃபவுசியா தானே சிரிப்பாள். ஃபவுசியாவின் பேச்சுகளைக் கேட்டுக் கஜல் சிந்தனைகளில் மூழ்கி விடுவாள்.

'நல்ல உணவுகளைத் தேடிச் செல்லமாட்டேன். அவர் எதிரே நான் உட்கார்ந்திருப்பேன். அவர் கவிதைகள் புனைந்து கொண்டிருப்பார்.

என் கண்களின் மீது ஆயிரம் ஆண்டுகள் வரை கவிதைகள் இயற்ற முடியும் என்கிறாரே. கஞ்சத்தனம் அவருக்குப் பிடிக்காது. நான் இனி எந்த நாடகத்திலும் நடிக்கக் கூடாது என்று சொல்லி இருக்கிறார்.

ஆனால் ஹுமாயூன் இதை எப்படி ஒத்துக்கொள்ள முடியும்? உண்மை என்னவெனில் நாடக வாய்ப்புகளைக் கேட்டு ஹுமாயூனும் எங்கும் செல்வதில்லை. மக்கள் தாமாகவே வந்தார்கள். ஹுமாயூனை மிகவும் வற்புறுத்துவார்கள். தங்கள் நிலைமைகளைக் கூறி மிகவும் வேண்டுவார்கள். கஜலின் மனமும் இளகிவிடும்!

# 23

பாரசீக ஆண்டின் மூன்றாவது மாதமான 'குர்தார்' வந்துவிட்டது.

இலேசான மேகங்கள் படர ஆரம்பித்தன. பருவ மாறுதலின் ஏற்றத்தாழ்வு இதயங்களின் உணர்ச்சிகளையும் தூண்டியது.

ஹைதராபாத் எல்லைகளில் இந்தியப் படைகள் வந்து விட்டன. எங்கும் பதற்றமான நிலை. ஏனெனில் சர் வால்டர் மாங்டன் மூலம் நிஜாம் தில்லிக்கு அனுப்பிய யோசனைகள் நிராகரிக்கப்பட்டுவிட்டன. மறுபுறம் காசிம் ரஜ்வி, ஜின்னாவிடம் பெரிய நம்பிக்கை வைத்திருந்தார். ஆனால் ஹைதராபாத்திலிருந்து சென்ற கடிதங்கள், செய்திகள், தந்திகள் ஆகியவற்றின் பிரதிகள், இந்தியப் பிரதிநிதியான கே.எம். முன்ஷியிடம் இருக்கின்றன என்ற உண்மை காசிம் ரஜ்விக்குத் தெரியாது. அதனால் பாகிஸ்தான் விமானங்கள் பேகம்பேட் நிலையத்தில் இறங்கப் போகின்றன என்று அவர் பொதுமக்களுக்கு உறுதி அளித்தார். எனினும் ஹைதராபாத்தின் வருங்காலத் தீர்வு ராணுவ நடவடிக்கையில் இல்லை என்பது ஜின்னாவுக்குத் தெரியும். அதனால் அவர் ஆக்கிரமிப்புச் செயலைக் கண்டித்தார். ஆனால் இந்த நேரத்தில் காசிம் ரஜ்வி தனது குறிக்கோளை மாற்றியமைக்கத் தயாராக இல்லை.

அப்பொழுது ஆஸிபியா அரசைக் காப்பாற்றும் உணர்ச்சி மக்களிடையே அதிகமாக இருந்தது. எனவே காசிம் ரஜ்வி தன் தொண்டர்களைத் தங்களால் முடிந்த அளவு எல்லைகளில் போரிடுமாறு ஆணை பிறப்பித்தார்.

அரச மாளிகையில் வீற்றிருந்த ஆலா ஹஜ்ரத் தில்லியின் முரடர்களையும், ரஜாக்கர் குண்டர்களையும் ஒடுக்குமாறு ஆணை பிறப்பித்தார். ஆனால் அதற்குள் ஆயுதம் இல்லாத இளைஞர்கள் இந்தியப் படையினரை எதிர்க்க வந்துவிட்டார்கள். ராணுவத்தின் டாங்கிகளால் சிறு துரும்புகள்போல் நசுக்கப்பட்டார்கள்.

ரஷீத் நிலைமைகளைக் கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்தான். பல்வேறு பொருள்களில் வாணிபம் செய்து எல்லாக் கடன்களையும் அடைத்து கவிதாலயத்தை மீட்டி விட வேண்டும் என்று அவன் விரும்பினான். இப்போது ஹைதரா

பாத்தின் வணிகர்கள் அனைவரும் ஆதாயம்—இழப்பு என்ற துலாக்கோலைத்தான் கைகளில் வைத்திருந்தார்கள். எந்தத் திசையில் அதன் முள் சாய வேண்டும் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

எல்லாத் திசைகளிலும் பரபரப்பு இருந்தது. எல்லாருமே தப்பிச் செல்வதற்கான வழிகளைத் தேடினார்கள். சுயநல வாதிகளான தலைவர்கள் அப்பாவியான ஆயுதமில்லாத இளைஞர்களின் உணர்ச்சிகளைத் தூண்டினார்கள். போர்க் குரல்களாலும், தக்பீர்களாலும் வளிமண்டலம் ஒலித்துக் கொண்டிருந்தது.

'முன்னேறிச் செல்லுங்கள்
குருதியின் கடைசிச் சொட்டும்
நாட்டுக்குப் பயன்படட்டும்!'
காசிம் ரஜ்வி கூக்குரலிட்டார்.

'போக்கிரிகள்-குண்டர்கள்—இவர்களைச் சிறையில் தள்ளுங்கள்' ஆலா ஹஜரத் கோபமும் வேதனையும் உச்சநிலை அடைய ஆணைகளைப் பிறப்பித்தார். இன்று தன் சீற்றத்தைக் கண்டு சுவர்களும் நடுங்கவில்லையே என்று அவருக்கு வியப்பாக இருந்தது.

ஒவ்வொரு வீட்டிலும் ஒரு வாலிபன் காடுகளில், ஏதேனு மொரு மரக்கிளையில் பதுங்கி இருந்தான். வெறிநிலையில் அவர்கள், முன்னேறி வந்த டாங்குகளைத் தடுத்து நிறுத்தத் தங்கள் கைகளை விரித்து நின்றார்கள். ஏனெனில் அவர்களிடம் ஆயுதங்கள் இல்லை; தற்காப்புக்கான எந்த வழியும் அவர்களிடம் இருக்கவில்லை. சுதந்திர அரசின் குடிமக்களான அவர்கள், அயல் மண்டலக்காரர்களை இழிவாக நோக்கினார்கள். அவர்களுடைய உபசரிப்பு—அன்புச் செயல்களின் புகழ் வெகுதூரம் வரை பரவி இருந்தது. இங்கு புகலிடம் கிடைக்கப் பெற்றவரின் ஏழு தலை முறைகள் செழிப்புடன் வாழும். இங்கிருந்து விரட்டப் பட்டவர்களுக்கு எங்கும் ஆதரவு கிடைக்காது. தமது கலாச்சாரம்—தமது நாடு—தமது வேந்தர்—வேந்தருக்காக உயிர்களையும் தியாகம் செய்யும் நன்றியுள்ள மக்கள். பீரங்கிகளுக்கு எதிரில் திறந்த மார்புடன் நிற்கத் தயாராகிவிட்டார்கள். 'ஹுஜுர்' இல்லாமல் தாங்கள் எப்படி வாழ முடியும் என்று நினைப்பவர்கள். இது ஒரு விந்தையான முடியரசு. தனித்தன்மை வாய்ந்த செங்கோல் ஆட்சி இங்கு வேந்தரின்பால் அன்பும் மதிப்பும் இருந்தன. இந்தியப் படையினர் ஐந்து நாட்களில் வழியெங்கிலும் இதற்கான சான்று களைக் கண்டார்கள்.

இப்போது சாலைகள் வெறிச்சோடிக் கிடந்தன. தங்கள்

*கண்களின் ஒளியை இழந்துவிட்ட அன்னையரின் இதயங் களைப்போல்!*

*கிளர்ச்சியின் ஆவேசத்தைத் தூண்டியவர்களில் சிலர் இரவோடு இரவாகப் பாகிஸ்தானுக்கு ஓடிவிட்டார்கள். எஞ்சி நின்றவர்கள் தலைமறைவாகி விட்டார்கள்.*

*கவிதாலயத்தின் தோட்டத்தில் ஆங்கிலம் பேசும் குருவி, வாஹித் ஹுசேன் பல நாட்களாக வரவில்லையே என்று வியந்தது.*

*அவரது நாற்காலியைச் சுற்றிச் சுற்றி வந்து, 'ஷு, ஷு, ஷுன்' என்று பலமுறை குரல் கொடுத்தது.*

*வரிசையாக இருந்த மலர்கள் தலைகளைத் தூக்கி அவருடைய வருகையை எதிர்நோக்கின. ஆனால் இம்மலர்களின் தலையைத் துண்டிக்குமாறு ஆணையிடுபவர் மாரடைப்பால் வலுவிழந்து, தனது அறையினுள் கிடக்கிறார். அவரது கவிதைக் குறிப்பேடுகள் எல்லாம் அலமாரியில் கிடந்தன.*

*கவிதாலயத்தில் வாழுபவர்கள் அறிவாளிகள். அவர்கள் வரப்போகும் ஆபத்தை நன்குணர்ந்து தங்களுக்காகப் புகலிடமும் தேடி விட்டார்கள். ரஷீதின் ஐந்து விரல்களும் நெய்யில் இருந்தன. (அதாவது, பெரும் ஆதாயம் சம்பாதித்துவிட்டான்.)*

*இத்திஹாதுல் முஸ்லிமீனின் தொண்டனான ரஷீத், பெரிய வணிகர்கள், செல்வந்தர்களிடமிருந்து நன்கொடைகள் வசூலித்துக் காசிம் ரஜ்விக்கு முன்னால் கொண்டு வந்து குவித்தான். சுமுக மான பேச்சுகளால் பிரச்சினை முடிந்துவிடக் கூடாதென அவன் முயற்சி செய்தான். தனக்குப் பல இலட்ச ரூபாய் இழப்பு வருமே என்ற பயம்!*

*இந்தியப் படைகள் வருகின்றன என்று கேள்விப்பட்டதும் அரசியலை விட்டுச் சாதாரண வியாபாரியாகிவிட்டான்.*

*"இந்த அரசியல் சூழ்ச்சிகளில் விழமாட்டோம்", அவன் தன்னுடைய நண்பர்களிடம் கூறினான். "நாம் வியாபாரிகள், நமக்கும் அரசியலுக்கும் என்ன உறவு?"*

*அவன் சோலாப்பூர், அஹ்மதாபாத் வழிகளில் கள்ளத் தனமாகச் சரக்குகள் கொண்டு வந்தான். ஆனால் மகனின் இந்தச் செயல்களைக் கண்டு வாஹித் ஹுசேனின் மனச்சாட்சி விழிப்புப் பெறவில்லை. அவருடைய இதயம் அணைந்து கொண்டிருந்தது. கடந்த காலச்சிறப்பை மீண்டும் பெற முடியும் என்ற நம்பிக்கை முழுவதுமாக அழிந்துவிட்டது. அதனால் ஒவ்வொரு நிலக்கிழார் வீட்டிலும் சோகம் நிரம்பி இருந்தது.*

*பகட்டான வாழ்க்கையைத் தொடர்ந்து வாழ, வாய்ப்புக் கேற்ப மாறும் மனோநிலையும், எல்லாவற்றையும் தாங்கும் இதயமும், புகழ்ந்து பேசும் நாக்கும் இருக்க வேண்டும் என்பது*

இவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. பண்ணையாரின் மகனும் பண்ணையார்தான், இதுதான் மரபுரிமை என்று இவர்கள் நினைத் தார்கள். செல்வந்தர்களின் விதியைப் படைப்போன் தங்கப் பேனாவால் ஒருமுறை எழுதிவிட்டால் அதை யாராலும் அழித்து விட முடியாது என்ற கருத்துக் கொண்டவர்கள் இவர்கள்.

வாஹித் ஹுசேனின் பாட்டனார் அதிகாரமுள்ளவர். அவருக்குத் தனியான காவல் துறையும், படையும் இருந்தன.

இத்தகையவர்களே ஆஸிபியா அரசின் பாதுகாவலர்கள் என்று சொல்லப்பட்டார்கள். அதுவரை 'ரெசிடெண்ட்' அதிகாரி யின் தடி அவர்களைத் தாக்கவில்லை. ஹுஜுருக்கும் அவர்களை விசாரிக்கும் உரிமை இருக்கவில்லை. இத்தகைய மதிப்பு பாட்ட னாரின் காலம்வரைதான் இருந்தது. அவர்தான் கவிதாலயத்தை எழுப்பினார். அதில் ஒவ்வொரு காலத்திலும் காதல் மலர்ந்தது. அழகு மங்கையரின் சிந்தனையே பண்ணையார்களின் மன அமைதியைக் கெடுக்கப் போதுமானதாக இருந்தது. 'ஹுஜுரி'ன் பார்வையும் எப்போதும் கவிதாலயத்தின் மேல் பதிந்திருந்தது. 'அம்பர் பாக்'கில் வைரங்கள் சேகரிக்கப்பட்டாலும், கவிதா லயத்தின் ஒளிவிடும் மதிகளுக்கு முன்னால் அவை எம்மாத்திரம்! இதன் கவர்ச்சி வெகு தூரத்திலிருந்து மக்களைத் தன்பால் இழுத்து வந்தது. கவிதாலயத்தின் இத்தகையதொரு காதலியின் சிந்தனை யிலேயே நசீரும் இருந்தான். இங்கு வந்ததும் கொள்ளையழகைக் கண்டு கற்சிலையகிவிட்டான். இதே மயக்கத்தில்தான் வாஹித் ஹுசேனின் மூதாதையர் தங்கள் பண்ணைகளைப் பறிகொடுத்து விட்டார்கள். மாளிகைகள் கை மாறின. மனைவியரின் நகைகள் விற்பனைக்கு வந்தன. பிறகு அவர்கள் புதைகுழிகளில் துயில் கொள்ளப் போய்விட்டார்கள். அவர்களின் சந்ததியினர் இப்போது அதற்கான தண்டனையைப் பெறுகிறார்கள்.

தினமும் இருமுறை டாக்டர் வந்தார். ஆனால் வாஹித் ஹுசேனுக்கு மருந்து கொடுக்காமல் இரண்டொரு 'நற்செய்தி' களின் ஊசியைப் போட்டு விட்டுச் சென்றார். மாலையில் ரஷீத் நாளிதழ் எடுத்துக் கொண்டு உட்காருவான். அத்துடன் காகிதத் துண்டு ஒன்றும் இருக்கும். அதிலிருந்து நல்ல நல்ல செய்திகளை வாசித்துக் காட்டுவான். நொண்டி அத்தையும் ஷேகு மியாவும் முதல் தரப் பொய்யர்கள் என்று ரஷீத் சொல்லுவான். வானொலிச் செய்திகளுக்கு மூக்கும் முழியும் அமைத்து, மக்களிடையே பீதியை உண்டாக்க அவர்கள் முயலுகிறார்கள் என்பான்.

நொண்டி அத்தை, அந்தக் காலத்தில் பத்திரிகைச் செய்தி களைச் சிறிதும் நம்பவில்லை. சலவைக்காரன், பணியாளர்கள், எல்லாவற்றையும்விட மேலாக ஷேகு மியான் அவருடைய

நிருபராக இருந்தான். ஷேகு மியாவும் ரஜாக்கராகி விட்டார். என்றாலும் பயத்தால் வீட்டைவிட்டு வெளியே செல்வதில்லை. எனவே வேலைக்காரர்களின் தகவல்களை ஆதாரமாகக் கொண்டு தொண்டர்களின் வீரச் செயல்களின் நிகழ்ச்சிகளை உருவாக்குவார். மேலும் இந்த நிகழ்ச்சிகளின் நாயகனாகத் தாமே இருப்பார். அதனால் ரஷீத் தன் தந்தையின் அறைக்கு பலத்த காவலை நியமித்தான். பீபி, டாக்டர் ஆகிய இருவரைத் தவிர வேறு யாருக்கும் உள்ளே செல்லும் அனுமதி இல்லை. வாஹித் ஹுசேனின் நோய் பீபியை ஊமையாக்கிவிட்டது. யாருடனும் அவர் பேசுவதில்லை. பகலும் இரவும் கூரையை நோக்கியவாறு உட்கார்ந்துவிட்டார். காலமும் அப்படித்தான் இருந்தது. ஒருவர் மற்றொருவருடன் பேசவே பயந்தார்கள். இரவும் பகலும் பல பிரார்த்தனைகள் செய்து குற்ற மன்னிப்புக் கேட்டார்கள்.

வாஹித் ஹுசேன் தன் அறையினுள் படுத்தவாறு கசப்பான மருந்துகளைக் குடித்தார். ஆனால் அவரது சிந்தனையும் மனமும் ஔரங்காபாத்தில் இருந்தன. அங்கு அவருடைய சகோதரர் எத்தகைய ஆபத்தில் இருக்கிறாரோ? தன் நண்பர்கள் மூலமாக அவருடைய நலனைத் தினமும் தெரிந்து கொள்வதாகவும் அவர்கள் பாதுகாப்புடன் இருப்பதாகவும் ரஷீத் சொல்லுவான். உண்மையில் ஔரங்காபாத்திலிருந்து கவலைதரும் செய்திகளே வந்தன. குண்டு வீச்சால் அஹ்மத் ஹுசேனின் பண்ணை அழிந்து விட்டதாம். உஜாலா பேகம், அஹ்மத் ஹுசேன், நசீர் எங்கு இருக்கிறார்கள், அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா, இல்லையா என்பதும் தெரியவில்லை. சில சமயங்களில் உஜாலா பேகத்தின் நினைவு வரும்போது பீபி மௌனமாகக் கண்ணீர் வடிப்பார். தனது அழிவைக் கண்டு கண்ணீர் வடிக்கும் முதல் பெண்மணி அவராகத்தான் இருக்க முடியும். அவருடைய அழுகையைப் பார்த்து ரஷீதுக்கு கோபம் பொங்கிவரும். இவர் எத்தகைய தாயோ—தன் மகனின் விதி பிரகாசமடைவதைக் கண்டு மகிழ்ச்சி கொண்டாடுவதற்குப் பதிலாக அழுகிறாரே! மாளிகையைக் குண்டர்கள் கொள்ளையிட்டாலும் இரண்டரை லட்ச ரூபாய் மதிப்புக்கொண்ட, கட்டடத்தை எடுத்துக் கொண்டு போய்விட முடியாது. இன்று இல்லாவிட்டாலும் நாளை அது கிடைக்கவே போகிறது!

கஜல் அழுது அழுது பைத்தியக்காரி ஆகிவிட்டாள். நசீர் திரும்பிச் சென்ற பிறகு இந்நாள் வரை எதுவுமே எழுதவில்லை. கஜல் ஒவ்வொரு நாளும் நான்கு கடிதங்களாவது எழுதுவாள். நசீரின் அன்னை கொடுமைக்காரி. அவள் இந்தக் கடிதங் களைக் கிழித்தெறிந்திருப்பாள் என்று ஃபவுசியா சொல்லுவாள்.

ஒருநாள் நசீர் திடீரென்று மண ஊர்வலத்துடன் வந்து நிற்பான் என்று கஜல் நுழைவாயிலின் திசையிலேயே வழிபார்த்து நிற்பாள். எவ்வித நாடகத்திற்கான சூழ்நிலையும் இருக்கவில்லை. பல இடங்களில் அமைதிக் குழுக்கள் நிறுவப்பட்டன. பள்ளி வாசல்களில் மக்கள் தொழுகைகள் நடத்தினார்கள். தர்காக்களில் பெண்கள் வேண்டுதல் செய்து கொண்டார்கள். தங்கள் கணவன்களும் சகோதரர்களும் நலமுடன் திரும்பி வந்தால் மலர்மாலைகள் சாற்றுவதாகவும், அன்னதானம் செய்வதாகவும் நேர்ச்சி முடித்தார்கள். ஆனால் அந்தப் பெரியார்களோ, மனிதர்களின் உடல்களிலிருந்து ஆடைகள் இறக்கப்படும் நேரத்தில் மாலை உபசாரங்களை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை.

ஒருநாள் சாலையில் பெரும் ஆரவாரம் கேட்டுக் கஜல் ஜன்னலில் போய் நின்றாள். அவளுக்குப் பின்னால் பீபி, ரஜியா, நொண்டி அத்தை ஆகியோரும் வந்துவிட்டார்கள்.

சாலையில் தொண்டர்கள் அணிவகுத்துப் போர்க் களத்திற்குச் சென்று கொண்டிருந்தார்கள். பதினாறு பதினேழு முதல் இருபத்தைந்து முப்பது வயதுள்ள இளைஞர்கள் அதில் இருந்தார்கள். அவர்களுக்கு முன்னால் மரணம் நடைபோட்டது. இது எந்தப் பாதை என்பதும் அவர்களுக்குத் தெரியவில்லை. என்றாலும் தன்மானம், நாட்டுப்பற்று என்ற பெயரில் உயிர்த் தியாகம் செய்ய முன்வந்தார்கள். மக்கள் அவர்கள் மீது மலர் களைத் தூவினார்கள். போர்க்குரல்கள் எழுப்பினார்கள். ஆர வாரம் செய்து ஊக்குவித்தார்கள்.

கஜல் கவனமாகப் பார்த்தாள். அந்தப் படையின் தலைவனாக ஷேகு மியான் இருந்தார். அவருடைய ஒல்லியான இடையில் கால்சட்டை நிற்கவில்லை. அரைமைல் தூரம் நடந்து வந்ததும் அவருக்கு மூச்சு இரைத்தது.

'ஓய், இந்த ஷேகுத்தம்பி இத்தனை வாலிபர்களை எங்கு அழைத்துச் செல்கிறது?" நொண்டி அத்தை கலவரமடைந்தாள்.

"அத்தை.. அத்தை.. அவரை நிறுத்துங்கள்.." கஜல் அழுதவாறு நொண்டி அத்தையைக் குலுக்கினாள்.

பிறகு ரஷீத் நுழைவாயில் வழியே வெளியே சென்றான். அவர்களை நிறுத்திக் கை குலுக்கினான். நல்வாழ்த்துகள் கூறினான். அவர்களுக்கு அணிவிக்க மலர்களை வரவழைத்தான்.

திடீரென்று ஃபவுசியா கூவினாள் "அயாஸ் அண்ணா? கஜல்! அங்கே பாரேன், அயாஸ் அண்ணனும் போகிறார்..."

கஜல் திகிலுடன் நோக்கினாள். உண்மையாகவே அயாஸ் இருந்தான். காக்கிச் சீருடை அணிந்து, தோளில் துப்பாக்கி ஏந்தி எல்லாருடனும் நடந்தான். கவிதாலயத்தை விட்டு வேகமாகச்

சென்றுவிட வேண்டும். தன்மீது யாருடைய பார்வையும் விழக் கூடாது என்றுதான் எண்ணினான்.

"அயாஸ் அண்ணா... அயாஸ் அண்ணா.." கஜல் கூக்குர லிட்டாள். அவன் வரிசையைவிட்டு வந்தான். பீபியின் கால்களைத் தொடுவதற்காகக் குனிந்தான். எல்லாருமே பலமாக அழுதார்கள்.

"கஜ்ஜூ! நான் போர்க்களத்திற்குப் போகிறேன். கவலைப் படாதே. சீக்கிரமே வந்துவிடுவேன்." எல்லாரும் அழுவதைப் பார்த்து அவனும் பயந்துவிட்டான்.

"இல்லை. இல்லை. நான் போகவிடமாட்டேன்" கஜல் அவனுடைய கைகளைப் பற்றிக் கொண்டு அழுதாள்.

பீபியும் நொண்டி அத்தையும் அவனைத் தடுத்தார்கள்.

"பார் கஜ்ஜூ! மெட்ரிக் செய்த பிறகும் எனக்கு எங்கும் வேலை கிடைக்கவில்லை. அங்கிருந்து திரும்பி வந்ததும் படையில் பெரிய பதவி கிடைத்துவிடும். காசிம் ரஜ்வி வாக்குறுதி அளித் திருக்கிறார். நமது எல்லாத் துன்பங்களும் அகன்று விடும். உன்னுடைய அழுகையும் முற்றுப்பெறும். என்னைப் போக விடுங்கள் பீபி!" அயாஸ் அழுதவாறே கூறினான். எல்லாரும் அவனுடைய பிரகாசமான வருங்காலத்தை நினைத்துப் பார்த் தார்கள். உண்மையில் இந்தச் சிறுவர்கள் ஏதேனும் செய்யத்தான் வேண்டும்.

"ஆனால் அயாஸ் அண்ணா, உங்களுக்கு சண்டையிடத் தெரியாது. ஒரு துப்பாக்கியால் என்ன செய்துவிட முடியும்?" ஃபவுசியா கேட்டாள்.

"இந்த ஓலம் எதற்கு?" ரஷீத் உள்ளே வந்து எல்லாரையும் அதட்டினான்—"அயாஸுக்கு எதற்காகத் தொல்லை தருகிறீர்கள். நமது குடும்பத்திலிருந்து ஒருவர் போகாவிட்டால் பெயர் கெட்டு விடும். போ மகனே! ஆண்டவன் உனக்குத துணை—நலமுடன் திரும்பி வா."

நொண்டி அத்தையும் ஷேகுவை அனுப்பத் தயாராக இல்லை. அவரும் அழுதுகொண்டிருந்தார். இறுதியில் ரஷீத் எல்லாரையும் பலவந்தமாக உள்ளே தள்ளினான். எல்லாரும் வாஹித் ஹுசேனுக்காகப் பயந்து மௌனமாகிவிட்டனர். அயாஸ் செல்லும் செய்தியைக் கேட்டு அவருடைய உடல்நிலை பாதிக்கப்படும்.

அன்று யாரும் சாப்பிடவில்லை. வீட்டில் மரண நிசப்தம் குடிகொண்டிருந்தது. அந்தக் குருவி மட்டும் முற்றத்திற்கு வந்து 'ஷு ஷு ஷுன் சூ சூ' என்று வீட்டுக்காரர்களை விசாரித்துக் கொண்டிருந்தது.

சாலைகளில் கார்களும் டாங்குகளும் போய்க் கொண்

டிருந்தன. இரவில் 'பிளாக் அவுட்' காரணமாக முழு நகரமும் மயானமாகக் காட்சி தந்தது.

நொண்டி அத்தையும் கஜலும் இரவு முழுவதும் தொழுகைப் பாயை விரித்துக் களத்திற்குச் சென்ற இளைஞர்களுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.

அத்துடன் நொண்டி அத்தை பெருமையுடன் பேசத் துவங்கினாள். தானும் அமரன் பகத்சிங்கின் சகோதரியைப்போல்! "அக்கா! நான் ஷேகு தம்பியிடம் சொல்லிவிட்டேன். எதிரிகளுக்கு முதுகு காட்டக் கூடாது என்று! அவர் உடலில் பட்டாணியக் குருதி அல்லவா ஓடுகிறது. என் தம்பி யுத்தக்களத்தில் மின்னலைப் போல் தாக்குவார்..."

ஆனால் மறுநாளே ஷேகுமியான் தோட்டத்துப் படிக் கட்டுகளின் மேல் உட்கார்ந்து மது மயக்கத்தில் பீடி புகைத்துக் கொண்டிருந்தார். "இப்போது சிறுவர்களை அனுப்பி இருக்கிறேன். சில நாட்களில் அடுத்த படையுடன் நான் போவேன்" என்று அவர் எல்லாருக்கும் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

அன்றே பகலில் எல்லா வேலைக்காரர்களும் சென்ற பிறகு ரஜியாவும் பீபியும் சேர்ந்து முற்றத்தில் ஒரு பள்ளத்தைத் தோண்டி அதில் தங்கள் நகைகளையும் பணத்தையும் புதைத்துவிட்டனர். ஒரு வேளை கொள்ளை நடந்தால் இந்த வீட்டின் மீதும் பார்வை விழும் என்று ரஷீத் சொல்லியிருந்தான். நொண்டி அத்தை பூமியைச் சரி செய்து அதன் மீது ஒரு பூச்செடியை வைத்து விட்டார். பிறகு எழுந்து நின்று கைத்தடியை எடுத்தபோது திகைத்து நின்றார்.

எதிரில் ஒரு புதிய பெண் நின்றிருந்தாள். ஒல்லியான, உயரமான, அழகான, பெரிய பெரிய கண்கள் கொண்ட பெண். வெள்ளைச் சேலையின்மேல் கருநிற புர்காவை அணிந்திருந்தாள். அவளுடன் இரண்டு மூன்று வயது நிரம்பிய ஒரு மாநிறமான சிறுமியும் இருந்தாள்.

"யார் நீ?" ரஜியா கலவரத்துடன் கேட்டாள். எல்லா வேலைக் காரர்களும் தங்கள் பகுதிக்குப் போய்விட்டார்கள். ரஷீதும் வீட்டில் இல்லை. உளவாளிகள் எல்லா இடங்களையும் கண் காணித்து வருகிறார்கள் என்ற தகவல் வேறு கிடைத்திருந்தது.

"நான் கைசர்... மாமி, ஆதாப்! அத்தை, ஆதாப்!!"

"கைசர்..." எல்லாரும் திடுக்கிட்டனர். பீபி அறையிலிருந்து வெளியே வந்தார். கஜல் அவளைக் கூர்ந்து நோக்கினாள்.

இது கைசர்தான். அதே நீண்ட சடை கொண்ட பெண். ஒருமுறை பஷீர் பேகம் அவளுடைய சடையைக் கத்தரித்து முற்றத்தில் வீசி எறிந்தாளே, அதே பெண். ரஜியா அவளைப்

பார்த்ததும் நடுங்கி விட்டாள். அல்லாஹ்தான் காப்பாற்ற வேண்டும். இவள் கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்துவிட்டாள் அல்லவா, யாருக்குத் தெரியும்? இங்கே கொள்ளையடிக்க வந்திருக் கலாம். இவளுடைய தோழர்கள் எத்தனை பேர் வெளியே மறைந்திருக்கிறார்களோ—நொண்டி அத்தையும் இவ்வாறே யோசனை செய்தாள்போலும். அதனால் உடனே தாவிச் சென்று அவளை மார்புடன் அணைத்துக் கொண்டாள்.

'அடியே கைசர்! நீ இவ்வளவு வளர்ந்துவிட்டாயா, உன் நிறம் ஏன் இவ்வளவு கருத்துவிட்டது. உனக்குச் சிறிதும் அன்பு இல்லை. உன்னை நாங்கள் அனைவரும் எவ்வளவு நினைத்தோம்"

"நீயா கைசர்...?" பீபியின் இதயம் வேகமாகத் துடித்தது. "பாத்திமா பேகம் எங்கே...?"

"நான் சாந்தைச் சந்திக்க வந்திருக்கிறேன். ஓர் அவசியமான வேலை இருக்கிறது" அவள் எல்லாரையும் புறக்கணித்து விட்டாள்.

"சாந்தையா?" எல்லாரும் கலவரமடைந்து விட்டார்கள். சாந்துக்கும் இவளுக்கும் இடையில் எப்போதும் பகை இருக்கும். எதற்காக அவளைச் சந்திக்க வந்தாளாம்?

"நீ ஓர் இந்துவைத் திருமணம் செய்துகொண்டுவிட்டதாகச் சொன்னார்களே—காடுகளில் துப்பாக்கி ஏந்தித் திரிகிறாள். கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து விட்டாள் என்றெல்லாம் தகவல் வந்ததே!" ரஜியா சற்றே துணிவுடன் கேட்டு விட்டாள்.

"ஆமாம். அது எல்லாம் உண்மைதான்!" அவள் முற்றத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள். சிறுமியையும் பக்கத்தில் உட்கார வைத்தாள்.

"நீங்கள் விரும்பினால் என்னை இப்போதே சிறை பிடிக்கச் செய்யலாம்." அவள் புன்முறுவல் பூத்தாள். "உங்கள் சித்தப்பா என் தலைக்கு ஆயிரம் ரூபாய் பரிசு வேறு அறிவித்திருக்கிறார்."

இதைக்கேட்டு எல்லாரும் நடுங்கினார்கள். இந்த வீட்டிற்கு இந்தப் பிசாசு ஏதோ ஒரு பெரிய ஆபத்தைக் கொண்டு வரப் போகிறாள்!

"அப்படியானால் இங்கு ஏன் வந்திருக்கிறாய்? உனக்கும் எங்களுக்கும் என்ன உறவு?"

"நான் போகிறேன். என் குழந்தையைச் சாந்திடம் விட்டுப் போக வேண்டும். எனக்கு எந்தப் புகலிடமும் கிடையாது. கிராந்தியின் தந்தை, இதைச் சாந்திடம் ஒப்படைத்துவிடும்படி ஆணையிட்டிருக்கிறார்."

"இதனுடைய தந்தை யாரோ?" நொண்டி அத்தை கோபத் துடன் கேட்டார்.

"சஞ்சீவா!"

"சஞ்சீவா..?" எல்லாரும் தீயை மிதித்துவிட்டார்கள் போலும். பஷீர் பேகம் இப்போதுதான் கைசரின் சடையை வெட்டி முற்றத்தில் வீசி இருக்கிறார். கைசர் ஆவேசத்துடன் சாந்தின் குடலை உருவி விடுவாள் என்று நொண்டி அத்தை அச்சம் கொண்டார்.

"ஊம்! நவாப் வாஹித் ஹுசேன் தனது கேடுகெட்ட பேத்திகளுக்குப் புகலிடம் கொடுத்து இந்த வீட்டின் நற்பெயரைக் கெடுத்துவிட்டார். ஆனால் தவறான வழிகளில் பிறந்தவர்களை வளர்த்து நான் கவிதாலயத்தை விலைமாதுக்களின் சந்தையாக்கி விட முடியாது" நொண்டி அத்தையின் குரலில் கம்பீரம் இருந்தது. அவள் உரத்த குரலில் பேசினாள்.

"எங்கு இருக்கிறது சஞ்சீவாவின் குழந்தை? இங்கே கொண்டு வாருங்கள். இங்க வாருங்கள் கைசர்."

தன் அறையின் கதவில் நிழலைப்போல் நின்றவாறு சாந்த் நடுங்கினாள்.

கைசர் உள்ளே சென்றதும், இரு கைகளாலும் சாந்த் அவளைப் பிடித்து முத்தமிட்டாள். பழைய பகைமையை மறந்து கைசருடன் புதிய உறவை ஏற்படுத்திக் கொள்வதுபோல் இருந்தது. அவள் தன் நடுங்கும் கரங்களால் சிறுமியை எடுத்து மார்புடன் அணைத்தபோது கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. சாந்தின் நிலைமையைக் கண்டு கைசரும் அழுதாள். அவளுடைய வெளுத்த கைகளைத் தன் கைகளில் வைத்துக் கொண்டு மௌன மாக உட்கார்ந்திருந்தாள்.

சாந்த் சிறுமியை எடுத்து மார்புடன் அணைத்துக் கொண் டதும் கைசர் எழுந்து நின்றாள்.

"நான் போகட்டுமா சாந்த்—எங்கள் இருவருக்கும் கிராந்தியின் கவலை இருந்தது. இவளை உங்களால் மட்டுமே காப்பாற்ற முடியும் என்று சஞ்சீவா சொன்னார்" கைசர் தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"ஆம். இவளை மட்டுமே என்னால் காப்பாற்ற முடியும்!" சாந்த் கண்களை மூடிக்கொண்டாள். "ஏனெனில் நான் கண்ட கனவு இதுதான்".

கைசர் கிளம்பினாள். காலடி ஓசையைக் கேட்டு சாந்த் கண் களை மூடியவாறே கேட்டாள். "மீண்டும் எப்போது வருவீர்கள்?"

"என்றுமில்லை..." கைசர் மெதுவாகக் கூறினாள்—"நான் தலைமறைவாக இருக்கிறேன். பிடிக்கப்பட்டால் தூக்கிலேற்றி விடுவார்கள். கிராந்திக்கு அடிக்கடி சளிப்பிடித்து விடுகிறது. அதனால் அவளுக்கு தவறாமல் தேநீர் கொடுக்க வேண்டும்."

கைசர் அவசரமாக வெளியேறினாள். பீபி, ரஜியா, நொண்டி

அத்தை ஆகியோரின் முகங்களை அவள் பார்க்கவில்லை.

நுழைவாசலில் கஜல் அவளை நிறுத்தினாள். "உங்கள் மகள் இந்த வீட்டில் எப்படி இருக்க முடியும்.?"

"ஆம்... எனக்குத் தெரியும். சாந்த் சாகும் தருணத்தில் இருக் கிறாள். அதனால் கிராந்தியை நான் உன்னிடம் ஒப்படைக்கிறேன். நீ கஜல்தானே?"

கஜல் கலவரமடைந்தாள். "கிராந்தியை என்னால் எப்படிச் சமாளிக்க முடியும்?"

"நீயும் இதே குடும்பத்தின் மரபு வண்ணத்தில் நனைந்து விட்டாய்," கைசர் கஜலைக் கூர்மையாக நோக்கினாள்.

"என் சகோதரன் யுத்த களத்திற்குச் சென்று விட்டான்" கஜல் விம்மினாள். "அவனை எப்படியும் காப்பாற்றிக் கொண்டு வாருங்கள்."

"இல்லை... நாம் எதுவும் செய்ய முடியாது கஜல்..." அவள் இரக்கமற்ற தொனியில் பதில் அளித்தாள். "ஆட்சி வெறியர்கள் தங்கள் நலன்களுக்காக உன் அண்ணனை மரணத்தீயில் தள்ளி விட்டார்கள். நீ பொறுமையாக இருப்பதே நல்லது."

"இல்லை, இல்லை..." கஜல் பலமாக அழுதாள்.

"அழுவதை நிறுத்து கஜல். நீ உன் நடையையும் மாற்றிக் கொள்ள வேண்டும்." கைசர் அவளை அணைத்துக் கொண்டாள். "சாந்தைப் போல் ஆடவர்களுடன் விளையாடுவதை நிறுத்து. உடலைத் தவிர அறிவும் உன்னிடம் இருக்கிறது. அதை விற்கத் தெரிந்து கொள்."

கைசர் இவ்வளவு அப்பட்டமாகப் பேசுவதைக் கண்டு கஜலுக்குக் கோபம் வந்துவிட்டது. ஆனால் அழுவதைத் தவிர அவளால் பதில் ஏதும் சொல்ல முடியவில்லை.

"நல்லது கஜல். நான் போகிறேன். என் குழந்தையைக் கவிதா லயத்தின் மரபுப் வழக்கங்களிலிருந்து காப்பாற்று. அதனுடைய தாயார் யார், தந்தை யார் என்பதை அவளுக்குக் கண்டிப்பாகத் தெரியப்படுத்தி விடு." கைசர் முகத்திரையைப் போட்டவாறு வெளியே சென்று விட்டாள்.

"நீ அவளுடன் என்ன பேசிக்கொண்டிருந்தாய்?" ரஜியா கஜலிடம் வந்து கேட்டாள்.

"அண்ணாவைத் திருப்பிக் கொண்டுவரும்படி கேட்டேன். அவளால் ஒன்றும் செய்ய முடியாது என்கிறாள்..." கஜல புலம்பினாள்.

சாந்த் அக்காவின் அறைக்குச் சென்றபோது கிராந்தி அவளுடைய தோளில் தூங்கிக் கொண்டிருந்தாள்.

"கைசர் உன்னிடம் என்ன சொன்னாள்?" சாந்த் மிக

ஆவலுடன் கேட்டாள். சஞ்சீவாவைப் பற்றி ஏதாவது சொல்லி யிருப்பாள் என்று அவளுக்கு நம்பிக்கை இருந்தது.

"சஞ்சீவா மாமா உங்களை நினைவுபடுத்திக் கொள்கிறாராம். அவர் கிராந்தியை அனுப்பி இருக்கிறார். அவரும் விரைவில் வருவாராம்." தனது பொய்யைக் குறித்துக் கஜலுக்கே வியப்பாக இருந்தது.

"இல்லை. இனி அவன் வரமாட்டான் " சாந்த் படுக்கையில் படுத்துக் கிராந்தியைத் தன்னுடன் அணைத்துக் கொண்டாள். "நானும் அவனை எதிர்பார்க்க மாட்டேன்..."

பிறகு அவள் தூங்கிக் கொண்டிருந்த சிறுமியை நோக்கினாள். அதனுடைய அடர்த்தியான சுருள்முடியை முத்தமிட்டாள். பிறகு கண்களை மூடிக்கொண்டாள்.

"சாந்த் அக்கா!" கஜல் கதறி விட்டாள்.

உயிரோடு இருப்பவர்களின் வரிசையில் கடந்த இரண்டு ஆண்டுகளாகவே சாந்த் இடம் பெறவில்லை. அவளுடைய மரணத்தின்போது மீண்டும் தன் மகள் ஒருத்தியை இழந்துவிட்டது போல் பீபி அழுதார். அடிக்கடி மூர்ச்சையாகி விழுந்தார். பிறகு கற்சிலையாகி விட்டார்.

"எங்கே இருக்கிறாள் சாந்த்... எங்கே இருக்கிறாள் சாந்த்..?" வாஹித் ஹுசேன் தன் அறையிலிருந்து தடுமாறியவாறு வந்தார். வெள்ளைத் துணியால் மூடப்பட்டிருந்த சாந்தின் சடலம் அவருக்குத் தென்படவில்லை.

"எங்கே போய் விட்டாள்... என் சாந்த்... என் மகள்..." அவர் தலையில் அடித்துக்கொண்டு அழுதார். வீடு முழுவதும் மௌன மாகிவிட்டது.

ரஜியா இருபத்தி ஆறு ஆண்டுகள் நிரம்பிய சாந்தைப் பார்த்தாள். அழுவதற்குப் பதிலாக முந்தானையால் தலையை மறைத்து கன்னங்களில் போட்டுக்கொண்டாள். நொண்டி அத்தை பெண்களின் மத்தியில் ஓலமிட்டாள். "என் பேத்தி கற்புக்கரசி! சாவித்திரி போன்றவள்; கன்னியாகவே போய்விட்டாள். அவள் மேல் வீணாகவே பழி சுமத்தி மக்கள் எங்கள் இதயங்களைத் துளைத்து விட்டார்கள்."

புரண்டு புரண்டு அழுத கஜலை ஃபவுசியா சமாளித்துக் கொண்டிருந்தாள். தன்னுடைய அன்னை மீண்டுமொரு முறை இறந்து விட்டதுபோல் கஜலுக்குத் தோன்றியது. சாந்த் அக்காவை அவள் பெரிதும் விரும்பினாள். சாந்த் தான்அவளுடைய ஞாயிறு, அவளுடைய வாழ்க்கை... அப்போது சாந்தின் முகத்தில் அவளுடைய புகழ்பெற்ற அழகு திரும்பி வந்துவிட்டது. அந்த அழகுதான் ஹைதராபாத்தில் அவளைப் பிரபலப்படுத்தி இருந்தது.

அவளுடைய பிரகாசமான முகத்தில் பதினைந்து பதினாறு வயதுள்ள பெண்ணின் வனப்பும் மாசற்ற தன்மையும் இருந்தன. அவளுடைய ரோசா நிற உதடுகள் தாமரை மொக்குபோல் தூய்மையாக இருந்தன. அவளுடைய மென்மையான உடலில் கன்னித்தன்மையின் பொலிவு இருந்தது. வெள்ளைத் துணியில் அவளுடைய கருநிற முடிகளின் சுருள் கொத்துக்கள் அசைந்து, அவளுடைய வாழ்வை உறுதிப்படுத்தின. இத்தனை அழகான முகத்தை மக்கள் மண்ணில் எப்படிப் புதைத்துவிடுகிறார்களோ என்று கஜல் யோசனை செய்தாள்.

இறுதி அஞ்சலிக்காகச் சாந்தின் சடலம் கவிதாலயத்தின் பெரிய கூடத்தில் வைக்கப்பட்டபோது அங்கே சுவர்களில் இருந்த எல்லாக் கவிஞர்களும் அமைதி இழந்து சட்டங்களின் வழியே எட்டிப் பார்த்தார்கள். காதலின் இத்தகைய முடிவு அவர்கள் கவிதைகளில் என்றும் இருந்ததில்லை.

இரண்டு மணி நேரத்தில் ரஷீத் சாந்தைப் புதைத்துவிட்டு வந்துவிட்டான். எல்லா ஏற்பாடுகளும் அவன் முன்பே செய்து தயாராக வைத்திருந்தான் போலும். ரஜியா பினாயில் தெளித்து சாந்தின் அறையைச் சுத்தப்படுத்தினாள். அவளுடைய துணிகள், ஒப்பனைப் பொருட்கள், வயலின், பட ஆல்பம் எல்லாவற்றையும் எடுத்து பழைய பொருட்களை விற்பவருக்குக் கொடுத்து விட்டார்கள். அவளுடைய சாமான்களைக் கண்டு எல்லாரும் மூக்கைப் பொத்திக் கொண்டார்கள். கொள்ளைநோயின் எலியாக நினைத்தார்கள் போலும்...

கிராந்தியை கஜல் தன் அறையில் கொண்டுவந்து ஒளித்துக் கொண்டாள்.

சாந்தின் மூன்றாவது நாள் சடங்கு- வீட்டில் பல விருந் ாளிகள் இருக்கும்போது ரஷீத், அஹ்மத் ஹுசேனின் கடிதத்தைக் கொண்டு வந்து படித்துக் காட்டினான். கைசர் அந்தப் பகுதியின் பல பண்ணையார்களைக் கொலை செய்துவிட்டாள்... அஹ்மத் ஹுசேனின இல்லத்தையும் அவள் குறிவைத்துவிட்டாள்... அதனால் அவர்கள் உயிருக்கு அஞ்சி கிராமத்தை விட்டு ஔரங்கா பாத்திற்கு வந்துவிட்டார்கள்... நிலைமை சீரடைந்ததும் நசீரின் நிச்சயதார்த்தம் நடக்கும். அதில் ஹைதராபாத்திலிருந்து எல்லாரும் வந்து கலந்துகொள்ள வேண்டும் என்று எழுதியிருந்தது.

“கேடு கெட்டவள்...பிசாசு...” ரஜியா பற்களைக் கடித்தாள்.

“இங்கே வந்து தப்பிவிட்டாளே...” நொண்டி அத்தை கைகளைப் பிசைந்தாள்.

“நான் கைதாகி விடுவேன் என்று அவளே சொன்னாளே!”

“அப்படியானால் சித்தி கஜலுடன் நிச்சயதார்த்தம் நடத்தத்

தயாராகிவிட்டாரா?" என்று ஃபவுசியா கேட்டாள்.

"ஆனால் நிச்சயதார்த்தம் அவருடைய தங்கை மகளான நஃபீசுருடன் நடப்பதாக இருந்தது!" ரஷீத் கடிதத்தை மடித்தவாறு கூறினான்.

கடிதத்தை வைத்துவிட்டு ரஷீத் வெளியே சென்றான். சிறிது நேரத்திற்குள் செய்தி வந்துவிட்டது. ஔரங்காபாத்திற்குள் இந்தியப் படைகள் புகுந்துவிட்டதாகவும், பெருஞ்சேதம் உண்டாகி இருப்ப தாகவும் வந்த செய்தி எல்லாரையும் திடுக்கிட வைத்தது.

இப்போது யாராலும் பொறுமையாக இருக்க முடியவில்லை. நொண்டி அத்தை மார்பில் அடித்துக் கொண்டு ஓலமிட்டார்; "என் அண்ணா... எத்தனை அழகான மாளிகை அது. நான் அழிந்து போனேனே..."

அவருடைய குரலுடன் பீபி, ரஜியா, கஜல், ஃபவுசியா ஆகியோரின் குரல்களும் இணைந்து கொண்டன. கஜலுக்குச் சோகம் மேலிட பைத்தியமே பிடித்துவிடும்போல் இருந்தது. வாஹித் ஹுசேன் தன் தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டார்.

மாலைவரை அவரது இரத்த அழுத்தம் இருநூறைத் தாண்டி விட்டது. அவருடைய விக்கல்கள் சிறிதும் நிற்கவில்லை. டாக்டர்களே கலவரமடைந்துவிட்டார்கள். ரஷீத் அமைதியின்றி உலாவினான். வீட்டில் இருந்த அனைவருமே அவருக்கு ஆறுதல் கூறினார்கள். இந்தச் செய்தியை அவருக்குச் சொல்லியிருக்கக் கூடாதென்று வருந்தினார்கள்.

பிறகு ரஷீத் அவர் அருகில் உட்கார்ந்தான். வேறு பேச்சு களைப் பேசி அவருடைய கவலையைக் குறைக்க முயன்றான்.

"தங்கள் உடல்நிலை சற்று தேறிவிட்டால், ஔரங்கா பாத்திற்குப் போய் வருகிறேன். சித்தப்பாவின் சொத்துக்கள் எங்கெங்கே எவ்வளவு இருக்கின்றன என்பதைத் தாங்கள் சொல்ல வேண்டும். மாளிகையில் என்ன சாமான்கள் இருக்கின்றன, எஞ்சி இருப்பவைகளைச் சிறிது அமைதி ஏற்பட்டதும் நான் ஹைதரா பாத்திற்கு கொண்டு வந்துவிடுகிறேன்."

வாஹித் ஹுசேனின் விக்கல்கள் நின்றுவிட்டன. அவர் தலையை உயர்த்தி ரஷீதைப் பார்த்தார்.

"உங்கள் சித்தப்பாவின் சொத்து நிறைய இருக்கிறது. கைசர் விவசாயிகளைத் தூண்டியிருப்பதாகச் செய்திகள் வந்தனவே. என்னால் இந்தச் சச்சரவுகளைத் தீர்க்க முடியாது. நீங்கள்தான் இதைப் பார்த்துக்கொள்ள வேண்டும்." வாஹித் ஹுசேன் தன் தலையணைக்கு அடியிலிருந்து கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டு ரஷீதின் கைகளைப் பிடித்

தவாறு சொன்னார்: "அஹ்மத் மியாவின் சொத்துகளின் பராமரிப்பு வேலைகள் இனி உங்கள் பொறுப்பாகும்.." பிறகு அவர் எழுந்து உட்கார்ந்து கொண்டார்.

"அவருடைய சொத்து இலட்சக்கணக்கில் பெறும். உஜாலா பேகத்திடம் நிறைய வைரங்கள் இருந்தன. அமீன்காட் கிராமத்தில் நிலங்களும், தவுலதாபாத்தில் தோட்டங்களும் இருக்கின்றன..." பிறகு அவர் தாமே எழுந்து சென்று நிலையறைப் பெட்டியிலிருந்து பழைய ஆவணங்களும், ஆயக்கட்டுகளும் எடுத்து வந்தார். ரஷீத் மெதுவாக எழுந்து வெளியே வந்துவிட்டான்.

அன்று மாலை அவருடைய இரத்த அழுத்தம் இயல்பான நிலைக்கு வந்துவிட்டது.

"கேடு கெட்டவர்களே! என் சகோதரனின் ஆன்மாவுக்கு நற்பலன் கிடைக்க இரண்டு ரூபாய்த் தித்திப்புக்கூட யாரும் பங்கிடவில்லையே" என்று சொல்லிவிட்டு அவர் தாமே குர்ஆன் ஓதத் தொடங்கினார்.

"அவருடைய வாரிசுகள் யாருமில்லையே. நான் பெரிய அளவில் 'பாத்திஹா' செய்யப்போகிறேன்"—ரஜியா பெருமையாகச் சொல்லிக் கொண்டாள்.

இந்த வேலைகளை முடித்த பின்னர் ரஷீதுக்குக் கிராந்தியின் நினைவு வந்தது.

"அந்த நாய்... முறை கேடாகப் பிறந்தவள் எங்கே இருக்கிறாள்..?அவளை உடனே வீட்டிலிருந்து வெளியேற்றுங்கள். அரசுக்குத் தெரிந்துவிட்டால் எல்லாருமே தூக்கில் தொங்க விடப்படுவோம்."

எல்லாரும் அவளைத் தேடினார்கள். பீபி கிராந்தியை மார்புடன் அணைத்தவாறு அழுதுகொண்டிருந்தார். அவளே சாந்தின் நினைவுச் சின்னம் என்று நினைத்தார்போலும். ஆனால் ரஜியா அவசரமாக பீபியின் மடியிலிருந்து பிடுங்கி, வெளியே வீசி விடுமாறு கரீமிடம் கொடுத்துவிட்டாள்.

மீண்டுமொரு முறை சாந்தின் சவப்பெட்டி எடுக்கப்படுவது போல் கஜல் அழுதுவிட்டாள். அவள் திரும்பிப் பார்த்தாள். பீபி உதடுகளைக் கடித்து கொண்டிருந்தார். இவர் இனியும் பொறுமை சாதிக்கப் போகிறாரா, ரஷீதையும் ரஜியாவையும் ஏன் கண்டிப்பதில்லை. இந்த வீட்டில் அந்நியராகவே இருப்பாரா என்று கஜலுக்குக் கோபம் வந்தது.

பிறகு அவள் வெளிக்கதவை நோக்கி ஓடினாள். கிராந்தி சாலையில் நின்றவாறு அழுதுகொண்டிருந்தாள். கஜல் அவளை வாரி எடுத்துக்கொண்டு ரங்கம்மாவின் குடிசையைத் தேடிச் சென்றாள்.

“இது என்னுடைய குழந்தை. சில நாட்கள் உன்னிடம் இருக்கட்டும். பிறகு நான் வந்து வாங்கிக் கொள்கிறேன்.”

“உங்களுடைய குழந்தையா?” ரங்கம்மாவுக்கு வியப்பாக இருந்தது. அவள் கவிதாலயத்தைப் பெருக்கிச் சுத்தம் செய்பவள். அதனால் கஜலைப் பற்றி அவளுக்கு எல்லாம் தெரியும். “ஆனால் நான் இவளுக்கு என்ன ஊட்டுவேன். இவள் பால் குடிப்பாளே!”

“அந்த ஏற்பாடுகளை நான் செய்கிறேன். நீ கவலைப்படாதே,” அவள் குழந்தையை அவளிடம் ஒப்படைத்துவிட்டு அவசரமாக வீட்டுக்கு வந்தாள்.

வெளியே மலீஷம் ரஷீதிடம் மன்றாடிக் கொண்டிருந்தான். “எங்கள் உயிருக்கு ஆபத்தாக இருக்கிறது. என் மனைவியும் தங்கையும் இன்றிரவு உங்கள் வீட்டில் இருக்கட்டும்..”

“நான் அப்பாவிடம் கேட்கிறேன்” ரஷீத் அலட்சியமாகப் பதில் சொன்னான்.

“குண்டர்கள் இன்று என் வீட்டைத் தாக்கப் போகிறார்களாம்...”

திடீரென்று வானொலி மௌனமாகிவிட்டது. போர்ச் செய்திகளுடன், இந்தியப் படைகள் வேகமாக முன்னேறி நகருக்குள் வருவதாகத் தகவல் கிடைத்தது.

ஹைதராபாத் நகரம் முழுவதும் அச்சத்தால் நடுங்கியது.

என் சகோதரன்... என் மகன்... என் கணவன்...

ஒவ்வொரு வீட்டிலும் கூக்குரல்கள் ஒலித்தன. பெண்கள் கூரைகளின் மேல் நின்றவாறு போராட்டக்காரர்களுக்குக் குரல் கொடுத்தார்கள். அவ்வீரர்களுக்குத் துப்பாக்கி பிடிக்கவும் தெரியவில்லை. சில சுயநலவாதிகள அவர்கள் கைகளில் உணர்ச்சியூட்டிக் கைத்தடிகளைக் கொடுத்துவிட்டார்கள். ஆயிரக்கணக்கான இளைஞர்களின் பிணங்கள் மரக்கிளைகளிலும், பாறைகளிலும் கிடந்தன. நதிகளில் மிதந்தன. “நாம் யாருக்காகப் போரிட்டோம்?” என்று அவர்களுடைய நிலை குத்திய கண்களில் வினாக்குறி இருந்தது.

கடைகள் மூடப்பட்டுக் கிடந்தன. ‘இது எத்தகைய அநீதி இறைவா...’ என்று தக்காண வானொலி கேட்டுக் கொண்டிருந்தது.

ரஜியா கூரையின் மீதேறி எல்லாத் திசைகளிலும் நோக்கினாள். நகரம் முழுவதிலும் மரணத்தின் நிழல் பரவி இருந்தது. பிறகு எதிரில் காதிம் அலி பெய்க்கின் வாயிற்படியில் ஒரு பார வண்டி வந்து நின்றது. வீட்டின் விலையுயர்ந்த பொருள்கள் அதில் ஏற்றப்பட்டன.

காதிம் அலி பெய்க் பம்பாயில் ஒரு விமானத்திற்கு ஏற்பாடு செய்திருப்பதாக மக்கள் பேசிக் கொண்டார்கள். அது அவரைப்

பாகிஸ்தானுக்குக் கொண்டு செல்லும்.

இத்திஹாதுல் முஸ்லிமீன் கூட்டங்களில், தனது குருதியின் கடைசி சொட்டுவரை நாட்டுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று பேசிய காதிம் அலி இவர்தான்...! அன்னையாரிடமும், இல்லக்கிழத்திகளிடமும் 'இன்று சமூகம் பலி கேட்கிறது" என்று மன்றாடியவர் இவர்தாம்!

"இன்று நீங்கள் எல்லாரும் எங்கள் வீட்டுக்கு வந்துவிடுங்கள்" கூரையில் நின்றிருந்த மலீஷும், ரஜியாவிடம் சொன்னான்.

"கவலைக்குரிய விஷயம் எதுவும் இல்லை அண்ணா, நாங்கள் உங்களுக்குப் பக்கத்திலேயே இருக்கிறோமே" ரஜியா கண்ணீரைத் துடைத்தவாறு கீழே இறங்கி வந்தாள்.

நல்ல வேளையாக ஷாஹீன் இப்போது லண்டனில் இருக் கிறான். ஆனால் ஃபவுசியாவின் காரணமாக ரஜியா தவித்துக் கெண்டிருக்கிறாள்.

"வீடுகளும் சோதனையிடப்படுமாம்" ரஷீத் அமைதியிழந்து இங்குமங்கும் ஓடினான்.

"நூற்றாண்டுக் காலத் தன்னுரிமை போய்விட்டது..." தன் தலையிலிருந்த மகுடம் போய்விட்டதுபோல் நொண்டி அத்தை துக்கம் கொண்டாடினாள்.

இந்தத் தன்னுரிமையின்போது அவர்கள் எத்தனை இன்பங்களை அனுபவித்தார்கள் என்று யாராவது கேட்க வேண்டுமே என்று கஜல் யோசனை செய்தாள். அயாஸ் இப்போது எங்கே இருப்பான் என்று அவனை நினைவுபடுத்திக் கொண்டாள். இத்தனை சிறிய வயதில் அவன் செத்துவிட முடியாது. ஏதேனு மொரு மலையில் ஒளிந்து கொண்டிருப்பான்—அல்லது எங்கேனும் ஒரு கூடாரத்தில் தன் தோழர்களுடன் இருப்பான்.. ஒரு வேளை மருத்துவமனையிலும் இருக்கலாம்... அல்லது... அல்லது...?

பிறகு அவள் தனக்குள்ளேயே அழுவதற்காக உட்கார்ந்து விட்டாள். இப்போது எங்கும் கண்ணீர் வெள்ளமாக இருந்தது. யாரும் யாருக்கும் ஆறுதல் சொல்லும் நிலையில் இல்லை. நொண்டி அத்தை ஷேகுத் தம்பிக்காக அழுதாள். ரஜியா தனது சகோதரர்களுக்காக அழுதாள். ஃபவுசியாவின் கணவனாக வரப்போகிற டாக்டரும் ஏதோ ஒரு களத்தில் இருப்பதாகச் சொன்னார்கள்.

இப்போது ரஷீத் மட்டுமே எஞ்சி நின்றான். அவனுடைய கவலைகளுக்கு அளவே இல்லை. தன் மணிமுடி பறி போய் விட்டதுபோல் அவன் தவித்தான். இனி என்ன நடக்குமோ...? ஹரீஷ் சந்தர்—பான்—மலீஷம்—பர்வா.. எத்தனயோ பேர் அவனைக் குறிவைத்துக் காத்து நிற்கிறார்கள். நேற்றுவரை மிகச்

சாதாரணப் புழுக்களாக நினைத்துத் தன் மிதியடிகளால் இவர் களை நசுக்கி வந்தான். ஆனால் இன்று அச்சந்தரும் மலைப் பாம்புகளாக அவன் முன்பு வந்து நிற்கிறார்கள். இந்நிலையில் அவன் என்ன செய்வது? நுஸ்ரத் ஜங்கின் பேரனும், வாஹித் ஹுசேனின் மகனுமான அவன் தற்கொலை செய்து கொள்வதா? நாயைப்போல் மரணமடைவதா...?

பைத்தியக்காரனைப்போல், தலையைப் பிடித்தவாறே யோசனை செய்தான் அவன்.

"என்ன, ஷேகு மியான் ஏதாவது தகவல் அனுப்பினாரா, அவர் எனது மகனையும் அழைத்துச் சென்று விட்டாரே...?" வெளியே ஒரு மாது விசாரித்துக் கொண்டிருந்தாள்.

"அப்பாவுக்கு எந்த முகவரிக்குக் கடிதம் எழுதுவது என்று அம்மா கேட்டார்கள்..." ஒரு சிறுமி கதவின் அருகில் ரஷீதிடம் வினா விடுத்தாள்.

எந்த முகவரிக்கு? அவன் என்ன பதில் சொல்வது? இந்தப் பெண்கள் எத்தனை நம்பிக்கையுள்ளவர்களாக இருக்கிறார்கள். இவர்களுடைய கணவர்கள் மேகங்களைப்போல் விண்ணோடு கலந்துவிட்டார்கள் என்று நன்கு தெரிந்தபிறகும் கடிதம் எழுதி அனுப்பும் ஆவல் கொண்டிருக்கிறார்கள். வெகுநேரம் சிந்தனை செய்தபிறகு அவன் பூ வாங்கி வரச் சிகந்தராபாத்திற்கு ஓடினான். இந்தியப் படைகளுக்கு வரவேற்பு கொடுக்க வேண்டுமே...! அதற்கு முன்பு அவன் ஜி.என். சௌத்ரி, அவர்களுக்கு ஒரு கடிதமும் தயாரித்துவிட்டான். நிஜாமின் ஆட்சியில், இளைஞர்களை பலவந்தமாக இத்திஹாதுல் முஸ்லிமீன் இயக்கத்தில் ஈடுபடுத்திய உண்மைகளை எழுதி, தங்களுக்கு நீதி வழங்கப்படவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்திருந்தான்.

மாலையில் களைப்புடன், வியர்வையில் நனைந்தவாறு அவன் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது, ஆலா ஹஜ்ரத் வானொலியில் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தார். ஹைதராபாத் இந்தியாவுடன் இணைந்துவிட்டதாகவும், பொது மக்கள் பொறுமையாகப் புதிய நிலையுடன் ஒத்துப்போக வேண்டும் என்றும அவர் அறிவுரை வழங்கினார்.

ஆலா ஹஜரத்தின் குரல் முதல் முறையாக கவிதாலயத்தில் ஒலித்தது. ஹைதராபாத்தின் சாலைகளிலும் தெருக்களிலும் கேட்டது. மக்கள் ஆங்காங்கே நின்றுவிட்டார்கள். வாஹித் ஹுசேன் தலை குனிந்து பணிவுடன் உட்கார்ந்திருந்தார். வீட்டிலிருந்த அனைவருடன் அவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் வழிந்தோடியது.

இன்று தக்காண வானொலி நிகழ்ச்சி முடிவு பெற்ற சமயம்

'உலகம் உள்ள வரை இந்த அரசு நிலைத்து நிற்க வேண்டும்' என்று எம்.ஏ. ரவூஃப் பிரார்த்தனை செய்யவில்லை. மேலும் உஸ்மான் அலிகான் நலமுடனும் சிறப்போடும் திகழ வேண்டும் என்றும் எல்லாம் வல்ல இறைவனிடமும் சொல்லவில்லை!



மறுநாள் காலையில் வீட்டில் அஹ்மத் ஹுசேன், உஜாலா பேகம், நசீர் ஆகியோருடைய பத்தாவது நாள் 'காரியம்' நடைபெற்றது. அவர்கள் எப்போது எங்கு செத்தார்கள் என்று யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. ஆனால் வாஹித் ஹுசேன் எதிலும் எவ்விதக் குறையும் வைக்கத் தயாராக இல்லை.

இன்று கஜல் காலையிலிருந்தே அழுது கொண்டிருந்தாள். இனி நசீர் அவளைத் திருமணம் செய்து கொள்ள மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும் என்றாலும் அவனுடைய மரணத்தை அவளால் ஏற்றுக் கொள்ள முடியிவில்லை...

"என் சகோதரன் மனத்தைப் பொறுத்தவரை அரசனாகவே இருந்தான். அவனுடைய ஒவ்வொரு செயலும் சிறப்பாகவே இருந்தது." நொண்டி அத்தை கண்ணீரைத் துடைத்தவாறு சமையல்காரர்களை மேற்பார்வையிட்டாள். ஐந்நூறு பேருக்கு இன்று உணவு தயாராகிறது. அஹ்மத் ஹுசேன் இவ்வளவு சொத்தைவிட்டுச் சென்றிருக்கிறாரே, அதனால் அவருடைய மரணமும் பெரிய அளவில் கொண்டாடப்பட வேண்டும்!

இன்றிரவு தானும் நஞ்சு குடித்துவிட வேண்டும் என்று கஜலும் முடிவு செய்துவிட்டாள்.

"ஆ... உஜாலா அண்ணியே... என் கையால் உங்களுக்கு 'கபன்' (கடைசி உடை) கொடுக்க முடியவில்லையே..." நொண்டி அத்தை ஒப்பாரியின் முதல் வரியை ஆரம்பித்தாள். உறவுக்காரப் பெண்கள் அதை நீட்டிக்கொண்டு போனார்கள்.

"அட கொடுங்கோலர்களே... எங்கள் மீது எத்தனை கொடு மைகள் இழைப்பீர்கள். ஹா! இலட்சக்கணக்கான சொத்தை அழித்து விட்டார்களே..."

நொண்டி அத்தை மாரடித்துக் கொண்டாள். அவளுடன் ஃபவுசியா, பீபி, ரஜியா ஆகியோரும் பலமாக அழுதார்கள்.

உள்ளே கஜல் மௌனமாகப் படுத்திருந்தாள். இனி நசீருடன் அவளுடைய திருமணம் நடக்காது என்றாலும் அவனுடைய நினைவில் வாழ்க்கையைக் கழித்துவிட வேண்டும் என்று அவள் முடிவெடுத்திருந்தாள். ஆனால் இன்றே நசீருடைய 'பத்தாவது நாள்' வந்துவிடும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை!

பலகணியைத் திறந்து அவள் வெளியே பார்வை செலுத்தினாள். தூரத்தில் ரங்காவின் குடிசைக்கு வெளியில் கிராந்தி விளையாடிக் கொண்டிருந்தாள். எல்லாச் சாலைகளும் வெறிச் சோடிக் கிடந்தன. ஒவ்வொரு வீட்டிலிருந்தும் அழுகுரல் கேட்டது. நீண்டதொரு பயங்கரமான கனவு காணுவதுபோல் கஜலுக்குத் தெரிந்தது. கண் விழித்தவுடன், சாந்த் அக்கா கருநிற ஜார்ஜெட் சேலையணிந்தவாறு தன் விரல்களால் வயலினை மீட்டி முணு முணுக்கத் தொடங்குவாள் என்று நினைத்தாள்..

'தீபம் எரிந்தால் அதிலிருந்து புகை எழுகிறது.
எனக்குப் பின்னால், காதல் சுவாலையும்'
கருநிறமடைந்துவிட்டது.'

மூக்கைச் சுத்தப்படுத்தாததற்காக அம்மா அவளுடைய முதுகில் ஒரு குத்துவிடப் போகிறாள். "நீ எதற்காக இவ்வளவு சிரிக்கிறாய்" என்று அவள் ஃபவுசியாவிடம் கேட்கப் போகிறாள்.

யாரோ அந்த அறையின் கதவைப் பலமாகத் தட்டினார்கள்.

"அடியே கஜல், சீக்கிரமாக வெளியே வா. பெரிய ஆபத்து வந்துவிட்டது," ஃபவுசியா உள்ளே வந்து கஜல்மீது விழுந்தாள்.

இருவரும் வெளியே முற்றத்திற்கு வந்தார்கள்.

ரஷீத் மாமா மூர்ச்சையாகிக் கிடந்தார். பீபி அவர்மீது நீர் தெளித்துக் கொண்டிருந்தார். ரஜியா அவர் மீது சிலையாகச் சாய்ந்திருந்தாள். நொண்டி அத்தை கிண்ணங்களில் இருந்த இனிப்பின்மேல் வெள்ளித் தகடுகளை ஒட்டியவாறு ஒரு கடிதத்திற்கு முத்தமிட்டுக் கொண்டிருந்தார்.

வெளியிலிருநது யாரோ குரல் கொடுத்தார்கள். "வாஹித் நவாபுக்காகத் தண்ணீர் கொண்டு வாருங்கள். டாக்டருக்கு உடனே போன் செய்யுங்கள். அவருக்கு வலி அதிகமாகிவிட்டது."

விருந்தாளியாக வந்த பேகம்கள், ஏதோ ஒரு மந்திர சக்தி அவர்களைச் சிலையாக்கி விட்டதைப்போல், மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"என்ன ஆகிவிட்டது பீபி!" கஜல் பயந்தவாறு பீபியின் மார்பினுள் புதைந்துவிட்டாள். பீபி கஜலை முதலில் கூர்ந்து நோக்கினார். பிறகு அவளை மார்புடன் அணைத்துக் கொண்டாள்.

பிறகு அவர் நொண்டி அத்தையின் கையிலிருந்த கடிதத்தைப் பிடுங்கி கஜலிடம் கொடுத்தார்.

மேன்மை மிகு அண்ணன் அவர்களுக்கு,

தங்களின் திருப்பாதங்களைத் தொட்டு, யான் அறிவிப்பது யாதெனில், இறைவனின் அருளால் நாங்கள் அனைவரும் நலமுடன் இருக்கிறோம். தங்கள் அனைவருடைய நலனையும் அவ்வாறே விழைகின்றோம்.

மிக முக்கியமான செய்தி யாதெனில், தங்களின் அன்பு கொண்ட நல்லாசிகளால் ஔரங்காபாத்தில் பாதுகாப்புடன் இருக்கிறோம். குண்டர்களின் தாக்குதல் திட்டத்தை முன்பே அறிந்து விலையுயர்ந்த பொருள்களை இங்கே கொண்டு வந்துவிட்டேன். இப்போது இன்று மாலையே நசீரையும் நசீருடைய அன்னையாரையும் அழைத்துக் கொண்டு பாகிஸ் தானுக்குப் போகிறேன். நிலைமைகள் சீர்பட்டபிறகு சொத்து களைப் பற்றி முடிவு எடுக்கலாம். தங்களை விட்டு வெகு தொலைவில் செல்கிறோமே என்ற கவலை இருப்பினும், இதயங்களால் நாம் பிணைக்கப்பட்டிருப்பதற்கு எல்லாம் வல்ல இறைவனுக்கு நன்றி சொல்ல வேண்டும். அன்னை யாருக்குச் சலாம். வீட்டில் அனைவருக்கும் 'துஆ' சொல் லுங்கள். எல்லாருடைய நலனையும் அறிய பேராவல் கொண்டுள்ளேன்.

இப்படிக்கு
அடியேன்
அஹ்மத் ஹுசேன்

கடிதத்தைப் படித்துக் கஜல் தனது கண்களை உயர்த்திய போது எல்லா திசைகளிலும் வெள்ளித் தாள்கள் மலர்களைப் போல் பரவி இருந்தன. அவள் அவசரமாக அறையினுள் சென்று, தொழுகைப் பாயை விரித்து 'சஜ்தா'வில் விழுந்துவிட்டாள். நசீரின் கரங்களில் சாய்ந்துவிட்டதுபோல் தன் இரு கைகளையும் விரித்துப் பூமியைப் பிடித்துக் கொண்டாள். கண்ணீர் நிறைந்த கண்களுடன் அவள் பார்த்தபோது, நசீர் விமானத்தின் கதவில் நிற்பதுபோல் தெரிந்தது. அவன் ஒவ்வொரு வினாடியும் அவளை விட்டு வெகு தொலைவில் விலகிக் கொண்டே போகிறான் என்றாலும் கஜலின் இதயத்தினுள மனநிறைவு எனும் ஒளி பரவிவிட்டது. நசீரின் மோதிரம் அவளுடைய விரலிலேயே இருக்கிறது. அதில்தான் அவளுடைய ஆன்மாவும் அடங்கிவிட்டது. இதற்கு முன்பும் பல ஆடவர்கள் அவள வாழ்வில் நுழைந்தனர் என்றாலும் நசீரைப்போல் யாரும் அவளுடைய இதயத் துடிப்பாகி விடவில்லை. நான்கு நாட்களுக்குப் பிறகு அவள் ஒவ்வொரு வருடைய முகத்தையும் மறந்துவிடுவாள். எல்லா வாக்குறுதி களையும் ஒரே சிரிப்பில் மறைத்துவிடுவாள். ஆனால் நசீரின் நினைவு மட்டும். அவனை மீண்டும் சந்திக்கும் ஆசைகள் ஒவ்வொன்றாக அழிந்துவிட்ட பிறகும், தாமரையைப்போல் நீர்ப்பரப்பிலேயே மிதக்கிறது.

பிறகு வாஹித் ஹுசேனைப் பார்க்கும் டாக்டர், ரஷீதையும் பார்த்தார். ஆனால் அவனோ வாழ்வில் இச்சை இல்லாதவன்

போல் மருந்து உண்பதில்லை என்று உறுதிமொழி எடுத்து விட்டான். ஷாஹீனை மேநாட்டிலிருந்து திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கும் வந்துவிட்டான். "நானும் நமது பணத்தைப் பாகிஸ்தானுக்கு மாற்றிக் கொள்ள வேண்டும். நிலைமை நமக்கெதிராக எப்போது மாறிவிடும் என்பதைச் சொல்ல இயலாது. எனவே ஷாஹீனின் வந்தவுன் ஏதேனுமொரு ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்" என்று ரஜியாவிடம் கூறினான்.

ரஷீத் படுக்கையில் இருந்தபோதே வாஹித் ஹுசேனுக்கு மாரடைப்பு வந்துவிட்டது. இது இரண்டாவது அடைப்பாகும். டாக்டர்களின் குழு ஒன்றை அமைத்து ரஷீத் ஆய்வு செய்தான். நற்செய்திகள், நம்பிக்கையூட்டும் விஷயங்கள் அவரிடம் சொல்லப் பட்டன. என்றாலும், மாலை வரும் முன்பே வாஹித் ஹுசேனின் காமமும் காதலும் கலந்த கவிதைகளின் ஈட்டிகள் மங்கலடையத் தொடங்கிவிட்டன. அவை சிறு ஒலியும் எழுப்பாமலும் பாராட்டுப் பெறாமலும் மௌனமாக வளிமண்டலத்தில் மறைந்துவிட்டன. டாக்டர் தன் பொருட்களைச் சேகரித்துக் கொண்ட பிறகும் ரஷீத் இதை நம்பத் தயாராக இல்லை. அந்நிலையிலும் அவன் அவர்மீது குனிந்து இதயத் துடிப்புகளைத் தேடினான். வாழ்க்கையைத் தன் பாதங்களின் கீழ் நசுக்கிவிட்ட ஒருவர் எப்படிச் செத்துவிட முடியும்? வாழ்க்கை அவருக்குச் சிறிதும் கசக்கவில்லையே... அவர் மலர்களுக்குச் சிரிக்கக் கற்றுத் தந்தார்... செடிகளுக்கு அசைவு கற்றுக் கொடுத்தார்... வாழ்நாள் முழுவதும் தன்னுள் மூழ்கி இருந்தார்... தன்னைச் சுற்றிலும் அன்பின் மலர்ச் செடிகளை வளர்த்தார்... அவர் ஒரு தனி மனிதர் அல்லவே... கவிதாலயத்தின் காவலர்... ஒரு கலாச்சாரத்தை, ஒரு காலக் கூறைத் தன்னுடன் எடுத்துச் சென்றுவிட்டாரே... இனி அந்தக் கலாச்சாரத்தின், அந்தக் காலக்கூறின் கதைகள் கவிதாலயத்தில் சொல்லப்படும். இன்று முடிவு பெற்றுவிட்ட அந்தக் காலம் தன் கடமையை நிறைவேற்றி விட்டது. வீட்டில் பயங்கரமான பிரளயமே வந்துவிட்டது. பணியாளர்கள் தங்கள் நன்றிக் கடனைச் செலுத்துவதற்காக எல்லாரையும்விட அதிகமாக அழுது கூக்குரலிட்டார்கள்.

பீபி மாலைத் தொழுகையில் இருந்தார். வாஹித் ஹுசேனின் அறையிலிருந்து ரஷீத், ஃபவுசியா ஆகியோரின் அழுகுரல் கேட்டது. கஜல் ஓடோடியும் வந்து அவரைத் தாங்கிக் கொள்ள முயன்றாள். ஆனால் பீபி அமைதியாகத் தொழுகைச் விரிப்பை மடித்துவைத்துவிட்டு தன்னுள் அழுதவாறே எல்லாரையும் விட்டுவிலகி வாஹித் ஹுசேனின் தலைக்குப் பக்கத்தில் வந்துநின்றார்.

நாற்பது ஆண்டுகளின் நிலையான உறவு இது. பீபி இன்று

கதறித் துடிப்பார் என்று அனைவரும் அசையாமல் நின்றார்கள்.

ஆனால் அவர் அமைதியாக ரஷீதைப் பற்றிக் கொண்டார் "நீ எதற்காக அழுகிறாய் மகனே! அவர் சாக மாட்டார். அவர் என்னைவிட்டுப் போகமுடியாது..."

அவர் அமைதியாக சுவரின் மேல் சாய்ந்தவாறு உட்கார்ந்து விட்டார்.

காலையில் அவரை அழவைக்கப் பல முயற்சிகள் செய்யப் பட்டன. இறுதியில் தன் கைகளைப் பார்த்தபோது அவரே அழுதுவிட்டார்.

"என் கைகளில் இப்போது எதுவுமில்லை. இனி நான் இங்கிருந்து ஓடிவிடுவேன். என் கயிறு அறுந்துவிட்டது" அதற்குப் பிறகு அவர் தன் படுக்கையைவிட்டு எழவில்லை. யாருடனும் பேசவில்லை.

"பைத்தியம் பிடித்துவிட்டது" என்று யாரோ சொன்னார்கள்.

"மூளைச் சிதறல் இது" என்று ஒரு மருத்துவர் கூறினார்.

நாட்கள் கடந்தன. ஒரு வாரம்... இரண்டு வாரங்கள்... இரண்டு மாதங்கள்... பீபி சாகவும் இல்லை; உயிரோடு இருக்கவும் இல்லை; வாழ்க்கைக்கும் மரணத்திற்கும் இடையில் எதோ ஒரு நிலை. மூச்சின் தொடர்ச்சி மட்டும் இருந்தது. மருத்துவர் களின் போராட்டம் தொடர்ந்தது. ஆக்சிஜன் கொடுக்கப்பட்டது. குழாய்கள் மூலம் உணவும் தரப்பட்டது. ஆனால் இது எத்தனை நாள் வரை தொடர முடியும்?

வீட்டில் தொடர்ச்சியான நிகழ்ச்சிகளின் செய்தியறிந்து ஷாஹீன் திரும்பி வந்துவிட்டான். ஆறடி உயரமான வாலிபனாக வளர்ந்துவிட்ட அவனுடன் பெரிய பெரிய மருத்துவப் பட்டங்கள் இருந்தன. அவனைப் பார்த்ததும் ரஜியா கலவரமடைந்தாள்.

ஷாஹீன் பீபியை இப்படியும அப்படியுமாக திருப்பித் திருப்பிப் பார்த்தான். மனித இதயங்களின் மீது நான்கு ஆண்டுகளாக அவன் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறான். நூற்றுக்கணக்கான இதயங்களைத் திறந்து சோதனை முறைக்கு உட்படுத்திவிட்டான். ஆனால் பாட்டியின் நிலை தனித்தன்மை வாய்ந்ததாக இருந்தது. அவனுடைய குழப்பத்தைக் கண்ட நொண்டி அத்தை தடியை ஊன்றியவாறு பக்கத்தில் வந்துநின்றாள்.

"மகனே, இது ஒரு புதிய நோய் அல்ல. இந்தப் பெண் கண்களை மூடியவாறே வாழுகிறாள்!"

இறுதியில் அந்த நாளும் வந்துவிட்டது—"இப்போது பீபி உயிருடன் இல்லை" என்று ஷாஹீன் உறுதியாகச் சொல்லி விட்டான். இரவில் தூங்கிக் கொண்டிருந்த நிலையிலேயே அவருடைய ஆவி பிரிந்துவிட்டது.

கவிதாலயத்தினர் பிணங்களைப் புதைகுழிவரை கொண்டு செல்வதில் இப்போது தேர்ச்சி பெற்றுவிட்டார்கள். பகல் தொழுகை வரை பீபியின் எல்லா அடையாளங்களும் அங்கிருந்து மறைந்துவிட்டன. கவிதாலயத்தின் மையத்தில் இருந்த வாஹித் ஹுசேனின் பெரிய படம் மட்டுமே கண்களைத் திறந்து, இதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை.

பீபியின் சவப்பெட்டி கொண்டுசெல்லப்பட்டதும் தான் அங்கே வீணாக இருப்பதைக் கஜல் உணர்ந்தாள். ஹுமாயூன் சாயாவை முஸ்லிமாக்கி 'நிக்காஹ்' செய்துகொண்ட நாள்முதல், அந்த வீட்டிலிருந்து கஜலின் உறவு துண்டிக்கப்பட்டுவிட்டது, என்றாலும் பீபியின் சவ அடக்கம் முடிந்ததும் ஹுமாயூன் பலவந்தமாக அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான்.

# 24

மேடையில், 'ராமர் வனவாசம்' நாடகத்தின் இன்று மூன்றாவது நாளாகும்.

மூன்று நாட்களாக, எல்லாருடைய முன்னிலையில், ஒரு குழியில் கஜல் புதைபட்டு வருகிறாள். பிறகு மேடையில் திரையை இழுத்து அவளை வெளியே எடுப்பார்கள். அப்போது அவள் என்ன முணுமுணுக்கிறாள் என்பது அவளுக்கே புரியாது. தானொரு சாவித்திரியாக, கற்புக்கரசியாக பூமியில் புதையுண்டு விட வேண்டும். தன்னை யாருமே வெளியே எடுக்கக் கூடாது என்றுதான் அவள் விரும்பினாள். ஆனால் தாய்பூமி, தன் மடியில் அவளுக்குப் புகலிடம் தர இசையவில்லை.

அவளுடைய நடிப்பைக் கண்டு மக்களுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது. தொடர்ந்து கைதட்டியதால் ரஷீதுக்கு கை வலியே வந்துவிட்டது.

நிலைமைகள் மாற மாற, ரஷீதும் தன்னை மாற்றிக் கொண்டான். அகதிகள் புனர்வாழ்வுக்காக, ஒவ்வொரு அரசியல் கட்சியும் பல திட்டங்களை வகுத்தது. கம்யூனிஸ்ட் கட்சியும் அகதிகள் உதவி நிதிக்காக, பல கலாச்சார நிகழ்ச்சிகளை நடத்தியது. ஆனால், சில நூறு ரூபாய் செலவில் அவர்கள் நடத்தும் இந்த 'ராமர் வனவாசம்' நாடகம் இத்தனை ஆயிரக் கணக்கில் வருவாய் தரும் என்று சர்வருக்கு என்ன தெரியும். சீதை பாத்திரத்துடன் ஒன்றிப்போன கஜலின் நடிப்பு, பார்வையாளர் மனதைத்

தொட்டது. பூமியைப் பார்த்து, அதன் மடியில் தன்னை அணைத்துக் கொள்ளுமாறு அவள் மன்றாடும்போது சர்வரைப் போன்ற கல் மனது கொண்டவர்களும் உருகிவிட்டார்கள். இந்த வரலாற்றுக் கதை, அதுவும் கொடுமை இழைக்கப்பட்ட பெண்ணின் சரிதம் என்றால் அவனுக்குச் சிறிதும் பிடிக்காது. அதனால் நாடகத் தொடர்பாக, முதல் முறையாகக் கஜலைப் பார்த்தபோது அவளுடைய பொங்கியெழுந்த அழகும், எல்லா ருடனும் கலகலப்பாகப் பழகிய விதமும் சர்வருக்கு சிறிதும் பிடிக்கவில்லை. அவள் உயர்குடியில் பிறந்தவள் என்று குர்ஷீத் அக்கா சொன்னபோதிலும், பெரிய பெரிய மீசைகள் கொண்ட ஒல்லியான மனிதன் ஒருவன், கஜலின் தந்தை என்று அறிமுகம் செய்துகொண்டு அவளுடைய நடிப்புக்குப் பேரம் பேசியபோது, உண்மையிலே அவன் விலை மாதர்களின் தரகன்தான் என்ற முடிவுக்குச் சர்வர் வந்துவிட்டான். நல்ல குடும்பத்தைச் சார்ந்த தகப்பன், தன் பெண்ணுக்கு எப்படி விலை பேச முடியும்...? மூன்றாவதுநாள், கடைசி முறையாகக் கஜல் புதைபட்டபோது நாடகத்தின் உணர்ச்சி முகடு அடிபட்டுப் போய்விட்டது. முன்பு இந்தக் காட்சியின்போது அழுதவர்கள் இன்று சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள். கஜல் குழியிலிருந்து தன் தலையை மேலே எடுத்து, கூச்சலிட்டாள்.

"என் மீது கற்களை வீசி எறியுங்கள். அல்லாஹ்வுக்காக என்னை யாரும் வெளியே எடுக்காதீர்கள். என்மேல் மண்ணைத் தள்ளிப் புதைத்துவிடுங்கள்; கல் எடுத்து வீசுங்கள்..."

பெரிய குழப்பமான நிலையில் திரை விழுந்தது. நாடக இயக்குநர் ரமேஷ் சின்ஹா ஓடிவந்தார். சர்வரும் கூடத்திலிருந்த தனது நண்பர்களைவிட்டு மேடையை நோக்கி ஓடினான்.

"என்னைக் கொன்று விடுங்கள். உங்களில் யாராவது மனிதராக இருந்தால் என்மேல் பாறையைத் தள்ளிவிடுங்கள்..." குழியிலிருந்து, கஜல் கூவினாள்.

"என்ன விஷயம்? என்னிடம் சொல்லுங்கள்", வியர்த்துக் கொண்டிருந்த அவளை ஒரு நாற்காலியின்மீது உட்காரவைத்து சர்வர் விசாரித்தான்.

இரவு இரண்டு மணிக்குச் சர்வர் கஜலை அவளுடைய வீட்டிற்கு அழைத்து வந்தபோது ஹுமாயூன் வெளியே சென்றிருந் தான். சாயா அலுப்புடன் கதவைத் திறந்தாள். பிறகு முணுமுணுத் தவாறு தன் அறைக்குச் சென்று படுத்துவிட்டாள்.

"இப்போது இரவிலும் வீட்டுக்கு ஆண்கள் வரத் தொடங்கி விட்டார்கள்..!"

கஜல் விழித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவளுடைய

கண்கள் இன்னும் மூடி இருந்தன. உடல் குளிர்ச்சியாக இருந்தது. அவள் விம்மி விம்மி அழுதாள். சர்வருக்கு அழுகிற மங்கையரைக் கண்டால் சிறிதும் பிடிக்காது. ஆனால் கஜலின் அழுகையைக் கண்டு அவன் கலவரமடைந்துவிட்டான். குழியிலிருந்து அவளை எடுத்தபோது, இந்தப் பெண்ணிடம் ஏதோ ஒரு தனிப்பட்ட பெருமை இருக்கிறது; ஒரு பெயரில்லாத ஈர்ப்புச் சக்தி இருக்கிறது என்பதை உணர்ந்தான். அந்தக் கவர்ச்சி மாலை ஏழுமணி முதல் இரவு இரண்டு மணிவரை அவனை அவளுடன் இழுத்துச் சென்றது.

"இப்போது சொல்லுங்கள். உங்கள் உண்மைக் கதை என்ன?" கஜலின் வீட்டுக்கு வந்து அறையில் உட்கார்ந்ததும் சர்வர் சிகரெட்டைப் பற்றவைத்தான். இந்தப் பெண் எங்கிருந்தோ கொண்டு வரப்பட்டிருக்கிறாள். அந்தப் பயங்கரமான மீசைக் காரன் இவளைத் தொழிலில் ஈடுபடுத்தி இருக்க வேண்டும் என்று அவன் கற்பனை செய்தான்.

"கதை எதுவும் இல்லை. பூமியில் புதைபடும் உரிமை சீதாவுக்கு மட்டுமே இருந்ததா—நான் சாகக் கூடாதா?"

"நீங்கள் சாக விரும்புவதற்குரிய காரணம் என்ன" சர்வர் அமைதியுடன் கேட்டான். "நீங்கள் இளவயதினராக இருக்கிறீர்கள். உங்களுக்குத் திருமணம் நடக்கும். குழந்தைகள் பிறக்கும். மங்கை யாக இருப்பவள் கவிதையின் முதல் ஈரடியாவாள். அதற்குப் பிறகு நூற்றுக்கணக்கான ஈரடிகள் எழுதப்படலாம். ஆயிரமாயிரம் சிந்தனைகள் உருவாகலாம்..."

கவிதை என்றதும் அவளுக்கு நசீரின் நினைவு வந்துவிட்டது. அவள் குலுங்கி குலுங்கி அழுதாள். "என் திருமணம் இனி என்றுமே நடக்காது. நான் உயிருடன் இருக்கும்வரை இவ்வாறே தினமும் புதைகுழியில் படுக்க வேண்டும்..."

"உங்களுக்குரிய தொகைக்காக அன்று தகராறு செய்தவர் உண்மையிலேயே உங்கள் தநதைதானா?" சர்வர் தாழ்ந்த குரலில் கேட்டான்.

கஜலும் யோசனை செய்தாள். 'உண்மையிலேயே அவன் என்னுடைய தந்தைதானா?'

"நீங்கள் இவ்வளவு ஏமாற்றமடையக் கூடாது." சர்வர் கஜலின் மயக்கும் சக்தியை நேரிடையாகப் பார்க்காமல் பார்வையை விலக்கிக் கொண்டான். "சில நேரங்களில் மனிதன் சூழ்நிலை காரணமாகத் தான் செய்ய விரும்பாத செயல்களையும் செய்கிறான். ஆனால் இனி அவ்விதம் நடக்காது. நான் உங்களுக்காக ஏதேனும் சிந்திக்கிறேன். உங்கள் மனம் விரும்பும் போது என்னை என் அலுவலகத்தில் சந்தியுங்கள்."

கஜலின் எல்லாக் கதறலையும், எல்லாக் கண்ணீரையும் அவன் தன் கைக்குட்டையில் எடுத்துச் சென்றுவிட்டான்.

கஜல் கட்டிலின்மீது படுத்தவாறே சிந்தனையிட்டாள், இருபத்தி இரண்டு, இருபத்தி மூன்று வயது நிரம்பிய இந்த வாலிபனின் நடை எப்படி இருக்கிறது. மேன்மையில், குதுப் மினாருடைய உச்சியில் இருக்கிறான். அவனுக்கெதிராக மிக அறிவிலியாக, மிக முட்டாளாகத் தெரிகிறாள் அவள். இரவில் இவ்வளவு நேரம்வரை உடன் இருந்தும் அவன் கஜலின் உடலைத் தேடவில்லை. இவன் உண்மையிலேயே விசித்திரமான, வித்தியாச மான மனிதன்தான். இன்று முதல்முறையாக ரஷீத் மாமாவைப் போல், அவளுடைய வாலிபத்தைக் கண்டு துடிப்புக் கொள்ளாமல் ஒதுங்கும் ஓர் அந்நிய மனிதரைக் காணுகிறாள். அவளைப் பார்த்ததும் எல்லா ஆண்களும், அறிவையும் பொறுமையையும் இழந்து தவிக்கிறார்களே...

இப்போது அவன் அவளைப் பற்றி என்ன சிந்திக்கப் போகிறான்? அவளுக்காக என்ன செய்யப் போகிறான்?

காலையில் அவளுடைய தூக்கம் கலைந்து எழுந்தபோது, நாடகத்தைக் கெடுத்து விட்டதற்காக ஹுமாயூன் முதலில் அவளைத் திட்டினான். பிறகு அலுவலகத்திற்குச் செல்லும்போது ஆணையிட்டான். "நேற்று குர்ஷித் அக்காவிடம் பேசியிருக்கிறேன். உன்னைத் திரைப்பட நடிகையாக்க அவர் ஏதேனும் செய்வார். இன்று அவரிடம் போய் வா..."

எனவே தன் சோகத்தை ஒப்பனையில் மறைத்தவாறு அவள் குர்ஷீத் அக்காவின் வீட்டிற்குச் சென்றாள்.

குர்ஷித் அக்கா பாரத் கலாமண்டலத்தின் உயிர்நாடியாவாள். வயது ஐம்பதைத் தாண்டிவிட்டது. ஆனால் அவருடைய மரு மகளையும், தன்னம்பிக்கையையும் கண்டு முதிர்ச்சி அவளை அணுகவே பயந்தது! சாயமிடப்பட்ட முடிக்கற்றைகளைக் கன்னங்களில் படரச் செய்தவாறு கம்பீரமாகக் காட்சி தருவார். சிகரெட் புகைக்கும் பழக்கம் இருந்ததால் கருநிற உதடுகளின் மீது சாயத்தைப் பூசிக்கொள்வாள். நீண்ட மெல்லிய கண் இமைகளின் வில்கள் இழுக்கப்பட்டிருந்தன. செயற்கை இமைகளின் அம்புகள் நான்கு திசைகளிலும் வேட்டையைத் தேடின. நிர்வாணமாக இருக்கிறாள் என்று போலீசார் குற்றம் சுமத்தாத அளவுக்கு, மார்பின் சிறு பகுதியை மறைக்கும் அளவுக்கு பிளவுஸ் அணிவாள். இல்லாவிட்டால் எல்லாருடைய கண்களுக்கும் விருந்தளிக்க அவள் தயங்கவே மாட்டாள். ஏதோ ஒரு பாலைநிலத்தின் கருமையில் இளமையைப் பறி கொடுத்துவிட்டாள். ஆனால் ஓட்டத்தில் மூச்சு இரைத்தபோது, தன்னை விடப் பத்துவயது

குறைந்த ஒரு முட்டாள் எழுத்தரை மணந்து கொண்டாள்! இந்த நிகழ்ச்சியை மக்கள் மிகவும் ரசிக்கத்தக்க முறையில் வண்ணங்கள் ஏற்றி விவரிப்பார்கள். ஒருநாள் லத்தீப் சாஹிப் சைக்கிளில் அலுவலகத்திற்குச் சென்ற வழியில், அவரைக்கண்ட குர்ஷித், தன் ரிக்ஷாவை நிறுத்தி அவருக்குக் குரல் கொடுத்தாராம். உடனடியாக தன்னை நிக்காஹ் செய்துகொள்ளுமாறு ஆணையிட்டாராம்.

மக்கள் நிறைந்த சந்தையில் நடந்த உரையாடல் இது. மேலும் குர்ஷித் அக்காவின் அச்சுறுத்தல் வேறு. காஜியை (புரோகிதரைத்) தேடிக் கண்டுபிடித்து அழைத்து வந்தார். இப்போது அந்த லத்தீப் சாஹிபுக்கு ஒரே ஒரு வேலை இருந்தது. மாலை நேரத்தில் குர்ஷித்தைச் சந்திக்க வரும் நண்பர்களுக்காகச் சிகரெட், மது, வெற்றிலைக்கான ஏற்பாடு செய்வதும், குர்ஷித் வெளியே செல்வதாக இருந்தால் அவருக்காக ரிக்ஷா அழைத்து வருவதும் தான் அந்த வேலையாகும். இதைத்தவிர அவர் வேறு வேலை செய்வதை இதுவரை யாரும் பார்க்கவில்லை.

ஏதேனுமொரு நாடகத்தில் அம்மா பாத்திரமேற்று நடிப்பாள். அப்போது நேரமாகிவிட்டால், "அம்மாஞ்சிகளே, கொஞ்சம் வெட்கப்படுங்கள். என் கணவன் எனக்காகக் காத்திருப்பான்" என்று சொல்வாள்.

அப்போதுதான் அவளுக்கும் கணவன் இருக்கிறான் என்று எல்லாருக்கும் நினைவு வரும்.

நாடக மேடைகளைத் தவிர வானொலி நாடகங்களிலும் சண்டையிடும் மாமியார், அன்னை போன்ற கதாபாத்திரங்களைப் பேசுவாள். அதைக்கேட்கும் நேயர்களின் வயிறு சிரித்துச் சிரித்துப் புண்ணாகிவிடும். வானொலி நாடகங்களிலும் செருக்குடன் நடிப்பாள். ஒத்திகையின்போது எந்த இயக்குநரும் அவளைக் குறை சொல்ல முடியாது. அவளுடைய வசைமொழிகளைக் கேட்டு வெட்கமில்லாத ஆண்களும் வியர்வையால் நனைந்து விடுவார்கள். அப்படியும் குர்ஷித் அக்காவுக்கு யாரால் நடிப்புச் சொல்லித் தரமுடியும். பெரிய பெரிய கலைவல்லுநர்களும் அவரை அசைத்து விட முடியாது. தலைசிறந்த நடிகர்களையும் 'சிட்டிகையில் தூக்கி எறிந்து விடுவாள்'. ஒருநாள் அவளுக்கச் சிரிப்பு தாங்கவே முடியவில்லை. எந்தக் குங்குமப்பூத் தோட்டத்தைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறாரோ என்று மக்கள் நினைத்தபோது, இப்போதுதான் அவருடைய சகோதரி காலமாகிவிட்டதாகத் தந்தி வந்திருக்கிறது என்று தெரிந்தது. அவள் அந்தத் துக்கத்தை மறைக்கிறாளாம். இதைக் கேட்டபிறகு குர்ஷித்தின் மதிப்பு மேலும் அதிகரித்து விட்டது.

அழகாக அலங்கரிக்கப்பட்ட மிகப் பெரிய அவள் வீடு

உண்மையில் சிறியதொரு சங்கமாக இருந்தது. ஒவ்வொரு நாள் மாலையிலும் உயர்மட்டத்திலுள்ள கலைஞர்களும், கலைப் பிரியர்களும் இங்கு கூடினார்கள். மனவிருப்பம் உள்ளவர்கள் மது அருந்தினார்கள்; வேசியரை நடனமாடச் செய்தார்கள். இங்கு கொலை செய்யலாம்; கொலையும் ஆகலாம்; அவள் எதற்குமே தடை விதிக்கவில்லை. ஆனால் அழுகிற முகங்கள் அவளுக்குச் சிறிதும் பிடிக்காது. உண்மையாகவே காதைப் பிடித்து அவர்களை வெளியேற்றி விடுவாள். காதல் செய்பவர்களுக்கு உதவி செய்வது, வசதிகள் செய்து தருவது அவருக்கு வாடிக்கை. அறிமுகமில்லா தவர்களாக இருந்தாலும் காதலின் பெயரால் எல்லாவித உதவிகள் செய்யவும் அவள் தயாராக இருப்பாள். பெண்கள் 'நிக்காஹ்' படித்தால் அது செல்லுபடி ஆகாது; சட்டம் அதை ஒப்புக் கொள்வதில்லை. இல்லாவிட்டால் பல பேர் தனக்கு முன்னால் அழுமூஞ்சிகளாக இருக்கமாட்டார்கள் என்று அவள் கூறுவாள்.

என்றாலும் ஒரு காஜியைத் தொடர்ச்சியாக பணியில் அமர்த்தி இருக்கிறார் என்றொருசாரார் கூறுகிறார்கள். தங்கள் வீடுகளை விட்டு ஓடிவரும் பெண்களை இவர்கள் தான் 'நிக்காஹ்' செய்து வைக்கிறார்கள். அப்படியும் 'நிக்காஹ்'வைப் பற்றிக் குர்ஷித் அக்கா பெரிய அக்கறை ஏதும் காட்டவில்லை. வாழ்நாள் முழுவதும் சங்கிலியாகக் கழுத்தில் தொங்கும் பெண்களை அவர் விரும்பவில்லை. காதல் ஜோடிகளுக்காக அவர் செய்யும் முயற்சி களைப் பார்த்துப் பில்கிராமி, "இந்த குர்ஷித் அக்காவும் ஹகீம் அஜ்மல்கான் தான்" என்பான். "இரண்டாயிரம் ரூபாய் மதிப்பு வாய்ந்த லேகியம் பலன்தராதபோது இரண்டு காசு மருந்து கொடுத்துக் குணப்படுத்தி விடுகிறாளே!" இந்த மருத்துவப் பண்டுவம் சிறிது விசித்திரமானதுதான். இதில் அவள் மத பேதங்களையும் காட்டுவதில்லை. அதனால் ஏதேனுமொரு போலீஸ்காரன் 'விபசாரக்கூடம்' என்ற குற்றச்சாட்டுடன் வந்து விட்டால் அவனையும் ஏதேனுமொரு வகையில் மாட்டி வைப்பாள். சில நாட்களில் அவனும் இந்தத் துடிப்பு மிக்கவர்கள் மத்தியில் உட்கார்ந்து குர்ஷித்தைப் புகழ்ந்து கொண்டிருப்பான். குர்ஷித்தை சீண்டுவது சாதாரணமானதல்ல.

அதிகாரிகளும், கார்களில் பவனி வரும் கர்வங்கொண்ட வணிகர்களும், அவளைக் கண்டதும் எழுந்து நின்று விடுவார்கள். அவள் எல்லாரிடமும் வசைமொழிகளில்தான் பேசுவாள். அவள் செல்லும் வழிகளில் எல்லாம் சிரிப்பு மலர்கள் சிதறிவிடும்.

கஜல் அவளிடம் நல்ல மனோநிலையில்தான் சென்றாள். ஆனால் குர்ஷின் அக்காள் அவளுடைய முகத்திரையை உடனடி யாகவே கிழித்தெறிந்தாள். அவளுக்கு எந்தப் பெண்ணின் அந்த

ரங்கம்தான் தெரியவில்லை? பான், பில்கிராமி விஷயங்கள் மட்டும் எப்படி மறைந்திருக்க முடியும்?

"நீ பம்பாய்க்குச் சென்று படங்களில் வேலை தேடு. அதுவே உனக்கு நல்லது. இல்லாவிட்டால் இங்கு ஆண்கள் உன்னைக் கசக்கிப் பிழிந்து வீசியெறிந்துவிடுவார்கள்."

"ஆனால் நான் அங்கே எப்படிப் போக முடியும்?" கஜல் திகைத்து நின்றாள்.

"நான் அனுப்பி வைக்கிறேன்", அவள் நிம்மதியாக வெற்றிலையை மடித்து வாயில் போட்டுக்கொண்டாள்.

கஜல் மௌனமாகிவிட்டாள். குர்ஷித் அக்காவுடன் அதிகமாகப் பேசும் துணிவு அவளுக்கு இருக்கவில்லை. அவள் பானையும் சிறுவன் என்று; சொல்லிவிடுவாள். அதை நிரூபிக்கவும் செய்வாள். அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதையும் அவளே சொல்லிவிட்டாள்.

"நம்ம பையன் சிவராஜ் இருக்கிறானே, அவன் உன்னை மிகவும் விரும்புகிறான். பலமுறை என்னிடம் வந்தான். ஆனால் நீ பில்கிராமியின் பிடியில் இருந்தாய்."

கஜல் நாணமடைந்தாள். குர்ஷித் அக்கா பேசும்போது பேச்சின் ஆடைகளைக் கழற்றி விடுவாள். கவிதை என்பது அவளுக்குச் சிறிதும் பிடிக்காது.

"சிவராஜுக்குப் பம்பாயில் நல்ல செல்வாக்கு இருக்கிறது. திரைப்படத் துறையில் பல லட்ச ரூபாய் முதலீடு செய்திருக்கிறான். நீ சில நாட்கள் அவனுடன் இரு. ஏதேனுமொரு வாய்ப்புக் கிடைத்துவிடும்.

"சில நாள் இருப்பதா?" கஜல் வியப்புடன் கேட்டாள்.

ஒரு ஆடவனுடன் சில நாள் இருப்பது குர்ஷித் அக்காவுக்கு பெரியதொரு விஷயம் அல்ல. அதுவும் கஜலைப்போன்ற பெண்ணுக்கு அது புதிய அனுபவமா, என்ன—அவளைப்பற்றி குர்ஷித் அக்காவுக்கு எல்லாமே தெரியும்...

"வேறு என்னவாம்? மலம் சாப்பிட்டாலும், யானையின் மலமாக இருக்க வேண்டும். வயிறு நிரம்பும். இங்கும் அங்கும் சுற்ற அலைவதைவிடத் திரைப்பட நடிகையாகிவிடு. உன் முகமும் நன்றாகவே இருக்கிறது."

"ஆனால் இது எப்படி முடியும்?" குர்ஷித் அக்காவை நன்றாகக் கேட்டுவிட வேண்டும் என்று கஜல் விரும்பினாள். 'அவளை விலைமாது என்று நினைத்துவிட்டாளா, என்ன? எவனுடனும் எங்கு வேண்டுமானாலும் சென்று விடுவதற்கு...?'

கஜல் சிவராஜின் முகத்தை நினைவுபடுத்திக் கொண்டாள். நாடகம் முடிந்த பிறகு மலர் மாலையுடன் அவன் பலமுறை

மேடைக்கு வந்திருக்கிறான்.

அவன் ஏதோ ஒரு பெரிய நிறுவனத்தின் பொறுப்பாளராக இருந்தான். பெரிய சொத்தின் அதிபதி. அவனைக் கண்டதும் 'ராஜா சாஹிப், ராஜா சாஹிப்' என்று வணக்கத்துடன் மக்கள் எழுந்து நின்றார்கள். நகரில் நடந்த பல கலாச்சார நிகழ்ச்சிகளுக்கு அவன் தலைமை வகித்தான். பணப் பற்றாக்குறை ஏற்படும்போது எல்லாரும் அவனிடம் செல்வார்கள். கலைகளைப் போற்றுவது அவனுடைய குடும்ப வழக்கமாகிவிட்டது. குள்ளமாக, குண்டாக இருந்தான். எப்போதும் குழந்தைகளைப்போல் சிரிக்கும் முட்டாள் மனிதனாகத் தோற்றமளித்தான். இறுகிய பைஜாமாவும், கருநிற ஷேர்வானியும், மென்பட்டுத் தொப்பியும், சரிகைக் காலணிகளும் அணிந்து, நறுமணம் பூசிக்கொண்டு வருவான். அவன் தன் தலைக்கு எந்த எண்ணெய் போடுவானோ, தெரியவில்லை. அந்தக் கருநிற முடி எப்போதும் பளபளப்பாக இருக்கும். கஜல் முதலில் அந்தத் தலைமுடியைத்தான் பார்ப்பாள். மங்கையருடன் மிகவும் நளிமான முறையில் பழகுவான். அவர்களுக்குக் கௌரவம் தருவான். தாழ்ந்த குரலில் ஒழுக்கமான நடையில் பேசுவான். ஒவ்வொரு பேச்சிலும், "ஆமாம்", "தங்கள் கூற்றுச் சரியானதே" என்று கழுத்தை அசைத்தவாறு சொல்வான். பிறகு மங்கையர் அவனைச் சுற்றி வட்டமிடாமல் எப்படி இருக்க முடியும்? சாந்த்துக்காக அவன் ஆயிரக்கணக்கில் செலவழித்ததாகவும், பல ஆண்டுகள் வரை இருவருடைய தொடர்பு நீடித்ததாகவும் சொல்லிக் கொள்கிறார்கள்.

ஹுமாயூன் குர்ஷித் அக்காவின் வீட்டிற்கு ஆயிரக் கணக்கான முறை படையெடுத்துவிட்டான்.

இறுதியில் அவன் முயற்சிகள் பலன் கண்டன. கஜல் எவ்வளவு மறுத்தும் சிவராஜ் அவளைப் பின்தொடர்வதை விடவில்லை. அவன் தினமும் கஜலின் வீட்டிற்கு வந்துநின்றான். பல பரிசுகளை அவளுக்காகக் கொண்டு வந்தான். விருந்து உபசாரங்களுக்கும், திரைப்பட அரங்குகளுக்கும் கொண்டுசெல்ல ஆசைப்படுவான். ஆனால் கஜல் எதற்கும் ஒத்துக்கொள்ளவில்லை. எனவே ஒருநாள் அவன் ஹுமாயூனிடம், கஜலைத் திரைப்பட நாயகியாக்க பம்பாய்க்கு அழைத்துச் செல்லப் போவதாக அறிவித்து விட்டான். அதற்காக நான்காம் தேதியைத் தேர்ந் தெடுத்து விமானப் பயணச் சீட்டுகளும் வாங்கிவிட்டான். அழுது ஓலமிட்டவாறு ஹுமாயூனின் அடி உதைகளைச் சகித்துக் கொண்டு கஜல் விமான நிலையத்தை அடைந்தபோது மூச்சு வாங்கினாள். இந்த விஷயத்தை ஹுமாயூன் கவிதாலய வாசிகளுக்குத் தெரிவிக்கவில்லை. எதிர்பாராத வகையில் ஒருநாள்

வெண்திரையில் கஜலின் பெயர், நாயகியாக, சங்கீத ஒலியுடன் காட்சியளிக்கும்போது அவர்கள் திகைத்து நிற்கட்டுமே... போகும் வழியிலும் ஹுமாயூன் கஜலுக்கு, சந்தோஷமாக இருக்கும்படி அறிவுரை கூறினான். பிறகு ராஜா சாஹிபின் காரியதரிசி கஜலின் பொருட்களை மட்டும் தனிப்படுத்தி வைத்தபோது, ஹுமாயூன் விமான நிலையத்தின் தேநீர் விடுதியினுள் நுழைந்தான்.

"ராஜா சாஹிப்! எனக்காக இருக்கைப் பதிவு செய்ய வில்லையா?"

"இல்லை" சிகரெட் சாம்பலை உதறியவாறு அவன் அமைதி யாகப் பதிலளித்தான்.

"பிறகு கஜல் எப்படிப் போவாள்?"

"நான் இருக்கிறேனே!"

ஹுமாயூனுக்கு சிறிதளவேனும் அறிவு இருந்திருந்தால், இந்த மறுமொழி கிடைத்ததும் மௌனம் சாதித்திருப்பான். ராஜாக் களுடன் பிணக்குச் செய்வது வேடிக்கையான விஷயமல்ல... ஆனால் கஜலையும், அவளுடைய அன்னையையும் திட்டித் திட்டி அவனுடைய நாக்குக் கூராகிவிட்டது. எனவே அவனுக்குக் கோபம் பொங்கி வந்தது.

"கஜலை நான் தனியாக அனுப்ப முடியாது. நானும் வருவேன்..."

இதைக் கேட்டு சிவராஜ் மிகவும் அமைதியாக மணியை அழுத்திச் செயலாளரை வரவழைத்தான். ஆங்கிலத்தில் அவனிடம் ஏதோ கூறினான். பிறகு நாளிதழ் படிக்கலானான். விமானப் பயணிகளுக்கான அறிவிப்பு ஒலித்ததும், தேநீர் விடுதியை விட்டு வெளியே வந்தான். கஜல் அவனைப் பின் தொடர்ந்தாள்.

"ராஜா சாஹிப்... ராஜா சாஹிப்..." ஆனால் அவன் உள்ளே சென்றுவிட்டான். கஜலின் இருக்கை தள்ளுபடி செய்யப்பட்டு விட்டதாகச் செயலாளர் அறிவித்தபோது கஜல் நாற்காலியின்மீது உட்கார்ந்துவிட்டாள். சிறிது நேரம் வரை ஹுமாயூன் மௌனமாக நின்றவாறு தன் விரல்களால் முடியை அளைந்தான். பிறகு கஜலை அடிக்கவும், உதைக்கவும் தொடங்கினான். அழுது கொண்டிருந்த கஜலைவிட்டு விட்டு வெளியே வந்தான். தன் பொருட்களை வாடகை ஊர்தியில் வைத்துக்கொண்டு தனியாகவே சென்றுவிட்டான்.

சிறிது நேரம்வரை வேதனையால் கஜலுக்கு ஏதும் தோன்றவில்லை. அவளுடைய வாயில் இரத்தம் கசிந்தது. கன்னங்கள் வீங்கிவிட்டன. இப்போது தேநீர் விடுதியில் அவள் தனியாக உட்கார்ந்திருந்தாள். பாதியாக எரிந்த சிவராஜின் சிகரெட்டிலிருந்து புகை வந்துகொண்டிருந்தது. அவனுடைய

பணப்பை மேசையின்மீது கிடந்தது. வருவதும் போவதுமாக இருந்த பயணிகளின் குரல்கள் ஒலித்தன. பணியாளர்கள் இங்கும் அங்கும் அலைந்தார்கள். விமான நிலையத்தின் பளிச்சிடும் ஒளிகளைப் பற்றிக் கவலைப்படாமல் இரவு வேகமாகக் கீழ்நோக்கி வந்தது.

எங்கு செல்வது என்று கஜலுக்குப் புரியவில்லை. அவள் சிவராஜின் பணப்பையைத் திறந்து பார்த்தாள். பல நூறு ரூபாய் நோட்டுகள் இருந்தன. விமானப் பயணச்சீட்டுகள் இருந்தன. தொலைபேசி எண்கள் கொண்ட சிறிய குறிப்பேடு இருந்தது. ஒரு காசோலையும் இருந்தது. அந்தப் பணப்பையை அவள் தன் பையில் வைத்துக் கொண்டு வெளியே வந்து விசாரித்தாள்.

"என்ன, பம்பாய் விமானம் போய்விட்டதா?"

"ஆமாம்!"

அவள் மெதுவாக நடந்து வந்து பெரிய கூடத்தின் நாற் காலியின் மீது உட்கார்ந்துவிட்டாள்.

வாடகை ஊர்தியில் தனது பொருட்களை வைத்துக்கொண்டு வெகு நேரம்வரை சாலைகளில் சுற்றி அலைந்தாள். பிறகு சர்வரின் அலுவலகத்திற்கு எதிரில் வண்டியை நிறுத்தினாள். ஆனால் அங்கு யாரும் இல்லை. அவனுடைய நண்பன் ஒருவன் வீட்டு முகவரி யைக் கொடுத்தான். அது எதிரிலேயே இருந்தது.

இது சர்வரின் வீடு. பொலிவிழந்து பாழடைந்து கிடக்கும் வீடு. பழைய கதவு. அதில் கிழிந்த சணல்திரை ஒன்று தொங்குகிறது. எதிரே முற்றத்தின் மங்கலான ஒளியில் மூன்று நான்கு பெண்கள் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

'கண்ணாமூச்சி ராரே...
காதடைச்ச ராரே...
கொலை கொலையா முந்திரிக்கா...
நரியே நரியே கொண்டுவா...
மூணு மூட்டையைத் தின்னுடு...
ரெண்டு மூட்டை கொண்டு வா...'

இப்போது இந்த வீட்டுக்குள் சென்றால் எத்தனை குழப்பங்கள் இருக்குமோ... வெளிப்புறத்திலிருந்து அமைதியாகக் காணப்படும் ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் எத்தனை கண்ணீர், எத்தனை குமுறல்கள் மறைந்திருக்கின்றன. இனி இன்னொரு கதை ஆரம்பமாகிவிடும். சர்வரின் ஏழ்மையும், காதல் விளையாட்டும்... இத்தகைய கதைகளைக் கேட்டு அவளுக்கு அலுத்து விட்டது. அதனால் அவள் கவிதை கேட்பதில்லை. நவீனங்கள் படிப்பதில்லை. நாயகனும், நாயகியும் காதலைத் தவிர வேறெதும் செய்யாத படங்களும் அவளுக்குப் பிடிப்பதில்லை. இப்படி யிருந்தும் ஒவ்வொரு அடியெடுத்து வைத்தபோதும் அவளுக்கு

யாரேனுமொரு ஆடவன், தனது இதயத்தைக் கையிலெடுத்தவாறு கிடைக்கவே செய்தான். அவனுடன் கஜலும் சேர்ந்து அழவே செய்தாள்–

"சர்வர் சாஹிப் இருக்கிறாரா?"

"இருக்கிறார்" ஓடிக்கொண்டிருந்த ஒரு சிறுமி விடை தந்தாள்.

"அவரைக் கூப்பிடுங்கள்." விளையாடிக்கொண்டிருந்த சிறுமியிடம் அவள் சொன்னாள்.

"அவர் தூங்குகிறார். நீங்கள் உள்ளே போங்கள்."

அவள் உள்ளே நுழைந்த சமயம் இரண்டு சிறுமிகள் 'திருடன் திருடன்' என்று அவளுடன் மோதினார்கள்.

முற்றத்தை அடைந்தபோது அவள் தயங்கி நின்றாள். பழைய நாட்டு ஓடுகள் போட்ட வீடு. நடுவில் முற்றம். இருபுறத்திலும் தாழ்வாரங்கள். அதில் அறைகள். தாழ்வாரத்தில் கிளிக்கூண்டு தொங்கியது. முற்றத்தில் கோழிக்கூண்டும் இருந்தது. ஒரு பழைய கட்டிலின்மீது ஒரு சிறு குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. ஒரு பெரிய மாமரத்தின் கிளைகள், முழு வீட்டை தமக்குள் அடக்கி இருந்தன. அந்த மரத்தில் சிறுசிறு காய்களும் இருந்தன.

'அல்லாஹ்! இங்கு ஒரு உலகமே வாழுகிறது..' சர்வர் தனியாக ஓர் அறையில் இருப்பான் என்றல்லவா அவள் நினைத்தாள்.

"யார்...?அட கஜல்... எப்படி வந்து விட்டீர்கள்?"

நடுத்தர வயதுள்ள ஒல்லியான மனிதர் ஒருவர் லுங்கியும் அழுக்கான பனியனும் அணிந்தவாறு உட்கார்ந்து, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கெண்டிருந்தார்.

கஜல் கலவரமடைந்தாள். ஊர் சுற்றும் பெண்கள் திருமணமாகாத வாலிபர்களைச் சந்திக்க, இத்தகைய வீடுகளுக்கு வரும்போது பெரிய பிரளயமே வந்து விடுகிறது. புகை நிரம்பிய கருநிற அறையிலிருந்து ஒல்லியான, உயரமான பெண் ஒருத்தி அழுக்குச் சேலையால் கைகளைச் சுத்தப்படுத்தியவாறு வெறுங்கால்களுடன் வெளியே வந்தாள்.

"யார் நீங்கள்-யாரைப் பார்க்க வேண்டும்?" இந்தக் கேள்வி எல்லாப் புறங்களிலும் ஒலிப்பது போல் கஜலுக்குத் தோன்றியது. பூமியிலிருந்து, வானத்திலிருந்து, முழு வீட்டுக்கும் நிழல்தரும் மாமரத்திலிருந்து, கோழிக்கூண்டிலிருந்து, கிளிக்கூண்டிலிருந்து...

"அட, இவர் கஜல்-ரஜியா அக்காவின் நாத்தனார் பெண்... மிஸ்கீன் அலி ஷாஹ்வின் பேத்தி... என்னைத் தெரியவில்லை...? நான் ஹமீத்-ரஜியாவின் சகோதரன்..."

"ஹமீத் அண்ணா...?" கஜலுக்கு உயிர் திரும்பி வந்தது. இவருடைய நிச்சயதார்த்தத்திற்கு ரஜியா மாமியுடன் அவள் வந்திருக்கிறாள். மணமகளின் தம்பியுடன் சண்டை

போட்டிருக்கிறாள்.

"சர்வர் சாஹிப் இங்கு இருக்கிறாரா?"

"ஆமாம். அவர் என் தம்பி!" ஹமீதின் மனைவி இப்போது மகிழ்ச்சியுடன் கூறினாள். "நீங்கள் சர்வரை மறந்து விட்டீர்களா? என் நிச்சயதார்த்தத்திற்கு வந்தபோது அவரைப் படாதபாடு படுத்தினீர்களே!"

பிறகு எல்லாரும் சிரித்து விட்டார்கள்.

"தாழ்வாரத்தில் நிற்கிறீர்களே, உள்ளே வாருங்கள்!" வீடு முழுவதும் அமளிப்பட்டது. அவர்களுடைய விதியை மாற்றி யமைப்பதற்காகக் கஜல் வந்திருப்பதுபோல் ஒரு சிறுமி அவசர அவசரமாகத் தரையில் பரவியிருந்த அழுக்குத் துணிகள், புத்தகங்கள், காலணிகளை அப்புறப்படுத்தினாள். ஹமீத் அண்ணனின் மனைவி ஒரு வெள்ளைத் துணியைப் பரப்பினாள். ஹமீத் அண்ணா உடைந்த விசிறி ஒன்று தேடி எடுத்து வந்தார். ஆனால் கஜல் தயங்கி நின்றாள். இத்தனை பரிசுத்தமான இடம். இதில் பாவங்கள் நிறைந்த தன் பாதங்களை எப்படி வைப்பது? அவள் நடுங்கினாள்.

கஜலைப் பலவந்தமாக உட்காரவைத்துவிட்டு, ஹமீத் அண்ணாவின் மனைவி அவரிடம் சொன்னாள். "நீங்கள் உடை அணிந்து கொள்ளுங்கள்... இவர் வீட்டில் இருக்கும்போது வெயிலுக்காக சொக்காயும் கழற்றி விடுகிறார்"

"உம். பெட்டிபோட்ட சொக்காயை எதற்காக வீணடிக்க வேண்டும். கஜல் பேகம் அந்நியரா என்ன, எங்கள் வீட்டுப் பெண்தானே!"

சிறுமிகள் இதுவரை கண்ணாமூச்சி விளையாடிக்கொண்டு இருந்தார்கள்.

ஹமீத் அண்ணா தன் குழந்தைகளிடம் சொன்னார். "இவர் கஜல் அக்கா. பெரிய கலைஞர். இவருடைய நாடகத்திற்கு எல்லாரையும் அழைத்துப் போகிறேன். இப்போது என்ன நாடகம் நடக்கிறது?" ஹமீத் அவளுக்குப் பக்கத்தில் வந்தமர்ந்தார்.

"இறைவனுக்குத் தெரியும்!" கலவரத்துடன் அவள் எதிரில் நோக்கினாள்.

சர்வர் தூக்கம் நிறைந்த சுமையான உடலுடன், முகத்தின் மீது முடி பரவி இருக்க, பனியனும் பேன்ட்டும் அணிந்தவாறு அறையிலிருந்து வெளியே வந்தான். கஜலைப் பார்த்ததும் மலர்ந்து விட்டான். 'இதோ, முதல் காட்சி தொடங்கிவிட்டது' என்று நினைத்து நடுங்கினாள். சர்வரின் வீடு தேடி எதற்காக வந்தாய் என்று அவள் தன்னையே கடிந்து கொண்டாள்.

"ஓஹோ... இன்று எங்கள் மீது இத்தனை கருணையா? அக்கா

இதே மகிழ்ச்சியில் இரண்டு கோப்பைத் தேநீர் போட்டு விடுங்கள்" அவனும் ஹமீத் அண்ணனுடன் வந்து உட்கார்ந்தான்.

"ஆமாம்... இந்த வெயிலில் தேநீர் குடிப்பாரா என்று கஜலிடம் கேளுங்கள். இல்லாவிட்டால் பாலும் சர்க்கரையும் வீணாகி விடும்" ஹமீத் அண்ணா அவசரமாகப் பேசினார்.

"இல்லை. இப்போது நான் தேநீர் குடிக்க மாட்டேன். இன்று என் உடல்நிலை சரி இல்லை."

"நான் இப்போதே வருகிறேன்" என்று சொல்லிவிட்டு ஹமீத் அண்ணா எழுந்து சமயலறைக்குச் சென்று தன் மனைவியிடம் ஏதோ கிசுகிசுத்தார்.

"உங்களுக்கு என் வீட்டு முகவரி எப்படிக் கிடைத்தது" என்று சர்வர் கேட்டான். பிறகுதானே வெட்கமடைந்தவாறு கூறினான். "நீங்கள் என் வீட்டையும் பார்த்துவிட்டீர்கள். இது நல்லதுதான். நாங்கள் மிகச் சாதாரணமான வாழ்க்கையே நடத்துகிறோம். ஹமீத் அண்ணாவுக்கு ஓர் ஆயிரம் ரூபாய் மாதச் சம்பளம் கிடைக்கிறது. அவர் தன் வருங்காலத்தைச் சிறப்பாக அமைக்க விரும்புகிறார். அதனால் செலவுகளை நன்கு சிந்தித்துச் செய்கிறார். நான் கட்சியில் இருப்பதால் அரசாங்க வேலை கிடைப்பதில்லை. அதனால் ஒரு பத்திரிகையில் வேலை செய்கிறேன். அம்மாவும் பெரிய அக்காவும் காலமாகி விட்டார்கள். அண்ணாவும் பாகிஸ்தானுக்குச் சென்று விட்டார். அதனால் நான் சிறிய அக்காவுடன் இருக்கிறேன்."

ஊம்... கஜல் வெளியே இருந்த சிறுமிகளின் விளையாட்டைப் பார்த்தாள். 'சர்வரின் கதையில் பெரிய விஷயம் எதுவும் இல்லை. ஹமீத் அண்ணாவின் நிச்சயதார்த்தத்தின்போது சர்வரின் அம்மா சொன்ன அதே கதைதான் இது. பாவம், ஹமீத் அண்ணா ஒரு நல்ல வருங்காலத்திற்காக எத்தனை இடர்களைச் சந்திக்கிறார். எத்தனை ஆசைகளை நசுக்கி விடுகிறார். அந்த வருங்காலம் எப்போது வருமோ?'

"இன்று நம்முடன் கஜல் சாப்பிட வேண்டும் என்று உங்கள் அண்ணி சொல்கிறார்" ஹமீத் அண்ணா சிறிதுநேரம் கழித்துத் தன் முடிவை வெளியிட்டார்.

"இல்லை அண்ணா, எனக்கு விடைகொடுங்கள்" அவள் குழப்பத்துடன் சேலைத் தலைப்பால் விசிறினாள்.

"சிறிது நேரம் எங்களுடன் இருக்கக்கூடாதா?" சர்வர் வேதனையுடன் கூறினான். கஜலின் பதிலை எதிர்பார்க்காமல் எழுந்து நின்றான். "நான் இப்பொழுதே சிறிது இனிப்பும், பழமும் வாங்கி வருகிறேன்."

அண்ணி பாய் விரிப்பு ஒன்றைக் கொண்டு வந்தார். உடைந்து

போன பீங்கான் பாத்திரங்களும் வந்தன. பருப்பு சாம்பார், குஷ்கா, கத்தரிக்காய் பொறியல் வந்தன. உணவு வந்ததும் எல்லாக் குழந்தைகளும் தங்கள் தட்டுகளை எடுத்தவாறு வந்து உட்கார்ந்தார்கள். ஆனால் அண்ணி அவர்களை வெளியே அனுப்பி விட்டாள்.

"முதலில் விருந்தாளி சாப்பிடட்டும். உங்களுக்குப் பிறகு தருகிறேன்."

கஜலுக்குத் தன் குழந்தைப் பருவம் நினைவுக்கு வந்தது. யாராவது விருந்தாளி வந்துவிட்டால் அவளுக்கும் அந்தச் சமயத்தில் இதே கதி ஏற்படும்.

சர்வர் முலாம்பழத்துண்டு ஒன்றை வெட்டி அவளிடம் நீட்டினான்.

"இது போதும்," என்று நினைத்தாள் அவள். இந்தப் புதைகுழி போன்ற சிறிய வீடு. புகை நிறைந்த கருநிறச் சமயலறை, இங்கு அரிசியும் பருப்பும் தவிர வேறெதும் சமையலுக்கு வராது. நாள் முழுவதும் இங்கு உட்கார்ந்து அணைந்துவிடும் தீப்பொறிகளுக்கு உயிரூட்ட வேண்டும். வெளியே எத்தனை அழகான மேகங்கள் வந்தால் என்ன, உஸ்மான் சாகர் நீரில் எத்தனை பொன்னிறமான வட்டங்கள் தோன்றினால் என்ன, கவிதாலயத்தில் எத்தனை கோழிகள் உணவுப் பந்தியில் வந்தால் என்ன, பத்தர்கடி அங்காடிகளில் எத்தனை காஞ்சிபுரத்துப் பட்டுச் சேலைகள் இருந்தால் என்ன, பான்சாஹிபின் மேசையில் எத்தனை ஒப்பனைப் பொருட்கள் கிடந்தால் என்ன, நிஷாத் திரையரங்கின் ஒப்பனை அறையில் சீதா, நூர்ஜஹான், கிளியோபட்ராவாக மாறுவதற்கான பொருட்களும், ஆடைகளும் வைக்கப்பட்டு இருக்கின்றன. பாலஸ் திரையரங்கின் கூடத்தில் திரை எப்போது விலகும் என்று மக்கள் நோக்குவார்கள். அவளுக்காக அவர்கள் காத்திருப்பார்கள். ஆனால் இங்கு அவள் தூங்கமாட்டாள். இரவு முழுவதும் சர்வருக்காக உட்கார்ந்திருப்பாள். அவன் மது மயக்கத்தில் ஏதேனுமொரு கவியரங்கில் கவிதை படிப்பான். பாதி இரவுவரை பத்திரிகை அலுவலகத்தில் உலகச் செய்திகளை மொழிபெயர்த்துக்கொண்டிருப்பான்...

"இன்னும் என்ன வேண்டும்?" சர்வர் குனிந்து அவள் முகத்தைப் பார்த்தான்.

"போதும். எதுவும் வேண்டாம்."

வெளியே வந்து குதிரை வண்டி ஒன்றில் அவளை உட்காரவைத்த பிறகு சர்வர் கூறினான்.

"நீங்கள் யார் என்பது எனக்கு இன்று தெரிந்தது."

அவள் பெருமூச்சு விட்டாள். "இது நல்லது இல்லை."

“சரி. நான் நாளைக்கு வருகிறேன். நீங்கள் கவிதாலயத்திற்குத் தானே போகிறீர்கள்.”

“ஆமாம்..” அவள் எந்தக் கருத்தும் இல்லாமல் விடை தந்தாள். ஆனால் கவிதாலயத்திற்கே சென்றாள்.

மறுநாள் அவள் தான் செய்யாத எல்லாப் பாவங்களுக்கும் மன்னிப்புக் கோரியும், வீட்டுக்கு வரத் தந்தையிடம் அனுமதி கேட்டும் கடிதம் எழுதினாள். அதற்கு மறு பக்கத்திலேயே ஹுமாயூனும் பதிலெழுதி அனுப்பிவிட்டான்—கஜலை விமான நிலையத்திலேயே புதைத்து விட்டு வந்துவிட்டதாக. கவிதாலயத்தில் அவளை யாருமே கேட்கவில்லை. முன்பு பீபி அவளுடைய ஆதரவாளராக இருந்தார். பாட்டனாரின் பயத்தால் மற்றவர்கள் அவளைச் சகித்துக் கொண்டார்கள். ஆனால் இப்போது ரஜியாவின் ஆட்சி நடக்கிறது. தன் புகுந்த வீட்டு உறவினர் எவருக்கும் அவள் புகலிடம் தர விரும்பவில்லை. அழுது கொண்டிருந்த கஜலின் தலைமீது கையை வைத்துக் காலமாகி விட்ட தனது சகோதரிகளை நினைத்துக் கொண்டார்.

“இன்று முதல் நீ ஹுமாயூன் வீட்டுக்குப் போகக்கூடாது. அழுகையை நிறுத்து. இங்கு சந்தோஷமாக இரு!”

அவளுக்கும் ஆதரவு தேவைப்பட்டது. அவள் வேறு எங்கு தான் போக முடியும்? கிராந்தியின் கவலை வேறு அவளைப் பிடுங்கித் தின்றது. ரங்கம்மா அவளுக்கு உணவு கொடுக்கத் தயாராக இல்லை. சிவராஜின் பணப்பையிலிருந்து இரண்டு நோட்டுகளை எடுத்துக் கொடுத்து அவள் வாயை மூடிவிட்டாள். தனக்கும் ஏதேனுமொரு பத்திரிகையில் வேலை வாங்கிக் கொடுப்பான் என்று சர்வரை எதிர்நோக்கினாள். ஆனால் அவன் வரவில்லை. அவள் அன்று வந்தபிறகு ஹமீத் அண்ணனின் வீட்டில் பெரிய அமளி ஏற்பட்டிருக்கும் என்று அவளுக்குத் தெரியும். இத்தகைய ஊர்சுற்றிப் பெண்களுடன் நட்பு வைக்கக் கூடாது என்று அண்ணி சர்வரை கண்டித்திருப்பாள். சர்வர் தானும் கஜலிடம் எதற்காகப் பரிவு காட்டினோம் என்று கழிவிரக்கம் கொண்டு இருக்கலாம். இந்த நாடகம் இந்துடன் முடிந்து விட்டதும் நல்லது என்று கஜல் நினைத்தாள். பிறகு ஒருநாள் ரஷீத் ஒரு செய்தியைக் கொண்டு வந்தான். சாலையைக் குறுக்காகக் கடந்தபோது ஒரு வாகனம் இடித்துவிட்டதால் ஹமீத் அண்ணா மிகவும் அபாய நிலையில் இருப்பதாக தெரிவித்தான். “இல்லை, இல்லை” கஜல் கத்தி விட்டாள். ‘ஹமீத் அண்ணாவின் வாழ்க்கையைப் பிடுங்கிக் கொள்ளாதீர்கள். அவர் வருங்காலக் கனவுகளை அலங்கரித்து வைத்திருக்கிறார். வரப்போகும் இன்பங் களுக்காக வாழ்க்கையின் ஒவ்வொரு துக்கத்தையும், ஒவ்வொரு

கசப்பையும் பொறுத்துக் கொண்டார்.'

பிறகு ஒருநாள் சர்வரும் வந்துவிட்டான். வெகுநேரம் வரை ஹமீத் அண்ணாவைப் பற்றிப் பேசினான். பிறகு பேச்சைத் திசை திருப்பியவாறு, "உங்களுக்காகவும் ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன்." என்றான்.

"எனக்காகவா... என்ன?"

அன்றுதான் நொண்டி அத்தை சொல்லிக்கொண்டிருந்தாள். "அமைதிக் குழுவினர் அரசுடன் சேர்ந்து ஊர் சுற்றிப் பெண் களைப் பிடித்துச் சிறையிலடைத்து விடுகிறார்களாம்!"

"உங்களுடைய வயதுதான் என்ன? உங்கள் வயதினர் இன்னும் சரியாகச் சிரிப்பதும் இல்லை. ஆனால் காலம் உங்களைக் கண்ணீரால் குளிப்பாட்டி விட்டது."

"என்னைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?"

"இந்தப் பேச்சை விடுங்கள்," அவன் சிகரெட்டைப் பற்ற வைத்தான். கஜல் விசாலமான கூடத்தைப் பார்த்தாள்.

"கவிதாலயத்தின் பெண்ணை, ஆடவனின் உடலுக்குரிய சாதனமாகவே கருதினார்கள். இந்த மாளிகையைப் பற்றி நான் பல கதைகள் கேட்டிருக்கிறேன்." கூடத்தில் இருந்த படங்களை அவன் பார்த்தான்.

"ஆனால் கவிதாலயம் எனக்கு எந்தத் துக்கத்தையும் கொடுக்கவில்லை. இது என்னுடைய கடைசிப் புகலிடமாகும்!" கஜல் அமைதியாக நாற்காலியின் மீது தலையைச் சாய்த்துக் கொண்டாள்.

"ஒவ்வொரு அபலையின் கடைசிப் புகலிடமும் இதுதான்!" அவன் சிகரெட் புகையை வெளியே ஊதினான். "இத்தனை மென்மையான உணர்ச்சிகளைக் கொண்ட நீங்கள் இந்த அழுக்கில் எப்படிச் சிக்கி விட்டீர்கள்?"

"கேட்க விரும்புகிறீர்களா?" கஜல் எழுந்து உட்கார்ந்தாள்.

"இல்லை" சர்வர் கையால் சைகை செய்து நிறுத்தி விட்டான்.

'இன்று நாம் பேசும் பேச்சு தெளிவாகவும் உண்மையாகவும் இருக்க வேண்டும் என்று நான் முடிவு செய்திருக்கிறேன். உங்களுக்கு முன்னால் நான் பொய் பேசமுடியாது..."

கஜலை யாரோ பின்புறமாகத் தள்ளிவிட்டார்கள். தெளி வான, உண்மையான பேச்சு? என்னிடம்? நான் நசீருக்காக வாழ் கிறேன் என்று சொல்லிவிடுவதா? இந்த மோதிரம் என் கையில் இருக்கும்வரை உண்மை பேச வேண்டிய நிலையில் இருக்கிறேன்!

"நான் பல அழகான பெண்களைப் பார்த்துக் கவிதைபாடி இருக்கிறேன். ஆனால் என்னுடைய அந்தக் கவிதை பொய்யானது என்று இப்போது தெரிகிறது. உலகின் மிகப் பெரிய உண்மை.

மறக்க முடியாத வாய்மை உங்களுடைய இருப்பில்தான் இருக்கிறது...”

ஏதோ ஒரு சிந்தனைக் குழப்பத்தில் அவன் எழுந்து நின்றான். சிகரெட்டை வீசி எறிந்தான். மேசையின்மீது இருந்த தூசியை விரலால் சுத்தப்படுத்தினான்.

“உங்களுடன் பேசும்போது என் நாக்குத் தடுமாறுகிறது கஜல், என் மூச்சு அடைபட்டுவிடும்போல் தெரிகிறது...” அவன் உண்மையாகவே தன் மூச்சைச் சரிப்படுத்திக்கொள்ள நின்றான். பிறகு கஜலை நோக்கி வந்தான். அவள் நாற்காலியின் மீது தலையைச் சாய்த்தவாறு அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

“எனக்குச் சொல்ல அனுமதி கொடுப்பீர்களா?”

“இல்லை, இல்லை,” கஜல் செவிகளின்மீது கையை வைத்துக் கொண்டாள். “இது உண்மையாக இருக்காது. இன்று உண்மை மட்டும் பேசுவதாகச் சொன்னீர்கள்.”

அவள் பயந்தவாறு பின்புறமாக நகர்ந்தாள். வீட்டைத் தன்னுள் அடக்கி இருந்த மாமரம் நினைவுக்கு வந்தது. புகை மண்டிய கருமையான அறை... தண்ணீரைப் போன்ற பருப்புச் சாம்பார்... காலணி இல்லாமல் நடந்துவந்த அண்ணி... தட்டுகளைக் கையில் ஏந்தியவாறு கதவருகில் நிற்கும் சின்னஞ்சிறு குழந்தை... கஜல் ஏதோ மாயத்தால் உருக ஆரம்பித்தாள். முற்றத்தில் தூங்கும் ஒரு குழந்தையை எடுக்க முன்னே சென்றாள். ஆனால் சர்வரின் குரல் அவளைத் திடுக்கிடச் செய்தது.

“நான் உங்களை என்னுடைய பழைய வீட்டுக்கு அழைத்துப் போகமாட்டேன். நீங்கள் அலீப் லைலாவின் அரசகுமாரி அல்லவா. நான் உங்களை என் சிந்தனையின் சிம்மாசனத்தில் அமர வைப்பேன். எந்தத் துக்கமும், எந்தக் கடுமையும் உங்களை அணுகாது. நீங்கள் என் கவிதையின் ஆன்மா—என் அழகான சிந்தனைகளின் நிழற்படம்...”

யாரோ குண்டால் துளைத்துவிட்டதுபோல் கஜல் நாற்காலியைவிட்டு எழுந்து நின்றாள். கவிதையின் ஆன்மாவா? காதலியா? கவிதையை முடிப்பவளா?

கஜல் ஏமாற்றத்துடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு திடீரென்று அவன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

“ஆண்கள் உங்களுக்குத் துரோகம் இழைத்திருக்கிறார்கள். இப்போது நீங்கள் யாரையும் நம்பத் தயாராக இல்லை. ஆனால் என் கவிதையில் எப்போதும் வாழுவீர்கள்.”

“ஆம்—நான் உங்களையும் நம்பவில்லை!”

இவ்வளவு எளிதாக அவள் இதைச் சர்வரிடம் எப்படிச் சொல்லிவிட்டாள் என்று கஜலுக்கே வியப்பாக இருந்தது. எந்த

ஆணையும் அவளால் தள்ளிவிட முடியவில்லை. மற்றவர்களை வேதனைகளிலிருந்து காப்பாற்றுவதற்காகத் தன் மடியை வெறுமை யாக்கிக் கொண்டாள். ஆனால் காதலியாக நடிக்கும் விளையாட்டு அவளுக்கு அலுத்துவிட்டது. சர்வரும் தன் பாழடைந்த வீட்டில் புகலிடம் தருவதாக அவளுக்குக் கனவுகள் தருவான். தன் வீட்டில் பரவி இருக்கும் மரநிழலின் பேராசையை அளிப்பான் என்றுதான் அவள் நினைத்தாள்; ஆனால் இவன் உண்மையே பேசுகிறானே!

"கஜல்..." கஜல் திரும்பிப் பார்த்தபோது சர்வர் தலைகுனிந்த வாறு அழுது கொண்டிருந்தான். குழந்தைப் பருவத்தில் அவள் நன்றாக அடித்த அதே முட்டாள் சிறுவனைப்போல்! சர்வர் அதே அழுக்கடைந்த ஷேர்வானியும், தொங்கல் இல்லாத துருக்கியத் தொப்பியும் அணிந்த அதே சிறுவனைப்போலவே இருப்பதைக் கஜல் உணர்ந்தாள்.

"ஆமாம். இன்று நாம் இருவருமே உண்மையைப் பேச வேண்டும் என்று சொன்னீர்கள் அல்லவா. அந்த உண்மையின் காரணமாக நீங்கள் தப்பிவிட்டீர்கள். போங்கள். இந்நிகழ்ச்சியைக் குறித்துக் கவிதை ஒன்று எழுதிவிட்டு, முள் தைத்த இந்நோயை என்றென்றும் இதயத்தில் உணருங்கள். என்னைப்போல்!"

கவலையும் கோபமும் மேலிடவே சர்வரால் ஒன்றும் பேச முடியவில்லை. தலைகுனிந்தவாறு பெண்களைப்போல் விம்மினான்.

"மீண்டும் கவிதாலயத்திற்கு வரும்போது என்னிடம் சொல்லுங்கள். கவிதையின் ஆன்மா... சிந்தனையின் இளவரசி... நுண்கலையின் வாழ்க்கை என்று..."

இம்முறை கஜல் அழுதுவிட்டாள். தன் இரண்டு கைகளாலும் முகத்தை மறைத்தவாறு அறையிலிருந்து வெளியேறிவிட்டாள்.



சர்வர் ஒருமுறை வீட்டுக்கு வருவதைப் பார்த்ததும் ரஷீத் வரவேற்புக் கொடுத்தான். புகழ்பெற்ற மனிதர்களுடன் நட்புப் பாராட்டுவது அவனுடைய வழக்கமாக இருந்தது. சர்வரின் கவிதைகள் இன்று நாடெங்கிலும் பாராட்டப் பெற்றன. ஒவ்வொரு சஞ்சிகையிலும் அவன் பெயர் இடம் பெற்றது. ஒவ்வொரு கவியரங்கிலும் அவன் பங்கு கொண்டான். கம்யூனிஸ்ட் எழுத் தாளர்கள் அமைந்த இலக்கியச் சங்கத்தின் செயலாளராகவும் இருந்தான். இப்போது கம்யூனிஸ்டுகளின் கை ஓங்கி இருந்தது. அதனால் அவர்களைச் சார்ந்த ஓரிருவருடன் நட்புக் கொண் டிருப்பது பயன் தரக்கூடியது. அதனால் கஜலுக்கும் சர்வருக்கும்

இடையே வளரும் உறவைக் குறித்து ரஷீத் மறுப்புத் தெரிவிக்க வில்லை. சர்வர் ரஷீதைச் சந்திக்க வருகிறான் என்று ரஜியாவும் நொண்டி அத்தையும் நினைத்தார்கள்.

ஆனால் இம்முறை சர்வர் வருவதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்பே ரஷீத் வீட்டிற்கு, சர்வருக்காகப் பெண்கேட்டுச் செய்தி வந்திருந்தது. சிவப்பு நிறக் காகிதத்தில் எழுதப்பட்ட கடிதத்துடன் பி.ஏ. பட்டம் பெற்றபோது எடுக்கப்பட்டிருந்த சர்வரின் படமும் அத்துடன் இருந்தது. சர்வருக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரியாது. கஜலுக்கும் ஃபவுசியாவே இந்தத் தகவலைக் கொடுத்தாள். வீட்டில் இந்த உறவை எல்லாரும் விரும்புவதாகவும, விரைவிலேயே கஜலும் மணமகளாகப் போகிறாள் என்றும் அவள் விவரமாகச் சொன்னாள்.

இதைக் கேட்டதும் கஜல் சோர்வடைந்து உட்கார்ந்து விட்டாள். ஃபவுசியாவுக்கு என்ன சொல்வது என்று புரியவில்லை. அவளுடைய குழப்பத்தைக் கண்ட ஃபவுசியா அவளருகில் நகர்ந்து வந்தாள். 'மஞ்சா'வில் உட்கார்ந்துவிட்ட ஃபவுசியாவின் மஞ்சள்நிற ஆடையிருந்த மஞ்சள், கதம்பப்பொடி மணம் வீசியது.

"உனக்கு சர்வரைப் பிடிக்கவில்லையா. பெரிய கவிஞராமே!"

"இல்லை. எனக்கு அவரைப் பிடிக்கவில்லை. இந்தக் கடிதத்தை அவரைக் கேட்காமலேயே ஹமீத் அண்ணா எழுதி விட்டாராம். அதனால் இந்த உறவுக்கு மறுப்புத் தெரிவிக்க இன்று அவர் வந்திருந்தார் என்று ரஷீத் மாமாவிடம் சொல்லிவிடு."

"என்ன, சர்வருக்கு உன்னைப் பிடிக்கவில்லையா?" ஃபவுசியா திடுக்கிட்டாள். "அவனுக்கு உன்னைப்பற்றித் தெரிந்து விட்டதோ.."

"அதனால்தான் இந்த உறவைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டாம் என்று மாமியிடம் சொல்லிவிடு."

ஆனால் கஜலைப் பற்றிச் சிந்தனை செய்ய யாருக்கு நேரம் இருந்தது?

ஃபவுசியா தையல்காரனிடம் சண்டையிட்டாள். ரஜியா சீர்வரிசையை அலங்கரிப்பதில் முழு கவனமும் செலுத்தினாள். ரஷீத் திருமண அழைப்பிதழ்களின் மேல் பெயர்கள் எழுதிக் கொண்டிருந்தான். வீடு விருந்தாளிகளால் நிரம்பி இருந்தது. பவுசியாவின் தோழிகள் இரவும் பகலும் அவளைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். வாயிலில் வாத்தியங்கள் முழங்கின. தாழ் வாரத்தில் நொண்டி அத்தை மற்ற பெண்களுடன் மத்தளத்தைச் சமாளித்தவாறு உட்கார்ந்தாள்.

'சோபனம் சோபனம்... நம்ப
சீதனம் தலைமுறை சீதனம்...
ஆதம் ஹவ்வாவும் அண்ணல்

நபிரசூலும் அனுபவித்த
நியமத்து தான் மனிதருக்கு (சோபனம்)
கண் வைத்துப் பார்க்காதே
காது கொடுத்து கேளாதே
கல்பால் தெரிந்துகொள்
உள் நடப்பை கன்னிப் பெண்ணே (சோபனம்)'

ஏனோ பாட்டுப்பாடும்போது நொண்டி அத்தையின் குரல் கரகரத்தது. அவள் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

பிறகு ஃபவுசியாவின் மணமகன் திருமண ஊர்வலத்துடன் கவிதாலயத்தை வந்தடைந்தான். உள்ளே பெரிய பரபரப்புக் காணப்பட்டது. மின்னலடிக்கும் மங்கையர்... சிரிப்பொலிகள்.... பிரியாணி, கோழிக்கறி வாடை.... இதயத்தில் கீறலிட்டுவிடும் ஒலிகள்...

"என்னுடைய பிறந்தகம் இன்று விடுபடுகிறதே!"

தோழியருக்கு மத்தியின் மணமகளாக அலங்கரிக்கப்பட்டு இருந்த ஃபவுசியா சிரித்துக் கொண்டிருந்தாள். கஜல் அவளுடைய மருதாணி பூசிய கைகளில் 'ஜிகினா' தடவினாள். நகைகளை அணிவித்தாள்; ஒப்பனை செய்தாள்.

"சிகரெட் அதிகமாகப் புகைக்கிறாராம். புகையிலையின் வாடை என்னால் சகிக்க முடியாது. அவருக்குச் சிவப்பு நிறம் பிடிக்கும் என்று ஐரீனா சொன்னாள்..."

பிறகு அவள் கஜலின் கையைப் பிடித்துக் கொண்டாள்.

"இந்த டாக்டர்கள் மிகவும் வெட்கங்கெட்டவர்கள். நான் மூன்று நாட்கள் வரை கண் திறக்கவே மாட்டேன்..." வெட்கம் மேலிட அவள் கஜலின் மீது சாய்ந்துவிட்டாள்.

'ஆனால் நான் எந்த ஆடவனைப் பார்த்தும் நாணம் கொள்ள மாட்டேன். எனக்கு எவ்வித நடுக்கமும் இல்லை' என்று கஜல் சிந்தனை சய்தாள்.

பிறகு ஷாஹீனும் ரஷீத் மாமாவும் நிக்காஹ்வுக்கான ஒப்புதல் பெற வந்தபோது ஃபவுசியா அழுதாள். வாழ்வில் முதல் முறையாக ஓர் ஆடவனைத் தனக்குத் துணைவனாக ஏற்றுக்கொள்ள ஃபவுசியா இசைவு தெரிவித்தாள். இனி அவள் அவனுக்காகவே வாழுவாள். அவனுக்காகவே மடிவாள். தன் வாழ்வை அவள் ஓர் அந்நியனிடம் ஒப்படைத்துவிட்டாள். என்றாலும் ஃபவுசியா அழுது கொண்டிருந்தாள். 'பைத்தியக்காரி... நான் இந்த இடத்தில் இருந்தால் மகிழ்ச்சி மேலிடச் செத்துவிடுவேன். ஒருவனைச் சார்ந்து செத்துவிடும் சுகம் எத்தகையது. ஃபவுசியாவுடைய வாழ்வின் ஒரு கணம் எனக்குக் கிடைத்தால் போதுமே...'

"போதும், எவ்வளவு அழுவாய்," தூரத்து உறவில் சின்னம்மா

*வாக இருந்த ஒருவர் கஜலின் கண்ணீரைத் துடைத்தார். "ஒன்றாகவே குழந்தைப் பருவம் முதல் வளர்ந்தார்கள். ரஜியா பேகம்! கஜலின் திருமணத்தையும் இப்போது நடத்திவிடுங்கள். பாவம். தனிமையில் தவிக்கிறாள்..."*

*நானும் ஃபவுசியாவைப்போல் தனியாக இருந்திருந்தால்... ஃபவுசியா இன்று தன் மணமகனின் வீட்டுக்குப் போகிறாள். தனியாக...ஒன்றுமில்லாத இதயத்துடன்... வெறுமையான சிந்தனையுடன்... நான் எங்கே... என்ன கொண்டு போவேன்?*

# 25

*இப்போது எல்லாருடைய பார்வையும் கஜல் மீது பதிந்திருந்தது.*

*ஒருநாள் அவள் நாஹீத் அக்காவுடன் திரைப்படம் பார்க்கச் சென்றபோது மாமி பெரிதும் கோபம் கொண்டாள்.*

. *"இனி ஊர் சுற்றுவதை நிறுத்து. இன்று முதல் கடுமையான பர்தாவில் இருக்க வேண்டும். வீட்டுக்குப் புதிய மருமகன் வந்து விட்டான். என் வீட்டுக்குக் கெட்டபெயர் வருவதை நான் விரும்பவில்லை. இதற்குக் கட்டுப்படுவதாக இருந்தால் இங்கே இருக்கலாம். இல்லாவிட்டால் உன் தந்தையிடம் போய் விடு!"—மகளுக்குக் கல்யாணம் முடிந்ததும் ரஜியா மாமி எவ்வளவு மாறிவிட்டாள். இறகுகளைத் துண்டித்த பிறகு பறந்துவிடு என்று பறவையிடம் சொன்னால் அது எந்தக் கிளையின்மீது போய் உட்காரும்? கஜல் மௌனமாகத் தன் ஆடைகளை மாற்றிக் கொண்டு விளக்குமாறு எடுத்துக்கொண்டு முற்றத்தைச் சுத்தப்படுத்தும் வேலையில் ஈடுபட்டாள். அவள் நன்கு அறிந்த பிறகே நான்கு திசைகளிலும் கதவுகளை மூடிக்கொண்டுவிட்டாள். அப்படி இருந்தும் ஃபவுசியா தன் கணவனுடன் வரும்போது மாமி கஜலை அறையினுள் தள்ளி வெளியிலிருந்து தாழ்ப்பாள் போட்டுவிடுவாள்.*

*கஜல், ஃபவுசியாவின் கணவனை மிகவும் வெறுத்தாள். அவன் மிகவும் கர்வியாக இருந்தான். வந்ததும் தன் மருத்துவத் திறமையைக் காட்டுவதற்காக வீட்டிலிருந்த அனைவரையும் நோயாளியாக்கி விட்டான். அவனுக்கு ஃபவுசியாவின் எந்த நடையும் பிடிக்கவில்லை. ஒவ்வொரு ஆடையிலும், நகையிலும் ஏதேனுமொரு குறையைக் கண்டுபிடிப்பான். அவள் அவனை நன்கு திருப்திப்படுத்த முயன்றாள். வீட்டுக்கு வந்தவுடன்*

அன்னையிடம் சொல்லிவிடுவாள்.

"அம்மா, இனிப்பில் பன்னீர் போடாதீர்கள்... தாவர நெய் கலக்காதீர்கள்... கோழியை நெருப்பில் வாட்டி வையுங்கள்... மெதுவாகப் பேசும்படி நொண்டி அத்தையிடம் சொல்லுங்கள்... அவருக்கு ஆரவாரம் சிறிதும் பிடிக்காது..."

அப்படி இருந்தும், மாமியார் வீட்டில் தன்னை யாரும் மதிக்கவில்லை என்று அவன் ஃபவுசியாவிடம் குறை கூறுவான்.

அதனால் மூன்று நான்கு மாதங்களுக்கு ஒருமுறை அவர்கள் வருவார்கள். அவர்களுடன் ஃபவுசியாவுடைய மாமியாரின் கடிதமும் வரும். 'கடந்தமுறை வந்திருந்தபோது ஊசிப்போன நெய் சாப்பிட்டதால் என் மகன் நோயாளி ஆகிவிட்டான். எனவே அவனுக்குச் சாப்பாடு கொடுக்காதீர்கள்!"

ஃபவுசியாவிடமிருந்து அவளுடைய கணவனின் நடைமுறை பற்றித் தெரிந்துகொள்ளவேண்டுமென கஜல் காத்திருப்பாள். ஆனால் ஃபவுசியாவுக்கு சிறிதும் ஓய்வு கிடைக்காது.

ஒருநாள் ஃபவுசியாவை அனுப்பிவிட்டு ரஜியா சோகத்துடன் இருந்தபோது, ஷேகு மியான் அவள் அருகில் வந்து உட்கார்ந்தார்.

ஷேகு மியான் இப்போது இத்திஹாதுல் முஸ்லிமீனை விட்டு விலகி காங்கிரஸ் அமைதிக் குழுவின் செயலாளராகிவிட்டார். பல இடங்களில் இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகக் கூட்டங்களை நடத்தினார். பிறகு இராணுவ அரசிடம் முஸ்லிம் துரோகிகள் பட்டியல் ஒன்றையும் சமர்ப்பித்துவிட்டார். எந்த வீட்டில் எத்தனை ஆயுதங்கள் இருக்கின்றன, எந்த மாளிகையில் எவ்வளவு தங்கம் புதைக்கப்பட்டிருக்கிறது, யார் யார் தங்கள் செல்வங்களைப் பாகிஸ்தானுக்கு இடமாற்றம் செய்யப் போகிறார்கள் என்ற விவரங்களும் கொடுத்திருந்தார். அதனால் ஷேகு மியான் 'செழிப்பாக' இருந்தார். நல்லாடைகள், புதிய காலணிகள் அணிந்து மாலையில் சிற்றுண்டிப் பொட்டலத்துடன் படிக்கட்டுகளில் வந்து உட்காருவார். நொண்டி அத்தை அவருடைய நிலை சீர்படுவதைக் கண்டு மீண்டும் அவருடைய திருமணம் பற்றிக் கவலைப்பட ஆரம்பித்துவிட்டார்.

ஆனால் இன்று ஷேகு மியான் படிக்கட்டுகளைக் கடந்து உள்ளே வந்துவிட்டதைக் கண்டு கஜலுக்கு வியப்பாக இருந்தது. ஏனெனில் வேலைக்காரர்களின் அறையிலிருந்து தாழ்வாரத்தின் படிக்கட்டுகள் வரை மட்டுமே அவரது எல்லைகளாக நிர்ணயம் செய்யப்பட்டிருந்தன. பீபியும் வாஹித் ஹுசேனும் காலமான பிறகு ரஜியாவின் தனிமனிதப் பண்பை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை போலும்.

"மகளின் திருமணத்தை, அவளுடைய மதிப்பை அறிந்து

நடந்துகொள்ளும் மக்களை நன்றாகத் தெரிந்து கொண்ட பிறகே நடத்தி இருக்கவேண்டும்" ரஜியாவின் சோகமான முகத்தைப் பார்த்த அவர் இதைச் சொல்லிவிட்டு ஆசனத்தின் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டார்.

"இது எல்லாம் விதியின் விளையாட்டுதான். நாம் நல்ல வரனை எவ்வளவோ தேடி விட்டோம். விதியின் எழுத்தை யாரால் படிக்க முடியும்?"

"ஆனாலும் மகளை மதிப்புடன் நடத்தும் இடத்தில்தான் கட்டிக்கொடுக்க வேண்டும். என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு வாலிபமான பெண்ணுடன் என் திருமணத்தை நடத்தி வையுங்கள். நான் அவளுக்கு அடிமையாகி விடுவதை நீங்கள் பார்ப்பீர்கள்..."

ஷேகு மியாவின் பேச்சைக் கேட்டு ரஜியாவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. நொண்டி அத்தை முகத்தைச் சுளித்தவாறு முணுமுணுத்தார்.

"இந்தக் கேடுகெட்ட மூஞ்சியின் நீசமான பேச்சுகள் எப்போதும் போவதில்லை."

ஆனால் இன்று ரஜியா அவருடைய பேச்சை அக்கறையுடன் கேட்டுக் கொண்டிருந்தாள்.

நடுப்பகல் நேரத்தில் மாமி மீண்டும் நொண்டி அத்தையுடன் உட்கார்ந்தவாறு கிசுகிசுத்துக் கொண்டிருந்தார். ஒரு முக்கியமான முடிவை எடுக்கும்போது பெண்களின் முகத்தில் தென்படும் அமைதி அவர்களிடமும் இருந்தது.

ஷாஹீன் மருத்துவமனைக்குச் செல்லும்போது, அவர்கள் இவ்வாறு பேசுவதைக் கண்டு சிரித்துவிட்டான்.

"நான் எல்லாவற்றையும் கேட்டுவிட்டேன். உங்களைப் பற்றிக் குறை சொல்கிறார்கள் என்று ஷேகு அண்ணாவிடம் சொல்லி விடப் போகிறேன்."

"எங்கள் பேச்சில் உங்கள் தலையீடு எதற்கு?"

"ஒவ்வொரு பேச்சிலும் நான் குறுக்கிடுவேன். நீங்கள் என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள். எனக்குச் சொல்லுங்கள்". அவன் தன் கைப்பெட்டியை வைத்துவிட்டு இருவருக்கும் இடையில் வந்து உட்கார்ந்துவிட்டான்.

"நீங்கள் போங்கள். நோயாளிகள் காத்திருப்பார்கள்." நொண்டி அத்தை எப்படியும் அவனை அனுப்பி வைக்க முயன்றாள்.

"நோயாளிகள் எப்படியாவது போகட்டும். மாலை நேரமாகி விட்டாலும் சரி, உங்களிடமிருந்து தெரிந்து கொள்ளாமல் நான் போகமாட்டேன்."

ஷாஹீனின் பிடிவாத குணத்தை ரஜியா நன்கு அறிவாள். தான் சொன்னதை செயலில் காட்டுபவன் அவன்.

"சரி கேளும். நாங்கள் கஜலின் திருமணத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம்."

"அப்படிச் சொல்லுங்கள்", ஷாஹீன் தன் பெட்டியை எடுத்துக் கொண்டான். "ஆனால் ஃபவுசியாவுக்காகத் தேர்வு செய்த அந்தப் பைத்தியக்கார அரைமருத்துவனைப்போன்று, முரட்டுக் குதிரை மாதிரி ஒருவனைத் தேடாதீர்கள்" என்று சொல்லிவிட்டு ஷாஹீன் சென்றுவிட்டான்.

ஷாஹீனுக்குத் தன் மைத்துனனைச் சிறிதும் பிடிக்கவில்லை. அவனுடைய ஒழுக்க முறையும் பிடிக்கவில்லை. அவனுடைய மருத்துவத் திறமையையும் வீண் பெருமையையும் அவன் முக்கியமாகக் கருதவில்லை. தாஹிர் ஐரோப்பாவில் கேளிக்கை களில் மட்டுமே ஈடுபட்டிருந்தான் என்று ஷாஹீன் கூறுவான்.

தான் அமெரிக்காவில் ஏழு வருடம் கழித்ததாகவும், ஷாஹீன் திறமையில் தன்னைவிட மிகவும் குறைந்தவன் என்றும் தாஹிர் வாதிப்பான்.

கஜல் இவர்களின் பேச்சைக் கேட்டுத் திகைத்து நின்றாள். நாற்காலிகளைத் துடைக்கும்போது அவள் சிந்தனை செய்தாள். 'அண்ணி மூலமாக சர்வர் மீண்டும் முயற்சி செய்கிறானா? நான் இந்த தூதுச் செய்தியை அவன் முகத்தின்மீது தூக்கி எறிவேன். இந்த விளையாட்டுக்காகவா நான் இருக்கிறேன். சர்வருக்கு என்னைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவள் அன்றே நன்றாக யோசித்துச் சர்வருக்கு ஒரு கடிதம் எழுதினாள். தன் கடன்பட்ட காலத்தின் எல்லா நிகழ்ச்சிகளையும் அதில் விவரித்துவிட்டு வினா ஒன்றையும் எழுப்பிவிட்டாள். இதற்குப் பிறகும் நீங்கள் உங்கள் வீட்டில் பரவியிருக்கும் மரநிழலை எனக்குத் தருவீர்களா? வாழ்க்கை என்பது விளையாட்டு அல்ல, ஒரு தூய்மையான இடத்தில் நான் இருக்க முடியுமா?'

மாலையில் உறையை மூடி அந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்துவிட அவள் நினைத்தபோது நொண்டி அத்தையிடம் ரஜியா மாமி சொல்லிக்கொண்டிருந்தாள்.

"எனக்கு ஷேகு அண்ணா—கஜலின் இணை சரி என்றே படுகிறது. இருவருமே திருந்தி விடுவார்கள்."

கஜலின் கையிலிருந்து கடிதம் நழுவிக் கீழே விழுந்தது அவள் கற்சிலையாகி நின்றுவிட்டாள். அவளை இந்த நிலையில் கண்ட ரஷீத் கலவரமடைந்து விட்டான்.

"நான் சொல்கிறேன் ரஜியா. நன்றாகச் சிந்தித்துப்பார். கஜலுக்கும் ஷேகு அண்ணாவுக்கும் இணை இல்லை. இருவருக்கும்

இடையில் நாற்பது ஆண்டுகள் வித்தியாசம் இருக்கும்."

"போதுமே, நீங்கள் சும்மா இருங்கள்..." ரஜியாவுக்குக் கோபம் வந்துவிட்டது. "அப்படியென்றால் சரியான இணையை நீங்கள் தேடியிருக்க வேண்டும். இத்தகைய நிகழ்ச்சிகளுக்குப் பிறகு அவளை யார் எற்றுக் கொள்வார்கள். ஒருத்தி புதைகுழிக்குச் சென்றுவிடுவாள். சிறிது விடுதலை கொடுத்தால் உங்கள் சகோதரி மகள் என்னைப் புதைகுழிக்கு அனுப்பிவிடுவாள்..."

"சரி சரி இந்தப் பேச்சை விடுங்கள். வேறு பையனை..." ரஷீத் பேச்சை முடிக்கவில்லை.

"ஆமாம். பையன்கள் தெருவில் கிடக்கிறார்களா? உங்கள் மகளுக்காக நல்லதொரு மாப்பிள்ளையைத் தேடிக் கொண்டு வந்திருக்கலாமே..."

"சரி, சரி, மெதுவாகப் பேசு..." ரஷீத் தோல்வியை ஒப்புக் கொண்டான்.

"விஷயம் என்னவென்றால், ரஷீத் மியான்..." நொண்டி அத்தை இப்போது தாக்குதலை ஆரம்பித்தாள். "ஆண் சிறிது கடினமானவனாக இருக்க வேண்டும். அப்போது தான் நுகத் தடியைப் பிடித்திருக்க முடியும்! இல்லாவிட்டால் இவள் இத்தகைய சண்டைகளிலேயே மூழ்கியிருப்பாள்..."

ரஷீத் இப்போது எதுவும் பேசவில்லை. அரிசியைச் சுத்தம் செய்து கொண்டிருந்த கஜலைப் பார்த்தான். அவளது மௌனத்தைக் கண்டு தானும் அமைதியடைந்துவிட்டான்.

'ஷேகு அண்ணாவிடம் ஏதேனுமொரு அழகை அவள் கண்டிருக்கலாம். இல்லாவிட்டால் தன் விருப்பத்திற்கெதிராக எதையும் இந்தப் பெண்கள் ஏற்றுக் கொள்வதில்லை...'

"இப்போது எங்களுக்காகவும் ஒரு பெண்ணைத் தேடுங்கள் ரஷீத் மியான்," ரஷீதின் மனநிலையை மாற்றுவதற்காக நொண்டி அத்தை பேச்சின் போக்கை மாற்றினாள். "என்னுடைய ஷாஹீன் வளர்ந்து, படிப்பை முடித்து வேலையும் தேடிக் கொண்டான். ஃபவுசியா போன பிறகு வீட்டில் மனம் பிடிக்கவில்லை. மணமகள் வந்துவிட்டால் வீடு களைகட்டிவிடும்."

"இந்தக் காரியங்களுக்க அவரிடம் நேரம் ஏது அத்தை," ரஜியா கோபத்திலேயே இருந்தாள். "பணம் சம்பாதிக்கும் வழிகள் மட்டுமே இவருக்குத் தெரியும். குழந்தைகளின் மகிழ்ச்சிக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம்?"

"கோபப்படாதீர்கள் பேகம். அந்த வேலையும் செய்கிறேன். ஜீஷான் சாஹபின் பேத்திக்காக ரஹீம் மியாவிடம் சொல்லி இருக்கிறேன். பெண்_ பி.ஏ. படித்திருக்கிறாளாம். ஒரு லட்சம் ரொக்கம் கொடுப்பார்களாம்..."

“உண்மையாகவா?” ரஜியா திடுக்கிட்டாள்.

“அந்தப் பாழாய்ப்போன மூஞ்சி ரஹிம் மியாவை விட்டுத் தள்ளுங்கள். நானே கராமத் அக்காவிடம் போகிறேன். என் மகனிடம் என்ன குறை இருக்கிறது. நல்ல அழகு! மேலும் ஐரோப்பாவில் படித்திருக்கிறான்! இத்தனை பட்டங்கள் இருக்கின்றன. மருத்துவமனையிலும் எல்லாரும் அவனை விரும்புகிறார்களாம்.”

“ஆனால் முதலில் ஷாஹீனிடமும் கேட்டுக் கொள்ளுங்கள்.”

இதைக்கேட்டு எல்லோரும் மௌனமாகி விட்டார்கள்.

ஷாஹீன் மிகவும் எளிய முறையை விரும்புகிற வாலிபன். தற்பெருமையும், இறுமாப்பும் அவனிடம் இல்லை; ஆனால் ஐரோப்பாவிலிருந்து பிடிவாதத்தை வளர்த்துக் கொண்டு வந்திருந்தான். தனக்குப் பிடித்தமான காரியங்களையே செய்வான். வந்ததும் பலமுறை ரஷீதுடன் அவன் மோதினான். அவன் ஒழுக்கம் தெரிந்தவனாகவோ வாயாடியாகவோ இருக்கவில்லை. ஷாஹீன் வந்துவிட்டால் இங்கு இருக்கும் செல்வத்தை இடமாற்றம் செய்துகொண்டு பாகிஸ்தானுக்குப் போய்விடலாம். ஷாஹீன் மீண்டும் மேல்நாடுகளுக்கே சென்று சம்பாதிக்கட்டும். இங்குள்ள பணிகளில் என்ன இருக்கிறது என்று ரஷீத் திட்டம் தீட்டியிருந்தான். ஆனால் ஷாஹீனுக்குப் பாகிஸ்தான் பயணம் சிறிதும் பிடிக்கவில்லை.

அவன் மேல்நாட்டுக் கலாச்சாரத்தையும் வெறுத்தான். ஹைதராபாத்திலேயே இருக்க விரும்பினான். செல்வம் சம்பாதிப்பதிலும் அதைச் சேர்த்து வைப்பதிலும் அவன் அக்கறை கொள்ளவில்லை. மருத்துவத் துறையிலேயே ஆராய்ச்சிகள் செய்வதில் நாட்டம் கொண்டிருந்தான். ஒரே மைந்தன். அதுவும் இத்தகைய பிடிவாதக்காரன்!

ரஷீத் வேறு வழியின்றிப் பொறுமை சாதித்தான். வயதுக்கு வந்துவிட்ட, அறிவுகொண்ட, திறமை படைத்த, தன்னியல்பான மகனுக்கு முன்னால் அவன் வேறு என்ன செய்ய முடியும்?

கஜல் அறையினுள் தனியாக இருப்பதைப் பார்த்து ரங்கம்மா உள்ளே வந்தாள்.

“பீபி... குழந்தையை நான் தோட்டத்தில் உட்கார வைத்திருக்கிறேன். என் கணவன் இனி அதை வைத்திருக்க விடமாட்டான்”

கஜல் ஓடோடிச் சென்றாள். கிராந்தி அமைதியாக உட்கார்ந்து உலர்ந்த இலைகளைச் சேகரித்துக் கொண்டிருந்தாள். இந்த இடைப்பட்ட காலத்தில் அவள் மிகவும் மெலிந்து விட்டாள். அவளுடைய அடர்த்தியான கருநிற முடியில் பேன் இருந்ததால்,

ரங்கம்மா மொட்டை அடித்துவிட்டாள். அதனால் அவளை அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை.

கஜல் அவளை எடுத்து அணைத்துக்கொண்டபோது அவள் கஜலை கவனமாகப் பார்த்தாள். இவளை எங்கு கொண்டு போவது என்று கஜல் கலவரம் அடைந்தாள். வாயிலில் கார் வருவதைக் கண்டதும் அவளைக் கோழிக் கூண்டுக்குள் உட்கார வைத்துவிட்டு, “நீ இங்கேயே இரு. நான் உனக்குச் சாப்பாடு கொண்டுவருகிறேன்” என்றாள்.

எட்டு நாட்கள் வரையில் பொறுமையாகக் கிடந்த கோழிக் கூட்டில் அவளை மறைத்து வைத்தாள். இந்தப் பெரிய கோழிக் கூடு மாளிகையின் ஒதுக்குப்புறமாக இருந்தது. அந்த மூலைக்கு யாரும் வருவதில்லை. ஆனால் கஜல் அடிக்கடி தட்டில் ரொட்டியோ சாதமோ கொண்டு செல்வதைக் கண்டு நொண்டி அத்தை சற்று விழிப்படைந்தாள். ஒருவேளை முட்டைகளைச் சேகரித்து கோழியை அடைகாக்க வைத்திருக்கலாம் என்று நினைத்தாள். கஜல் கிராந்திக்கு உணவு கொடுத்ததும் வெளியே குழந்தைகளுடன் விளையாடுமாறு அனுப்பிவிடுவாள். மாலை நேரத்தில் மீண்டும் கூண்டுக்குள் அடைத்து, “வெளியே வராதே. இல்லாவிட்டால் மக்கள் என்னைக் கொன்று விடுவார்கள்” என்று சொல்லுவாள்.

நான்கு வயதுள்ள கிராந்தி இத்தகைய நிலைமைகளிலேயே வளர்ந்தவள். துப்பாக்கி ஒலிகள், தப்பியோடுதல், குகைகளில் மறைந்திருத்தல்—ரொட்டியும் நீரும் கிடைக்காமல் வாடுதல் எல்லாமே அவளுக்குப் பழக்கமாக இருந்தது. இப்போது கோழி களுடன் இருட்டான கூண்டில் அழுதவாறு படுத்துத் தூங்கவும் அவள் கற்றுக் கொண்டாள்.

ஆனால் கவலை கொண்ட நொண்டி அத்தை ஒருநாள் ஊன்றுகோலின் உதவியால் அங்கு வந்து எத்தனை முட்டைகள் இருக்கின்றன என்று ஆராய்ந்தபோது முட்டைகளில் ஒரு பெரிய குழந்தையும் கிடைத்தது. பயத்தால் அவளுடைய மூச்சு அடைத்துக் கொண்டது. பிறகு அவளுடைய கூச்சலைக் கேட்டு வீடு முழுவதும் கூடிவிட்டது.

ரஜியாவுக்கும் ரஷீதுக்கும் ஒன்றும் புரியவில்லை. இந்த ஆபத்து எங்கிருந்து வந்துவிட்டது. இது யாருடைய குழந்தை. எங்கள் வீட்டில் எதற்காக மறைத்து வைத்திருக்கிறார்கள். நிலைமை வேறு சரியாக இல்லை. இதைத் தேடுவதற்காகப் போலீசார் வந்தால் ரகசிய அறையினுள் உள்ள எல்லாமே வெளியே வந்துவிடுமே என்று அச்சம் கொண்டார்கள்.

எல்லாருடைய கூச்சலையும் கேட்டு அந்தச் சிறுமியும் பயந்து

அழ ஆரம்பித்துவிட்டாள். கஜலைப் பார்த்ததும் அவளைத் தழுவிக் கொண்டாள். அவளிடமிருந்து கோழி நாற்றமும் அடித்தது. அவளுக்கு சுரமும் இருந்தது.

சிறுமி கஜலிடம் சென்றுவிட்டதைப் பார்த்து, இது கைசரின் மகளாக இருக்க வேண்டும் என்று ரஜியா ஐயம் கொண்டாள். ஆனால் கஜல் பிடிவாதமாக அதை எதிர்த்தாள். இவள் கைசரின் மகள் அல்ல என்பதற்கு பல எடுத்துக்காட்டுகளை விளக்கினாள். கைசரின் மகளோ அழகாக இருந்தாள். அப்போது ஒரு வயதாகியிருந்தவள்தானே அவள். இப்போது யாருக்கும் அவளுடைய முகம் நினைவில் இல்லை. அதனால் எல்லாரும் மௌனமாகி விட்டார்கள்.

இந்த அமளியைக் கேட்டு ஷாஹீனும் அங்கு வந்தான். குழந்தையைத் தொட்டுப் பார்த்தான். தன் ஆடைகளில் படாமல் அந்த அழுக்கான குழந்தையை உள்ளே கொண்டு வந்தான். ரஜியாவின் சமுக்காளம் பரவியிருந்த ஆசனத்தின்மீது அவளைப் படுக்கவைத்து, மருந்துகொடுத்து, ஊசியும் போட்டுவிட்டான். இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி கஜல் ஒரு கோப்பைப் பாலும் கொண்டுவந்து விட்டாள்.

பிறகு அவள் அந்த 'அவை'யினரைப் பார்த்து ஒரு சொற்பொழிவை நடிப்புடன் நிகழ்த்தினாள்.

"மாமி—ஒரு பேச்சுக் கேளுங்கள். நேற்றிரவு தொழுகையை முடித்துவிட்டு நான் படுத்தேன். கனவில் இந்தக் குழந்தையை உண்மையாகப் பார்த்தேன். இவள் தனியாக அழுது கொண்டிருந்தாள். இதற்குள் தாத்தா வந்துவிட்டார். அவருடைய மடியில் இந்தச் சிறுமி சென்றுவிட்டாள். தாத்தா சொன்னார்: கஜல்! இது எங்கள் செல்வி. இதைக் கவிதாலயத்தில் வைத்திரு. உன் மாமாவின் எல்லாக் கவலைகளும் பிரச்சினைகளும் தீர்ந்துவிடும். அத்தை! நான் காலையிலிருந்து இதன் பலனை உங்களிடம் கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்..."

ஷாஹீன் மருத்துவமனைக்குச் சென்றுவிட்டான் அதனால் கனவு கேட்டவுடன் எல்லாருடைய தலைகளும் வணக்கத்துடன் குனிந்துவிட்டன. கஜல் தன் வெற்றியைக் கண்டு, கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். எப்படியும் கஜல் நொண்டி அத்தையின் அண்ணியாக வரப்போகிறாள். அதனால் நொண்டி அத்தை முதல் ரஜியா வரை எல்லாரும் அவளிடம் அன்பாக நடந்துகொண்டார்கள். நொண்டி அத்தை உள்ளே சென்று ஒரு போர்வையைக் கொண்டு வந்து குழந்தைக்குப் போர்த்திவிட்டாள்.

"இவள் இங்கேயே கிடக்கட்டும். ஷாஹீனுடைய குழந்தைகளுக்குத் துணையாக இருப்பாள்."

இதைக் கேட்டதும் ரஜியா தன் சேலைத் தலைப்பைச் சரி செய்து கொண்டாள்.

"எந்த அபலையின் குழந்தையோ... எங்கள் கருணையையும் தாராள குணத்தையும் பார்த்துவிட்டுச் சென்றிருக்கிறார்கள். இனி அல்லாஹூம் திருநபியும் இதன் பாதுகாப்பை எங்கள் கடமையாக்கிவிட்டார்கள்..."

ஷாஹீனுக்கு இந்தக் கூற்றில் சிறிதும் அக்கறை இல்லை; இது யாருடைய குழந்தை, எங்கிருந்து வந்திருக்கிறது என்பதில் அவனுக்குக் கவலை இல்லை. அது வீட்டில் இருக்கும்போது இரண்டு வேளை மருந்து கொடுப்பதும், பிஸ்மில்லா பீ அல்லது கஜலிடம் சொல்லி அதைச் சுத்தப்படுத்துவதும் போன்ற கடமைகளை அவன் தன் பொறுப்பாக ஏற்றுக் கொண்டான்.

"உன் பெயரென்ன—?"

"காதி..." அவள் மழலைச் சொல்லில் பதிலளித்தாள்.

"கனீஜ்—கனீஜ் என்கிறாள்..." கஜல் அவசரமாகக் கூறினாள்.

"ஆ! முஸ்லீம் குழந்தை இது. தந்தை ஏதேனும் எல்லையில் கொல்லப்பட்டிருப்பான். ஆதரவு இல்லாத தாய் இவளைப் போட்டுவிட்டுச் சென்றுவிட்டாள் போலும்!" ரஜியாவுக்குக் கருணை பிறந்தது.

"எப்படி இருந்தாலும் போலீசுக்கு தகவல் கொடுத்துவிட வேண்டும். பிறகு ஏதும் தொல்லை வந்துவிடக் கூடாது" என்று ரஷீத் கூறினான். அநாதைக் குழந்தைகளை மாளிகைகளில் வளர்ப்பது புதிய விஷயம் அல்ல.

"நான் நாளைக்குப் பத்திரிகைகளில் ஒரு செய்தியைக் கொடுக்கப்போகிறேன். நவாப் ரஷீத் அலிகான் அநாதைக் குழந்தைகளின் வளர்ப்புக்காக ஒரு பாசறையை அமைத்திருக்கிறார். மதவேறுபாடு இல்லாமல் அநாதைக் குழந்தைகளுக்கு அங்கு புகலிடம் தரப்படும் என்ற அறிவிப்பும் தருகிறேன். காங்கிரஸ் அரசு இத்தகைய சமூகப் பணியை வரவேற்கிறது என்று சொல்கிறார்கள்..."

"நானும் உங்கள் பாசறையில் பணியாற்றுகிறேன் மாமா" கஜல் மிகவும் மகிழ்ச்சியுடன் கூறினாள்.

"ஆமாம். முதலில் இதை நீ பார்த்துக்கொள். இரவில் என் கட்டிலுக்குக் கீழே படுக்க வை" என்றாள் நொண்டி அத்தை. "அநாதைக் குழந்தைகள் மேல் அன்பு செலுத்தினால் அல்லாஹ் பாவங்களை மன்னித்துவிடுகிறான்."

"கவ்ஹர் அத்தை. நீங்களும் பாவம் செய்திருக்கிறீர்களா?" ஷாஹீனின் இந்தப் பேச்சைக் கேட்டு எல்லாரும் சிரித்து விட்டார்கள். நொண்டி அத்தைக்கு ஏனோ அழுகை வந்துவிட்டது.

"அட, இது அழுகைக்குரிய விஷயம் அல்லவே. இதைக்கேட்டு சிரிப்பு அல்லவா வர வேண்டும்...!" பிறகு ஷாஹீன் கஜலிடம் கேட்டான் "நல்லது கஜல் பேகம். இந்தக் குழந்தைக்குச் சேவை செய்வதற்குப் பதிலாக தாங்கள் என்ன பலன் அடையப் போகிறீர்கள்?"

இதைக் கேட்டுக் கஜலும் தனது கண்ணீரை மறைத்தவாறு அறைக்குள் ஓடிவிட்டாள். ஆனால் ஷாஹீனும் பிடிவாதக்காரன் அல்லவா. சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் உள்ளே வந்தபோது கஜல் ஒரு மூலையில் உட்கார்ந்து விம்மினாள். அவன் தன் இறுகிய கால்சட்டையுடன் முழங்காலிட்டு உட்கார்ந்து விட்டான்.

"கஜல்—ஒரு உண்மையைச் சொல். கனீஜ் உன்னுடைய தவறின் பலனா?"

"ஷாஹீன் அண்ணா..." அவள் ஷாஹீனின் கையைப் பிடித்து அழுதுவிட்டாள். பிறகு கிராந்தியின் முழு வரலாற்றையும் அவனுக்குச் சொல்லிவிட்டாள்.

மறுநாள் காலைச் சிற்றுண்டி சாப்பிட அவர்கள் உட்கார்ந்தபோது யாரோ ஓர் உறையை உள்ளே வீசினார்கள். ரஷீத் பயந்துவிட்டான். 'வங்காளி பாபு' எனப்படும் ஒரு புதிய கொள்ளையர் கூட்டம் நகரில் வந்திருந்தது. அவர்கள் முதலில் ஒரு கடிதம் அனுப்புவார்கள். அதில், ஒரு குறிப்பிட்ட தொகையை குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட நேரத்தில் வைத்துவிட வேண்டும்; இல்லாவிட்டால் உயிருக்கு உத்திரவாதம் இல்லை என்று எச்சரிக்கை விடுப்பார்கள். அவ்வாறு செய்யத் தவறினால் உண்மையில் கொலையும் செய்துவிடுவார்கள்.

அதனால் சாப்பிடுவதை விட்டுவிட்டு எல்லோரும் எழுந்து விட்டார்கள். உறையைத் திறக்காதீர்கள். உள்ளே வெடிகுண்டு இருக்கலாம் என்று ரஜியா சொன்னாள். ஆனால் கிராந்தி ஓடி வந்தாள். உறையை எடுத்து அதை முத்தமிட்டாள். பிறகு அதைக் கஜலிடம் நீட்டினாள். "இந்தா!"

தன்னுடைய பழைய காதலர்களில் யாராவது எழுதி இருக்கிறார்களா என்று கஜல் பயந்தாள். அதனால் அதைக் கிராந்தியிடமிருந்து வாங்கிக் கொண்டாள். ஆனால் ரஷீத் தாமே உறையைத் திறந்து எல்லோருக்கும் படித்துக் காட்டினான். அது சஞ்சீவாவின் கடிதமாகும். சாந்துக்கு எழுதப்பட்டிருந்தது.

சாந்த்!

இன்று ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு என்னுடைய இந்தக் கடிதத்தைப் பார்த்து அதன்மீது துப்பிவிடாதீர்கள். உங்கள் காதலுக்கு எதிராக என்னுடைய குறிக்கோள் எனக்கு அழைப்பு விடுத்தது. கஜலை முழுமையாக

என்னால் என்றுமே அடைய முடியாது என்று நான் நினைத்தேன்.

நீங்கள் என்னுடைய கரங்களில் விழுந்தபோதும், உங்களை என்னிடம் ஒப்படைத்த நேரங்களிலும், நான் உங்களைக் கவிதாலயத்தின் கவிதையாகக் கருதினேன். உங்களால் வாழ்வின் கடுமையான-கசப்பான உண்மை களைச் சகிக்க முடியாது என்றுதான் நான் நினைத்தேன். அதனால்தான் உங்களுக்குத் துரோகமிழைக்க வேண்டாம், உங்கள் நளினமான உடலைக் காலத்தின் கடுமைகளி லிருந்து காப்பாற்றும் நிலையை அடையும்வரை காத் திருப்பது என்றும் முடிவு செய்தேன். இந்தப் பாதையில் நான் பெரிய இடர்களைச் சந்தித்தேன். எல்லாத் திசை களிலும் துப்பாக்கிகள் இருந்தன. எல்லாத் திருப்பங் களிலும் ஆபத்துகளே எதிர்கொண்டழைத்தன; என்றாலும் இந்த இடர்களிலும் சிறிது நேரம் நாங்கள் குளிர்ச்சியான நிழலைத் தேடிக் கொண்டோம்.

கைசர் இதைப்போன்ற இருட்டான குகையில்தான் எனக்குக் கிடைத்தாள். அப்போது தூக்குமேடை எங்களுக் காகத் தயாராக இருந்தது. அப்போது நாங்கள் ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டோம். இதில் கைசரின் மறுப்புத்தான் மேலோங்கி இருந்தது. அவளுக்கு மகிழ்ச்சி தருவது என்பது பெரிய விஷயம். தன் வாழ்வைப் பற்றியே உறுதிமொழி கொடுக்க முடியாத ஒருவனிடம் தன்னை அவள் ஒப்படைத்துவிட்டாள். இதற்குள் கிராந்தி எங்கள் இடையில் வந்துவிட்டாள். அவள் எங்கள் உறுதிக்கு அறைகூவலாக அமைந்தாள்.

நீங்கள் நம்ப மாட்டீர்கள். எங்கள் இருவரைப் பற்றியும் நன்கு அறிந்த கைசர் கிராந்தியை உங்களிடம் ஒப்படைத்துவிட்டு வந்தாள். கிராந்தி பெரியவளாக வளரும்போது அவளுடைய தாய் தந்தையரைப் பற்றிச் சாந்த் மட்டுமே அவளிடம் சொல்ல முடியும் என்று அவள் நினைத்தாள்.

இன்று இதை விவரமாகச் சொல்லவே இந்தக் கடிதத்தை நான் எழுதுகிறேன். நேற்று சிகந்தராபாத் சிறையில் கைசருக்குத் தூக்கு கொடுக்கப்பட்டுவிட்டது. நானும் அதிகநாட்கள் வரை மறைந்திருக்கமுடியாது.

கிராந்தி பெரியவளாகும்போது அவளுக்குக் கவிதா லயத்தின் வரலாறைத் தவறாமல் சொல்லிவிடுங்கள். ஏனெனில் அதுவே கைசரின் வாழ்க்கைச் சரிதமாகும்.

ஹைதராபாத்தின் மாளிகைகளில் உயிர்வாழும் ஒவ்வொரு பணியாளரின் கதையுமாகும். நான் யார்? இதைக் கிராந்தியிடம் உங்களால் மட்டுமே சொல்ல முடியும். உங்களுடைய சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு—அவை என்னுடைய எண்ணங்களைப் போலவே அழகாக இருக்கும். என் முத்தங்கள். உங்கள் முட்டாள் கணவனுக்கு என் வணக்கம். சாந்த் தன்னிடமே இருக்கிறாள் என்ற தவறான அபிப்பிராயத்தில் இருப்பான் அவன்.

இறுதியில் நான் உங்களுடைய பேரழகுக்குச் சலாம் செலுத்த வேண்டும். அதுதானே முழு உலகத்தின் மீது அன்பு செலுத்தும் கலையை எனக்குச் சொல்லித் தந்தது.

உங்கள்

சஞ்சீவா

"ஓ! இது அந்தக் கேடுகெட்ட சிறுமியா... நஞ்சுப் பொட்டலம்.." நொண்டி அத்தை அவளை அடிப்பதற்கு ஓடினாள்.

"இவளை உடனடியாக இங்கிருந்து வெளியேற்றிவிட வேண்டும். இல்லாவிட்டால் பெரிய ஆபத்து வந்துவிடும்." ரஷீத் கலவரமடைந்துவிட்டான்.

"ஆனால் செத்துப்போன எலி அல்லவே, வெளியே குப்பையில் வீசி எறிவதற்கு!" ஷாஹீன் அமைதியாக முட்டையைச் சாப்பிட்டான்.

"வேறு என்னவாம்?" ரஜியா எரிச்சல் அடைந்தாள். "இது கொள்ளை நோயின் எலியாகும். அல்லாஹ்தான் காப்பாற்ற வேண்டும்."

ரஜியாவுக்கு சக்தி இருந்தால் இப்போதே இந்தக் கறுப்புப் பெண்ணை எடுத்து சாலையில் வீசி எறிந்திருப்பாள்.

"ஓர் அநாதைக் குழந்தை இங்கு வந்திருக்கிறது. இதை எடுத்துச் செல்லுங்கள் என்று நான் இப்போதே போலீசுக்குப் போன் செய்கிறேன்," ரஷீத் உணவை ஒதுக்கிவிட்டு எழுந்து நின்றான்.

ஷாஹீன் கஜலைப் பார்த்தான். கிராந்தியைப் பிடித்தவாறு அவள் நடுங்கினாள். கிராந்தியுடன் அவளையும் சாலையில் வீசி எறிந்துவிடுமாறு உத்தரவு அளிக்கப்பட்டிருப்பதுபோல்!

"ஆனால் கிராந்தி எங்கும் போகமாட்டாள். இங்கேயே இருப்பாள்," ஷாஹீன் அமைதியாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

"என்ன?" ரஷீத் கோபத்துடன் கேட்டான். "இந்த விஷயத்தில் உனக்கு என்ன அக்கறை?"

"இருக்கிறது," ஷாஹீன் அலட்சியமாகப் பதிலளித்தான்.

"நம் வீட்டில் ஒரு சிறுமி மறைக்கப்பட்டிருக்கிறாள் என்று தெரிந்தால் குடும்பத்தின் கௌரவம் பாழாகிவிடும். உன்னுடைய

தொழிலும் பாதிக்கப்பட்டுவிடும்."

"கவலை இல்லை. கூலி வேலை செய்யலாம்" ஷாஹீன் அலட்சியமாகத் தேநீர் கலந்தான். "ஆனால் கிராந்தி எங்கும் போக மாட்டாள். இவள் சாந்த் அக்காவின் நினைவுச்சின்னம் அல்லவா?"

"மாமா... ஹா... ஹா..." கிராந்தி தரையில் உட்கார்ந்து எறும்புகளை நசுக்கினாள்.

"இவள் சாந்தின் நினைவுப் பொருள் என்றால், அவளுடைய அப்பாவிடம், தன் மகளின் நினைவை எடுத்துச் செல்லுமாறு சொல்லியனுப்புங்கள்" ரஜியா இம்முறை சிறிது உரத்த குரலிலேயே பேசினாள். ஏனெனில் ஷாஹீனுடன் விவாதிப்பது சுலபமல்ல என்பது அவளுக்குத் தெரியும்.

"நாம் ஏன் அவருக்குக் கொடுக்க வேண்டும்? நாமே கிராந்தியை வளர்ப்போம்!"

ரஷீத் ரஜியாவையும் நொண்டி அத்தையையும் பார்த்தான். ஆறடி உயரமாக வளர்ந்துவிட்ட டாக்டர் மகன் எதிரில் இருக்கும் போது மனிதன் எப்படித் தன் சக்தியை இழந்து விடுகிறான். ரஷீத் அவனுடைய கல்விக்காக ஏராளமாகப் பணம் செலவழித்திருக் கிறான். ஆனால் அவன் எவ்வளவு தறுதலையாக இருக்கிறான்...!

அறிவும் சாமர்த்தியமும் அவனைத் தொட்டிருக்கவில்லை. அமெரிக்கா சென்று வந்த டாக்டர் கிராமங்களில் பணியாற்ற வேண்டும் என்று சொல்லுவானா? ஆனால் அவன் சொல்கிறான். இந்துக்களைக் கண்டு அவன் பயப்படவில்லை. இந்தியாவை விட்டு வெளியே செல்லவும் அவன் விரும்பவில்லை. அவன் அமெரிக்காவுக்கே திரும்பிச் செல்ல வேண்டும். அல்லது பாகிஸ் தானுக்குப் போய்விட வேண்டும் என்று ரஷீத் விரும்பினான். ஆனால் அவன் ஹைதராபாத்தைவிட்டு எங்கும் போக இசைய வில்லை. மேல்நாட்டிலிருந்து ஓர் ஆங்கிலேயப் பெண்ணை அவன் மணந்து வரவேண்டும் என்று ரஜியா விரும்பினாள். வெள்ளைப் பேரன் பேத்திகளின் பாட்டி என்ற பெயர் அவளுக்குக் கிடைக்குமே! ஆனால் நம் இந்தியர்களுக்கு ஐரோப்பியப் பெண்கள் சரிப்பட்டு வரமாட்டார்கள் என்று அவன் மறுப்புரை கூறுவான். பணம் சம்பாதிக்கும் பல வழிகளை ரஷீத் சொல்லும் போதெல்லாம் அவன் மறுத்துவிடுவான். ஹைதராபாத்தில் இதய நோய் மருத்துவத்தில் தனித்திறமை பெற்றவர்கள் ஓரிருவரே இருந்தனர். அதனால் ஷாஹீன் மருத்துவமனையிலிருந்து திரும்பி வந்த பிறகு கவிதாலயத்திற்கு வெளிப்புறத்தில் தன் மருந்தகத்தை அமைத்துச் சம்பாதிக்கலாம் என்று ரஷீத் நினைத்தான். ஆனால் ஒரே சமயத்தில் இத்தனை நோயாளிகளைப் பார்க்க முடியாது

என்று ஷாஹீன் சொல்லிவிட்டான்.

இன்று கிராந்தி இதே வீட்டில் இருப்பாள் என்று அவன் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டான். கஜலும் கிராந்தியை மிகவும் நேசித்தாள். ஒரு தாய் தன் மகளை நேசிப்பதுபோல்! இன்றும் அவசரமாகக் கூறினாள். "மாமி! கிராந்தியை நான் என் அறையில் மறைத்து வைக்கிறேன். நீங்கள் கவலைப்பட வேணடாம்!"

அவள் உண்மையாகவே கிராந்தியைத் தன் அறையில் மறைத்து வைத்தாள். ஆனால் கிராந்தி இப்போது நிறைய குறும்புகள் செய்யத் தொடங்கிவிட்டாள். ஷாஹீன் கொடுத்த டானிக்குகள் அவளுக்கு உடலுறுதி தந்தன. அவள் கதவைத் தட்டு வாள்: "கஜ்ஜு ஆன்ட்டி—எனக்குச் சிறுநீர் கழிக்க வேண்டும். எனக்குப் பசிக்கிறது. சீக்கிரம் கதவைத் திறங்கள்" என்று கத்துவாள்.

"அமைதியாக இரு, கேடுகெட்டவளே! இல்லையென்றால் உன் கழுத்தைத் திருகிவிடுவேன்" என்று நொண்டி அத்தை அதட்டினால், அவளும் பதிலளிப்பாள். "போதும் நிறுத்து.. கிழவியே, நான் இப்போதே வந்து உன்னை அடிக்கிறேன்..!"

# 26

ஒருநாள் ஃபவுசியா கவிதாயலத்திற்கு வந்தபோது அவளுடைய நாத்தனாரான ரீஹானாவும் வந்தாள். ரீஹானா கணவனுடன் பாகிஸ்தானில் இருந்தாள். கணவர் உஜாலா பேகத்தின் குடும்பத் தைச் சார்ந்தவர். ரஜியா, நொண்டி அத்தை, கஜல் ஆகியோருக்குப் பாகிஸ்தானின் செய்திகளை விவரமாகக் கூறினாள். உஜாலா பேகம் இங்குவிட்டுச் சென்ற சொத்துகளுக்குப் பதிலாக அதே அளவு சொத்துகளை அவள் பாகிஸ்தான் அரசிடமிருந்து பெற்று விட்டாள்.. முன்பு இருந்ததைவிட அதிகமான ஆடம்பரத் துடன் வாழுகிறார்.. பீஜானி முன்பே சயரோகத்திற்கு இரையாகி விட்டாள்... நசீர் பாகிஸ்தானின் முதல் வரிசைக் கவிஞனாகி விட்டான். அவனும் சிறப்புடன் வாழுகிறான்.. அவனுக்கு இரண்டு குழந்தைகள் இருக்கின்றன.. அஹ்மத் ஹுசேன் பாகிஸ்தானுக்குச் சென்ற பிறகு உலக இன்பங்களை வெறுத்து, தாடி வளர்த்துக் கொண்டு 'ஜமா அத்தே இஸ்லாமி'யின் அங்கத்தினராகிவிட்டார். ஆனால் அத்துடன் 'தப்லீக் ஜமாஅத்' பணிகளையும் கவனித்தார்.

"கஜலின் திருமணம் என்றுமே நடக்காது என்று ஒருமுறை நசீர் பந்தயம் கட்டினார்" என்று ரீஹானா சொன்னாள்.

“ஏன்?” கஜல் திகைத்தவாறு கேட்டாள்.

“எனக்கு என்ன தெரியும்..?” ரீஹானா அலட்சியமாகவே பதில் சொன்னாள்.

“இந்தக் கவிஞர்களே இப்படித்தான். ஏதாவது ஒன்றை மனத்தில் நினைத்துக் கொண்டால் அதையே பின்தொடர்ந்து செல்வார்கள்.”

‘ஆமாம்; இந்தக் கவிஞர்கள் தறுதலைகள்தான். அவனும் இப்படித்தான் இருந்தான். வலுக்கட்டாயமாகத்தான் திருமணம் செய்துகொண்டிருப்பான்... உஜாலா பேகம் கொடுமைக்காரர், இரக்கமற்றவர் என்று எல்லாரும் சொல்கிறார்கள். அவன் மணிக் கணக்கில் அழுவான்... இரவில் கனவுகளில் என்னைத் தேடுவான். என்னுடைய தேடுதல் அவனைப் பெரிய கவிஞனாக்கிவிட்டது. நான் அவனை எதிர்நோக்குவேன்... எதிர்நோக்கிக் கொண்டே இருப்பேன் என்று அவன் எண்ணமிடுவான்... ஏனெனில் அந்த மோதிரம் என் கையில் இருக்கிறது. உஜாலா பேகத்தின் மருமகளுக் குரிய மோதிரம் அல்லவா அது. அவன் பத்துக் குழந்தைகளுக்குத் தகப்பனாகிவிட்டாலும், என்னுடையவன்தான் என்ற உறுதி இருக் கிறது... நான் அவனுக்காகவே வனவாசம் செய்துகொண்டிருக் கிறேன். வாழ்வின் நஞ்சைச் சிறிது சிறிதாகக் குடிக்கிறேன்...’ இரவு முழுவதும் நசீரின் கனவுகளை கஜல் கண்டாள்.

காலையில் அவளைப் பார்த்ததும் ஷேகு மியான் ஆபாச மான ஈரடி ஒன்றைக் கூறினார். இப்போதே தன்னுடைய ‘நிக்காஹ்’ ஷேகு மியானுடன் நடந்திட வேண்டும் என்று எண்ணினாள். நசீர் வந்தால் அவனும் இந்த நஞ்சின் சுவையை அறிய முடியும்.

மறுநாள் ஷாஹீன் கிராந்தியுடன் பந்து விளையாடிக் கொண்டிருந்தபோது வாயிலில் ஆரவாரம் கேட்டது. நாற்பது ஐம்பது பேர் கோஷங்களை எழுப்பிக் கொண்டிருந்தார்கள். எல்லாரும் கலவரமடைந்து வெளியே ஓடினார்கள். அந்தப் பகுதியின் சில இந்துக்கள் போலீசை அழைத்துக்கொண்டு வந்திருந் தார்கள். இந்த வீட்டில் ஒர் இந்துப்பெண் மறைத்து வைக்கப்பட் டிருப்பதாகக் குற்றம் சுமத்தினார்கள். மலீஷம் அவர்களுக்குத் தலைமை தாங்கி அழைத்து வந்திருந்தான்.

“அல்லாஹ் நல்லது செய்யட்டும். இனி என்ன நடக்கும்?” ரஜியா நடுங்கினாள்.

ரஷீதும் ஷாஹீனும் அவர்களைச் சமாதானப்படுத்த முயன்றார்கள். சாந்த் சஞ்சீவாவைத் திருமணம் செய்து கொண்டாள். கிராந்தி சாந்தின் மகள்தான் என்று எடுத்துச் சொன்னார்கள். ஆனால் காவல்துறையினர் சிறிதும் கேட்க வில்லை. வழக்கு முடியும்வரை கிராந்தியைத் தங்களிடமே

வைத்திருப்போம் என்று சொல்லிவிட்டார்கள்.

'குப்பை குறைந்தால் உலகம் சுத்தமாகிவிடும்'—ரஜியா நிம்மதியாக மூச்சு விட்டாள்.

ஆறு வயது நிரம்பிய கிராந்தி கூச்சலிட்டாள். காவல் துறையினரைக் கண்டால் அவளுக்குப் பயம். அவள் அழுவதைக் கண்டு கஜலும் அழுதாள்.

"சிறிது நேரத்தில் அவள் சரியாகி விடுவாள். இது தொடர்பாக நாம் எதுவும் செய்ய வேண்டியதில்லை" என்று நொண்டி அத்தை எல்லாரிடமும் சொல்லிவிட்டாள்.

"அப்படியானால் கிராந்தியைப் போலீசிடம் ஒப்படைத்து விட வேண்டுமா?" ஷாஹீனுக்குக் கோபம் வந்துவிட்டது.

இரவு முழுவதும் கஜல் அழுதாள். எதுவும் சாப்பிடவில்லை.

காலையில் ஷாஹீன் மருத்துவமனைக்குச் செல்வதற்கு முன்னால் காரில் காவல் நிலையத்திற்கும் சென்றான். கிராந்தி இந்து தர்ம சத்திரம் ஒன்றில் வைக்கப்பட்டிருப்பதாகத் தெரிந்தது.

இதைக் கேட்டதும் நொண்டி அத்தைக்கு ஆறுதலாக இருந்தது.

"இந்து தகப்பனின் மகள் இந்து சத்திரத்தில் இருக்கட்டும். ஆனால் நீ அழக்கூடாது. கிராந்தியைக் கஜல்தான் பெற்றெடுத்தாள் என்று மக்கள் நினைத்துவிடப் போகிறார்கள்" அவள் கஜலைக் கடிந்துகொண்டாள்.

ஒரு மாதம் கடந்துவிட்டது. இந்த நிகழ்ச்சியை ஷாஹீனும் மறந்துவிட்டான். ஒருநாள் எல்லாரும் தூங்கிவிட்ட பிறகு கஜல் அவனுடைய அறையின் சன்னலில் வந்துநின்றாள்.

"ஷாஹீன் அண்ணா, எனக்கு ஓர் உதவி செய்வீர்களா?"

"என்னவாம்?" ஷாஹீன் அவளைக் கூர்ந்து நோக்கினான். கஜல் பல நாட்களாக அழுது கொண்டிருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொண்டான்.

"ஒரு முறை என்னை கிராந்தியிடம் அழைத்துச் செல்லுங்கள்."

மறுநாள் கஜலைக் காரில் உட்காரவைத்துப் பல இடங்களில் அலைந்தான். நான்கைந்து காவல் நிலையங்களுக்கும் சென்றான். ஓர் அமைச்சரிடம் பேசினான். இறுதியில் அந்த அனாதை ஆசிரமத்தின் முகவரி கிடைத்தது.

கிராந்தி வரிசையில் நின்றிருந்தாள். கையில் தட்டு இருந்தது. "சீக்கிரமாக உணவு கொடுங்கள்—இல்லாவிட்டால் இதே தட்டால் உங்கள் தலையை உடைத்துவிடுவேன்" என்று கூச்சலிட்டாள்.

ஷாஹீன் ஆசிரமத்தின் பொறுப்பாளரைத் தனியாக அழைத்துச் சென்று பேசினான். ஆயிரம் ரூபாயை அவர் கையில் அழுத்தினான். கிராந்தியைக் காரில் ஏற்றிக் கொண்டான்.

இவனை வீட்டுக்கு அழைத்துச் செல்வது சரியல்ல. எனவே மருத்துவமனைக்கே அழைத்துச் சென்று, இரவில் பணியாற்றும் செவிலியை அழைத்தான்.

"இது ஓர் அனாதைக் குழந்தை, சிஸ்டர்- இவள் இங்கேயே இருப்பாள். நீங்கள் இவளைப் பார்த்துக் கொள்ளவேண்டும்."

சிஸ்டருக்குப் புரிந்துவிட்டது. 'இந்த வாலிபமான டாக்டரின் தவறுதான் இது-'

"நான் என்ன பாதுகாப்பது டாக்டர், இயேசு கவனிப்பார்-"

"இல்லை ஷாஹீன் மாமா—பகவான் என்னைப் பாது காப்பார். ஹரி ஓம், ஹரி ஓம்- தத் சத்-" சிறுமியான கிராந்தி பதில் சொன்னாள்.

ஷாஹீனுக்கு வியப்பாக இருந்தது. ஆசிரமக்காரர்கள் ஒரே மாதத்தில் கிராந்தியை முழு இந்துவாக மாற்றிவிட்டார்கள். வழிநெடுகிலும் அவள் ஷாஹீனுக்கும் கஜலுக்கும் பாவம் புண்ணியம் ஆகியவற்றின் மெய் விளக்கத்தைக் கொடுத்தாள். பஜனைகள் பாடினாள். உலகத்தைப் பகவானே சிருஷ்டித்தார் என்று சொன்னாள்.

"போதும் சும்மா இரு-" கஜல் கோபமாகக் கூறினாள்.

"ஆசிரமத்துக்காரர்கள் இவளை இந்துவாக்கிவிட்டார்கள், மேரி! நீங்கள் சிறிது கவனித்துக் கொள்ளுங்கள்' என்று கஜல் தாதியிடம் கூறினாள்.

"கஜல் சின்னம்மா, எனக்கு கிருஷ்ண பகவானின் சிலை ஒன்று கொடுங்கள். நான் என் அறையில் வைப்பேன்."

கஜல் அவளுடைய பேச்சைக் கேட்கவில்லை. "நாளை யிலிருந்து நான் இங்கு வந்து உனக்குத் தொழுகையும், திருக்குர் ஆனும் சொல்லித் தருகிறேன்."

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அரபி மொழி அரிச் சுவடியுடன் அவள் மருத்துவமனைக்குச் சென்றபோது, மேரி கிராந்தியின் மார்பில் சிலுவை போட்டு பிரார்த்தனை செய்யும் விதத்தைச் சொல்லிக் கொடுப்பதைக் கண்டாள்.

கஜல் அவளுக்கு அரிச்சுவடியைச் சொல்லித்தர உட்கார்ந்த போது கிராந்தி அறை முழுவதிலும் கோபமாக ஓடி ஆர்ப்பாட்டம் செய்தாள்.

"நான் இனி படிக்க மாட்டேன். முதலில் பகவான் என்னை நாசம் செய்துவிடுவார். இப்போது இயேசு மன்னிக்க மாட்டார். சின்னம்மா, இந்த அல்லாஹ்வும், பகவானும், இயேசுவும் எல்லாரும் குழந்தைகளையே ஏன் தொந்திரவு செய்கிறார்கள்-"

"சும்மா இரு, இப்படிச் சொல்லக்கூடாது. இல்லாவிட்டால் அல்லாஹ் உன்னை நரகத்தில் போட்டுவிடுவார்"—தானும்

குழந்தையாக இருக்கும்போது அம்மா நரகத்தின் பயத்தை ஊட்டுவார் என்பது கஜலுடைய நினைவுக்கு வந்தது.

"அப்படியானால் நான் அல்லாஹ்வின் புகழை எதற்காகப் பாடவேண்டும்?"

'நாத்திகர்களுக்குப் பிறந்தவள்' கஜல் மனதுக்குள் எண்ணமிட்டாள்.

இந்தப் பெண்ணும் எத்தனை பிடிவாதக்காரியாக, மீறி எழுபவளாக இருக்கிறாள். தன் தாயைப் போன்ற குணம்தான். ஆனால் முகத்தைப் பார்க்கும்போது சஞ்சீவாவின் நினைவு வந்தது. அதே மாநிறம். வெண்மையான பற்கள். பெரிய பெரிய கண்கள்—தலைமீது சுருட்டை முடி—சாந்தைப் போன்ற அழகியை மயக்கும் அளவுக்கு அந்த மனிதனிடம் என்ன மாயச் சக்தி இருந்தோ! சஞ்சீவா வீசியெறிந்த சிகரெட் துண்டை எடுத்துத் தன் கன்னங்களில் வைப்பாள். நாள் முழுவதும் சாலையையே பார்த்துக் கொண்டிருப்பாள். மாலையில் அவன் அவ்வழியே வருவான் என்று எதிர் நோக்குவது போல்!

இத்தனை எதிர்பார்ப்புகளுக்குப் பிறகு சஞ்சீவா வந்தாலும், சாந்தின் மயக்கமடைந்த உடலையும், அவளுடைய ஒப்பனை யையும் ஒருமுறை பார்த்துக்கொள்ளும் அவகாசமும் அவனுக்கு இருக்காது. அவன் சாந்தையும் தன் கைக்கடிகாரத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொள்வான். ஏதேனுமொரு முக்கியமான வேலை அவனுக்கு இருக்கும். தன் கடமையை நிறைவேற்றுவதுபோல் சிரித்துச் சிரித்து அவசர அவசரமாகச் சாந்துடன் பேசுவான். பிறகு சாந்தை அவள் காதலர்கள் கூட்டத்தில் விட்டுவிட்டுச் சென்றுவிடுவான். சாந்தும் உலகைவிட்டுத் தனியாகத் தன் கரங்களில் முகத்தைப் புதைத்துக் கொள்வாள்.

அதே வேகம்—அதே துடிப்பு—வெளிப்படையாகப் பேசும் அதே குணம் கிராந்தியிடமும் இருந்தன. அவள் எந்தப் பொருளின், எந்தப் பேச்சின் மேலழகையும் பார்ப்பதில்லை. அதன் உட் பொருளை அறியவே விரும்பினாள். ஷாஹீனிடமும் கஜலிடமும் பல கேள்விகளைக் கேட்டுப் பல உண்மைகளை அவள் தெரிந்துகொள்வாள். கவிதாலயத்தில் அவள் இருக்க முடியாது. அவளுக்கென்று ஒரு வீடும் இல்லை. தாய் தந்தையர் இலர்; சிஸ்டர் மேரியின் பேச்சை அவள் கேட்டுக்கொள்ள வேண்டும் என்று அவளுக்குத் தெரிந்திருந்தது. இருப்பினும் அவள் சிஸ்டரின் எந்தப் பேச்சையும் கேட்பதில்லை. காலையில் ஷாஹீன் மருத்துவ மனைக்கு வரும்போது மேரி, கிராந்தியுடைய குற்றப் பட்டியலுடன் நின்றிருப்பாள்.

"அவள் என்னைத் திட்டினாள்... என் பீர்புட்டியை உடைத்து

விட்டாள்... இரவில் சாப்பிடவில்லை... மருந்தை வீசி எறிந்து விட்டாள்... இருளில் தனியாகச் சாலையில் சென்றுவிட்டாள்..."

"நல்லது. நான் அவளைக் கண்டிக்கிறேன்."

ஆனால் கிராந்தியில் உடலில் ஓடும் இரத்தம் இந்த கண்டனங்களைக் கேட்பதில்லை என்பது ஷாஹீனுக்கு நன்றாகத் தெரியும்.

# 27

மழை ஆரம்பமாகிவிட்டது.

ஹைதராபாத்தில் இன்று மழை பெய்தால் நாளைக்கும் அதே நேரத்தில் பெய்யும். நாளை மறுநாளும் அது நேரம் தவறாது.

ஷாஹீன் வெளியே போக விரும்பினான். ஆனால் ஒவ்வொரு முறையும் வானத்தைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து, கூடத்தில் இருந்த நாற்காலிகளில் ஒன்றின்மேல் உட்கார்ந்துவிட்டான். காலையில் வந்த நாளிதழ் ஒன்றை எடுத்துப் படிக்கலானான்.

"ஆதாப், டாக்டர் சாஹிப், எல்லாம் நலந்தானே?" ஷேகு மியான் மேலேறி வந்தார். ஜாகீர்தாரி நடையில் குனிந்து வணக்கம் செலுத்தினார்.

"ஓஹோ ஷேகு அண்ணாவா... இந்த மழையில் இங்கே எப்படி வந்துவிட்டீர்கள்..?" ஷாஹீன் ஷேகு மியானை மறக்கவில்லை; வீட்டின் ஒவ்வொரு குழந்தைக்கும் அவரைப் பற்றி நன்றாகத் தெரியுமே.

அவர் மது மயக்கத்தில் இரவு நேரத்தில் வருவார். பணியாட்கள் அறையில் படுத்துக் கிடப்பார். வீட்டிலிருந்து ஏதேனுமொரு பொருளை எடுத்துக்கொண்டு ஓடி விடுவார் என்ற பயம் இருந்தது. எனவே சொல்லப்படாத ஓர் ஆணைப்படி முற்றத் திற்கு வரும் கதவு வரைதான் அவருடைய எல்லை இருந்தது. ஷேகு மியாவுக்கும் தன் எல்லைகள் பற்றி நன்கு தெரியும். ஆனால் பசி, தாகம் போன்ற தேவைகளின்போது அவர் நொண்டி அத்தையைக் கூப்பிடவேண்டும். கதவருகில் நின்றே அவர் குரல் கொடுப்பார்.

ஆனால் இன்று தாழ்வாரம் வரை வருவதற்கான அனுமதி எப்படிக் கிடைத்துவிட்டது? ஷாஹீனுக்கு வியப்பாக இருந்தது.

"சொல்லுங்கள் ஷேகு அண்ணா, உங்களுடைய அரசியல் வேலைகள் எப்படி இருக்கின்றன?"

"என்ன சொல்வேன் டாக்டர் சாஹிப்! நமது சமூகத்திற்காக எத்தனை சிரமங்களைச் சகிக்கிறேன். பாவம் நமது முஸ்லிம்கள் நாசமாகி விட்டார்கள்... அவர்களைக் காப்பாற்றுவது என் கடமையல்லவா?"

ஷேகு மியானின் குட்டிப் பிரசங்கம் தொடங்கிவிட்டது.

"பாருங்கள். இதுவரை பத்துக் குடும்பங்களை அவர்களுடைய செல்வங்களுடன் பாகிஸ்தானுக்கு அனுப்பிவிட்டேன். நவாப் அஜுமுத்தீன் கான் மட்டும் பத்து லட்சம் ரூபாயைத் தன்னுடன் கொண்டு சென்றிருக்கிறார். ஏழை முஸ்லிம்களின் பாதுகாப்பிற்காக நாங்கள் கூடாரங்களை அமைத்திருக்கிறோம். இந்திய அரசு இந்தக் குத்தகையை எங்களுக்குக் கொடுத்திருக்கிறது. அதனால் நான் நன்றாக இருக்கிறேன்!"

"இந்தப் பேச்சுகளை விட்டுத் தள்ளுங்கள், ஷேகு அண்ணா, நாட்டுச் சாராயத்தின் விலை என்ன இப்போது?"

"ஹா.. ஹா.. ஹா.." ஷேகு மியான் சிரித்துவிட்டார்.

"டாக்டர் பாஷா 'வாய்ச்சுவையை மாற்றிக்கொள்ளும்' என்று சொல்லி இதுவரை எனக்கு ஒரு ரூபாய்கூடக் கொடுக்கவில்லை."

"ஆனால் நீங்கள் தற்கொலை செய்துகொள்வதை நான் விரும்பவில்லை. நாட்டுச் சாராயம் உங்களுக்கு நஞ்சு போன்றது.." ஷாஹீன் தானொரு டாக்டர் என்பதை வெளிப்படுத்தினான்.

"விடுங்கள் தம்பி. நஞ்சு எங்குதான் இல்லை. நஞ்சு பரவுவதை நீங்கள் எப்படித் தடுக்க முடியும்?" ஷேகு மியான் கஜலைப் பற்றிக் குறிப்பிட்டார். "தம்பி! உங்கள் மாளிகையில் இருக்கும் நஞ்சுக்காக நீங்கள் என்ன மருத்துவம் செய்யப் போகிறீர்கள்?"

ஷாஹீன் கண்களை உயர்த்திப் பார்த்தான். கஜல் உள் அறையின் கதவைப் பிடித்தவாறு ஏதோ யோசனையில் மூழ்கி இருந்தாள். 'இந்த நஞ்சின் பயம் ஷேகு மியாவுக்கும் இருக்கிறதா? இந்த நஞ்சு ஷேகு மியாவின் வாழ்க்கையைப் பாதித்துவிட்டது; நொண்டி அத்தையின் இளமையை எரித்துச் சாம்பலாக்கிவிட்டது; பீபிக்கு ஆயுள் சிறைத் தண்டனையை அளித்தது. சாந்தைப் புதை குழியில் தள்ளிவிட்டது. இன்று கஜலின் உருவில் கவிதாலயத்தில் பரவி இருக்கிறது. இந்த நஞ்சு எங்கிருந்து வந்தது?' ஷாஹீனின் மருத்துவ மூளை கவிதாலயத்தை ஆட்டிப் படைக்கும் இதன் காரணத்தைக் கண்டுபிடிக்க விரும்பியது. 'இந்த மாளிகையின் பெண்கள் வாழ்க்கையை வெறுப்பதற்கான மெய்க்காரணம் என்ன? செல்வம்..' ஷாஹீன் பூமியின் ஆழத்தில் ஏதோ தேடினான். 'செல்வம்... தக்காணப் பண்ணையார்களுக்கு அமுதமாகவும் இருந்தது. நஞ்சாகவும் இருந்தது. வாழ்நாள் முழுவதும் அவர்கள் இந்த அமுதத்தையே பருகினார்கள். இதன் ஒரு துளியே அவர்

களுடைய வாழ்வினையும் முடித்துவிட்டது. கவிதாலயத்தில் வாழ்பவர்கள் செல்வத்தின் செடிகளை வளர்த்தார்கள். செல்வத்தின் மாளிகைகளை நிர்மாணித்தார்கள். இறுதியில் தனது கல்லறைகளின் மேல் செல்வத்தின் பந்தலையும் அமைத்துக் கொண்டார்கள்... ஆனால் கவிதாலயத்தின் பெரிய கூடத்தில் படங்களாகக் காட்சி தருபவர்கள் செல்வந்தர்கள் அல்லர். அவர்கள் கவிஞர்கள் மட்டுமே. கவிதை அவர்களுடைய வாழ்வின் அமைதியைப் பறித்துக் கொண்டது. காதலியின் நடைக்காகத் தங்கள் வாழ்வையும் பணயமாக வைத்தார்கள். தங்கள் இதயத்துடன் தங்கள் உயிரையும் தருவதாக அவர்கள் காதலிகளுக்கு உறுதி அளித்தார்கள்... செய்நன்றி, நம்பிக்கை, தோழமை எனும் பரிசுகளை வழங்கினார்கள்... அவள் எதிர்நோக்கும் கண்களில் வியப்புக் கொண்டு நின்றிருக்கிறாள்..!'

'இன்று கஜலின் முகமும் எவ்வளவு கவர்ச்சியாக இருக்கிறது. இதயத்தில் ஈட்டியின் முனை குத்துவது போன்ற கவர்ச்சி... இப்போது கஜல் சாந்த் அக்காவாகவும் காட்சி தந்தாள்; பீபி போலவும் தெரிந்தாள். அங்கு பார்க்கும்போது உலகம் இருட்டாகவே தெரிந்தது...' இன்று ஷாஹீனின் கண்களுக்கு என்ன ஆகிவிட்டது. அவனுடைய உடலில் ஓடும் இரத்தத்தின் பாதிப்பா இது? மேனாடுகளில் ஐந்து ஆண்டுகள் வாழ்ந்த பிறகு அவன் பெண்களுடைய எல்லாச் சுவைகளையும் கண்டுவிட்டான். தன் பாட்டனாரைப்போல் அழகின் ஒரு சிறு காட்சியைக் கண்டு கவிதைத்தொகுதி எழுத உட்கார்ந்துவிடவில்லை. ஒவ்வொரு ஆடவனின் உடலிலும் நஞ்சாகப் பாய்ந்தோடுவதற்குக் கஜலிடம் ஏதோ விசேஷமான சக்தி இருக்கிறது என்பதை இன்று உணர்ந்தான்.

நசீர் அவளுக்குத் துரோகம் இழைத்துவிட்டான். அவள் பின்தொடர்ந்து சென்ற ஆடவர்கள் அனைவருமே அவளைத் தோல்வி காணச் செய்தனர்.

குழந்தைப் பருவத்தில் அவள் திறமைசாலியாக இருந்தாள். உலகத்தையே ஆட்டுவித்த ஷாஹீனும் அவளிடத்தில் தோற்று விடுவான். வண்ணப் படங்களை மென்று விழுங்கும் கலையை அவள்தான் சொல்லிக் கொடுத்தாள். உணவுப் பொருட்களைத் திருடுவது, அப்பாவுக்கு எதிரில் பொய் சொல்வது என்பது எல்லாமே அவளிடம் கற்ற விஷயங்களே! ஷாஹீனுக்கு அந்தப் பழைய நாட்களின் நினைவுகள் வந்தன. கஜல் வயிறாரச் சாப்பிட்ட பிறகும் மேசையில் விழுந்த பருக்கைகளை எடுத்துச் சாப்பிடுவாள். பல் துலக்காமலேயே சிற்றுண்டி சாப்பிட வந்து உட்காருவாள். உள்ளாடை அணியாமலேயே விளையாடுவாள்.

ஒவ்வொரு பேச்சுக்கும் சிரித்துவிடுவாள். ஆனால் இப்போது அழுதுகொண்டே இருக்கிறாள். கஜலைச் சீண்டுவதும், தொல்லை தருவதும் ஷாஹீனுக்குப் பழக்கம். ஆனால் இப்போது எதிர்த் தாக்குதல் நடத்தாமல் பெருமூச்சு விட்டவாறு முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்.

"நீங்கள் கவலைப்பட வேண்டாம் டாக்டர் சாஹிப்! இந்த நஞ்சை நான் கடிக்கத் தயாராக இருக்கிறேன்..." ஷாஹீன் சிந்தனையில் ஆழ்ந்திருப்பதைக் கண்ட ஷேகுமியான் பேசினார். "நான்கு உதைகள் கிடைத்தால் ஒரே நாளில் சரியாகிவிடுவாள்."

"யார்..?" ஷாஹீன் திடுக்கிட்டவாறு கேட்டான்.

"இந்தக் கஜாலா பேகம்தான். நானும் போகட்டும் என்று விட்டிருந்தேன். என்ன செய்வது? ரஷீத் நவாபின் தலைச்சுமையை இறக்கிவிட வேண்டுமே?"

"என்ன நீங்கள் கஜலைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறீரா?" ஷாஹீன் திகைத்துவிட்டான்.

"உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் எனக்குச் சிறிதும் விருப்பம் இல்லை. ஆனால் ரஜியா மருமகள் சொல்லும்போது நான் எப்படி மறுக்க முடியும்? நீங்களே சொல்லுங்கள்..."

ஷேகு மியான் சென்றுவிட்டதும் அவன் நேராக அம்மாவிடம் வந்தான்.

"அம்மா! சில நாள்கள் ஃபவுசியாவை இங்கே அழைத்துக் கொள்ளுங்கள். கஜலின் மௌனத்தைக் கண்டு வீட்டில் இருக்கவே என் மனம் விரும்பவில்லை."

"இனி உங்கள் மணமகளுடன் மனதைத் தேற்றிக் கொள்ளுங்கள் தம்பி," நொண்டி அத்தை கண்களைச் சிமிட்டிக் கேலி செய்தாள். அத்தை இப்படிப் புன்முறுவல் செய்யும் நேரங்கள் வாழ்வில் குறைவாகவே வருகின்றன. "மதிமுகம் கொண்டவளைத் தேடிக்கொண்டு வருவேன். அவளுடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருப்பீர்கள்."

"தவ்பா! போதும். பார்ப்பதற்காகவே மணமகளாக இருப்பாளா அவள்? அம்மா! என் துணைவியைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை நொண்டி அத்தையிடம் கொடுத்துவிடாதீர்கள். முகம் மட்டுமே பார்க்க வேண்டுமென்றால் கஜலின் சிலை ஒன்றை நான் செய்து கொள்கிறேன்." இதைக்கேட்டு எல்லாரும் சிரித்துவிட்டார்கள். கஜல் மட்டும் தலைகுனிந்தவாறு, தையல் இயந்திரத்தில் துணிகளைத் தைத்துக் கொண்டிருந்தாள்.

"வேறு என்னவாம். கஜலின் பேசும் சக்தி பழுதாகிவிட்டது! அவள் தம்மைத்தாமே கற்சிலையாக்கிக் கொண்டுவிட்டாள்..."

ஓர் அழகான மங்கையைப் பார்க்கும்போது முட்டாளாகி

விடுவதுபோல் ஆண்கள் எப்போதும் மதியீனர்களாக இருப்ப தில்லை. இப்போது பாருங்களேன். இத்தகைய மழையின் புயல் வீசும் பகலில் ஷாஹீனைப்போன்ற திறமை வாய்ந்த டாக்டர்—பெண்களை ஆயிரம் முறை ஆய்வு செய்துவிட்ட மருத்துவன்—இன்று இரண்டுமணி நேரம்வரை தன் அன்னையிடம் கஜலைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறான். இன்று அவளிடம் எதைக் கண்டுவிட்டான் அவன்? அவனுடைய பார்வை கஜலின்மீது பதிந்திருந்தது. இயந்திரத்தை இயக்கும் அவளது கைகள்மீது—மூடியிருந்த உதடுகள் மீது—சோகமான கண்கள்மீது—எண்ணெய்ப் பசை இல்லாத முடிகளின்மீது—அந்தக் கலைந்த முடி அவளுடைய கவர்ச்சியை மேலும் அதிகரித்துவிட்டது.

அன்று, இதய நோயும், இரத்த அழுத்தமும் கொண்ட நோயாளிகள் மருத்துவமனையில் உட்கார்ந்து அவதிப்பட்டார்கள். காலைப் பத்திரிகை மேசைமேல் கிடந்தது. ரஷீத் பலமுறை வந்து அவனுக்கு நினைவுபடுத்திவிட்டான். மருத்துவமனைக்குச் செல்லும் நேரமாகிவிட்டது, நோயாளிகள் காத்திருப்பார்கள் என்று சொல்லிவிட்டான். மேனாடுகளில் பல ஆண்டுகள் கழித்த பிறகும் நேரத்தின் மதிப்பு அவனுக்குத் தெரியவில்லை. இத்தனை பெரிய டாக்டர் வீண் பேச்சுகளில் இரண்டு மணி நேரத்தைச் செலவழிக்க முடியுமா?

நோயாளிகளைப் பார்த்துவிட்டு இரவு பதினொரு மணிக்கு ஷாஹீன் வீட்டுக்குத் திரும்பிவந்தபோது கஜல், ஷேகு மியாவுக்காக மேசையின்மேல் உணவு வைத்தவாறு விழித்திருந்தாள். ஷேகு மியான் வந்து சாப்பிடும் வரையில் அவள் விழித்துக் கொண் டிருக்க வேண்டுமென்பது நொண்டி அத்தையின் ஆணை.

“இப்போது ஷேகு அண்ணாவுக்குப் பலத்த உபசாரம் நடக்கிறதே. சொர்க்கத்தில் பங்களாவை முன் கூட்டியே பதிவு செய்து கொள்ளும் எண்ணமா?”

இதைக் கேட்டதும் கஜல் மேசையின்மேல் குனிந்து அழுதாள். எல்லாரும் தூங்கிவிட்டார்கள். குளிர் காரணமாக நொண்டி அத்தையும் தன் அறையின் கதவைச் சாத்திக் கொண்டாள். வெளியே மழையின் பேரொலி கேட்டது. இப்போது ஷேகு மியான் மது மயக்கத்தில் ஏதேனுமொரு சாக்கடையில் விழுந்துகிடப்பார். ஆனால் யாருக்கும் எதுவும் தெரியவில்லை; இல்லாவிட்டால் கஜலின் அழுகையும் ஷாஹீன் அவளைத் தனது கரங்களில் அணைத்துத் தேற்றுவதும் பெரியதொரு விவாதத்திற்கு வழி வகுத்திருக்கும். கஜலைப்போன்ற ஊர் சுற்றிப் பெண்களின் பிரச்சினைகள் குறித்து அவன் யோசிக்க வேண்டியதில்லை என்று ரஜியா பகலிலேயே கண்டித்திருந்தாள்.

"ஷாஹீன் அண்ணா! எனக்கு விஷ ஊசியைப் போட்டு விடுங்கள். என் மீது உங்களுக்குச் சிறிதும் நல்லுணர்வு இருந்தால் எனக்கு நஞ்சு கொடுத்துவிடுங்கள்..."

"ஆனால் எதற்காக கஜ்ஜு..? நீ ஒரு குற்றமும் செய்ய வில்லையே. உன்னையும் சாந்த் அக்காவையும் வீட்டில் உள்ளவர் களே கொன்றுவிட்டார்கள் என்பது எனக்குத் தெரியும்..."

"இல்லை, எனக்கு யாரும் தீங்கு இழைக்கவில்லை..." அவள் ஷாஹீன் கைகளைத் தன தோளிலிருந்து விலக்கினாள் "நானே சாக விரும்புகிறேன்..."

"ஏன்? உலகைக் கண்டு பயப்படுகிறாயா?" ஷாஹீன் கண்ணீர் நிறைந்த அவளுடைய கன்னங்களைத் தொட்டான். அவளுடைய முகத்தைக் கையால் பிடித்து மேலே தூக்கினான்.

"உலகம் என்ன செய்துவிடும், அதைக் கண்டு நான் அச்சம் கொள்ள? நான் ஷேகு அண்ண்ாவிடம் மட்டும் பயப்படுகிறேன்..." என்றவாறு அவள் மயக்கமடைந்துவிட்டாள்.

அவளைத் தனது கைகளில் எடுத்துச் சென்று அவளுடைய படுக்கையில் படுக்க வைத்து ஓர் ஊசியும் போட்டான். பிறகு அறையின் கதவுகளை மூடிவிட்டுத் தனது அறைக்குள் சென்று விட்டான்.

மறுநாள் கவிதாலயத்தில் ஒரு பயங்கரமான புயல் எழுந்தது.

ஷாஹீன் தன் தனிமனிதப் பண்பின் எல்லா முக்கியத் துவத்தையும் ஒன்றுபடுத்தி, சாப்பாட்டு மேசையின்போது ஓர் அறிவிப்பை வெளியிட்டான்: "ஷேகு அண்ணாவுடன் கஜலின் திருமணம் நடக்க நான் விடமாட்டேன்."

"நீ இன்னும் சிறியவனாக இருக்கிறாய். உனக்கு வீட்டு விஷயங்கள் என்ன தெரியும். எங்களுக்குச் சரியெனத் தோன்று வதை நாம் செய்வோம்!" ரஜியாவும் ஷாஹீனுக்கு அன்னை யல்லவா? பெரிய தந்தையின் மகள்! கவிதாலயத்தின் அரசி!

"இல்லை; நீங்கள் அப்படிச் செய்ய முடியாது..."

ரஜியாவின் கையிலிருந்த உணவு நழுவி விழுந்தது. தன் வெள்ளையும் கருமையும் கலந்த முடியை சரிப்படுத்தியவாறு ரஷீத், ஷாஹீனை நோக்கினான். ரொட்டியை ஆயிரம் துண்டுகளாக்கி அவன் வீசி எறிந்துகொண்டிருந்தான். ஷாஹீனின் இந்த உருவத்தை ரஷீத் முதல் முறையாகப் பார்க்கிறான்.

"நீங்கள் ஷேகு அண்ணா திருமணத்தைக் கஜலுடன் நடத்தினால் நான் அவளுக்கு நஞ்சு கொடுத்துவிடுவேன்..."

"நீ இந்த விஷயத்தில் ஏதாவது சொன்னால் நான் விஷம் குடித்துவிடுவேன்..." ரஜியா கோபத்துடன் முழங்கினாள். பிறகு எல்லாரும் மௌனமாகி விட்டார்கள். பச்சை விறகுகளை

அடுப்பில் வைத்து ஊதிக்கொண்டு ரொட்டிகளைத் தயாரித்தவாறு கண்களிலிருந்து ஓடிய நீரைத் துடைத்து கொண்டிருந்தாள் கஜல். அவளுக்குச் சிற்றுண்டி மேசையில் எழுந்த இந்தப் புயலைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை.

பேச்சு இவ்வளவு கசப்பாகிவிடும் என்று ஷாஹீன் நினைக்க வில்லை. ஏனெனில் அவன் தன் பெற்றோர்களுடன் இவ்விதமாக என்றுமே பேசவில்லை. அம்மாவுக்கு முன்னால் வணக்கமாக நடந்து கொள்வதும், அவளுடைய பேச்சைக் கேட்டுத் தலையசைப் பதுமே குடும்ப வழக்கமாக இருந்தது. அப்படி இருந்தும்—ஆயிரம் முறை மனம் விரும்பியபோதும் அம்மாவிடம் மன்னிப்புக் கேட்க அவன் போகவில்லை.

ரஜியா தன் அறையினுள் படுத்தவாறு விம்மினாள். அம்மாவுக்கும் மகனுக்கும் இடையில் ரஷீத் ஒரு வார்த்தையும் பேசவில்லை. மகனின் கிளர்ச்சி அவனுக்கு வேதனை தந்தது என்றாலும் அவன் மனைவிக்காகப் பரிவு காட்டவில்லை. ஏனென்றால் மகன் அவனுடைய எதிர்காலம் அல்லவா? தொலைவில் நோக்குவது அவனுடைய இயல்பாயிற்றே...

அன்று மருத்துவமனைப் பணி முடிந்த பிறகு பகல் உணவுக்காக அவன் வீட்டுக்கு வரவில்லை. மாலையில் கிளப் புக்குச் சென்று விட்டான். இரவு பன்னிரெண்டு மணிக்கு வந்த போது, நொண்டி அத்தை எவ்வளவு சொல்லியும் அவன் உணவு உண்ணவில்லை.

மகனின் போக்கைக் கண்டு ரஜியா தானே சரணடைந்து விட்டாள்; அம்மாவை மீறிப் பேசிய விஷயத்தை ஷாஹீனும் மறந்துவிட்டான்.

“இன்று என்ன சாப்பிடுகிறாய்?” மருத்துவமனைக்குச் செல்லும்போது ரஜியா கேட்டாள்.

“இறால் குழம்பும், வறுத்த மீனும்...” ஷாஹீன் முன்பே யோசனை செய்து வைத்திருப்பதைப்போல் பதில் சொல்வான்.

வீட்டில் நிலவிய அமைதியைக் கண்டு கஜல் திகைப் படைந்தாள் என்றாலும் அவள் இத்தகைய விஷயங்களைச் சிந்தனை செய்யும் வழக்கத்தை விட்டுவிட்டாள். அதனால் நாள் முழுவதும் அடுப்பங்கரையில் இருப்பாள். அங்கு வேலை முடிந்து விட்டால் வீட்டைச் சுத்தம் செய்வதில் ஈடுபடுவாள். தரையைத் தண்ணீரால் துடைப்பாள். நொண்டி அத்தையின் தலையில் பேன் பார்ப்பாள். சர்வர் இந்த நிலையில் அவளைப் பார்த்துவிட்டால் நூற்றுக்கணக்கான இதயங்களில் வாழ்ந்த அதே நாடக நடிகையா இவள் என்று வியப்படைவான். இவளுடைய ஒரு பார்வை விழுந்ததும் அவனுடைய இதயம் நடுங்குமே. உலகத்தின் எல்லாத்

துக்கங்களிலிருந்தும் காப்பாற்றித் தன் சிந்தனையின் அரசியாக்கிக் கொண்ட கஜல் இவள்தானா?

வீட்டின் நிலைமையைப் பார்த்த ரஜியா, ஷாஹீனின் திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யத் துவங்கினாள். உயர்தரமான துணிகள் எடுத்து, கத்தரித்து, தையல்காரருக்குக் கொடுக்கப்பட்டன. அன்று முதல் ரஜியாவும் கஜலுடன் பாரா முகமாகவே நடந்துகொண்டாள். நான்கு முறை அவள் ஏதாவது சொன்னால் ஒருமுறை பதில் கொடுப்பாள்.

ஆனால் ஷாஹீன் கலகலப்பாகவே இருந்தான். மாலையில் மருத்துவமனையிலிருந்து திரும்பிவரும்போது அவன் பையில் சாக்லெட்டுகளோ, இலந்தைப் பழப் பொட்டலமோ ஏதாவது ஒன்று இருக்கும். யாரும் பார்க்காதவாறு அதை அவன் கஜலிடம் வீசி எறிவான். சில சமயங்களில் ஷாஹீன் தன் அறையில் இருக்கும்போது அவனுடன் வேறு யாரோ இருப்பதுபோல் ரஜியாவுக்குத் தெரியும். பிறகுதான் ஷாஹீன் வானொலிப் பெட்டியில் நாடகமொன்று கேட்டுக் கொண்டிருப்பது புரியும்.

பகலில் ஷாஹீன் உணவுக்காக வந்தபோது தாழ்வாரத்தில் பல வண்ணத் துணிகள் பரவி இருந்தன. அவற்றில் சரிகை நாடா வேலைப்பாடுகள் செய்வதில் ரஜியாவும் நொண்டி அத்தையும் மும்முரமாக ஈடுபட்டு இருந்தனர். கருநிற மென்பட்டுத் துணியில் கஜல் நட்சத்திரங்களை வைத்துத் தையல் வேலை செய்து கொண்டிருந்தாள்.

ஷாஹீன் நல்ல மனநிலையில் இருப்பதைக் கண்ட நொண்டி அத்தை அந்த வாய்ப்பைப் பயன்படுத்திப் பேசினாள். "என் அண்ணனுக்கு மறுப்புச் சொல்லிவிட்டாய். இப்போது ஷாஹீன் மியான் கற்புக்கரசியான தன் தங்கைக்காக எந்த டாக்டர், எந்த எஞ்சினியரைக் கொண்டுவரப்போகிறார் என்று நானும்தான் பார்க்கப் போகிறேன். அல்லாஹுக்காக, நல்ல காரியம் என்று நாங்கள் ஒப்புக் கொண்டோம். எச்சிலை சாப்பிடுவதற்கு ஷேகு மியான் மட்டும் எப்போது தயாராக இருந்தார்...?"

ஷாஹீன் மறுதிசையில் பார்த்தான். துணியில் மின்னும் நட்சத்திரங்களைக் கஜல் தைத்துக் கொண்டிருந்தாள். இப்போது கண்ணீர்த் துளிகளைத் தைத்தாள். ஷாஹீன் நொண்டி அத்தைக்குப் பதில் ஏதும் தரவில்லை. ஏனெனில் இதை அவர் தானாகச் சொல்லவில்லை. நொண்டி அத்தை மூலமாகத் தன் அன்னையாரே சொல்லி இருக்கிறார் என்பது அவனுக்குத் தெரியும்.

இரவில் அவன் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது வழக்கம் போல் எல்லாரும் தூங்கிவிட்டார்கள். கஜலின் அறையில் மட்டும்

விளக்கு எரிந்தது. ஷாஹீன் மெதுவாகக் கதவைத் திறந்து உள்ளே எட்டிப் பார்த்தான். கஜலின் கையில் ஏதோ பாதியாக தைக்கப் பட்ட துணி இருந்தது. ஆனால் கண்களில் கண்ணீருடன் அவள் விம்மினாள். ஷாஹீன் மெதுவாகக் கதவை மூடிவிட்டுக் கஜலுக்குப் பக்கத்தில் சென்று அமர்ந்தான்.

"நீங்கள் கண்ணீர்க் கருவூலத்தை எங்கே மறைத்து வைத்திருக் கிறீர்கள் கஜல்..? கடந்த பதினைந்து ஆண்டுகளாக நீங்கள் அழுது கொண்டிருப்பதையே நான் பார்க்கிறேன்..."

கஜல் எதுவும் பேசவில்லை. கையிலிருந்த ஊசியால் தனது விரலில் குத்தி இரத்தம் வெளிவரச் செய்தாள். ஷாஹீன் தனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் திடுக்கிட்டாள்.

"ஷாஹீன்! என்னை ஷேகு மியாவுடன் திருமணம் செய்து கொள்ள விடுங்கள். இல்லாவிட்டால் நாய்களின் எச்சிலை யார் சாப்பிடுவார்கள். நான் மாமியின் தலைமீது எதுவரை சுமையாக இருக்க முடியும்?" ஆனால் ஷாஹீன் எதுவும் கேட்கவில்லை. அவன் கஜலைப் பார்த்துக்கொண்டே இருந்தான். பெண்களுடைய அழகின் தீயில் உருகிய மெழுகாகிவிட்ட கவிதாலயத்தின் பெரியவர்கள் எல்லாருமே குற்றமற்றவர்கள். அவர்கள் காதலைத் தவிர வேறு எந்தப் பாவமும் செய்யவில்லை என்று அவன் நினைத்தான். என்றாலும் கவிதாலயத்தின் நூல் நிலையத்தில் வைக்கப்பட்டிருக்கும் எழுபத்தைந்து கவிதைத் தொகுதிகள் முழுமை பெறவில்லை. அவற்றில் இன்னும் சொல்ல வேண்டிய விஷயங்கள் நிறைய உள்ளன. இந்த மாநிற வண்ணத்தைப் பற்றி— வீங்கியிருக்கும் கண்களைப் பற்றி—சிறிய சிவந்த மூக்கு, பரவி இருக்கும்முடியைப் பற்றி நிறையச் சொல்ல வேண்டும். தன் பாட்டனாரைப்போலவே கவிதை புனைய வேண்டும் என்று ஷாஹீனின் மனமும் துடித்தது. கஜல் என்னும் கவிதையில் ஒரு மாயச்சக்தி இருப்பதை அவன் இன்று உணர்ந்தான். அதனால் அது கவிஞர்களுக்கு மிகவும் பிரியமான தொகுதியாகிவிட்டது. கவிஞர்கள் அதை மார்புடன் அணைத்துக் கொண்டார்கள். அதில் ஈரடிகளை இயற்றினார்கள். ஷாஹீனும் அந்தச் சில வினாடிகளில் கஜலுக்காக நேர்த்தியான சொற்றொடர்களைத் தேடினான். அழகான உவமைகளைச் சிந்தித்தான். உணர்ச்சிகளின் சாகரங் களில் நீச்சலடித்தான். வழியில் குறுக்கிட்ட மலைகளைக் கடந் தான். அப்போது அவன் மூச்சிறைக்க, மெதுவாகச் சொன்னான்.

"கஜல், நான் உன்னைத் திருமணம் செய்துகொள்ள விரும்பினால், நீ அதற்கு இசைவு தருவாயா?"

இம்முறை கஜலின் கை வேகமாக நடுங்கியது. ஊசி உள்ளங்கையில் ஆழமாக இறங்கிவிட்டது. அவள் துடித்தவாறு

ஷாஹீனை நோக்கினாள். தலை முதல் கால்வரை. அவன் சிறிதும் கருணையில்லாமல் அவளைக் காயப்படுத்திவிட்டதுபோல். திறந்த கத்தியால் அவள்மீது தாக்குதல் நடத்தியிருப்பதுபோல் அவள் துடித்தாள். பிறகு நடுங்கும் கைகளுடன் ஷாஹீனை விலக்கி விட்டாள்.

"இல்லை, இப்படிச் சொல்லாதீர்கள்..." அவள் தன் காதுகளை உள்ளங்கைகளால் மறைத்துக் கொண்டாள். அதிலிருந்து இரத்தச் சொட்டுகள் அவ்வுடைய கன்னங்களில் விழுந்தன.

"நான் இந்த நாடகத்தை விளையாடி அலுத்துவிட்டேன். இன்னும் என்னைத் துண்டு துண்டாக்கிவிடாதீர்கள். இங்கிருந்து போய்விடுங்கள் ஷாஹீன்."

ஷாஹீன் அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு கோபத்துடன் கூறினான்.

"போதும். அழகைக் கண்டு கர்வம் அடைய வேண்டாம். நான் பில்கிராமி அல்லவே. எனக்கு முன்னால் நாடகம் தேவை யில்லை" பிறகு அவன் அவளுடைய கன்னங்களில் இருந்த இரத்தத்தைத் துடைத்து விட்டான்.

அவள் பார்வையை உயர்த்தி ஷாஹீனைப் பார்த்தாள். பார்த்துக் கொண்டே இருந்தாள். அவனுடைய முகத்தில் எவ்விதப் பராட்டுதலும், எவ்வித வேண்டுகோளும், எவ்விதத் தேவையும் இருக்கவில்லை. அவன் செருக்குடையவனாகவும், துணிவு நிறைந் தவனாகவும் காணப்பட்டான். இப்போது கஜல் மறுப்புத் தெரிவித் தால் அவள் முதுகின் மீது இரண்டு உதைகள் கொடுப்பான்போல் தெரிந்தது.

"நான் நசீரைப்போல் காதல் நாடகம் ஆடவில்லை; நான் உன்னைக் காதலிக்கவில்லை. நாளை எப்படி இருக்கும் என்று சொல்ல முடியாது."

அவன் வெளியே சென்றுவிட்டான்.

இவன் ஷாஹீனாக்கும். இரத்தம் தோய்ந்த உள்ளங்கையை அழுத்தியவாறு கஜல் சிந்தனை செய்தாள். ஷாஹீனும் அவளொரு பெண் என்று நினைக்கிறான் என்ற கோணத்தில் அவள் கவனம் செலுத்தவில்லை. அவள் ஷாஹீனை முழுமையாக எப்போதும் உணரவில்லை. ஷாஹீனை குற்றமில்லாத முட்டாள் சிறுவனாகவே அவள் நினைத்தாள். ஒவ்வொரு குறும்பையும், ஒவ்வொரு கிளர்ச்சியையும் அவனுக்கு அவள் அல்லவா சொல்லிக் கொடுத்தாள். அவளைப் பொறுத்தவரை இன்னும் சிறுவனாகவும், முட்டாளாகவுமே இருந்தான். இத்தனை பெரிய டாக்டர் கொஞ்சமாவது சிந்தனை செய்திருக்க வேண்டாமா? கவிதா லயத்தின் வாரிசு, ரஷீத்தின் மகன். அறிவிலி! அதனால்தானே

இப்படி வெளிப்படையாகக் கூறுகிறான். இன்று எனக்குக் காதல் கீதல் ஒன்றுமில்லை. நாளையைப் பற்றி தெரியாதாம். நாளையைப் பற்றி நான் இப்போதே, இப்பொழுதே, இக்கணமே சொல்லி விடுகிறேன். அவள் ஷாஹீனின் அறையை நோக்கி ஓடினாள்.

பாவம், நொண்டி அத்தை தொழுகைப்பாயின் மேல் உட்கார்ந்து, மிக்க பயபக்தியுடன் தன் விதியின் ஞாயிறு உதயமாக வேண்டுமென்று பிரார்த்தனை செய்துகொண்டிருந்தாள். வாஹித் ஹுசேனின் பேரனும் ரஷீதின் மகனுமான ஷாஹீன் எச்சிலைச் சாப்பிடும் அளவுக்குத் துணிந்துவிடுவான் என்பது அவருக்குத் தெரியவில்லை.

காலை புலர்ந்ததும் கஜலின் சிரிப்பொலிகளைக் கேட்டு எல்லாரும் விழிப்படைந்தார்கள். அவள் முற்றத்தில், 'விழிப் படைவாய் அன்புக்குரியவனே, விழிப்படைவாய்' என்று முணு முணுத்தவாறு வேலைகளில் ஈடுபட்டிருந்தாள்.

"காலையில் வாதாம் பருப்புப் பாயசத்தைச் செய்து ரஷீதுக்குக் கொடுப்பதற்குப் பதிலாக தன் ஈரமான முடியைப் பரப்பியவாறு கண்ணாடிக்கு முன்னால் சென்று உட்கார்ந்தாள். சாந்த் அக்காவின் ஒப்பனைப் பெட்டியைத் திறந்து கொண்டாள். கிராந்தியின் இரகசியம் வெளிப்பட்டுவிட்டது. அதனால் ஷாஹீன் அவளை அடிக்கடி வீட்டுக்கு அழைத்து வந்துவிடுவான். இன்றும் கிராந்தி கஜலின் காலடியில் உட்கார்ந்து கேட்டாள்.

"ஆன்ட்டி, நீங்கள் உங்கள் முகத்தை ஏன் சிவப்பாக்கிக் கொள்கிறீர்கள்?"

அவளுடைய சீர்வரிசைக்காக ரஜியா தயாரித்திருந்த துணி களிலிருந்து நான்காவது திருமண நாளுக்கான பச்சை நிறச் சேலையை எடுத்து அணிந்துகொண்டாள்.

ஆனால் இந்த மாறுதலைக் கவனிக்க ரஜியாவிடம் நேரம் ஏது? அவள் பல பிரச்சினைகளில் குழம்பி இருந்தாள்.

வீட்டில் அமைதி நிலவியிருந்தது. கோடை காலத்தின் காற்று ஒவ்வொன்றையும் பறக்கவிடுவது போல் வீசியது. மரங்களிலிருந்து மஞ்சள் இலைகள் விழுந்து கொண்டிருந்தன. சப்போட்டாக்கள் பழுத்துக் கொண்டிருந்தன. மாம்பழ வாடை எல்லாத் திசை களிலும் பரவியிருந்தது.

இது மிகவும் குழப்பமான நேரமாகும்.

ஆலா ஹஜ்ரத் 'ராஜ் பிரமுக்' ஆகிவிட்டார். இந்திய அரசின் பிரதிநிதியாக கே.எம். முன்ஷி எல்லா அதிகாரங்களையும் கைப்பற்றிவிட்டார். சில நாட்களுக்கு முன்புதான் காந்திஜி கொலைசெய்யப்பட்டார். அதனால் எல்லா இடங்களிலும் அச்சமும் திகிலும் பரவி இருந்தன. இத்திஹாதுல் முஸ்லிமீனின்

சில தலைவர்கள் இரவோடு இரவாக ஓடிவிட்டார்கள். காசிம் ரஜ்வி சிறையில் இருந்தார். லாயிக் அலி தன் வீட்டிலேயே சிறை வைக்கப்பட்டிருந்தார்.

அப்போது ரஷீதும் அவனுடைய தோழர்களும் காங்கிரஸ் அரசிடம் தங்கள் நன்றியறிதலுக்கான சான்றுகள் பலவற்றை சமர்ப் பித்தார்கள், என்றாலும் பண்ணைகளும், பதவிகளும் ஒழிக்கப்பட்டு வந்தன. ஒன்றும் புரியாத நிலையில் அவர்கள் கலவரம் செய்ய விரும்பினார்கள். ஆனால் எத்தகைய கலவரம்...?

எல்லா இடங்களிலும் விம்மல்களும் கண்ணீரும் இருந்தன. காந்திஜியின் பேச்சைக் கேட்டுப் பட்டங்களையும், பண்ணை களையும் திருப்பிக் கொடுத்தவர்களுக்கும், தூக்குமேடைவரை சென்றவர்களுக்கும், சிறையில் வாடியவர்களுக்கும் ஓய்வூதியங்கள் கொடுக்கப்பட்டன. பெரிய, சிறிய எழுத்தர்கள், காவல்துறை அதிகாரிகள், வேறுபல பணித்துறையினரும் வேலையிலிருந்து நீக்கப்பட்டனர். இனி என்ன நடக்கப்போகிறது என்று எல்லாருமே குழம்பினார்கள். ரஷீத் பல முயற்சிகளில் ஈடுபட்டிருந்தான். கம்யூனிஸ்ட் கட்சியின்மீது தடைவிதிக்கப்பட்டுவிட்டது. அதனால் மக்தூமும் அவருடைய தோழர்களும் தலைமறைவாகிவிட்டார்கள்.

எங்கே தப்பிச் செல்வது? ஷாஹீனுக்கும் சிறிது கவலையாக இருந்தது.

அவன் ரஷீதின் எல்லா அறிவுரைகளையும் தள்ளுபடி செய்து விட்டானே. பாகிஸ்தானுக்கும் போவதில்லை; அமெரிக்கா சென்று பணம் சம்பாதிக்க மாட்டேன் என்றல்லவா சொன்னான். பணம் சேர்ப்பதில் அவனுக்கு எவ்வித ஆர்வமும் இல்லை. மூதாதையர் சேர்த்து வைத்த செல்வம், கவிதாலயமாக அவனைச் சூழ்ந்து கொண்டிருந்தது. இத்தகைய முற்றுகைகள் இருக்கும்போது எங்குதான் ஓடிச் செல்ல முடியும்? ஆனால் எல்லா அரசியல், சமூக இயக்கங்களிலிருந்தும் விலகித் தனியாக மருத்துவ ஆய்வுகள் செய்ய, ஷாஹீன் ஹைதராபாத்திலேயே இருக்க விரும்பினான். உயர்நிலைப் பள்ளியில் இருந்தபோது மக்தூமின் காதல் கவிதைகள் அவனுக்கு மிகவும் பிடிக்கும். விஞ்ஞான நூலைப் பக்கத்தில் வைத்துவிட்டு, "இரவு முழுவதும் ஈரமான கண்களில் தாங்கள் ஆடி அசைந்தீர்கள். மூச்சைப் போலவே வந்தீர்கள், போனீர்கள்" என்று முணுமுணுப்பான்.

இந்த ஈரடியின் சோகத்தில் தன்னைத் தனியனாகவும், கவலை கொண்டவனாகவும் உணருவான்.

பிறகு ஒருநாள் மக்தூமின் புதிய கவிதையை ஒரு சஞ்சிகையில் பார்த்தான். சிறையின் கம்பிகளை உடைத்து அது ஹைதராபாத முழுவதிலும் ஒலித்துக் கொண்டிருந்தது.

'வாழ்வின் பெரு மதிப்புள்ள செல்வம்
சிறைக்குக் காணிக்கையாகிவிட்டதே
நாட்டுச் சுதந்திரத்தின் சிறைக்கு
அதை அர்ப்பணித்திருக்க வேண்டும்'

மக்தூமின் இத்தகைய கவிதைகளால் ஷாஹீனைப் போன்ற எழுத்தறிவு கொண்ட இளைஞர்கள், நிலைமைகளுடன் ஒத்துப் போவதை விட்டுவிட்டு நான்கு புறங்களிலும் வழிகள் தேடினார்கள். ஏதாவது செய்ய விரும்பினார்கள். இயலாமையும் தேவையும் பழைய மரபு முறைகளை மீறச் செய்துவிட்டன. மாளிகைகளிலிருந்து திரைபோட்ட கார்களிலும், குதிரை வண்டிகளிலும் வெளியே வந்த பெண்கள் இப்போது பேருந்துகளுக்காக வரிசையாக நின்றார்கள். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் பெண்கள் இப்போது பள்ளிகளுக்குச் சென்றார்கள். சுன்னு நவாப் இப்போது வானொலி நிலையத்திலிருந்து தாதராவும், டும்ரியும் பாடினார். மாளிகைகள் விற்பனைக்கு வந்துவிட்டன. வாகனங்கள் ஊர்திகளின் விலைகள் குறைந்துவிட்டன. தூலே நவாப்பின் பேரர்கள் ரிக்ஷா ஓட்டினார்கள். மிஸ்கீன் அலி ஷாவின் பேத்தி ஒப்பனை செய்துகொண்டு ஒவ்வொரு ஆடவனுடனும் காதல் விளையாட்டு விளையாடத் தயாராக இருந்தாள். ஆனால் அந்த ஆடவன் அவளுக்குப் புகலிடம் கொடுக்கவும், அலீப் லைலாவைத் திருப்பி வாங்கித் தருவதாகவும் வாக்களிக்க வேண்டும். ஆகவே ஷாஹீன் பணத்தைக் கொள்ளையடிப்பதற்குப் பதிலாக மருத்துவ மனையில் பணியாற்றி வந்தான். இப்போது ஹைதர்குடாவில் ஒரு சிறிய மருத்துவ விடுதியைத் திறந்து ஏழைகளுக்கு இலவசமாக மருந்துகளைக் கொடுத்தான். பழங்கள் வாங்குவதற்காகப் பணமும் தந்தான். தேவையுள்ள மனிதர் எவரேனும் வந்துவிட்டால் தன் பைகளைத் துழாவினான். கஜலுக்குத் திருமண இசைவும் கொடுத்தான். அவன் ஐரோப்பா முழுவதும் பார்த்து வந்தான். அதனால் ரஜியாவும் கஜலும் நினைப்பதுபோல் அவ்வளவு முட்டாள் அல்ல.

திடீரென்று கஜலிடம் அவன் என்ன கண்டுவிட்டானோ? கஜல் அவனுக்குத் துணையாக இருக்க முடியும். அவனுடன் சிரிக்க முடியும்; சுகமாக வாழ முடியும் என்று அவன் எப்படி நினைத்துவிட்டான்? அவன் அவளுடைய கடந்த காலத்தைப் பார்க்கவில்லை. ஏனெனில் அவனும் தன்னுடைய கடந்த காலத்தைப் பார்க்கும் உரிமையை அவளுக்குத் தரவில்லை. பாவம்; ஏழைப் பெண். குழந்தைப் பருவம் முதல் அவளுக்கு வெறுப்பு மட்டுமே கிடைத்திருக்கிறது. இத்தகைய பெண்கள் ஒவ்வொரு மாளிகையிலும் இருக்கிறார்கள். ஒவ்வொரு பங்களாவிலிருந்தும் வெளியே

வருகிறார்கள். ஆதரவில்லாத தங்கள் குடும்பங்களைக் காப்பாற்றுவதற்காக அவர்கள் பல வழிகளைத் தேடினார்கள். மேடைகளில் நடிப்பு—அலுவலகப் பணி—பள்ளிகளில் போதிக்கும் தொழில்—விடுதிகளில் நவநாகரிகப் பெண்களாகவும் அலைந்து, ரஷீத் போன்றவர்களின் வாழ்க்கை வசதிகளைக் கொண்டு வந்தார்கள். ஹுமாயூன் போன்றவர்களுக்காக உணவு உடைக்கான வழிவகைகளைச் செய்தார்கள்.

தன் மைந்தனின் பிடி முரண்டான குணம் ரஷீதுக்குக் கவலை தந்தது. ஃபவுசியாவைத் திருமணம் செய்துகொடுத்து ரஷீத் நிம்மதி அடையவில்லை. ஏனெனில் அவளுடைய கணவன், தான் அந்தக் கல்யாணத்திற்கு அவசரப்பட்டு இசைந்து விட்டதாகவும், இல்லாவிட்டால் வரதட்சணை எழுபத்தையாயிரம் ரூபாய் கிடைத்திருக்கும் என்றும் நினைத்தான். தன் இழப்பைக் குறித்து அவன் ஃபவுசியாவிடமும் பலமுறை சொல்லிவிட்டான்.

இந்நிலைமைகள், காலத்திற்கு முன்பே ரஷீதைக் கிழவனாக்கி விட்டன. அவன் எல்லா இடர்களையும், இன்னல்களையும் தனியாக எதிர்கொண்டான். அவனுடைய மைந்தனுக்குத் தந்தையின் கவலைகள் பற்றி நன்கு தெரியும். அதனால் "பணம் சேர்க்கும் முயற்சிகளைத் தாங்கள் விட்டுவிடுங்கள். நான் ஒருவனே எவ்வளவு சாப்பிட முடியும்" என்று தந்தைக்கு ஆலோசனை வழங்கினான்.

பொறுமையைக் கடைப்பிடித்த ரஷீதுக்கு மார்புவலி வந்துவிட்டது.

எனவே ஒருநாள் அவன் பலவந்தமாகத் தந்தையைப் பரிசோதித்தான். கையில் கட்டுப்போட்டு அவருடைய இதயத் துடிப்பை அறிந்தான். பிறகு கலவரமடைந்து, "அப்பா, உங்கள் இரத்த அழுத்தம் அதிகமாக இருக்கிறது. உப்பு சாப்பிடாதீர்கள்" என்று கூறினான்.

ஆனால் தன் தொல்லைகளுக்கான காரணம் உப்புத்தான் என்று ரஷீதுக்கு நம்பிக்கை வரவில்லை. ரஜியா பல பிரச்சினைகள் காரணமாகச் சோர்வடைந்து காணப்பட்டாள். இருப்பினும் கஜலைக் கூர்மையாக நோக்கி, "இந்தப் புதிய சேலையை ஏன் அணிந்துகொண்டாய்?" என்று கேட்டாள். ஷாஹீனுடன் அவள் வேடிக்கையாகப் பேசுவதைக் கண்டால் அதட்டுவாள். ஷேகுமியாவுடன் அவளுடைய திருமணத்தை ஷாஹீன் நிறுத்திவிட்டதால் தன் நன்றியறிதலைத் தெரிவிக்கிறாள் போலும் என்று நினைத்தாள். இனி இவளுடைய கொட்டத்தை அடக்க ஒரு போலீஸ்காரனுக்குத்தான் இவளைக் கட்டிக்கொடுக்க வேண்டும்.

ஆனால் கஜல் நொண்டி அத்தையின் செய்கைகளை உன்னிப்பாகக் கவனித்தாள். ஏனெனில் கஜலிடம் இருந்த மாற்

றங்களை அவள் கண்டிக்கவில்லை. நாள் முழுவதும் ஷேகு மியா வுடன் கிசுகிசுத்துக் கொண்டிருந்தாள். தன்னுடைய சீர்வரிசைக் காக முன்பு சேர்த்து வைத்திருந்த எல்லாச் சேலைகளையும் அவள் அணிந்துவிட்டாள். பகலில் இரண்டு மூன்று முறை வெண்மையும் கருமையும் கலந்த தன் முடியை அலங்கரித்துக் கொள்வாள். காலையில் எழுந்ததும் சமையல்காரிக்கு உத்தரவு பிறப்பிக்கப்படும். 'ஷேகு அண்ணாவுக்காகப் பாதி அவித்த முட்டையும், ஒரு கோப்பைப் பாலும் அனுப்பி வை!"

கஜல் இந்த உத்தரவை கவனமாகக் கேட்டாள். நல்ல வேளை. நொண்டி அத்தையின் ஆணையை ரஜியா கேட்கவில்லை. ஏனெனில் ஷேகு மியாவுக்கு வேலைக்காரர்களின் சிற்றுண்டியே எப்போதும் கொடுக்கப்படுவது வழக்கமாக இருந்தது.

ஒருநாள் நொண்டி அத்தை 'லக்ஸ்' சோப்பால் தன் கைகளைச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தாள். கஜலைப் பார்த்ததும், "நீங்கள் எல்லாம் இருபத்தி நான்கு மணி நேரமும் சிவப்புப் பவுடரைப் பூசிக் கொள்கிறீர்கள் என்றாலும் முகத்தில் மண்தான் இருக்கிறது. நான் ஐம்பதை அடைந்துவிட்டாலும் முகத்தில் எவ்வளவு பொலிவு இருக்கிறது!" என்று சொன்னாள்.

வரும்போதும் போகும்போதும் கஜலின் தலைமீது அடிப்பது ஷாஹீனின் பழக்கமாகும். அவனோ கஜலைவிட உயரமாக இருந்தான். அவனை அடிக்க வேண்டும் என்றால் அவள் ஒரு முக்காலியில் மேலேறி நிற்க வேண்டும். ஒருநாள் அவள் அவ்வாறு மேல் ஏறி ஷாஹீனைப் பிடிப்பதற்காகக் குனிந்தபோது, ஷாஹீன் அவளுடைய இடுப்பில் கையைப்போட்டு ஒரு கையால் அவளை எடுத்துக்கொண்டான். ரஷீதும் ரஜியாவும் வெளியே போய் இருந்தார்கள். ஆனால் அறையினுள் ஏதோ செய்து கொண்டிருந்த நொண்டி அத்தை இந்தக் காட்சியைப் பார்த்துவிட்டாள்.

மாலையில் எல்லாரும் உணவு மேசையில் உட்கார்ந்தபோது நொண்டி அத்தை திரியைக் கொளுத்தினாள்.

"ஹபீப் ஜங்கின் பேத்தியுடன் ஷாஹீனுடைய திருமணத்தை நீங்கள் முடிவு செய்து வந்திருப்பது நல்லதாகிவிட்டது. ஆனால் அவர்கள் பழமைவாதிகள் என்றல்லவா சொல்கிறார்கள்."

ஷாஹீன் இந்தச் செய்தியைக் கேட்டுத் திடுக்கிடுவான் என்று ரஜியாவும் ரஷீதும் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவன் அமைதி யாக மீனின் முட்களை எடுத்துக் கொண்டிருந்தான்.

"இதுவும் நல்லதுதான். நாங்களும் முற்போக்குவாதிகள் அல்லவே?" இப்போது ரஷீதும் வாஹித் ஹுசேனைப் போலவே சிந்தித்தான். சிற்சில இடங்களில் முடியில் தெரிந்த வெண்மையும், பருமனாகிவிட்ட உடலும், கம்பீரமான குரலும் கஜலுக்கு

அடிக்கடி பாட்டனாரை நினைவுபடுத்தின.

"ஆனால் உங்கள் வீட்டுடன் அவர்களின் இணை எப்படிச் சரிப்பட்டு வரும் ரஷீத் நவாப்?" நொண்டி அத்தை அவ்வளவு சுலபமாகப் பேச்சை முடித்துவிடத் தயாராக இல்லை. "அவர்கள் எங்கள் வீட்டு நடத்தைகளைப் பார்ப்பார்கள். ஆனால் இங்கே எப்போதும் அலைந்து திரியும் பெண்களுடன் கேலியும் விளை யாட்டும் நடக்கிறதே!"

'வீட்டில் கஜலைத் தவிர வேறெந்தப் பெண்ணும் இல்லையே. மருந்துக்காகத் தேடினாலும் வேறு பெண் கிடைக்க மாட்டாள்.' ஆனால் ஷாஹீன் மீன் முட்களை எடுப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தான். அவன் எதையும் கேட்கவில்லை. மேசையின் எதிர்முனையில் உட்கார்ந்திருந்த கஜலுடன் பார்வை மோதல் ஏற்படாதவாறு எச்சரிக்கையுடன் இருந்தான்.

"நாம் எந்தப் பெண்களை வீட்டில் வைத்துக் கொண் டிருக்கிறோம்? ஒரு கஜல்மட்டும்தான் இருக்கிறாள்..." ரஜியா தண்ணீரைக் குடித்துவிட்டுப் பதில் சொன்னாள்.

நொண்டி அத்தை முகத்தைச் சுளித்தவாறு ரஜியாவை நோக்கினாள். 'ரஜியா திறமைசாலி அல்லவா? பேச்சைப் புரிந்து கொள்ளாதவளாக நடிக்கிறாளே!'

"நீங்கள் ஆண்டவனுக்கு நன்றி சொல்ல வேண்டும். கஜல் கவிதாலயத்தில் இருக்கிறாள் என்பது அவர்களுக்குத் தெரியாது. இல்லாவிட்டால் உங்கள் வீட்டுக்கு மகளை யார் கொடுப்பார்கள்."

நொண்டி அத்தையின் இந்தப் பேச்சைக்கேட்டு ஷாஹீன் துள்ளி எழுந்தான். ரஜியாவும் கோபத்துடன் அவளைப் பார்த்தாள். தண்ணீர் பருகிக் கொண்டிருந்த ரஷீத் அதற்குப் பதிலளித்தான்.

"அத்தையின் மூளையே கெட்டுவிட்டது. கஜல் என் சகோதரி மகள். அவ்வளவு நீசமானவர்கள் அவர்கள் என்றால் நாமே இந்த உறவை மறுத்துவிடுவோம்!"

ஆனால் மாமாவின் பதிலைக் கேட்பதற்கு முன்னால் கஜல் எழுந்துசென்றுவிட்டாள். அன்று எல்லாரும் நொண்டி அத்தை யைப் பழித்துப் பேசினார்கள். அதனால் அவளும் எல்லாரையும் புறக்கணித்து விட்டு ஷேகு மியாவின் அறையில் குடியேறினாள் என்றாலும் கஜலின் சிரிப்பொலிகள் இனி அமுங்கிவிடும், ஷாஹீனும் அவளுடன் வேடிக்கை செய்யமாட்டான் என்று அவளுக்குத் தெரியும்.

ஆனால் இராத் தொழுகைக்காக அவள் தாழ்வாரத்திற்கு வந்தபோது கஜல் நன்றாக அலங்கரித்து, நறுமணம் பூசிக்கொண்டு முற்றத்தில் நின்றிருந்தாள். ஷாஹீன் 'சூட்' அணிந்தவாறு தாழ்

வாரத்தில் நின்று தண்ணீர் குடித்துக்கொண்டிருந்தான்.

தூணுக்குப் பின்னால் நின்று, திறந்த வாயுடன் இந்தக் காட்சியை அவள் கண்டாள்.

இருவரும் ஒருவரையொருவர் அணைத்தவாறு வெளியே சென்றார்கள். "நாங்கள் இரவுக் காட்சிக்குப் போகிறோம். வாயிலைப் பூட்ட வேண்டாம்." ஷாஹீன் அத்தையிடம் கூறினான்.

பிறகு அவள் கார் புறப்படும் ஓசையைக் கேட்டாள்.

அன்றிரவு நொண்டி அத்தை இராத் தொழுகையைச் செய்ய வில்லை. அவருக்குத் தூக்கமும் வரவில்லை. இத்தனை சுமையான பேச்சை ரஜியாவின் அறை வரை கொண்டுசெல்லும்போது அவருக்கு மூச்சு இரைத்தது.

கிராந்தி இங்கேயே இருந்தாள். அவளுக்கு சுரம் வந்துவிட்டது. அதனால் அவள் முனகினாள். ஆனால் அவளுக்கு அருகில் செல்ல நொண்டி அத்தைக்கு என்ன வந்தது?

காலையில் கஜல் தன் கையால் ஷாஹீனுக்குத் தேநீர் பருகச் செய்த காட்சியை நொண்டி அத்தை சாவித்துவாரம் வழியே ரஜியாவுக்குக் காட்டினாள்.

பிறகு ரஷீதின் பார்வை ஷாஹீனுடைய அறை மீது விழுந்த போது அவன் கஜலின் கைகளைப் பிடித்துச் சுற்றிக் கொண்டிருந்த காட்சியே தெரிந்தது. அவன் தன் அறைக்கு வந்து சிகரெட் புகைத் தவாறு யோசனையில் மூழ்கிவிட்டான். வீறு கொண்டெழுந்த பெண் புலியைப்போல் ரஜியா அறைக்குள் வந்தபோது அவன் சிகரெட்டை அணைத்தவாறு கேட்டான்.

"ஷாஹீனின் மாமியார் வீட்டுக்காரர்கள் எப்போது திருமணம் வைத்துகொள்ள விரும்புகிறார்கள்?"

ஆனால் ரஜியாவின் மீது யாரோ தீச்சுவாலைகளை வீசி எறிந்துவிட்டார்களோ! அவள் கோபத்துடன் கூறினாள்.

"இந்த வீண் பேச்சுகள் இருக்கட்டும். என் வாயைக் கிளற வேண்டாம். இதற்கெல்லாம் நீங்கள்தான் காரணம்..."

"அப்படி என்ன ஆகிவிட்டது. ஷாஹீனின் திருமணம் நடந்துவிட்டால்..." ரஷீத் அமைதியாகச் சொல்ல விரும்பினான். ஆனால் ரஜியா மின்னலைப்போல் திரும்பினாள்.

"ஒன்றும் பேச வேண்டாம். நானே இந்த வீட்டிற்கு வந்து வருந்தினேன். இது அழுக்குக் குழியாகும். என் குழந்தைகளும் தப்ப முடியாது என்று எனக்குத் தெரிந்திருந்தது. உங்கள் சகோதரிகள் இறந்துவிட்டார்கள். ஆனால் ஒழுக்கங்கெட்ட பெண் மக்களை என்னிடம் ஒப்படைத்துவிட்டார்கள்."

அதே நேரத்தில் ஷாஹீன் திரையை விலக்கி உள்ளே வந்தான். தன் டையைச் சரிப்படுத்தியவாறு சொன்னான். "அம்மா! நீங்கள்

எனக்காக மணமகள் தேட வேண்டாம். என் மணமகள் இந்த வீட்டிலேயே . இருக்கிறாள்"

இதை அவன் அம்மாவின் பெயரிட்டுச் சொன்னான் என்றாலும் அப்பாவுக்கும் செய்தி கிடைக்கும்படி சொன்னான். பிறகு அவன் சீட்டியடித்தவாறு சென்றுவிட்டான். ஆனால் இருவரும் தங்கள் இடங்களை விட்டு நகரவில்லை. ஷாஹீன் ஏதோ மந்திரம் படித்து அவர்களைக் கற்சிலையாக்கிவிட்டான் போலும். வெகு நேரத்திற்குப் பிறகு கடிகாரம் மணியடித்தபோது ஏதோ அபாயச் சங்கு ஒலிப்பதுபோல் ரஷீத் திடுக்கிட்டான்.

"ஓ! மணி என்ன ஆகிவிட்டது." அவன் தன்னைச் சுற்றிலும் இருந்த உலகைத் தெரிந்துகொண்டான். இது அவனுடைய அறை தான். அவர்கள் இருவருடைய கட்டிலுக்குப் பக்கத்தில் ஒரு சின்ன தொட்டில் இருந்தது. அதில் துணியால் சுற்றப்பட்ட ஷாஹீன் கிடப்பான். அவன் எழுந்திருக்க முயற்சி செய்து தோற்றுப் போவான். பிறகு ரஷீத் குனிந்து தனது இரண்டு ஆள்காட்டி விரலையும் நீட்டுவான். அவற்றை பிடித்துக்கொண்டு அவன் எழுந்தான். பிறகு மருத்துவமனைக்குச் சென்றுவிட்டான். அங்கு அவன் திரையில் மனித இதயங்களின் நிலைகளைக் கண்டறிந் தான். காயமுற்ற இதயங்களுக்குக் களிம்பு தடவினான். அவன் நகரின் மிகப்பெரிய இருதயநோய் நிபுணன். ஆனால் தந்தையின் மார்பினுள் ஒரு இதயம் இருக்கிறது. இரத்த அழுத்தத்தால் அவன் துன்புற்றிருக்கிறான் என்பதை அவன் நினைக்கவில்லை. அந்த இதயத்தின் மேல் இன்று எத்தனை பெரிய தாக்குதலை நடத்தி யிருக்கிறான். ரஷீத் அதிகமாகிவிட்ட இரத்த அழுத்தத்தின் காரணமாகப் படுக்கையில் விழும்போது கூறினான்.

"ரஜியா, நிகழ்காலத்தைப் பின்னோக்கி இழுத்துச் செல்ல வேண்டாம். நடப்பது நடக்கட்டும்!"

# 28

அன்றிரவு கஜலுக்குத் தூக்கமே வரவில்லை.

அவளைத் திருமணம் செய்து கொள்வதாகப் பலர் சொன்னார்கள். பில்கிராமி—நசீர்—சர்வர்—அதையே ஷாஹீனும் இன்று செய்திருக்கிறான்.

இந்த ஆண்கள் எல்லாம் அவளுக்கு முன்னால் ஒரு தீபத்தை ஏற்றிவிட்டு தங்கள் உலகங்களை வெளிச்சமாக்கிக் கொண்டார்கள்.

அவர்களுக்கெல்லாம் பிளாஸ்டிக் பொம்மையைப்போல் அவள் இருந்தாள்; அல்லது வளர்ப்புப் பூனையைப்போல். மனம் விரும்பும் போது கொஞ்சுவது, விரும்பாதபோது உதைத்து விரட்டிவிடுவது.

இன்று ஷாஹீன் அவளிடம் திருமணத்தைப் பற்றிச் சொன்ன போது அவளுக்கு வியப்பு ஏற்படவில்லை. என்றாலும் குழந்தைப் பருவத்தில் பார்த்த தீபாவளியின் ஒரு காட்சி நினைவுக்கு வந்தது. நூற்றுக்கணக்கான விளக்குகள் வரிசையாக எரிந்து கொண் டிருக்கின்றன.

''நீங்கள்... என்னை எதற்காக திருமணம் செய்ய விரும்புகிறீர்கள்?" அவள் கலவரத்துடன் கேட்டாள்.

"நீ வாழ்நாள் முழுவதும் அழுவதை நான் விரும்பவில்லை. அதற்காக..."

ஹூம். தீபாவளி விளக்குகளின் நீண்ட வரிசைகள் அணைந்து கொண்டே போயின.

"அப்படியானால் என்மேல் கருணை புரிந்து திருமணம் செய்ய விரும்புகிறீர்கள். எனக்காகப் பரிதாபம் காட்டுகிறீர்கள்?" ஆனால் ஷாஹீனிடம் அவள் இதைச் சொல்லவில்லை.

"நல்லது. நான் வாழ்க்கை முழுவதும் சிரிப்பதாக வாக்குக் கொடுத்தால்...?"

ஷாஹீன் திரும்பி அவ்ளைக் கூர்ந்து நோக்கினான்.

"எப்படிச் சிரிப்பாயாம்!"

"இப்போது அழுவதைப்போல்!" அவள் உடனடியாகப் பதில் தந்தாள்.

"போதும்... போதும். தத்துவம் வேண்டாம்..." அவன் விவா தத்தில் ஈடுபட விரும்பவில்லை.

அவன் அங்கிருந்து நேராக அப்பாவின் அறைக்குச் சென்று தன் கருத்தை வெளியிட்டுவிட்டான். தாமதிப்பதில் அவனுக்கும் குழப்பம் ஏற்படும் என்ற அச்சம் இருந்ததுபோலும்.

ஷாஹீன் மருத்துவமனைக்குச் சென்றுவிட்டதும், அறையை உட்புறமாகத் தாழிட்டுவிட்டுக் கஜல் நன்றாக அழுதாள். 'நீ இல்லாமல் நான் உயிர்வாழ முடியாது என்று அவன் ஒரு முறையும் சொல்லவில்லை; வேறொரு மங்கையைப் பற்றி சிந்திக்க மாட்டேன் என்றும் உறுதி கூறவில்லை; என்மீது பரிதாபம் கொண்டு மணக்க விரும்புகிறான்; பிறகு வருத்தப்படுவான். என்னை வெறுக்கவும் செய்வான். அவனுக்கு பான், பில்கிராமி, நசீரின் நிகழ்ச்சிகள் முழுவதுமாகத் தெரியவில்லைபோலும். பிறகு ரஷீத் மாமாவும் நொண்டி அத்தையும் இந்தக் கதைகளை நன்றாக வர்ணனைகளுடன் சொல்வார்கள். அவனும் தூரமாகிக் கொண்டே போய்விடுவான்...'

'நசீர் கொடுத்த மோதிரத்தை நான் எப்படிக் கழற்றிவிட முடியும்? இது எங்ஙனம் சாத்தியமாகும்?'

"முதலிரவு அன்று ஷாஹீன் என்னுடைய எந்த விரலைப் பிடிப்பான்...?"

'நவாப் வாஹித் ஹுசேனின் பேரன்—அக்தருத் தவ்லாவின் பேரன்—ரஷீத் ஹுசேனின் மகன். டாக்டர் ஷாஹீன் ரஷீத் எம்.பி.பி.எஸ், எம்.ஆர்.சி.பி. இல்லை... இல்லை... அவன் மிகவும் பெரியவன். அவன் தன் தலைமீது மலையாக நின்று விடுவான். நான் நசுக்கப்பட்டுவிடுவேன். கவிதாலயத்தின் முழுப் பளுவையும் நான் எப்படி சுமக்க முடியும்?'

கவிதாலயம், காதலிகளுக்காகவே இருக்கிறது. மனைவியாகி வரும் பெண், ரஜியாவைப்போல் எல்லா விதங்களிலும் தன்னை இழந்துவிடுகிறாள். நானும் ஷாஹீனின் காதலிகளுக்குச் சேவை செய்ய வேண்டுமா?

ரஜியா மாமி என்னை இரண்டு நாட்களிலேயே அடித்து உதைத்து வெளியேற்றிவிடுவாள். நொண்டி அத்தை நஞ்சு கொடுத்துவிடுவாள். எச்சில் துண்டுகளைச் சாப்பிடும் நாய். இரண்டு காசு மதிப்புப் பெறாத ஊர் சுற்றிப் பெண். இல்லை! நான் ஷேகு அண்ணாவை மணந்து கொள்வேன். என்னை அழைத்துக் கொண்டு ஓடிப்போய்விடுங்கள் என்று காலையில் ஷேகு அண்ணாவிடம் சொல்லி விடுகிறேன். சம்பாதிப்பதற்கான பல வழிகள் எனக்குத் தெரியும். நான் உங்களுக்கு எல்லா சுகங்களும் தருகிறேன் என்று அவரிடம் கூறுவேன்.

அவள் புரண்டு புரண்டு படுத்தாள். காலையில் பாங்கு கூறிய போது அவள் சோர்வடைந்து, யோசிப்பதை நிறுத்திவிட்டாள்.

அல்லாஹ் மிகப் பெரியவன். அல்லாஹ் மிகப் பெரியவன்!

காலையில் சுரத்தால் தவித்துக் கொண்டிருந்த கிராந்தியை அவள் எடுத்தாள். கிராந்திக்கு இப்போது எட்டு வயதாகிவிட்டது. ஐந்தாவது வகுப்பில் படித்தாள். தன்னைப் பற்றி அவள் எல்லாமே அறிந்துகொண்டுவிட்டாள்.

அவள் கிராந்திக்கு கம்பளிச் சட்டையை அணிவித்து வெளியே வந்தபோது ஹுசேன் பீ கேட்டாள்: "கஜல் பீபி! இன்று அத்தை எங்கே போய்விட்டார்கள். கிடங்கு அறையைத் திறந்து நெய்யும் மாவும் இதுவரை கொடுக்கவில்லை."

அப்போது அவள் எப்படிப் பார்த்தாள். நொண்டி அத்தை தன் அறையில் இல்லை. காலையிலேயே அவள் எங்கே சென்று விட்டாள். கஜலை அடிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யவா? அவள் இருந்திருப்பின் இப்போதே ஷேகு அண்ணாவுடன் 'நிக்காஹ்' செய்யும் பேச்சு முடிந்திருக்குமே.

“நீ எங்கே போகிறாய்?” ரஜியா மிகவும் கடுமையான நடையில் கேட்டாள்.

“கிராந்தியை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்கிறேன்.” கஜல் பயந்தவாறு பதிலளித்தாள். இன்று வீட்டில் பெரிய அமளி ஏற்படப்போகிறது. அந்த நேரத்தில் கிராந்தி இங்கு இருக்க வேண்டாம் என்று அவள் நினைத்தாள். மருத்துவமனையில் மேரி அவளுக்கு மருந்து கொடுத்து குணப்படுத்திவிடுவாள்.

“நொண்டி அத்தை எங்கு இருக்கிறார்?” ரஜியா, போலீஸ்காரர் பாவனையிலேயே கேட்டாள். தனக்கு எதிராக ஏதோ சதி நடக்கிறது. ஷாஹீனும் கஜலும், நொண்டி அத்தையைத் தங்களுடன் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ரஜியா ஐயம் கொண்டிருந்தாள்.

ஏனெனில் வாழ்க்கையில் முதல் முறையாக நொண்டி அத்தை யாருக்கும் எதுவும் சொல்லாமல் எங்கேயோ சென்று விட்டாள். இப்போது கஜலும் கிராந்தியுடன் ஓடிவிடப் போகிறாள்.

“வீட்டிலிருந்து வெளியே போகவேண்டிய அவசியமில்லை,” ரஜியா கோபத்துடன் கூறினாள். “கிராந்திக்குச் சுரம் என்றால் ஷாஹீனுக்குக் காட்டு. அவனிடம்தான் உன்னுடைய ஒவ்வொரு பிரச்சினைக்கும் தீர்வு இருக்கிறதே...” பிறகு தானே சோகத்துடன் உள்ளே சென்றுவிட்டாள்.

கஜலுக்கு, மாமியின் கடினமான வார்த்தைகள் புதியன அல்லவே, அவள் அதற்காகக் கவலைப்படவில்லை.

கிராந்திக்குக் கம்பளியை உடுத்திப் படுக்கையின்மேல் படுக்க வைத்தாள். மாமியின் அறையிலிருந்து கூக்குரல்கள் கேட்டன.

விருந்தினர் கூடத்தில் நாளிதழ் வாசித்துக்கொண்டிருந்த ரஷீத், அறையிலிருந்த கஜல், பணியாட்கள் எல்லோருமே ஓடோடிச் சென்றாரகள்.

ரஜியாவுடைய பெட்டி திறந்து கிடந்தது. அதைப் பிடித்த வாறு அவள் கூவினாள்:

“கொள்ளையடித்துவிட்டார்கள்... என் நகை, என் பணம் எல்லாம் போய்விட்டது... நான் மோசம் போனேனே...”

எல்லாரும் திகைத்து நின்றார்கள். ரஷீத் பெட்டியை ஆராய்ந் தான். ஷாஹீன் முழு அறையையும் தேடினான். உண்மையாகவே ரஜியாவின் தலையணைக்குக் கீழே இருந்த சாவியை எடுத்து யாரோ பெட்டியைத் திறந்திருக்கிறார்கள். மேலும் இந்தக் குடும்பத் திற்குச் சொந்தமான நகைகளை மட்டுமே எடுத்திருக்கிறார்கள். ரஜியா தன் வீட்டிலிருந்து கொண்டு வந்த நகைகளைத் தொடவில்லை. கஜல் மூர்ச்சையாகிவிட்டாள். குழந்தைப் பருவம் முதல் தான் செய்யாத குற்றங்களுக்குத் தண்டனை அனுபவித்து

*வருகிறாளே, இன்று என்ன நேரப் போகிறதோ?*

*ஷாஹீன் காவல் நிலையத்திற்கு தகவல் கொடுக்க தொலை பேசியை எடுத்தான். ஆனால் ரஷீத் பிடுங்கிக் கொண்டான்.*

*“முட்டாள். என்ன... நொண்டி அத்தையைச் சிறைக்கு அனுப்பப் போகிறாயா? முதலில் விஷயம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.”*

*“நொண்டி அத்தையா?” ஷாஹீனுக்கு வியப்பாக இருந்தது.*

*“ஆம்; வேறு என்னவாம்.”*

*நொண்டி அத்தை ஷேகு அண்ணாவுடன் நிக்காஹ் செய்து கொண்டாள் என்ற ரகசியம் மாலையில் ரஷீதுக்குத் தெரியவந்தது. இரவிலேயே எல்லா விலையுயர்ந்த பொருட்களையும் அவள் அப்புறப்படுத்தி விட்டாள். ரஜியாவின் பெட்டியில் இருந்த, தனக்குச் சொந்தமான பணத்தையும் நகைகளையும் கொண்டு சென்றுவிட்டாள். வாஹித் ஹுசேன் அதைத் தன்னுடைய உடைமையாக வைத்திருந்தாராம். நீதிமன்ற வழக்கையும் சந்திக்கத் தயார் என்று நொண்டி அத்தை சொல்லியனுப்பி விட்டாள்.*

*“நான் அவளைப் போலீசில் ஒப்படைத்துவிடுவேன். கேடு கெட்ட மூஞ்சி! வெட்கமில்லாத கிழவி. இந்த வயதில் முகத்தில் கரி பூசிக்கொண்டாள்.”*

*ரஜியாவின் முகம் கோபத்தால் சிவந்துவிட்டது.*

*“என்ன, பைத்தியம் பிடித்துவிட்டதா?” ரஷீத் அவளை சமாதானப்படுத்தினான். “வழக்கு நடந்தால் கவிதாலயத்தின் அரைப்பகுதி அவளுக்குப் போய்ச் சேர்ந்துவிடும். சொத்துக்கள், செல்வம் எல்லாவற்றிலும் பாதி உரிமை அவளுக்கு உண்டு.”*

*“அல்லாஹ்! இந்தக் குடும்பத்தின் பெண்கள்—கேடுகெட்ட மூஞ்சிகள். கிழவிகளாகி விட்டாலும் இவர்களை நம்ப முடியாது. முடி வெள்ளையாகி விட்டது, இடுப்பு உடைந்துவிட்டது; ஆனாலும் மயக்கம் தெளியவில்லை. அந்தப் பல்லில்லாத கிழவன் மேல் எத்தனை காலமாக ஆசை வைத்திருந்தாளோ...?” ரஜியா தொடர்ந்து முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.*

*“ஓர் எதிரி தொலைந்துவிட்டான்...” ஷாஹீன் உள்ளே வந்து கஜலிடம் மகிழ்ச்சியுடன் கூறினான்.*

*ஷேகு அண்ணாவின் இழப்பிற்காகக் கஜல் உண்மையிலேயே அழுது விட்டாள்.*

*“ஷாஹீன்... இனி என்ன நடக்குமோ...?” அவள் பைத்தியம் பிடித்தவள்போல் கேட்டாள்.*

*“ஆ..! இன்று என்னுடைய தவப்புதல்வர் டாக்டர் ஷாஹீன் ரஷீதுக்கும், கஜாலா சுல்தானாவுக்கும் நடைபெற விருக்கும் திருமண வைபவத்திற்குத் தாங்கள் அருள்கூர்ந்து வருகை தந்து...”*

அந்தத் திருமண இரவில் கஜல் பலமுறை சிந்தித்துவிட்டாள். இந்த நேரத்தைக் குறித்து பெண்கள் எவ்வளவு பொய் சொல்கிறார்கள். ஷெனாய் வாத்தியச் சுரங்களில் எவ்வித மயக்கமும் இல்லை; மதியும் விண்மீன்களும் கீதம் இசைக்கவில்லை. என் இதயத்தின் மொக்குகளும் மலரவில்லை. கவிதாலயததின் ஏமாற்றங்களும், சோகத்தின் இருளும் என்னை நோக்கி முன்னேறி வருகின்றன.

“கஜல்... இப்போது பயத்தை விட்டுவிடு. சிந்திப்பதை விட்டுவிடு– இன்று முதல் உன் விருப்பம் போலவே நடக்கும்.”

“இல்லை, இல்லை,” அவள் கூச்சலிட்டு அழுதுவிட்டாள். “ஷாஹீன்! ஆண்டவனுக்காக என்னை இவ்வளவு அவமதிக்காதீர்கள். எனக்கு ஒன்றுமே வேண்டாம்...”

ஆனால் ஷாஹீன் தன் பேச்சில் உறுதியாக இருந்தான். அவன் கஜலை மென்மையான மல்லிகை மலரைப்போல் தொட்டான். அவளுடைய முகத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தான். அவளுடைய பேச்சுகளையும் கேட்டான்.

திருமணத்திற்குப் பிறகு அவர்கள் கவிதாலயத்தின் மேல் மாடிக்குக் குடிபெயர்ந்து சென்றார்கள். கிராந்தியையும் மருத்துவமனையிலிருந்து வீட்டிற்கு வரவழைத்துக் கொண்டார்கள். அவள் கீழே ஓர் அறையில் இருக்கத் தொடங்கினாள்.

“நான் மருத்துவமனைக்குச் செல்லட்டுமா? இன்று எந்தப் படம் பார்க்க வேண்டும்? இன்று நீ என்ன சாப்பிடுகிறாய்? அம்மாவிடம் பேசுவதற்குக் கீழே போகட்டுமா?” அவன் ஒவ்வொரு விஷயத்தையும் கஜலிடம் கேட்டுக் கொண்டான்.

ஆனால் இந்த அளவு அன்பைக் கஜல் எப்படி, எங்கே பாதுகாப்பாக வைக்க முடியும்? குழந்தைப் பருவம் முதல் உதைகளும், அறைகளும், குத்துகளும் சகித்தவள் அல்லவா! ஷாஹீனின் அன்பு, பரிவு ஆகியவற்றின் இனிமையைப் பெற்றுத் திண்டாடினாள். வாழ்க்கை முழுவதும் சண்டையிடுவதும் இணைவதுமாக இருக்க வேண்டும். அவனுடைய கொடுமையைச் சகித்து கண்ணீர் வடித்து, கால்களை அழுத்திவிடவேண்டும் என்ற ஆசைகளுக்கேற்ற கணவனை அவள் கற்பனை செய்துவைத்திருந்தாள். ஷாஹீன் அத்தகைய கணவனாக இருக்கவில்லை; ஷாஹீன் ஓர் அந்நியனே. சந்தர்ப்பவசத்தால் அவள் வாழ்வில் நுழைய உரிமை பெற்றுவிட்டான். அவளை மனைவியாக அல்ல; வேசியாக நினைப்பவன். அவளுடைய உடலின் விருப்பங்களைத் தெரிந்து கொள்வதே தன் முக்கியமான வேலையாகக் கருதினான். கஜலை இத்தனை ஆண்டுகள் வரை உடலின் தேவைகளே கொண்டு சென்றன என்று நினைத்தான் போலும்.

*அதனால் ஷாஹீன் அவளைத் தன் பக்கத்தில் இழுத்த போதெல்லாம், அவள் அவனைவிட்டுப் பலமைல் தொலைவில் சென்றுவிடுவாள். அத்தனை தூரத்திலிருந்து ஷாஹீனைத் தொடு வதற்காக அவளுடைய கைகள் எட்டவில்லை. அவன் கஜலுக் காகப் புதிய காரை விலைக்கு வாங்கினான். பஞ்சாரா குன்றில் நிலத்தை வாங்கி வீடு கட்டத் தொடங்கினான். கிராந்தியை தன் மகளாக வளர்ப்பதாக உறதி கூறினான். அவளை ஆங்கிலப் பள்ளியில் சேர்த்துவிட்டான். கூர்மையான அறிவுள்ள கிராந்தி எவ்வளவு உடல் வளர்ச்சி அடைந்தாளோ, அதைவிட இரட்டிப் பாக அவளுடைய அறிவு வளர்ந்தது. பள்ளியில் ஒவ்வொரு வகுப்பிலும் முதல் இடத்தில் தேர்ச்சி பெற்றாள். ஆனால் ஆசிரியை களுடன் தவறான முறையில் பேசியதற்காகக் கடுமையான தண்டனைகளும் பெற்றாள். ஷாஹீன் அவளுக்காக மிகச் சிறந்த ஆடைகள் வாங்கி வருவான். அவள் கேட்பதை எல்லாம் தருவான். ஒருமுறை கஜல் அதற்கு மறுப்புத் தெரிவித்தாள்.*

*'நாம் கிராந்திக்காக இவ்வளவு பணத்தை எதற்காகச் செலவழிக்கிறோம்? அவளைப் படிக்க வைக்கிறோம், அது போதாதா?"*

*"அதனால் என்ன?" ஷாஹீன் உடனே பதில் கூறினான். "நீ குழந்தைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டாம். கிராந்தி இன்பங்கள் அனுபவிக்கட்டும். நீயும் குழந்தைகளின் தொல்லை களிலிருந்து விடுபட்டு வாழ்க்கையை அனுபவி."*

*"வாழ்க்கையை எவ்வளவுதான் அனுபவிப்பது?" பலமுறை கஜல் எண்ணமிடுவாள். ஷாஹீன் உண்மையிலேயே தேவதூதன் தான். அவன் என்னுடைய வசதிக்காக எத்தனை திட்டங்கள் தீட்டுகிறான். ஆனால் குழந்தைகள் வேண்டாமாம். ஆறேழு குழந்தைகளாவது பெற்றெடுக்க வேண்டும் என்று அவள் விரும்பினாள். அவற்றின் கூச்சலில் கஜல் தன்னை மறந்துவிட வேண்டும். அவளுடைய மூளை வெறுமையாக இருக்க வேண்டும் என்று நினைத்தாள். தன்னுடைய மூளைச் சுமையைத் தன் குழந்தைகளைத் தவிர வேறு யாருக்குக் கொடுக்க முடியும்?*

*ஷாஹீன் அவளுக்கு அளவிலா அன்பைக் கொடுத்தவாறு பின்நோக்கிச் சென்று கொண்டே இருந்தான். கிராந்தி அளவுக்கு மீறி அடங்காதவளாகவும், உணர்ச்சியற்றவளாகவும் இருந்தாள். ஒருமுறை எட்டு வயது நிறைந்த கிராந்தி அவளிடம் கேட்டாள்.*

*"கஜல் ஆன்ட்டி, உங்களுக்குக் குழந்தை பிறந்துவிட்டால் நீங்கள் என்னிடம் அன்பு பாராட்ட மாட்டீர்கள் என்று ரஜியா அம்மா சொல்கிறார்களே..."*

*"நீ என்னுடைய மதி—என் சாந்த்—என்னுடைய கிராந்தியிடம்*

நான் வெறுப்பேனா, பைத்தியக்காரி!" அவளைத் தன்னுடைய மார்புடன் அணைத்துக் கொண்டாள்.

"ஆனால் என்னை வளர்ப்பதால் உங்களுக்கும், ஷாஹீன் அங்கிளுக்கும் என்ன பலன்? எனக்கே வியப்பாக இருக்கிறது. நான் உங்கள் மகள் அல்லவே?"

"பைத்தியக்காரி—என்ன ஒவ்வொரு காரியமும் பிரதிபலனை எதிர்நோக்கியே செய்யப்படுகிறதா?"

"அப்படி ஏன் இருக்கக் கூடாது?" கிராந்தி உரத்த குரலில் பதிலளித்தாள்.

"பாருங்களேன் ஆன்ட்டி—எனக்காக இவ்வளவு பெரிய தொகையைச் செலவழித்து என்னை வளர்த்துவிட்டீர்கள். அதற்குப் பதிலாக நானும் உங்களிடம் அன்பு காட்டவேண்டுமா?"

கஜல் புத்தகத்தை வைத்துவிட்டுக் கிராந்தியைப் பார்த்தாள்.

இந்தப் பத்துப் பன்னிரெண்டு வயதுப் பெண். உலகில் இவளுக்கு யாருமே இல்லை. அவள் தன்னை வளர்த்தவர்களை கடனாளி என்கிறாள்.

'என் அல்லாஹ்வே! கிராந்திக்குப் பாதுகாப்பு எங்கே கிடைக்கும்?'

'அவள் என்னைவிட அதிகமாகவே நஞ்சு குடிக்கிறாள். அவளும் வாழ்க்கை முழுவதும் தனிமைத் தீயில் எரிவாள். மக்கள் அவள்மீது இரக்கம் கொள்வார்கள் அல்லது வெறுப்பு அடைவார்கள்.'

'கைசர்—சஞ்சீவாவின் இந்தச் சந்ததி—கவிதாலயத்தில் என்ன செய்ய வந்திருக்கிறது?'

# 29

கஜல் எப்போதும் மௌனமாக இருப்பதைக் கண்டு ஷாஹீனின் இதயம் துடிக்கும்.

இந்தப் பெண் இப்போதும் மகிழ்ச்சியாக இல்லை. இனி நான் இவளுக்காக என்ன செய்யும்?

ஷாஹீன் மருத்துவம் தவிர ஃபிராய்டையும் படித்திருந்தான். கார்ல் மார்க்ஸையும் அலசிவிட்டான். தன் காலத்தின் எல்லா இயக்கங்களிலும் பங்கு பெற்றான். அவன் மனித உடல்களை ஆராய்ச்சி செய்திருக்கிறான். மனித மூளையின் சிக்கல்களையும் விடுவிக்கும் முயற்சியில் ஈடுபட்டான். இருபத்தேழு ஆண்டுகளில்

*உலகைத் திறந்து, பகுதி பகுதியாக்கிப் பார்த்துவிட்டான். கைப் பிடியில் துடிதுடிக்கும் வண்ணத்துப் பூச்சியைப்போல் உணர்ந்தும் இருக்கிறான். தனது மரபு வழக்கங்களைப் பற்றி அவன் சிறிதும் கவலை கொள்ளவில்லை. தன் பெற்றோரின் உணர்ச்சிகளைத் தன் வழியின் தடையாகவும் ஏற்கவில்லை. ஏனெனில் அவன் வாழ்க்கையைப் பெரிதும் விரும்பினான். சுதந்திரமே அவனுக்கு முக்கியம். அதனால் அவன் எந்தப் பெண்ணையும் காதலிக்க வில்லை. தன்னுடைய உடலின் உணர்ச்சிகளின் தேவைகளை மட்டுமே நிறைவேற்றிக் கொண்டான். அதனால் கஜல் அவனுடைய வாழ்வில் வந்த முதல் பெண் அல்ல!*

*தானும் கஜலின் வாழ்வில் வந்த முதல் ஆண் அல்ல என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் மங்கையின் உடல் தூய்மைக்கு அவன் என்றுமே முக்கியத்துவம் கொடுக்கவில்லை.*

*காதலையும் சிந்தனைக்குரிய விஷயம் என்று அவன் நினைக்க வில்லை. கஜலுடைய பிரச்சினை மட்டும் வீட்டில் தலைதூக்காமல் இருந்திருந்தால் இன்னும் ஏழெட்டு ஆண்டுகளை மருத்துவக் கல்லூரி மாணவியர், செவிலியர் ஆகியோருடன் கழித்திருப்பான். ஒருவேளை அம்மா அவனுக்காகத் தேடிய பெண்ணையே திருமணம் செய்துகொள்ள இசைந்துமிருப்பான். ஆனால் இவை எல்லாம் அவனுடைய விருப்பத்தைப் பொறுத்ததே. தன்னுடைய பிரச்சினைகளில் தன்னுடைய காரியங்களில் தன்னிச்சையாகவே நடந்துகொண்டான். ஒருவருடைய வற்புறுத்தலுக்கோ அல்லது நிலைமைக்கேற்ப நடந்துகொள்ளும் பழக்கமோ அவனுக்கு இல்லை. ஆண்கள் மீது வலைவீசி நிரந்தரமாக அவனை மாட்டி வைக்கும் பெண்களை அவனால் ஒரே வினாடியில் அடையாளம் தெரிந்துகொள்ள முடியும். கஜலும் அவனை விரும்பி இருந்தால், அம்மாவும் நொண்டி அத்தையும் கஜலுடைய பிரச்சினைக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்காமல் இருந்திருந்தால், கஜலுக்காக ஷேகு அண்ணாவைத் தவிர வேறொரு ஆளைத் தேடிக் கொண்டு வந்திருப்பான்.*

*அவன் கஜலுடன் திருமணம் செய்துகொள்ள முடியாது என்று கஜல் ஏன் நினைத்தாள்? பெயர் கெட்ட, ஆதரவு இல்லாத ஒரு பெண் தன்னுடைய மருமகளாக வரமுடியாது என்று அம்மா ஏன் முடிவு செய்தாள்? முடியும் என்பதை அவன் நிரூபித்து விட்டான்!*

*கணவனின் ஒவ்வொரு கடமையையும் நிறைவேற்றுவேன் என்று கஜலுக்கு அவன் உறுதியளிக்க விரும்பினான். இதைவிட அவன் வேறு என்ன செய்ய முடியும்?*

*ஆனால் கஜல், பழைய நினைவுகளின் பிடியிலிருந்து*

விடுபட்டு வெளியே வர முடியவில்லை. அறிவிலி—முட்டாள்—நசீரின் முதல் காதலுக்கே உரித்தானவள் என்று நினைக்கிறாள் போலும். அதனால் நசீர் கொடுத்த மோதிரம் அவளுடைய கையில் இருக்கிறது. தான் ஷாஹீனின் மனைவியல்ல, அடிமையே என்பதுபோல் நடந்துகொள்கிறாளே. இரண்டு காசுக்கும் மதிப்புப் பெறாத நீசப் பெண்ணாகப் பாவனை செய்கிறாளே... சீ..!

சிறிது சிறிதாகத் திரைப்படங்கள் காணச் செல்வதை ஷாஹீன் குறைத்துக் கொண்டான். ஏனெனில் வெளியே கிளம்பியதும் கஜல், கலவரத்துடன், அறிமுகமான முகங்களைத் தேட ஆரம்பித்துவிடுவாள். அவர்களை ஒன்றாகக் கண்டு அவர்களில் யாரேனும் ஏதாவது கேட்டுவிடக்கூடாதே என்ற அச்சம் அவளுக்கு.

ஷாஹீன் கோபத்துடன் கேட்டான்—"மக்கள் உன்னை அடையாளம் தெரிந்துகொள்ளக்கூடாது என்பதற்காக நீ புதிய பிறவி எடுக்க வேண்டும் என்று ஏன் நினைக்கிறாய்? நீ இங்கும் அங்கும் பார்க்காதே. என்னை மட்டும் பார். இந்த அச்சத்தின் காரணமாகவே நானும் மக்களுடன் உன்னை அறிமுகப்படுத்துவதை நிறுத்திவிட்டேன்."

கலவரமடைந்த கஜல் தலைகுனிவாள்.

வெண்திரையில் இயக்குநர் தன் திறமைகளை எப்படி வெளிப்படுத்துகிறார், திலீப்குமார் எவ்வாறு நடிக்கிறார் என்பதைக் பார்க்காமல் இருவரும் தங்கள் இதயங்களில் எத்தனை அச்சங்கள், குறைபாடுகள், என்று ஆராய்ந்து கொண்டிருப்பார்கள்.

"சரி, எழுந்திரு, படம் முடிந்து விட்டது..." அவன் எழுந்து நிற்பான். கஜலும் திடுக்கிட்டு எழுந்து விடுவாள். தன் சிந்தனைகளில் மூழ்கியவாறு வெளியே வரும்போது சில சமயங்களில் வேறொருவனின் கையை பிடித்துக்கொள்வாள். வேறொருவனுடன் இணைந்து நடப்பாள். ஷாஹீன் திரும்பிப் பார்த்துவிட்டு தனது காரை நோக்கிச் செல்வான். கஜலும் திடுக்கிட்டுச் சுற்றும் முற்றும் பார்ப்பாள். நீல நிறக் காரைப் பார்த்து அதில் ஷாஹீன் உட்கார்ந்திருக்கிறான் என்று தெரிந்துகொள்வாள்.

இரவில் மருத்துவமனையிலிருந்து திருமபி வந்ததும் கஜலுடன் பிணக்குகள் செய்வதற்குப் பதிலாக படிக்கும் அறையில் பத்திரிகைள், சஞ்சிகைகளை எடுத்துக்கொண்டு உட்கார்ந்து விடுவான். அப்போது கஜலுடைய இதயம் வெடித்துவிடும்.

'பார்த்தாயா—என்னை வெறுக்க ஆரம்பித்துவிட்டான். பலவந்தமாக எத்தனை நாட்கள்தான் பாசாங்கு செய்ய முடியும்? அவன் தன் நண்பர்களை எனக்கு அறிமுகம் செய்துவைப்பதில்லை. நான் வெளியே செல்லும்போது யாரைப் பார்த்துக்

கொண்டிருக்கிறேன் என்பதையே கவனிக்கிறான். இதுவரை பாடடுப்பாடும்படி என்னைக் கேட்கவில்லை, பான், பில்கிராமி, நசீர், சர்வர் ஆகியோரைப்பற்றியும் ஒன்றும் கேட்கவில்லை..'

ஷாஹீனின் செல்வாக்குப் பெருக ஆரம்பித்தது. கஜலிடம் ஏமாற்றம் கண்ட அவன் தன் வேலையில் முழுக் கவனத்தையும் செலுத்தினான். அப்போது ஹைதராபாத்தில் திறமையான இதய நிபுணர்கள் குறைவாகவே இருந்தார்கள். அதனால் தன் நேரத்தின் பெரும்பகுதியைத் தன் மருத்துவத் தொழிலில் செலவழித்தான். காலை எட்டுமணிக்கே மருத்துவமனை திறக்கப்பட்டுவிடும். மதியம் உணவுநேரத்தின்போது கஜலுடன் சிறிது கேலிப் பேச்சுகள் நடக்கும். அதற்குப் பிறகு இரவு பதினொன்று வரை மருத்துவ மனைப் பணியும், பிறகு நோயாளிகள் வீட்டுக்குச் செல்வதும் தொடர்ந்து நடக்கும்.

பிறகு இரவு வரும். அச்சங்கள்—சந்தர்ப்பங்கள்— எச்சரிக் கைகள் தொடரும். கஜல் அழுதுவிடுவாள்.

· ஷாஹீன் இத்தனை முன்னெச்சரிக்கையுடன் இருப்பதைக் கண்ட கஜலுக்கே ஒருநாள் ஆத்திரம் வந்துவிட்டது.

"ஷாஹீன்! நமக்குத் திருமணமாகி ஐந்துஆண்டுகள் கடந்து விட்டன. நிறைய இன்பங்களை அனுபவித்துவிட்டேன். இப்போது எனக்கு என்னுடைய குழந்தை வேண்டும். நான் எப்போது வரை தனியாக இருப்பேன்?"

"உனக்காக நான் இருக்கிறேனே, முட்டாள்! குழந்தைகள் வந்துவிட்டால் நீ இன்னும் கலவரமடைந்துவிடுவாய். கிராந்தியைப் பார்த்தாயா? தன் பெற்றோர்களை எப்படி விமர்சனம் செய்கிறாள். நீ அப்படியும் மக்களைக் கண்டு பயப்படுகிறாயே..."

ஷாஹீனின் பேச்சைக்கேட்டு அவள் மௌனமாகிவிட்டாள். "நீங்கள் சரியாகவே சொல்கிறீர்கள்!"

'நான் யார்—எப்படி இருந்தேன். இதை நான் மறந்து விட்டேன்; ஆனால் ஷாஹீன் மறக்கவில்லை. அவன் குழந்தை களும் மறக்க மாட்டார்கள். அதனால் என்னைத் தன் குழந்தை களின் தாயாக்க அவன் விரும்பவில்லை. அவள் பெயர்கெட்ட பெண்ணாக இருந்ததால் திருமணம் செய்துகொள்ள யாரும் முன்வரவில்லை. ஆனால் ஷாஹீன்அவளுக்காகத் தியாகம் செய் திருக்கிறான். அவன் விரும்பி இருந்தால் இரண்டு மூன்று மாதங்கள் என்னுடன் விளையாடிவிட்டு விரட்டி இருக்கலாம்; ஆனால் இந்தக் கடமையை நிறைவேற்றி வருகிறான்.'

'அதனால் ஃபவுசியாவின் குழந்தைகளை தோள்மீது ஏற்றி அலைகிறான். குழந்தைகளுக்கு விளையாட்டுப் பொம்மைகளும் கடிகாரமும் வாங்கி வருகிறான். பதினைந்து வயது நிரம்பிய

கிராந்தியுடன் குழந்தைகளிடம் பேசுவதைப்போலவே உரையாடு கிறான். ஆனால் எனது வயிற்றிலிருந்து மொக்கு உண்டாக்கிக் கவிதாலயத் தோட்டத்து அழகைக் கெடுத்துவிட விரும்பவில்லை.'

"இப்போது என்ன யோசனை செய்கிறாய்?" அவன் கஜலின் தலையை ஆட்டினான்; பிறகு அமைதியாகக் கூறினான்:

"கஜல்! நான் உன்னை மகிழ்ச்சியுடன் வைத்துக்கொள்ள முடியவில்லை என்பதற்காக வருந்துகிறேன். உன் கனவுகளில் இருந்த ஆடவன் நான் அல்ல. நீ என்னுடைய விருப்பத்திற்காகத் தன்னையே அர்ப்பணித்துவிட்டாய் என்று சில நேரங்களில் நான் நினைக்கிறேன். ஆனால் நான் உன்னுடைய வழியில் தடையாக நிற்கவில்லை. நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம். எது வேண்டுமானாலும் செய்யலாம்."

"எனக்குத் தெரியும்," கஜல் இயலான நிலையில் கூவினாள். "ஆனால் ஆண்டவனுக்காக என்னை இந்த வீட்டைவிட்டுப் போய்விடு என்று சொல்லிவிடாதீர்கள்!" அவள் மௌனமாகி விட்டாள். தான் தவறு செய்துவிட்டோம் என்பது அவளுக்குப் புரிந்தது. 'அவன் என்னை எங்கு வேண்டுமானாலும் அனுப்பத் தயாராக இருக்கிறான். எந்த வினாடியும் என்னை விட்டுவிடுவான். அவன் என்னை விட்டு வெகுதொலைவு சென்றுகொண்டே போகிறான். ஆனால் நான் எங்கே செல்வது?'

"போதும், அழுகை ஆரம்பமாகிவிட்டது." ஷாஹீனுக்கு இந்தச் செய்கை பிடிக்கவில்லை. "உன்னுடன் பேசுவதே சிரமமாக இருக்கிறது. நான் என்ன செய்வது என்று சொல்லேன். வாழ்க்கையே நரகமாகிவிட்டது.'

அவன் 'மினி பார்' திறந்து மதுப்புட்டியை எடுத்தான்.

காலைச் சிற்றுண்டியின்போது இருவருடைய முகங்களும் வீங்கி இருந்தன. கிராந்தி மதிப்பெண் அறிக்கையைக் கொண்டு வந்தாள். மெட்ரிக் பரீட்சையின் முடிவு வந்திருந்தது. அவள் முதல் வரிசையில் தேர்வு பெற்று இருந்தாள். "அங்கிள்! எனக்கு சைக்கிள் வாங்கிக் கொடுங்கள். நீங்கள் வாக்குக் கொடுத் திருந்தீர்கள்."

"பெண்கள் சைக்கிளில் செல்வதில்லை. எந்தப் பெண்ணாவது போவதைப் பார்த்திருக்கிறாயா?"

"யாரும் போகாமல் இருக்கலாம். நான் போனால் யார் என்ன செய்து விடுவார்களாம்?"

"இப்போதே இத்தனை ஆணவமா? எப்போதும் என் பேச்சைக் கேட்பதில்லை" கஜல் உதவியை நாடி ஷாஹீனைப் பார்த்தாள்.

"இது கவிதாலயத்தின் மரபாகும்" என்று ஷாஹீன்சொல்லி விட்டு, கிராந்தியைப் பார்த்து, "நான் உனக்கு சைக்கிள் வாங்கித்

தருகிறேன்" என்றான்.

"ஆதரவில்லாத பெண்கள் மீது கருணைபுரியும் மரபுவழிக்கு நீங்கள் அடித்தளம் போடுகிறீர்கள்" கஜல் எரிச்சலுடன் கூறினாள்.

"கருணையா? நான் யார்மீது கருணை புரிய முடியும்?" ஷாஹீன் சிகரெட்டைப் பற்ற வைத்துத் தீக்குச்சியை அணைத்து விட்டான். "நானொரு பொல்லாத கருணையில்லாத கொடுமை யான டாக்டராக்கும். இதயங்களைக் கிழித்து வீசி எறிபவன். மனிதர்களைத் துண்டுகளாக்கி விடுபவன். கருணை என்ன? உணர்ச்சிகள் யாவை? அன்பு எத்தகையது என்பது எல்லாம் எனக்கு என்ன தெரியும்?"

"உங்களுக்கு அன்பு, மதிப்பு, நீதி எதுவுமே கிடைக்கவில்லை என்று வெளிப்படையாகவே சொல்லுங்களேன்!" கஜல் கோபம் மேலிடக் கத்தினாள். "ஒரு வேசியை மணம் செய்துகொண்டால் என்ன கிடைக்கப்போகிறது? நீங்கள் எதை எதிர்பார்த்தீர்கள்? நீங்கள் எனக்கு அன்பு, செல்வம், புகலிடம் முதலியவற்றைப் பிச்சையாகக் கொடுத்தீர்கள். என்னிடம் ஒன்றுமே இல்லையே. பின்னால் மிகவும் வருத்தப்படப் போகிறீர்கள் என்று முன்பே சொல்லி இருந்தேன்."

"நீங்கள் எதற்காக வருத்தப்படவேண்டும் அங்கிள், கஜல் ஆன்ட்டி உங்களுக்குத் தகுதியானவளாக இல்லை என்றால் நீங்கள் விவாகரத்து செய்துவிடலாமே!" கிராந்தி ஷாஹீன் தோள்மீது கை வைத்துச் சொன்னாள்.

அவளுடைய பேச்சைக்கேட்டு, ஷாஹீனும் கஜலும் மௌன மாகி விட்டார்கள். அவள் இப்போது பதினைந்து வயதுப் பெண் என்பதை இருவருமே மறந்துவிட்டார்கள். அவள் பல நூல்களை, கதைகளை, நவீனங்களைப் படித்துவிட்டாள். இரவும் பகலும் புத்தகங்களில் மூழ்கி இருக்கிறாள். என்றாலும் பள்ளியில் முதல் வரிசையில் நிற்கிறாள். அவளுக்கு நண்பர்களும் மிகக் குறைவு. அவள் தனியாகவே அலைவாள். நூல்களைப் படித்துச் சோர்வடையும் போது தனியாகவே உலவி வரக் கிளம்பிவிடுவாள். வண்ணங்களும் தூரிகையும் எடுத்துப் படங்கள் வரைவாள். பலகணியைத் திறந்து சந்தையை வெகுநேரம்வரை பார்த்துக் கொண்டே இருப்பாள்.

கிராந்தியுடன் நட்புறவு கொள்ளவேண்டுமென்று கஜல் எவ்வளவோ விரும்பினாள். அவளும் தனியாகத்தானே இருக் கிறாள். அவளுடைய பேச்சைக் கேட்பதற்கு யாராவது இருக்க வேண்டும். யாரிடமாவது தன் மனநிலையைச் சொல்ல வேண்டாமா. ரஜியாவும் ரஷீதும் அறவே ஒதுக்கிவிட்டார்கள். அவள் கீழே இறங்கி வருவதற்கான அனுமதி இல்லை. ஷாஹீனைக்

கஜல் தனதாக்கிக் கொண்டதற்கான தண்டனை இது. ஷாஹீன் என்னுடையவன் அல்ல. ரஜியாவிடமிருந்து அவள் எதையும் அபகரித்துக் கொள்ளளவில்லை என்றுசொல்லிவிட வேண்டும் என்று கஜல் பலமுறை நினைத்தாள். அதனால் அவள் கிராந்தி யுடன் நட்புரிமை பாராட்ட விரும்பினாள். ஏனெனில் கஜல் கிராந்தியை மிகச் சிறியவள், அறிவில்லாதவள் என்று நினைத் தாள். ஆனால் அவளோ கஜல்-ஷாஹீன் ஆகியோரின் உறவு பற்றியும் ஆராய்ந்திருக்கிறாள்.

இனி கஜல் எங்கே செல்வாள். கவிதாலயம் இதுவரை ஷாஹீனின் வைப்பாட்டி என்பதைவிட அவளுக்கு அதிக முக்கியத்துவம் எதுவும் தரவில்லை. ரஷீத் ஒருமுறை கூட அவளை மருமகளே என்று அன்போடு அழைக்கவில்லை. 'பதினாலும் பெற்று நீடு வாழி" என்று ரஜியாவும் ஆசீர்வதிக்கவில்லை. ரஜியா, அவள் அணிந்துகொள்வதற்காகக் குடும்பத்தின் எந்த நகையையும் கொடுக்கவில்லை. நசீருடைய குடும்பத்தில் மணமகள் அணிய வேண்டிய மோதிரம் மட்டுமே அவளுடைய கையில் இருந்தது. இந்த மோதிரத்தை யார் கொடுத்தது என்று ஷாஹீன் இதுவரை கேட்கவில்லை. இப்போது திருமதி ஷாஹீன் ஆகிவிட்ட பிறகு இந்த மோதிரம் தன்னுடைய கையில் ஏன் இருக்கிறது என்று பலமுறை நினைத்த கஜல் அதைக் கழற்றி ஒப்பனை மேசையின் மேல் போட்டுவிட்டாள்; அவளுடைய இதயம் துக்கமடைந்தது. அவளுடைய உயிர் பிரிவதுபோல் தோன்றியது. அவள் நசீரிடம், 'என் உயிர் இந்த மோதிரத்தில்தான் இருக்கிறது' என்று சொல்லியிருக்கிறாளே! நசீர் இல்லாமல் வாழ அவள் கற்றுக் கொண்டாள். ஆனால் மோதிரம் இல்லாமல் சில நிமிடங்களும் அவளால் இருக்க முடியவில்லை. ஒருமுறை மோதிரத்துடன் அவள் விளையாடிக் கொண்டிருந்தபோது கிராந்தி அவளைப் பார்த்துவிட்டாள்.

"உங்களுடைய நிச்சயதார்த்தத்தின் மோதிரமா இது?"

"ஆம். இந்த மோதிரத்தில் என் உயிர் இருக்கிறது." அவள் உணர்ச்சி வசப்பட்டு இதைச் சொல்லிவிட்டாள். அதற்குப் பிறகு அவளுடன் பேசும் போதெல்லாம் முன்னெச்சரிக்கையாக நடந்துகொண்டாள்.

"உங்கள் உயிரா? அது எப்படி ஆன்ட்டி?"

"கேள் கிராந்தி..." அவள் பேச்சை உடனடியாக மாற்றினாள். நான் செத்துப்போனாலும் எனது விரலிலிருந்து இதை கழற்றக் கூடாது என்று எல்லாரிடமும் சொல்லிவிடு!"

"எனக்குப் புரிந்துவிட்டது. இது உங்கள் காதலின் நினைவுப் பொருளாகும். உங்கள் உயிர் இந்த மோதிரத்தில் இருப்பதாக

தப்பெண்ணம் கொண்டிருக்கிறீர்கள்." அவளது அறியாமையைக் கண்டு கிராந்தி சிரித்துவிட்டாள்.

"இந்த விஷயங்கள் உனக்குப் புரியாது. பெரியவளாகி விட்டால் நன்கு புரியும்."

"நீங்கள் என்னைச் சிறுமியாக நினைக்கிறீர்கள் ஆன்ட்டி. பதினாறு வயது நிரம்பிய மங்கை நான். உடலுறவு பற்றிய புத்தகங் களையும் நான் படித்திருக்கிறேன்."

"உடலுறவு பற்றி?" கஜல் திடுக்கிட்டாள்.

"ஆமாம் ஆன்ட்டி," அவள் தன்னுள் மூழ்கியவாறு கஜலின் வியப்பைப் புறக்கணித்துவிட்டாள். "ஆன்ட்டி, நீங்களும் காலம் கடத்திவிட்டீர்கள். ஷாஹீன் அங்கிளை மணந்து கொண்டீர்கள். இப்போது அழுது அழுது அவருடனேயே இருக்கவும் விரும்பு கிறீர்கள். உங்கள் வழக்கு எனக்குப் புரியவில்லை..."

கிராந்தி மிகவும் அமைதியாகக் கஜலின் படுக்கையின்மீது படுத்தவாறு, சிரித்துப் பேசினாள். வெட்டப்பட்டிருந்த முடி முகத்தின்மீது பரவி இருந்தது. குட்டைப் பாவாடையிலிருந்து கருநிறத் தொடைகள் வெளியே தெரிந்தன.

"அதனால்தான் நீ இதுவரை யாரையும் காதலிக்கவில்லை போலும்." கஜல் மிகச் சிரமத்துடன் வேடிக்கையாகப் பேசினாள். கிராந்தியுடன் மனம் திறந்துபேசவேண்டும் என்று அவள் பல நாட்களாக விரும்பினாள். இவளுடைய விவாகம் ஏதேனுமொரு இடத்தில் நடந்துவிட்டால் இந்தப் பொறுப்பிலிருந்து விடுதலை கிடைத்துவிடும்.

"நான் எப்படி காதலிப்பது ஆன்ட்டி? கல்லூரியிலும் பல பெண்கள் இதையே கேட்கிறார்கள்." அவள் தலையணையை மார்புக்குக் கீழே வைத்து குப்புறப்படுத்துக் கொண்டாள். 'யாரேனும் ஒரு பையனைப் பற்றி நினைக்கும்போது எண்ணங்கள் சிதறி விடுகின்றன.." அவள் அப்பாவித்தனமாகச் சொன்னாள்.

"நல்லது ஆன்ட்டி. ஒன்று சொல்லட்டுமா?" அவள் எழுந்து உட்கார்ந்தாள். "ஒரு பையன்—ஷஆதத்—என்னைக் காதலித்தும் இருக்கிறான்.

"அப்படியா?" கஜல் நிமிர்ந்து உட்கார்ந்தாள். "என்ன நடந்தது? முழு விஷயத்தையும் சொல்லு..."

ஆனால் கிராந்தி மறுபடியும் படுத்துவிட்டாள். இது முக்கியமான விஷயம் இல்லை என்று காட்டுவதுபோல்!

பிறகு அவள் தன் இரு கைகளையும் மடக்கித் தலைக்குக் கீழே வைத்தவாறு படுத்தாள்; கூரையைப் பார்த்துச் சொன்னாள்.

"என்னுடைய வகுப்பிலேயே ஷஆதத் படிக்கிறான். அவன் என்னை அடிக்கடி சுற்றிச் சுற்றி வந்தான். என்னுடைய பேச்சு

களைக் கேட்டான். எனக்காகக் காட்பரிஸ் சாக்லெட்டுகளும், ச்சூயிங்கம்மும் கொண்டுவருவான். எனக்காகப் பாடக் குறிப்பு களும் எழுதிக் கொடுப்பான். என்னுடைய வகுப்பில் நன்றாகப் படிக்கக் கூடியவன் அவன். ஒருநாள் கல்லூரிக்குப்போகும் பேருந்தில், என்னை மிகவும் விரும்புவதாகவும், எப்போதும் என் நினைவிலேயே இருப்பதாகவும் சொன்னான். நான் உடனே அவனுடைய பேச்சைப் புரிந்துகொண்டேன்." பிறகு அவள் பேச்சை நிறுத்தி எழுந்து உட்கார்ந்து கொண்டாள். "ஆனால், ஆன்ட்டி, நான் உண்மையைச் சொன்னால் நீங்கள் கோபப்பட மாட்டீர்களே..."

"இல்லை, முழுவதையும் சொல்..." உண்மைக்காக நடந்த போரில் உயிரைக் கொடுத்தவர்களின் சந்ததி இவள் என்பது கஜலுக்குத் தெரியும்.

"ஒரு நாள் ஷஆதத் என்னிடம் அன்றிரவு ஏரிக்கரையில் சந்திக்கலாம் என்றான். நானும் அங்கு போய்விட்டேன். ஏதேனுமொரு உணவுவிடுதியில் அறை எடுத்துக் கொள்கிறாயா, அல்லது உனது வீட்டுக்கே அழைத்துப்போகிறாயா என்று அவனிடம் கேட்டேன். ஏனெனில் உங்கள் பயத்தால் அவனை நான் இங்கு கொண்டுவர முடியவில்லை."

அவள் தனது சுருள் முடியை அகற்றியவாறு பிணக்குடன் கஜலைப் பார்த்தாள். அவள் வாயைத் திறந்தவாறு அவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"என்னுடைய பேச்சைக் கேட்டு அவன் கலவரமடைந்து விட்டான். பிறகு கேட்டான். நாங்கள் இருவரும் திருமணம் செய்து கொள்ள முடியுமா என்று—அதே அறியாமை—அதே வெற்றுரை, ஆன்ட்டி, எனக்குக் கோபம் வந்துவிட்டது. இதனால் எந்த மாறுதலும் வரப்போவதில்லை. நான் இந்த வினாடியைப் பற்றிக் கேட்கிறேன். உன்னை எனக்குப் பிடிக்கிறது. நான் உன்னுடன் வரத்தயார் என்று கூறினேன். அவனோ ஒரே பேச்சை, 'நீ என்னுடன் திருமணம் செய்துகொள்ள முடியுமா, இல்லையா' என்றுதான் மீண்டும் மீண்டும் கேட்டான்."

"பிறகு என்ன நடந்தது?" கஜல் பயந்தவாறு வினா விடுத்தாள்.

"என்னுடைய மூட் கெட்டுவிட்டது..." அவள் வேகமாகத் தன் காலை அசைக்க ஆரம்பித்தாள். "நான் எதற்காக அவனைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும். திருமணத்திற்குப் பிறகு நான் அவனுடைய பேச்சுகளைக் கேட்க வேண்டும். அவனை தன் தியாகம், தன் சுதந்திரம் ஆகியவற்றுக்காக என்மீது நன்றிக் கடன் என்ற சுமையைச் சுமத்துவான். நீங்களே யோசனை செய்யுங்கள் ஆன்ட்டி, எந்தக் கணவன்-மனைவி முழு சுதந்திரத்

துடன் இருக்கிறார்கள்? மனம் விரும்பாவிட்டாலும் கணவனுக்குத் துரோகம் இழைக்க என்னால் முடியாது. ஆன்ட்டி, என் பேச்சைக் கேட்டதும் மீண்டும் ஒருநாள் வருவதாகச் சொல்லிவிட்டு அவன் ஓட்டம் பிடித்தான்."

"ஹா... ஹா... ஹா..." தலையணையில் முகத்தைப் புதைத்து அவள் சிரித்தாள்.

"ஆன்ட்டி, எங்கள் கல்லூரியில் இருக்கும் எல்லா மாணவர்களும் தங்கள் பெற்றோர்களைக் கண்டு மிகவும் பயப்படுகிறார்கள். அவர்களின் தாய் விரும்பாவிட்டால் எந்தப் பெண்ணையும் அவர்கள் காதலிக்க முடியாது. எல்லாரும் கோழைகள்!"

"நீயார்?" கஜல் அவளைக் கேட்டாள்.

"நான்—நான் கிராந்திதான். ஆன்ட்டி, என் தாயும் தந்தையும் என்ன தவறுகள் செய்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். எங்கள் விரிவுரையாளர் கோபால் ரெட்டி என்னிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டார். அவர் தனித் திறமையுடைய புலவராவார். தங்களையும் அங்கிளையும் அறிமுகம் செய்து வைக்க அவரை ஒருநாள் இங்கு அழைத்து வருகிறேன். ஆன்ட்டி, நாளை நான் என்ன செய்ய வேண்டும், எங்கு போக வேண்டும் என்பதைக் கோபால் ரெட்டி விளக்கியிருக்கிறார்..."

கிராந்தி பேசிப் பேசிச் சோர்வடைந்துவிட்டாள். வெகு நேரம் வரை கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். என்ன சிந்தனை செய்தாளோ, தெரியவில்லை.

பிறகு திடீரென்று எழுந்து உட்கார்ந்தாள். "நானும் என் உரிமையைப் பறிக்கச் செல்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே கட்டிலிலிருந்து கீழே குதித்தாள்.

ஆனால் கஜல் எதுவும் பதிலளிக்கவில்லை.

அவள் மௌனமாக உட்கார்ந்து சூனியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய இரண்டு கன்னங்களும் கண்ணீரால் நனைந்துவிட்டன.

# 30

கவிதாலயத்தின் அந்தச் செழிப்பான தோட்டம் இப்போது அழிவுறும் நிலையில் இருந்தது. மாளிகையில் நிசப்தம் நிலவியது. உலர்ந்த இலைகள் கண்ணீரைப்போல் நாள் முழுவதும் விழுந்து

கொண்டிருந்தன. பிறகு ஷாஹீனின் ஆணைப்படி சலவைக்காரன் அழைக்கப்படுவான். அவன் எல்லா இலைகளையும் சேகரித்துக் கொண்டுபோய்விடுவான்.

மாம்பழம், சீதாப்பழம், சப்போட்டா, ஆரஞ்சு முதலியவை தாமே பழுத்துக் கீழே விழும். ஆனால் அவற்றை எடுப்பதற்கு எந்தக் குழந்தையும் ஓடி வராது. எல்லாக் கொடிகளும், செடிகளும் ஒழுங்குமுறையை மறந்து முட்புதர்களில் கலந்துவிட்டன; மரபு வழிமுறைகள் உடைந்து போயின. ரோசாச் செடிகளை வெட்டி தோட்டக்காரன் அங்கு மக்காச் சோளத்தைப் பயிரிட்டு விட்டான்.

உட்புறத்திலும் எல்லா அறைகளும் மூடப்பட்டன. மாலையில் தாழ்வாரத்தின் விளக்கை ரஜியா போட்டுவிடுவாள். அதைத் தவிர அவளுடைய அறையின் விளக்கு மட்டும் எரியும். இரவு ரஷீத் திரும்பி வந்ததும் இருவரும் தாழ்வாரத்திலேயே சாப்பிடுவார்கள். பிஸ்மில்லா பீ அவசர அவசரமாக எல்லாவற்றையும் எடுத்துவைத்துவிட்டுத் தூங்கச் சென்று விடுவாள்.

கவிதாலயத்தின் பெரிய கூடம் மட்டும் சிறப்பாக இருந்தது. ஏனெனில் ரஷீத் அங்குதான் உட்காருவான். குத்தகைகளை விட்டுவிட்டு இப்போது காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து விட்டான். முதல் தேர்தல் வந்ததும் காங்கிரஸ் வேட்பாளனாக அவன் போட்டியிட்டான்.

சில நாட்களுக்குப் பிறகு கிராந்தியையும் ரஜியா மேல் மாடிக்கே அனுப்பிவிட்டாள். மேல் மாடியிலும் ஆரவாரம் குறைவாகவே இருந்தது. கல்லூரியிலிருந்து வந்த பிறகு கிராந்தியின் கூச்சலும் கேலிப்பேச்சும் சிறிது நேரம் வரை கேட்கும். அதற்குப் பிறகு ஏதேனுமொரு புத்தகத்தை எடுத்துக்கொண்டு தன் அறைக்குள் அவளும் சென்றுவிடுவாள்.

கஜல், கிராந்தியின் குரல்கள் கீழே கேட்காது.

வெளியே புல்வெளியில் குதித்தும் பறந்தும் செல்லும் வண்ணக் குருவி தாழ்வாரத்தின் முன்னால் இருந்த கரு வேப்பிலைச் செடியில் வந்து உட்காரும். நான்கு திசைகளையும் சுற்றிச் சுற்றிப் பார்த்துவிட்டு வாலை அசைத்தவாறே ஒவ்வொருவரிடமும் ஆங்கிலத்தில் நலம் விசாரிக்கும். ஷூ... ஷூ... ஷூ... சூ... சீழ்க்கை அடிக்கும் குருவி, இந்த வீட்டில் இத்தனை நிசப்தம் ஏன் நிலவுகிறது. வாஹித் ஹுசேன் எங்கே போய்விட்டார், அவர் தன் கஜல்களைப் படித்துக்காட்ட ஏன் வருவதில்லை. நொண்டி அத்தை காணாமல் போய்விட்டாளே, அவள் தன் குரலுக்கு எதிராகக் குருவியின் கீச்சுக் கீச்சை எப்போதும் விரும்ப மாட்டாளே, "ஓடிவிடு, எப்போது பார்த்தாலும் பேசுகிறாய்" என்று அதட்டுவாளே என்றெல்லாம் எண்ணியது.

முறத்தை வலையாக்கி அதைப் பிடிக்க முயன்ற அந்தச் சிறு குழந்தைகள் எங்கே போய்விட்டன? அந்த ஆணவக்காரி பஷீர் ஒருமுறை கல்வீசி எறிந்தாளே. கருணை காட்டும் பதூல் ரொட்டித் துண்டுகளைக் கொண்டுவந்து போடுவாளே—குறும்புக்காரி சாந்த் அதன் குரலுடன் தன் குரலை இணைத்துச் சீழ்க்கை அடிப்பாளே. அழுமூஞ்சி கஜல்! அவளை இதன் சீழ்க்கையால் சிரிப்பூட்ட முடியவில்லை.

பல மாதங்கள் கழிந்தும் ஃபவுசியா தாய்வீடு வரவில்லை...

தன் ஒரே சகோதரனின் முட்டாள்தனத்தைக் கண்டு தன் தாயைப் போலவே அவளுக்கும் பெருங்கோபம் வந்தது. அண்ணனின் திருமணத்திற்காக வரதட்சணைப்போர் நடத்த வேண்டும். வீட்டில் ஆரவாரம் செய்ய வேண்டும் என்ற ஆசைகள் எல்லாம் இதயத்திலேயே மடிந்துபோய் விட்டனவே என்ற வருத்தமும் இருந்தது. இருந்தாலும் அவளால் கஜலை வெறுக்க முடியவில்லை. ஏனெனில் கஜல் சம வயதுடைய சகோதரியாகவும் தோழியாகவும் இருந்தாள். மேலும் விதி ஃபவுசியாவுக்கு எதுவும் கொடுக்கவில்லை என்ற ஒரு காரணமும் இருந்தது. கணவனின் அன்பு கிடைக்காத ஏமாற்றத்தில் குழந்தைகளில் அமைதி காணவிரும்பியபோது ஏழு குழந்தைகளைப் பெற்றெடுத்து விட்டாள். சிறிய குழந்தையை ரஜியா வளர்த்ததால் ஃபவுசியாவின் சுமை குறைந்துவிட்டது. அதற்கு அடுத்த குழந்தை வரும்போது அது ரஜியாவிடம் அனுப்பப்பட்டு, முதல் குழந்தை திருப்பி எடுத்துக் கொள்ளப்படும். ஃபவுசியாவின் கணவன் இப்போது மூன்று மனைவிகளின் காவலன்; ஒவ்வொரு மனைவிக்கும் ஐந்து, ஏழு குழந்தைகள் இருந்தன. அதனால் அவன் மனைவியரை விட்டுவிட்டு வேலைக்காரிகள், மருத்துவமனைத் தாதியரிடம் புகலிடம் தேடிச் செல்வான். ஃபவுசியாவின் கொள்ளை அழகும் இறுமாப்பும் காணாமற் போய்விட்டன. அவள் மிகவும் மெலிந்து விட்டாள். ஒவ்வொரு குழந்தையின் பிறப்பின்போதும், இம்முறை அவள் உயிர்தப்பி வரமாட்டாள் என்றுதான் எல்லாரும் நினைத் தார்கள். ஆனால் அவளுடைய டாக்டர் கணவன் சில புட்டி இரத்தத்தை உடலுக்குள் ஏற்றி, அவளை மீண்டும் வாழ்க்கை மைதானத்திற்கு இழுத்துவந்து, அடுத்த ஆண்டே மீண்டும் தாயாக்கிவிடுவான். இப்போது அவளுடைய மாமியாருக்கு, சம்பந்தி வீட்டுக்காரர்களின் கெட்டுப்போன நெய்யைக் குறித்து எந்த ஆட்சேபணையும் இருக்கவில்லை. ஆனால் அவள் வீட்டை விட்டு வெளியே வருவதில்லை. மூத்த மனைவி என்பதால் கணவனின் எல்லா வேலைகளையும் கவனிக்கும் பொறுப்பு அவளிடம் இருந்தது. பிறகு சக்களத்தியர்களின் சண்டைகளைத்

தீர்த்துவைப்பதும், அவர்களுடைய குழந்தைகளின் பொறுப்பு களைக் கவனிப்பதும் அவளுடைய கடமையாக இருந்தது.

இருப்பினும் தாய்வீட்டுக்கு வரும்போது அவளுடைய முழு நேரமும் கஜலுடன் கழிந்தது. அவள் கஜலின் வயதுடையள்தான் என்றாலும் பத்துவயது மூத்தவளாகக் காட்சி தந்தாள். பல இடங்களில் முடி நரைத்து விட்டது. உடல் மெலிந்து அழகை இழந்துவிட்டது. படபடப்பு, இரத்தக் குறைவு, சோர்வு காரணமாக முகத்தில் களை இருக்கவில்லை.

கஜலின் நற்பேறு அவளைப் பொறாமை கொள்ளச் செய்யும். இந்தப் பெண் எத்தனை அதிருஷ்டசாலி. விருப்பம்போல் அனுபவித்து வருகிறாள். பல ஆடவர்களுடன் இன்பங்கள் பெற்ற பிறகு ஷாஹீனைப் போல் அழகான, உயர்குடியைச் சார்ந்த, கல்வியறிவு பெற்ற ஆணைக் கவர்ந்துவிட்டாள். எல்லாரையும் ஒருபுறமாக ஒதுக்கிவிட்டு கவிதாலயத்தின் அரசியாகிவிட்டாள்.

இவர்களுடைய வாழ்க்கை எவ்வளவு அமைதியாக நடக்கிறது. ஃபவுசியா என்றுமே அண்ணா அண்ணி சண்டை போட்டதைப் பார்க்கவில்லை. அவர்கள் ஒருவரையொருவர் எந்தக் குறையும் சொல்லவில்லை. அதைவிடப் பெரிய விஷயம் யாதெனில் குழந்தைகளும் பிறக்கவில்லை. ஃபவுசியாவைப் பொறுத்தவரை இது ஆண்டவனின் சீற்றம்தான். கஜலுக்கு இருபத்தைந்து வயதாகிவிட்டது. ஆனால் பதினாறு வயதுள்ள பெண்ணைப்போன்று வாளிப்புடன் இருக்கிறாள். அவர்களைப் போலவே பலவித ஒப்பனைகளும் நவநாகரிக ஆடைகளும் அணிந்து கொள்கிறாள். பிறகு ஆடவன் எதற்காக இங்கும் அங்கும் அலையப் போகிறான். மனைவியின் முன்றானையைப் பிடித்துக் கொண்டு நிற்கிறான். எந்த வேலைக்காரியையும் ஷாஹீன் இருளில் இங்கும் அங்கும் பிடித்ததாக எந்தச் சேதியையும் ஃபவுசியா செவியுறவில்லை.

இப்படி இருந்தாலும் அவள் மேல் மாடிக்கு வந்த போதெல்லாம் கவிதாலயத்தின் அச்சந்தரும் சூனியம் அவளைக் கலவரப்படுத்தியது. இனி இந்த வீட்டில் எந்தக் குழந்தைகள் விளையாடப் போகிறார்கள் என்ற கவலை தோன்றியது.

ஒரே மகனான ஷாஹீன் தன் வாரிசை உருவாக்கவில்லை என்றால் கவிதாலயத்தின் வரலாற்றுப் புகழ்மிக்க மலர்ச்சோலை அழிந்துவிடுமே.

பெற்றோர்களின் விருப்பம் இல்லையென்றாலும் ஃபவுசியா ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் அண்ணனின் குலவிளக்கு ஒளிபெற வேண்டுமென்று பிரார்த்தனை செய்தாள். மருத்துவ ஆலோசனை பெறுமாறு அண்ணியை வற்புறுத்தினாள்.

குழந்தைகளின் ஆசையே இல்லாத எத்தகைய பெண் இவள் என்று வியப்பும் கொண்டாள். வீட்டினுள் தனியாகக் கிடக்கிறாள். ஃபவுசியாவின் சிறிய குழந்தையை மாடிக்கு அழைத்துச் சென்று அதனுடன் விளையாடுகிறாள். ஆனால் தனக்குக் குழந்தை பிறப்பதை விரும்பவில்லை. இறுதியில் ஒரு நாள் ஃபவுசியா கோபமாகக் கேட்டுவிட்டாள் "உன்னுடைய சிகிச்சையில் நீ ஏன் கவனம் செலுத்துவதில்லை. இது புரியாத புதிர்தான்!"

"ஏனென்றால் எனக்கு எந்த வியாதியும் இல்லை" கஜல் பதிலளித்தாள்.

"அப்படியென்றால்...?" பவுசியா வியப்படைந்தாதள்.

"ஃபவுசியா..." கஜல் மெதுவாகச் சொல்ல ஆரம்பித்தாள். "நானொரு வேசி என்பதை நீ ஏன் நினைவுபடுத்திக் கொள்வதில்லை. பத்து ஆடவர்கள் என்னை ஒதுக்கிவிட்டார்கள். இந்த ஷாஹீன், வாஹித் ஹுசேன்—அமீருத் தவ்லாவின் பேரன் அல்லவா? இந்தக் கவிதாலயத்தின் நரம்புகளில் ஓடும் குருதி அசுத்தமடைந்துவிட வேண்டும் என்று நீ விரும்புகிறாயா? நீ எனக்கு இந்த வீட்டில் கருணை காட்டிப் புகலிடம் தந்தாய் ஃபவுசியா. ஆனால் நான் உன்னை நர்ணமடையச் செய்ய மாட்டேன். நீ உன் அண்ணனுக்கு இன்னொரு திருமணத்தைச் செய்துவை. நல்லதொரு குடும்பப் பெண்ணைக் கொண்டுவா. அவளுக்குப் பிறக்கும் குழந்தை மரபின் பெருமையை நிலை நாட்டட்டும்" அவள் விம்மினாள். ஃபவுசியாவின் தோள்மீது அவளுடைய தலை இருந்தது. இரண்டு கைகளாலும் அவள் ஃபவுசியாவைப் பிடித்துக் கொண்டிருந்தாள். தன்னை மார்புடன் அணைத்து அவள் தேற்றுவாள், தன் அண்ணனிடம் இதற்குரிய விடையைக் கேட்பாள் என்று கஜல் எதிர்நோக்கினாள். ஆனால் ஃபவுசியா கஜலுடைய தலையைத் தன் தோளிலிருந்து நகர்த்தி விட்டு, மெதுவாகக் கீழே சென்றுவிட்டாள்.

# 31

இரவு முதல் ரஷீதுக்கு உடல் நலம் இல்லை; இலேசான மாரடைப்பு வந்துவிட்டது. ஏனெனில் தேர்தலில் அவன் தோற்று விட்டான். ஐம்பதினாயிரம் ரூபாய், வருங்கால அமைச்சகம், அரசின் நம்பிக்கை—மனிதன் எத்தனை தோல்விகளைத்தான் சகிப்பது.

இன்று கஜலும் கிராந்தியுடன் கீழே வந்தபோது யாரும் தடை சொல்லவில்லை. மிகவும் குழம்பிப் போயிருந்த ரஜியாவுக்குக் கோபம்கொள்ள நேரம் இல்லை.

எல்லாரும் ரஷீதின் அறையில் கூடி இருந்தார்கள். இரவு ஒன்பது மணி ஆகிவிட்டது. குளிர் அதிகரித்துவிட்டது. ஆனால் ஃபவுசியாவின் குழந்தைகள் ஆரவாரம் செய்து கொண்டிருந் தார்கள். ஷாஹீனும் மருத்துவமனையை மூடிவிட்டுச் சீக்கிரமே வந்துவிட்டான். மருந்துகளுக்குப் பதிலாக நல்ல நல்ல செய்தி களைப் பகுதி பகுதியாக மருந்துபோல் கொடுத்தான்.

நேற்றைவிட ரஷீதின் நிலை இப்போது தேறியிருந்தது. கஜலும் கிராந்தியும் கீழே வந்திருப்பது அவனுக்குப் பிடித்தது. வீட்டில் எல்லாரும் நிறைந்திருந்ததையும் அவன் விரும்பினான். தன்னை மகிழ்விக்கவே ஷாஹீன் இந்தப் பேச்சுப் பேசுகிறான் என்பது அவனுக்குத் தெரியும். என்றாலும் ஷாஹீன் பக்கத்தில் உட்கார்ந்து சிரிப்பொலிகளைக் கிளப்பியது அவனுக்குப் பிடித்தமாக இருந்தது.

பிறகு கதவின் திரையை எடுத்தவாறு ஷேகு மியான் உள்ளே வந்தார். இறுகிய கால்கள் கொண்ட பைஜாமாவும், 'டுவிட்' ஷேர்வானியும், துருக்கியத் தொப்பியும் அணிந்திருந்தார். முகச் சவரம் சுத்தமாகச் செய்யப்பட்டிருந்தது. அவருக்குப் பின்னால் நொண்டியவாறு நொண்டி அத்தை வந்து நின்றாள். ஆனால் அவளை முதல் பார்வையிலேயே அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவள் தன் தலைமுடிக்குச் சாயம் பூசியிருந்தாள். காதுகளில் மலர் போன்ற காதணிகள், கழுத்தில் ஏழுவரிசை மாலை, சந்திர மாலை, கருமணி மாலை அணிந்திருந்தாள். ரோசா நிறப் பட்டுச் சேலையும், கைகளில் ஒளிவிடும் முத்துப்பதித்த வளையல்களும் இருந்தன.

அறையில் அவளை விடச் சிறியவர்களே உட்கார்ந்திருந் தார்கள், என்றாலும் அவள் குனிந்து எல்லாரையும் வணங்கினாள். பிறகு ரஜியாவை அணைத்துக்கொண்டு அழுதாள்.

கோபம் மேலிட ரஜியாவின் முகம் சிவந்து விட்டது. அவள் நொண்டி அத்தையைத் தள்ளிவிட்டுக் கடுமையான குரலில் கேட்டாள்.

"நீங்கள் இருவரும் எதற்காக, யாருடைய அனுமதியுடன் இங்கு வந்திருக்கிறீர்கள்?"

"உஷ்... சும்மா இரு ரஜியா," ரஷீத் கோபத்துடன் கூறினான். "அவர்களைப் பேசவிடு. வந்தவுடன் சண்டை போடுகிறாயே..."

"ரஜியா என்னுடன் சண்டை போடுவாள். வசைமொழிகள் பாடுவாள் என்பது எனக்குத் தெரியும் ரஷீத் மியான்... ஏனெனில் நான் என்னுடைய உரிமையை எடுத்துக்கொண்டேன் அல்லவா?"

கிராந்தி எல்லாரையும் விட்டுத் தனியாக ஒரு புத்தகத்தைத் திறந்தவாறு நாற்காலியின் மீது உட்கார்ந்திருந்தாள். ஆனால் நொண்டி அத்தையின் பேச்சைக் கேட்டு, வேடிக்கை பார்ப் பதற்காக, புத்தகத்தை வீசி எறிந்துவிட்டு வந்து நின்றாள்.

"ஆனால் பேராசையைவிட்டுவிடு மகளே!" நொண்டி அத்தை பேசினாள். "உன்னுடைய மாமனார் என்னை மேல்மாடியிலிருந்து கீழே தள்ளிவிட்டு, தன்னுடன் கல்லறைக்கு என்ன கொண்டு சென்றுவிட்டார்? நீ மட்டும் என்ன கொண்டு போக முடியும்? பார்—நாய்கள் விட்டு வைத்த எச்சிலை நீ சாப்பிடுகிறாய்... இறைவனின் சீற்றத்தைக் கண்டு பயப்படு!"

"வெட்கங்கெட்ட கிழவியே, சும்மா இரு" ரஜியாவின் கோபம் எல்லையைக் கடந்தது. "சிறிதும் வெட்கமில்லை. வெள்ளை முடியில் கருப்புப் பூசி வேடிக்கை காட்டுகிறாயே. இப்போது எனக்கு அறிவு சொல்ல வந்துவிட்டாய்..."

கஜல் பின்புறமாக நகர்ந்து கோபமாக நடுங்கிக் கொண்டு இருந்த ஷேகு அண்ணாவைப் பார்த்தாள். அத்தைக்கும் தன் அன்னைக்கும் இடையே நடக்கும் சூடான பேச்சுகளை ஷாஹீன் கவனமாக கேட்டுக்கொண்டிருந்தான். ஆனால் கிராந்திக்குச் சிரிப்பு தாங்கவில்லை. ஒரு நகைச்சுவை நாடகத்தைப் பார்ப்பது போல் இந்தச் சண்டையை அவள் வேடிக்கை பார்த்தாள்.

"நான் வேறு என்ன செய்வதாம்? வாஹித் அண்ணா மேல் மாடியிலிருந்து என்னைத் தள்ளி இந்த வீட்டைவிட்டு நான் போகமுடியாதபடி என் கால்களை உடைத்துவிட்டார். நான் இந்த வீட்டில் வாழ்கின்றவர்களின் ஒவ்வொரு நரம்பையும் நன்றாக அறிவேன். நீங்கள் எல்லாம் ஒரே வகையினர்தாம். ஒருமுறை என்னைக் கீழே தள்ளிவிடுகிறீர்கள். ஒருமுறை சாந்தைத் தீக்குழியில் போட்டுவிடுகிறீர்கள்... உங்கள் கவிதையாம் கவிதை... பெண்ணைச் சூரையாடும் இந்தக் கவிதாலயத்தின்மீது மண்ணைப்போடுங்கள்."

கவ்ஹர் அத்தை கூச்சலிட்டுச் சோர்வடைந்ததும் ஒருபுறம் சாய்ந்தபோது ஷேகுமியான் அவரைத் தாங்கிக் கொண்டார். "போதும் கவ்ஹர் பேகம். இங்கு நாம் சண்டையிட வரவில்லை."

பிறகு ஷேகுமியான், நொண்டி அத்தையின் உடலில் இருந்த நகைகளை ஒவ்வொன்றாகக் கழற்றி ரஷீதிடம் விசி எறிய ஆரம்பித்தார்.

"இந்தாருங்கள் ரஷீத் மியான். இந்த நகைகளை உங்கள் இரும்புப் பெட்டகத்தில் வைத்துப் பூட்டிக் கொள்ளுங்கள். எனக்கு இந்த நகைகள் வேண்டாம். ஒரு கவ்ஹரே போதும் என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்."

ரஷீத் தங்கக் காப்புகளைக் கையில் பிடித்தவாறு வியப்புடன்

பார்த்தான். மகிழ்ச்சி மேலிட நடுங்கினான். பிறகு நாற்பது தோலா எடையுள்ள பளுவான மாலை அவனது நெஞ்சின் மேல் வந்து விழவே, அவன் இரண்டு கைகளாலும் தனது மார்பைப் பற்றிக் கொண்டான்.

ஷாஹீன்—கஜல்—பவுசியா—கிராந்தி—எல்லாரும் மௌனமாக இருந்தார்கள். ஒரு திரைப்படத்தின் முடிவுக்காட்சி வந்து விட்டது என்று கிராந்தி எண்ணமிட்டாள். ஒரு வில்லன் திடீரென்று தேவதூதன் போல் உருமாறி வந்துவிட்டானே. ஒவ்வொரு ரூபாய்க்காகக் கெஞ்சிக் கூத்தாடும் ஷேகு மியான் இலட்சக்கணக்கான ரூபாய்கள் பெறுமான நகைகளை ரஷீதின் முகத்தின்மீது வீசி எறிகிறார்!

உண்மையான வாழ்வில்—நிகழ்காலத்தில்—இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெறுவதில்லை. மூன்றாந்தரத் திரைப்படம் ஒன்றின் காட்சியே இது என்று கிராந்தி குழம்பினாள்.

"இதையும் எடுத்துக்கொள்", மருதாணி பூசிய கைகளை அத்தை நீட்டினாள். விரல்களில் மோதிரங்கள் இருந்தன.

"இருக்கட்டும். எனக்கு இந்த நகைகள் வேண்டாம்," ரஜியா எல்லாருக்கும் முன்னால் நடித்தாள். "இந்த நகைகளை எல்லாம் எடுத்துச் சென்று சாராயம் குடித்து விடுங்கள்..."

"சாராயம் குடிப்பதற்காக நான் ஒரு தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்து விட்டேன். உங்கள் அன்புக்கு மிக்க நன்றி" ஷேகு அண்ணா வழக்கம்போல் கைகளைக் குவித்து மன்றாடும் நடையில் பேசினார். "கவ்ஹர் பேகத்திற்கு மணமகளாக அலங்காரம் செய்துகொள்ள வேண்டும் என்ற ஆசை இருந்ததால் அவர் இந்த நகைகளைக் கொண்டுசென்றார்."

"மணமகளாகும் அவள் ஆசை இப்போதும் தீரவில்லையே..." ரஜியாவுக்கு எரிச்சல் உண்டாகிவிட்டது. "பதினாறு வயது நிரம்பிய ஆசைகள் கொண்ட குமரி அல்லவா? இன்னும் இரண்டொரு ஆண்டுகள் முன்றானையை இழுத்து உட்காரவையுங்கள்", ரஜியா கன்னங்களில் போட்டுக் கொண்டாள். "கவிதாலயத்தின் இந்தப் பெண்கள்—பாழடைந்த மூஞ்சிகள்—சாக்கடைப் புழுக்கள்— புதை குழியில் படுக்க வைத்தாலும் இவர்களை நம்பக் கூடாது" சூடான எண்ணெயில் போடப்பட்ட பூரியைப்போல் ரஜியா நடுங்கினாள்.

இந்நிகழ்ச்சி முழுவதிலும் ரஷீத் மௌனமாக இருந்தான். சந்திரஹாரம் அவனுடைய நெஞ்சின் மேல் கிடந்தது. கிராந்தியோ ரஜியா-ஷேகு அண்ணாவின் உரையாடலைக் கேட்டுச் சிரிப்பொலிகளை எழுப்பினாள். எல்லாருடைய முகங்களையும் நோக்கினாள். சிறிது நேரத்திற்குப் பிறகு கட்டிலின் மீது கிடந்த காதணிகளை எடுத்து ரஷீதின் மேல் வைத்தாள்.

*"எல்லாருக்கும் முன்னால் இந்தத் தங்க மலரை நான் ரஷீத் அங்கிளின் உயிரற்ற உடல்மீது வைக்கிறேன்!"*

*இதைக்கேட்டு எல்லாரும் திடுக்கிட்டார்கள். ஷாஹீன் துடித்தெழுந்தான். இந்த ஒரு வினாடி நேரத்தில், நாற்காலியை விட்டு ரஷீதை நோக்கிக் குனிந்த சமயம், தன் தந்தைக்கு நிரந்தரமாக விடுதலை கிடைத்துவிட்டது என்பதை உணர்ந்தான்.*

# 32

*ரஷீதின் மூன்றாவது நினைவு ஆண்டுவிழாவின்போது முன் முற்றத்தின் தரையைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தபோது ஒரு கடிதம் வந்தது. அது அவள் பெயருக்கே வந்திருந்தது.*

*"என்னைப் பாகிஸ்தானின் மிகப்பெரிய கவிஞனாக ஆக்கிவிட்ட கஜலுக்கு,*

*இப்போது என் கவிதைகள் பொலிவிழந்துவிட்டன. ஏனெனில் உன்னுடைய நினைவுகளின் உருவங்களும் மங்கலாகி விட்டன.*

*எனவே புதிய வாழ்வினைப்பெற உன்னிடம் வருகிறேன். என் மனைவியையும் அழைத்துவருவேன்.*

*இனி யாருக்கும் சொந்தமாகிவிடும் அச்சம் இல்லா*

*—நசீர்*

*கஜல் கடிதத்தை மடித்து உறையினுள் வைத்தாள். சாயப்போகும் மாலையின் சோகமும்—மரணமும் நிசப்தமும் கொண்ட வீட்டின் சூழ்நிலையும் அவள் மேலும் துயரம் கொள்ளச் செய்தன. சமுக்காள முனையைக் கையில் பிடித்தவாறு அவள் எல்லாவற்றையும் மறந்துவிட்டாள். இந்தப் பத்து ஆண்டுகளில் முற்றத்தில் பரவிய இருளை மட்டுமே பார்த்துக்கொண்டிருப்பது போல் தெரிந்தது!*

*ஒருவருடைய காலடியோசையை—ஒருவருடைய இராகத்தின் முணுமுணுப்பை அவள் எதிர்நோக்கினாள். என் கவிதையே—கவிதையின் உயிரே—என் காதலே என்ற அந்தக் கிசுகிசுவைக் கேட்க அவள் துடித்தாள்.*

*'ஆனால் இந்தத் திருமதி ஷாஹீனைக் கண்டு, அவன் எத்துணை ஏமாற்றமடைவான். நான் அவனை எதற்காக எதிர் நோக்கிய வண்ணம் இருக்க வேண்டும்? நான் அவன் முகத்தின் மீது காரி உமிழ்ந்துவிட்டேன். நான் அந்நியர்களைப்போலவே*

அவனைச் சந்திப்பேன். அவனுடைய கவிதை மனப்பாங்கை அழித்து விடுவேன். அவனுடைய கவிதையைத் திசை திருப்பி விடுவேன்.'

நசீருக்கு எரிச்சலூட்டுவதற்காக அவள் ஷாஹீன்மீது அன்பு செலுத்தத் துவங்கினாள். ஃபவுசியா 'சொல்வதுபோல், தனது அழகையும் கவர்ச்சியையும் யாரையோ எதிர்நோக்கி குப்பையாகப் போட்டு வைத்திருந்தாள். இப்போது கவனமாக அதனைப் பொலிவு பெறச் செய்தாள்; ஒப்பனை செய்து கொண்டாள்; தன் அழகுக்கு மெருகூட்டும் என்று நினைத்த சேலைகளை எல்லாம் தனிப்படுத்தி வைத்துக் கொண்டாள். மாலையில் ஷாஹீனுடன் 'ஆபித் அங்காடி'க்குச் சென்று புதிய நாகரிக முறையில் ரவிக்கை களைத் தயாரிக்கச் சொன்னாள். அதில் உடலின் பல பகுதிகள் வெளிப்பட வேண்டும் என்பதைப் பார்த்துக் கொண்டாள். தான் மறந்துவிட்ட சிரிப்புகளைத் தேடித் தேடி ஒன்றுபடுத்தினாள்.

நசீரின் மனைவியிடம் குறிப்பிடத்தக்க மாதிரி ஒன்றுமில்லை. வெண்ணிறம்—உருண்டையான உடலமைப்பு—குழந்தைகள் பெற்றெடுத்த பிறகு பருமனாகிவிட்டாள். ஒழுக்கமற்ற முறையில் தைக்கப்பட்ட ஆடைகள்—திறமையில்லாத ஒப்பனை— அநா வசியான அணிகலன்கள்—கணவனின் சின்னஞ்சிறு குறைகளைக் கண்டும் முகம் சுளிப்பாள். சின்னஞ்சிறு விஷயங்களிலும் நசீர் அவளைப் புகழ்ந்து அவளை நல்ல மனநிலையில் வைத்துக் கொண்டான்.

கஜலின் 'உயிரை வாங்கிடும்' உடல், மயக்கமான கண்கள், எல்லாவற்றையும் மறக்கச் செய்யும் முகம் ஆகியவற்றை அறியாத 'அந்நியன்' போலவே நசீர் கஜலைச் சந்தித்தான். கஜலுக்கு இந்த முறை பிடித்திருந்தது. மனைவிக்கு முன்னால் தன்னுடைய கௌரவத்தைக் குலையச் செய்து விடுவானோ என்று கஜல் பயம் கொண்டிருந்தாள்.

ரஜியா நசீரை மிக்க அன்புடன் வரவேற்றாள். வீடு அமர்க் களப்பட்டது. ஃபவுசியாவும் தன் குழந்தைகளுடன் அண்ணனைப் பார்ப்பதற்காக வந்துவிட்டாள். இறுதியில் குருதியின் ஈர்ப்புச்சக்தி அவனை இழுத்துக்கொண்டு வந்துவிட்டதே. ஷாஹீனும் அண்ணனைப்போலவே அவனை வரவேற்றான். முதல் முறையாக நசீர் ஹைதராபாத்திற்கு வந்தபோது அவர்கள் இடையே நிலவிய நெருக்கமும், குறும்பும் மீண்டும் திரும்பி வந்துவிட்டன.

நசீர் மருத்துவத் தொழிலைத் தாக்கிப் பேசினான். ஷாஹீனும் நசீருடைய உடலைப் பார்த்துப் பாகிஸ்தானில் கவிஞர்கள் போற்றி வளர்க்கப்படுவதைக் கண்டித்தும், கேலி செய்தும் பேசினான். சிறிது நேரத்திலேயே கஜலும் நபீசும் முதல் முறையாக ஹைதராபாத்திற்கு

வந்தபோது 'கஜல் ஓர் அபாயம்' என்று ஷாஹீன்எச்சரிக்கை செய்ததையும், நசீர் ஔரங்காபாத்திற்குத் திரும்பிச் சென்றபோது, எல்லாவற்றையும் இழந்துவிட்ட வழிப்போக்கனைப்போல் குலுங்கிக் குலுங்கி அழுது, "ஷாஹீன்! நான் செத்துவிடுவேன். நீ எனக்கு உதவி செய்வாய் என்று நம்புகிறேன். இல்லாவிட்டால் நான் நஞ்சு சாப்பிட்டுவிடுவேன். நீ என் முகத்தை மீண்டும் பார்க்க மாட்டாய்" என்று சொன்னதை எல்லாம் இருவருமே மறந்து விட்டார்கள்.

இப்போது நசீர் கஜலை முதல் முறையாகச் சந்திப்பவன் போல், ஷாஹீனுக்குத் திருமண நல்வாழ்த்துக்கள் கூறி, 'கஜல் அண்ணி, கஜல் அண்ணி' என்றே அழைத்தான்.

'இத்தனை பெரிய பொய்ப் பாறைகளை தங்கள் மார்பின் மேல் இவர்கள் எப்படி வைத்துக் கொண்டார்கள்'—கஜல் மிக்க வியப்புடன் நசீரையும், ஷாஹீனையும் திரும்பித் திரும்பிப் பார்த்தாள். நசீருக்கு முன்னால் ஷாஹீன் புதிய மணமகனைப் போல் கஜலிடம் பிணக்குகள் செய்தான். சிறிது நேரமும் அவளை விட்டுப் பிரியவில்லை. கஜல் கலவரமடைந்துவிட்டாள். எல்லோரும் ஒப்பனை செய்து கொண்டு நடிப்பதுபோல் இருந்தது. திரை விழுந்ததும் வேறொரு நாடகம் தொடங்கிவிடும்..!

நசீர் சுற்றுலாப் பயணத்திற்காக வந்திருந்தான். தன் உணர்ச்சி களைத் தட்டி எழுப்ப விரும்பினான். கிராந்தியைப் பார்த்ததும் அவை விழிப்புப் பெற்றன. எத்தகைய இளமை அது! கவிஞர் ஜோஷும், கருநிற மங்கையருடன் அவர் நடத்திய காதல் நாடகங்களும் அவனுடைய நினைவுக்கு வந்தன. ஷாஹீனும் எத்தகைய குருவியை வளர்த்து வருகிறான். அவனுக்குப் பாராட்டுத் தெரிவிக்க வேண்டும். கவிதாலயத்திற்கு ஒரு புதிய காதலி வருகை தந்துவிட்டாள். இம்முறை வண்ணமிகுந்த ஒரு காதல் கவிதையை இங்குவிட்டுச் செல்ல வேண்டுமென அவன் விரும்பினான். அதனால் அவன் கஜல் மீது கவனம் செலுத்த வில்லை. அவன் ஷாஹீனைப் பின் தொடர்ந்து சென்று இந்த அழகுப் பொருளில் பங்குபெற விரும்பினான். ஆனால் ஷாஹீன் இந்த எழுச்சி மிகுந்த அழகி விஷயத்தில் இன்னொருத்தனைப் பங்குதாரனாகச் சேர்த்துக்கொள்ள விரும்பவில்லையா அல்லது வேறு காரணமா? அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. இந்தக் கவர்ச்சி நிறைந்த பெண்ணை ஷாஹீன் எதற்காக ஒதுக்கி வைத்திருக்கிறான்..?

"நண்பரே, இந்தக் குருவியை நன்றாகவே வளர்த்திருக் கிறீர்கள்," பொறுமை இழந்த நசீர், ஷாஹீனிடம் இவ்வாறு பேசிய போது ஷாஹீன் அவனைக் கூர்ந்து நோக்கினான். கிராந்தியை

அவன் தனது மகளாகப் பாவிக்கவில்லை என்றாலும் அவளுடைய இளமை எழுச்சியை அவன் கவனிக்கவில்லை. ஏனென்றால் நான்கு ஐந்து வயதுள்ள குழந்தையாக அவள் இருந்த நாள் முதல் தன் மடியில் அவளை வளர்த்து வந்தான். அவளுக்காகப் பொம்மைகள் வாங்கி வந்தான். அவளை முதுகில் தட்டிப் படுக்க வைத்தான். லைலாவின் நாய்—கிராந்தியை லைலாவின் நாய் என்றே ரஜியா கூறுவாள். ஷாஹீனுக்கு நசீரின் பேச்சுச் சிறிதும் பிடிக்கவில்லை. அன்றிரவு முதல் முறையாக அவன் கிராந்தியை அதட்டினான்.

"வீட்டில் விருந்தாளிகள் வந்திருக்கிறார்கள். அதனால் மினி ஸ்கர்ட்டும், பெல்பாட்டமும் அணிய வேண்டாம்."

கிராந்தி பயந்து விட்டாள். ஏனெனில் அவளுடைய ஆடைகள் குறித்து அங்கிள் இதுவரை எவ்வித மறுப்பும் சொல்ல வில்லை. இதுதான் அவள் கேட்கும் முதல் அதட்டலாகும். அவள் பதில சொல்லாமல் மௌனம் சாதித்தாள். ஏனெனில் அவள் அன்று ஷாஹீனிடம் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்ல வேண்டும்!

"இன்று வீட்டில் இருக்கிறாயே. கல்லூரிக்குப் போக வில்லையா?" ஷாஹீன் மீண்டும் மீண்டும் அவளைக் கேட்டான். நசீர் இங்கு இருக்கும்வரை அவள் வீட்டில் குறைவாக இருப்பதே நலம் என்று அவன் விரும்பினான். அப்படியும் அவள் வீட்டில் இருப்பதே இல்லை. அவளுடைய முழு நேரமும் கோபால் ரெட்டியுடன்தான் கழிந்தது. அவர் நக்சலைட் இயக்கத்தில் பங்கு பெற்றதால் கல்லூரியிலிருந்து வேலை நீக்கம் செய்யப்பட்டு விட்டார். அவருடன் கிராந்தியையும் கல்லூரியிலிருந்து நீக்கி விட்டார்கள்.

"அங்கிள்... அது... அந்தக் கோபால் ரெட்டி..." கிராந்தி எதுவும் சொல்ல முடியாமல் தடுமாறினாள்.

"நீ கோபால் ரெட்டியைப் பின்தொடருவதைவிட்டுவிடு. ஒருமுறை வேலை இழந்துவிட்டான். இந்த வேலையும் போய் விடும்" ஷாஹீன் அவளிடம் அழுத்திச் சொன்னான். அறிவுரை களைக் கிராந்தி கேட்பதில்லை என்பது அவனுக்குத் தெரியும்.

கிராந்தி தன் தலைமுடியைப் பின்னுக்குத் தள்ளியவாறு மெதுவாகக் கூறினாள். "அதுதான் நடந்திருக்கிறது..."

"என்ன, வேலை போய்விட்டதா?" ஷாஹீனுக்கு வியப்பாக இருந்தது. அவன் தன் அறைக்குச் சென்றுவிட்டான். எப்படியாவது போகட்டும், எனக்கென்ன? அலமாரியிலிருந்து மதுப்புட்டியை எடுத்து மேசையின்மேல் வைத்துக்கொண்டான்.

# 33

பலநாட்களுக்குப் பிறகு நபீஸ், நசீருடன் வம்பளந்துவிட்டுக் கஜல் மேலே ஏறி வந்தபோது இரவு பன்னிரண்டு மணியாகிவிட்டது. ஷாஹீன் ஏதோ ஒரு நோயாளியைப் பார்ப்பதற்காகப் போயிருந் தான். கிராந்தியின் அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. படித்துக் கொண்டிருக்கிறாள் போலும் என்று கஜல் யோசித்தாள். ஆனால் இந்தப் பெண் எந்தத் திசையில் போய்க்கொண்டிருக் கிறாள்? நாள் முழுவதும் எங்கு அலைகிறாள்? அவள் எதுவுமே சொல்வதில்லை. ஆண்களைப்போல் ஜெர்சியும், பெல்பாட்டமும் அணிகிறாள். சிகரெட் பிடிக்கிறாள். பெண்களைப்போன்ற எந்தக் குணமும் அவள் கற்றுக் கொள்ளவில்லை. ஒப்பனை செய்வது, நல்லாடைகள் அணிவது திரைப்படங்கள் பார்ப்பது—எதுவுமே அவளுக்குப் பிடிக்கவில்லை.

தன் அறைக்குச் செல்லும் வழியில் கஜல் தயங்கி நின்றாள்.

செள்ளைச் சொக்காயும், நீலநிறக் கால்சட்டையும் அணிந்து கிராந்தி சிகரெட் புகைத்துக் கொண்டிருந்தாள். புதர்போன்ற அவள் தலைமுடி கலைந்து முகத்தை மறைத்துக் கொண்டிருந்தது. அறையினுள் பல பொருட்கள் பரவிக் கிடந்தன.

அவள் எங்கே போகிறாள்?

இந்தப் பொருட்கள் எத்தகையவை? கஜல் உள்ளே வந்து சுற்றும் முற்றும் பார்த்தாள். கருப்புத் துணிகளில் துப்பாக்கிகள் சுற்றப்பட்டிருந்தன. ரவைக் குண்டுப் பெட்டிகளும், சில மூடப்பட்ட பெட்டிகளும் தனியாக இருந்தன. கஜலைப் பார்த் ததும் கிராந்தி கலவரமடைந்தாள். சிகரெட்டை வீசியெறிந்துவிட்டு அவளை அணைத்துக் கொண்டாள்.

"ஆன்ட்டி, நீங்கள் தூங்கவில்லையா? நான் கோபால் ரெட்டியுடன் வெளியே போகிறேன். எங்கள் நண்பர்கள் வந்து கொண்டிருப்பார்கள். நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் இனி இங்கு வரமாட்டேன். உங்களுக்குத் தொல்லை கொடுக்க மாட்டேன்."

கஜல் பதில் எதுவும் சொல்லவில்லை. மௌனமாக நின்று அவளைப் பார்த்தாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தன் குரலை அடக்கியவாறு அவள் கேட்டாள். "நீ எங்கே, என்ன செய்யப் போகிறாய்?"

"நான் போரிடப் போகிறேன்," சிகரெட் பெட்டியை உதைத்துவிட்டு, அந்தப் பொருட்களின் மேல் திரைபோட்டு மூடினாள்.

"இன்று நீங்கள் செய்தி வாசிக்கவில்லையா ஆன்ட்டி? வாரங்கல்லில் ஏழு பேரைத் தூக்கிலிட்டு விட்டார்கள். மனித உயிர் இவ்வளவு கேவலமாகிவிட்டதா ஆன்ட்டி?" அவள் அறையினுள் இங்கும் அங்கும் உலவியவாறு சில பொருட்களை எடுத்துப் பைகளில் போட்டுக் கொண்டாள். "தன்னுரிமையும், நீதியும் கேட்டால், தண்டனை கொடுக்கும் இம்முறை என்றுமே முடிவு பெறாதா?"

"ஆனால் இது மிகவும் பயங்கரமான வழியாகும், கிராந்தி..." கஜல் வேதனையுடன் கூறினாள். கைசர், சஞ்சீவாவின் முடிவு அவளுக்கு நன்றாகத் தெரியுமே!

"கொள்ளை, கொலை, நாசவேலைகள்—இவற்றைத் தவிர்த்து வேறு வழியும் இருக்கலாம். நீ அதைப்பற்றிச் சிந்திக்கவில்லையா?" சோர்வடைந்த கஜல் கட்டிலின் மீது உட்கார்ந்துவிட்டாள்.

கிராந்தி சிகரெட்டைப் பற்ற வைத்தாள். "நீதிப் பிச்சை கேட்டதற்காக அவருக்கு தூக்குத்தண்டனை கிடைத்தது என்று அப்பா சொல்லி இருக்கிறாரே!"

"உனக்கு என்ன கிடைக்கும்?" கஜல் மிகவும் எரிச்சலுடன் கேட்டாள். 'கலகக்காரர்களின் சந்ததியே! நீ உன்னுடைய மரபுவழியைப் பின்பற்றுகிறாயே'

"நிம்மதி கிடைக்கும்!" கண்களை மூடியவாறு கிராந்தி தனது கழுத்தை உயர்த்தினாள்.

# 34

புதியவர்களைக் கண்டால் கஜலின் இதயத்தில் அன்பின் ஊற்றுச் சுரக்கும். அவளுக்கு ஏதாவது ஒன்று பிடித்துவிட்டால் அதன் எல்லாக் குறைகளும் அவளுடைய பார்வையிலிருந்து மறைந்து விடும். அதனால் நசீரின் மனைவி நபீசும் அவளுடைய அன்பிலிருந்து மீள முடியவில்லை. நசீரைப் போன்ற கண்களும், புன்முறுவலும் கொண்ட நசீரின் சிறிய மகளைக் கஜல் முத்தமிடும் போது ஃபிராய்ட் பெருமைப்படக்கூடிய விஷயமாக இருக்க

வில்லை. அன்பைக் கண்டு உருகிவிடுவது அவளுடைய குணம். ஒரே வாரத்தில் நபீசுடன் நட்பின் எல்லா எல்லைகளையும் கடந்துவிட்டாள் கஜல்.

குழந்தைகளை அடிப்பது, கணவனுடன் சண்டை போடுவது ஆகியவேலைகளைச் செய்து முடித்துவிட்டதும் நபீஸ் பண்புள்ள கலகலப்பான மாதாகி விடுவாள்.

ஒருநாள் நசீரும் ஷாஹீனும் திரைப்படம் ஒன்றின் இரவுக்காட்சிக்குச் சென்றிருந்தார்கள். குழந்தைகளைத் தூங்கச் செய்துவிட்டு நபீஸ் மேலே வந்துவிட்டாள். பிறகு நபீசும் கஜலும் ஒரே படுக்கையில் படுத்தவாறு வம்பளந்தார்கள். பெண்களுக் குரிய அதே பேச்சுகள், மாமியார் நாத்தனார் கொடுமைகள், கணவர்களின் காதல் லீலைகள்—இரு நெருக்கமான தோழியர்கள் பேசும் எல்லா விஷயங்களையும் அவர்கள் பேசினார்கள்.

நபீசும் இதர பெண்களைப்போலவே முதலில் உஜாலா பேகத்தின் கொடுமைகளின் வரலாறு சொன்னாள். பிறகு தன் குடும்பம், தன் அழகு பற்றிப் பேசிவிட்டு, நசீருடைய குணங்களை விமர்சிக்கத் தொடங்கினாள்.

"உங்கள் நசீர் அண்ணாவும் அப்படிப்பட்டவர்தான்," அவள் சிணுங்கினாள். "திருமணம் செய்துகொண்டால் உன்னுடன்தான் செய்வேன். இல்லாவிட்டால் வாழ்க்கை முழுவதும் பிரம்மச் சாரியாகவே இருப்பேன் என்றார். அவருடைய கவிதையில் என்னைப் பற்றிய வர்ண்னைகள்தான் இருக்கின்றன..."

கஜலின் இதயத்தின்மேல் யாரோ ஓங்கி அறைந்தார்கள்.

"அவருடன் திருமணம் நடந்தபோது நான் மிகவும் பயந்தேன். கவிஞர்கள் என்றால் பெண்கள் உயிர்விடுகிறார்கள். பாகிஸ் தானியக் கவிஞர்களோ எறும்புகள் நிறைந்த தின்பண்டம்தான். அவர்களைச் சுற்றி கணக்கிலாக் காதலிகள்..."

"அப்படியா? நசீர் உங்களிடம் என்ன சொன்னார்?" கஜல், விவரங்கள் அறியத் துடித்தாள்.

"நான் விரும்பும் முதல் பெண்ணும் கடைசிப்பெண்ணும் நீதான் என்று ஆணையிட்டுச் சொன்னார்..."

கஜல் முறுவலிக்க விரும்பினாள். ஆனால் தோல்விகண்டு கால்களை வேகமாக அசைக்கத் தொடங்கினாள்.

நபீஸ் சொல்லிக் கொண்டே இருந்தாள்.

"ஒருபெண் அவரை மிகவும் விரும்பியதாக ஒருமுறை அவர் ஒத்துக்கொண்டார்..."

"அப்படியா...?" நபீஸ் கத்தியுடன் அவள்மீது பாய்ந்து வருவதைப்போல் கஜல் துள்ளி எழுந்தாள்.

"ஆமாம். உங்கள் நசீர் அண்ணா சபலமுள்ளவர்தான். அந்தப்

பெண் இந்தியாவில் இருப்பதால் நானும் கட்டாயப்படுத்தி அவருடன் வந்திருக்கிறேன். இன்றும் அவள் தன்னை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறாள் என்று சொல்லிச் சொல்லி வெறுப்பேற்றுவார்...”

“ஹூம்... எல்லாம் வெற்றுப் பேச்சுகளே...” கஜல் கோபத்தால் தன் உதடுகளைக் கடித்தாள்.

“வேறு என்னவாம்?” நபீஸ் நிம்மதியாகப் பதிலளித்தாள். “அழகான பெண்ணொருத்தி என்னை மிகவும் விரும்பினாள். ஆனால் ‘காதலிக்க மட்டும் முடியும்’ என்ற ரகத்தைச் சார்ந்தவள் அவள் என்று இவர் சொல்வார்.”

கஜலுக்குச் சோர்வாக இருந்தது. அதனால் தன் கண்களை மூடிக்கொண்டு படுத்துவிட்டாள். ‘காதலி மட்டும்..!’ ‘நசீரின் காதலி... பானின் காதலி... பில்கிராமியின் காதலி... சர்வரின் காதலி... ஷாஹீனின் காதலி... கஜலின் ஆன்மா... கவிஞனை உருவாக் குபவள்... கவிதாலயத்தின் காதலி...’

நபீஸ் தன் மார்பின் மீது மேலாடையைப் போட்டவாறு மனைவி என்கிற அதிகாரத்தை நிலைநாட்டினாள்.

“இப்போது நான் அவரைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறேன். ஊசியின் துவாரத்தினுள் நுழைய வேண்டும் என்று நான் சொன்னாலும் அவர் எனக்காக அதைச் செய்வார்...”

கஜல் மிகவும் சிரமத்துடன் அங்கிருந்து எழுந்து தன் அறைக்கு வந்தாள். மரணத்தின் எண்ணம் வருவதுபோல்.

சுவரில் தலையை மோத வேண்டும் என்று அவள் மனம் விரும்பியது. படுக்கையின்மேல் விழுந்து கைகால்களை உதைத்தாள். இதயத்தினுள் ஏதோ ஒன்று உடைபட்டுச் சிதறியது. இதைத்தான் மாரடைப்பு என்கிறார்களோ? இதயத்தினுள் பலமான குத்து விழுந்து, ஆழமான காயம் ஏற்பட்டுவிட்டது. ஆனால் என் இதயத்தில், காயத்திற்கு ஏதேனும் இடம் இனியும் இருக்கிறதா? பற்களைக் கடித்துக்கொண்டு சேலையை உருவி எறிந்தாள். ஒருவனைக் கொலைசெய்து அழித்துவிட வேண்டும என்று அவளுடைய கைகள் துடித்தன. அவள் புரண்டு படுத்த போது எதிரில் கண்ணாடி இருந்தது. ஓ! அவளுடைய முகம் இவ்வளவு பயங்கரமாகிவிட்டதா... பிசாசுகளைப்போல் முடி கலைந்திருந்தது. தூ... கண்ணாடியில் மேல் அவள் துப்பிவிட்டாள். கவிஞர்களின் காதலி கஜல் இவளாம்!

பிறகு ஷாஹீனின் மருத்துவப் பையிலிருந்து, அயோடின் சீசாவை எடுத்தாள். அமைதியாக ஏதோ சிந்தனை செய்து எழுதி னாள்—“என் மரணத்திற்கு நானே பொறுப்பாவேன்.”

நஞ்சு சீசாவைத் திறப்பதற்கு முன்பே இதயத்தில் தாங்க

முடியாத வலி ஏற்பட்டது.

இன்று அந்த நாள் வந்துவிட்டதா?

நான்கு திசைகளிலும் அவள் பார்வையைச் செலுத்தினாள்.

இந்த வீட்டில் எத்தகைய கனவுகளைப் பார்த்திருக்கிறாள் அவள். அலமாரியில் எத்தனை பொருட்களைச் சேகரித்தாள். வண்ண வண்ணச் சேலைகள், நகை, அணிகலன்கள் இந்தப் பொருட்களுக்காக மணிக்கணக்கில் ஒப்பனை செய்துகொண்டாள். மதுவின் துர்நாற்றத்தில் நனைந்த ஆண்களின் ஆசை... வழுக்கைத் தலைக் கிழவர்களின் கோமாளித்தனம்... வாலிப ஆண்களின் அமைதியின்மை... எத்தனை நஞ்சுகளைக் குடித்திருக்கிறாள். அந்த அலமாரிகளில் திரைப்படப் பாடல்களின் தொகுதிகள் இருக்கின்றன. அவளுடைய நடிப்பைப் புகழ்ந்து எழுதப்பட்ட விமர்சனங்கள் உள்ளன; பரிசுப் கேடயங்கள் இருக்கின்றன. அவளுடைய படங்களின் ஆல்பம் இருக்கிறது...

ஆல்பம் என்று நினைத்ததும் இதயவலி நின்றுவிட்டது.

இந்த ஆல்பம் அவளுடைய வாழ்வின் கண்ணாடியாகும். இதில் அவளுக்கு அறிமுகமான முகங்கள் இருக்கின்றன. அவள் எழுந்து அந்த ஏட்டை எடுத்துவந்து திறந்தாள். இவர்கள் அனைவரும் அவளுக்காக உயிர்த்தியாகம் செய்யவும் தயாராக இருந்தார்கள். ஆனால் கௌரவத்தைவிடத் தயாராக இல்லை. தங்கள் இளமைகளை வண்ணமிடச் செய்ய அவளைக் காதலி யாக்கிக் கொண்டார்கள். ஆனால் மனைவியாக இருக்கக் கூடிய மங்கையரை மட்டும் மணந்து கொண்டார்கள். தீப்பெட்டியை எடுத்து அந்த ஆல்பத்தை அவள் கொளுத்தினாள்!

சாவதற்கு முன்பு இந்த முகங்களை எரித்துவிட வேண்டும்!

எல்லாப் படங்களும் எளிதாக எரிந்துவிட்டன. ஆனால் ரப்பர் உரையிட்ட அட்டை மட்டும் சிறிது நேரங்கழித்து எரிந்தது. சாம்பலைச் சேகரித்தபோது எரியாத படத்தின் ஒரு பகுதி கிடைத்தது. இது சர்வரின் கண்ணாகும். அது அவளைக் கூர்ந்து நோக்கியது. திருமண விருப்பறிவிப்புடன் அவன் அனுப்பிய படம் அது. அந்தப் படத்தை எடுத்துக்கொண்டு அன்று வீடு முழுவதும் அவள் சுற்றி வந்தாள்:

'இந்த ஐயாவைப் பாருங்கள். கவிதை புனைகிறாராம். என்னைத் திருமணம் செய்துகொள்ளவேண்டுமாம்...'

'ஆனால் நான் சொல்லிவிட்டேன். போங்கள் கவிஞரே, உங்கள் கவிதை மனப்பாங்கை ஏன் கெடுத்துக் கொள்கிறீர்கள். நான் இன்னும் பல நாடகங்களில் நடிக்க வேண்டும். திருமணம் செய்துகொள்ள யாரிடம் ஓய்வு இருக்கிறது? இன்று சர்வரின் முழுப்படம் எரிந்துவிட்டது. இந்தக் கண்மட்டுமே எஞ்சி நிற்கிறது.

அது என்னைப் பார்த்துக்கொண்டு இருக்கிறது.'

சன்னல்வரை சென்று அவள் அந்தப் படத்துண்டை வெளியே வீசி எறிந்தாள்.

சிறிது நேரம் வரை அது காற்றில் தத்தளித்தது. பிறகு ஒரு கல்லில் சென்று மோதியது.

அவளுடைய இதயம் குளிர்ந்துவிட்டது. ஒருவனையாவது அவளால் வீசி எறிய முடிந்ததே.

உள்ளே வந்தபோது எதிரில் காகிதம் கிடந்தது.

"எனது மரணத்திற்கு நானே பொறுப்பாவேன்"

'ஏன்? எனது மரணத்திற்கு நான் எப்படிப் பொறுப்பாக முடியும்? உருதுக் கவிஞன் ஒவ்வொருவனும் என் மரணத்திற்குப் பொறுப்பேற்க வேண்டும். கவிதாலயத்தின் பெரிய கூடத்தில் தங்கச் சட்டங்களில் தொங்கும் நிலையில், புதிய காதலியை எதிர்நோக்கும் ஒவ்வொருவரும் என் மரணத்திற்குக் காரணமாவார்கள். காதலால் பாதிக்கப்பட்ட இவர்கள் போர்க்களத்திற்குச் சென்றபோதும், காதலிகளின் பல்லக்குகளும் கூடவே சென்றன.

நசீரை என் மரணத்திற்குப் பொறுப்பாளியாக்கிவிட்டால் அவனுக்கு எத்தனை அவப்பெயர் கிடைக்கும். நபீஸ் தன் தாய் வீட்டுக்குச் சென்றுவிடுவாள். நசீரைப் போன்ற முகமுடைய சிறுமியும் தாயைவிட்டுப் பிரிந்து அழுதழுதே செத்துவிடுவாள். நசீர் இரண்டு கைகளாலும் முகத்தை மறைத்துக் கொள்வான். அவனுடைய எதிரிகள் அனைவரும் பாகிஸ்தானில் அவனை எள்ளி நகையாடுவார்கள். அவனுடைய புகழ் அழிந்துவிடும். நசீரின் அந்த நிலையைப் பற்றிய சிந்தனையை அவள் அகற்றினாள்.

பிறகு என்ன எழுதுவது? யாரைக் கொலையளியாக்குவது?'

"கஜல்!"

அவள் திரும்பிப் பார்த்தாள்.

நசீர் நாணமடைந்தவாறு, திருடனைப்போல் நின்றிருந்தான்.

ஒரே பார்வையைல் அவனுடைய முகத்திலிருந்த வினாவைப் படித்துவிட்டாள். பத்து ஆண்டுகளாகத் தவித்த உடல், அமைதி இல்லாத கைகள், நிலைத்து நிற்காத கண்கள், எத்தனை சிரமத் துடன் நபீசையும் ஷாஹீனையும் தவிர்த்து இங்கே வந்திருக்கிறான். திடீரென்று தன்னை ஒப்படைத்துவிடும் உணர்ச்சியில் கஜலின் உடல் மயங்கியது. அவள் பெட்ரோல் பீப்பாய் போலாகிவிட்டாள்; ஒரு தீப்பொறி அதைத் தொடுவதற்காக முன்னால் வந்தது. பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இன்று நசீர் அவள் எதிரில் நிற்கிறான். அவள் எவரும் தீண்டாத கன்னியாக நடுங்கினாள். அப்போது தன் மரணத்தை மறந்துவிட்டாள்; நபீசும் ஷாஹீனும் அவள் நினைவில் இருக்கவில்லை. நசீர் அவளுக்கு அருகில் வந்து

விட்டான். மிகவும் நெருங்கி வந்தான். அவனை அவள் தன்னை யறியாமல் தழுவிக் கொண்டாள்.

ஆனால் நசீர் தன் இடுப்பிலிருந்து அவளுடைய கைகளை விலக்கி அவற்றைக் பிடித்துக் கொண்டான்.

"கஜல்—இந்த மோதிரத்தை எனக்குக் கொடுத்துவிடு. இதை நபீஸ் அணிய வேண்டும் என்று அம்மா சொல்கிறார். நான் உனக்கு வேறு பல பரிசுகள் கொடுத்துவிட்டுப் போகிறேன். ஆமாம்; இன்று ஒருநாள் என் மீது கருணை காட்டு. ஆனால் அது ஷாஹீனுக்குத் தெரியக் கூடாது. ஆண்டவன் ஆணையாகச் சொல்கிறேன். உன் நினைவு என் வாழ்வில் நோயாகிவிட்டது. நான் உன் நினைவில் எத்தனை கஜல்களை..."

அவள் நசீரைப் பார்த்தவாறே இருந்தாள். அவளுடைய செவி யுறும் சக்தியும், சிந்திக்கும் திறனும் அழிந்து விட்டன. யாரையோ பிடிக்க மேலெழுந்த அவள் கைகள் அப்படியே நின்றுவிட்டன. நசீர் மெதுவாக மோதிரத்தைக் கழற்றிக் கொண்டான்.

"உன் பிரிவின் வேதனை எத்தகையது என்பதை நான் எப்படிச் சொல்வது..."

கஜலின் திறந்த உதடுகள் மீது அவன் குனிந்தான். "இன்றும் என்னுடைய கவிதையின் ஆன்மா நீ தான். ஆனால் உலகத்திற்கு நம்முடைய உறவு தெரிந்துவிடக்கூடாது!"

அவன் அவளை எத்தனை நேரம் முத்தமிட்டான். எப்போது வெளியே சென்றுவிட்டான். இது கஜலுக்குத் தெரியவில்லை.



கவிதாலயத்தின் அந்தப் பெரிய அழகான கூடத்தில் கஜலின் சடலம் வைக்கப்பட்டிருந்தது. அப்போதும் அவள் முகத்தில் பல ஆண்களை மயக்கிய அதே வெகுளித்தனம் இருந்தது. இன்று தன்னுடைய எல்லாக் கண்ணீரையும் இழந்துவிட்டுப் புன்னகை பூப்பதுபோல் தெரிந்தது.

கருவேப்பிலை மரத்தின் கீழ் நாற்காலியில் தன் தலையை இரு கைகளாலும் பிடித்தவாறு தனது பாட்டனாரைப்போல் ஷாஹீன் உட்கார்ந்திருந்தான். வீட்டினுள் மக்கள் நிரம்பி இருந் தார்கள். ஆங்கிலம் பேசும் குருவி இந்தச் சம்பவத்தின் விவரங்களை அறிய ஷாஹீனிடம் வந்தபோது அவன் தலையைத் தூக்கி அந்தக் குருவியைப் பார்த்தான். அவள் எதற்காகச் செத்துவிட்டாள் என்று எனக்கு என்ன தெரியும்? கவிஞர்களின் சிந்தனையில் காதலிக்கு மரணம் வருவதில்லை; அவன் யாரையும் விரும்புவதும் இல்லை; யாருடனும் நன்றிப் பிணைப்பை ஏற்படுத்திக் கொள்வதும் இல்லை

பிறகு கருநிறப் புர்காவை அணிந்தவாறு கிராந்தி வந்தாள். கஜல் ஆன்ட்டியின் மரணம் அவளைத் துடிக்கச் செய்தது. அழுது அழுது அவள் அமைதியடைந்தபோது, பிணத்தின் ஆடையை அகற்றிக் கஜலின் கையைத் தேடினாள். பிறகு ஷாஹீனின் அருகில் வந்து, "அங்கிள்! ஆன்ட்டியின் கையிலிருந்த மோதிரம் எங்கே?" என்று கேட்டாள்.

ஷாஹீன், கிராந்தியின் அவசியமற்ற இந்த வினாவுக்கு விடை தரவில்லை.

"ஆன்ட்டியின் மரணத்திற்கான காரணம் எனக்குத் தெரியும்!" இம்முறை அவள் நசீரை நோக்கினாள். அவன் வெறிகொண்ட பார்வையால் அவளைத் தாக்கினான்.

"நசீர் அங்கிள்! அந்த மோதிரத்தை இழந்துவிட்டதால் ஆன்ட்டி செத்துப்போனாள். மரணத்திற்குப் பிறகும் அந்த மோதிரத்தைக் கழற்றவேண்டாம். அதில் என் உயிர் இருக்கிறது என்று அவர் என்னிடம் சொல்லியிருந்தார்"

"அப்படியா..! எத்தகைய மோதிரம் அது?" நபீஸ் வியப்புடன் கேட்டாள்.

நசீர் எழுந்து அவசரமாக வெளியே சென்று விட்டான். வெளியே சென்று "பிணக்குழி தயாராகிவிட்டதா?" என்று ஷேகு மியாவிடம் விசாரித்தான்.

கவிதாலயத்திலிருந்து கஜல் விடைபெற்றபோது யாருடைய கண்ணிலும் கண்ணீர் இருக்கவில்லை. ரஜியா, ஃபவுசியா, நபீஸ், நசீர் எல்லாரும் தலை குனிந்து நின்றார்கள். கிராந்தி அங்கு இருக்கவில்லை. கடைசி முறையாகப் பார்ப்பதற்காக கஜலின் முகத்தைத் திறந்தபோது ஷாஹீனுக்கு எதுவும் தெரியவில்லை. எல்லாம் மங்கலாக இருந்தது. வெண்திரையில் கதாநாயகியின் 'குளோஸ் அப்' பேட்அவுட் ஆகிவிடுவதுபோல் கஜலின் முகமும் மறைந்துவிட்டது.

இன்று நசீர் பாகிஸ்தானுக்குத் திரும்பிப் போகிறான். நேற்று கஜலின் நாற்பதாவது நாள் சடங்கும் முடிந்துவிட்டது. நசீர் குர்ஆனைப் படித்து முடித்து, கஜல் பாவமன்னிப்புப் பெறவும், அவளுக்காக நரகவேதனை குறைந்துவிடவும் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தான்.

பிறகு கவிதாலயத்தின் பெரிய கூடத்திற்குச் சென்றான். அங்கிருந்த கவிதைத் தொகுதிகளைப் பார்த்தான். அவற்றிலிருந்து சிலவற்றை எடுத்துப் பாகிஸ்தானின் கவியரங்கங்களில் தன் புகழை நிலைநாட்டலாம் என்ற எண்ணம் இருந்தது.

வாஹித் ஹுசேனின் பாட்டனாருடைய கையெழுத்துப் பிரதிகளிலிருந்து கறையான்களைத் தட்டும்போது, திடீரென்று

நான்கு திசைகளிலும் ஒளி பரவியது. சட்டங்களிலிருந்து வெளியே வந்து கவிஞர்கள் அமைதி இழந்து பார்த்தார்கள். கறையான் அரித்த கையேட்டுப் பிரதிகள் திறந்தன. இன்னொரு நாயகியின் காட்சியைக் காணவே அவர்கள் துடித்தார்கள்.

நசீர் பெரும் ஆர்வத்துடன் அந்த நாயகியைப் பார்த்தான். அவளுடைய கன்னங்களின் சுடரொளியால் மாலைநேரம் சோலையாகி விட்டது.

“ஆதாப் அர்ஜ்.. கிராந்தி தேவி! வாருங்கள், இங்கே அமருங்கள்.”

அவன் நாற்காலியிலிருந்து எழுந்து குனிந்து அவளுக்கு நாற் காலியைக் கொடுத்தான்.

கிராந்தி, எண்ணெய்ப் பசை இல்லாத முடியைப் பின்னால் தள்ளிச் சரிப்படுத்தினாள். பிறகு சிகரெட்டை வாயிலிருந்து வெளியே எடுத்தாள்...

“மிக்க நன்றி. ஆனால் எனக்கு நேரம் இல்லை” பழைய புத்தகங்கள் வைக்கப்பட்டிருந்த அலமாரியைத் திறந்து சில புதிய புத்தகங்களை எடுத்து, ஒரு பெட்டியில் வைத்துக் கொண்டாள். அட்டை போடப்பட்ட அந்தத் தடித்த புத்தகங்கள் பிரிக்கப் படாமலேயே இருந்தன.

“நல்லது, உங்களுக்கும் கவிதையார்வம் இருக்கிறதா?”

அவன் கிராந்திக்குப் பக்கத்தில் போய்நின்றான். அவள் திரும்பி வெறுப்புடன் அவனைப் பார்த்தாள். சிகரெட்டைப் புகைத்தவாறு அவள் பேசினாள்.

“இல்லை. இவை வேறு புத்தகங்கள். பாதுகாப்பாக இங்கு வைத்திருக்கிறேன்...”

“ஆனால் நான் உங்களைப் போகவிடமாட்டேன். இத்தகைய பாராமுகம் எதற்கு?”

அவன் கிராந்தியின் கையைப் பிடித்துக் கொண்டான். ஏனெனில் இக்காலப் பெண்கள் காதலின் இந்த நடையை விரும்பு கிறார்கள் என்பது நசீருக்குத் தெரியும்! துணிவு, வேகம், பலவந்தம்—இவைதான் இன்றைய காதலின் அடையாளங்கள்.

கிராந்தி தன் கையை விடுவிக்கவில்லை. அவள் நசீரின் முகத்தில் நர்த்தனமாடிய வினாவைப் புரிந்துகொண்டாள். பிறகு கால்சட்டைப் பையில் கையைப் போட்டவாறு பேசினாள்.

“ஆனால் என்னை விட்டுத் தூரமாக ஒதுங்கி இருங்கள் நசீர் சாஹிப். ஏனெனில் என் பையில் ‘டைம்பாம்’ இருக்கிறது. நான் உங்களிடம் வந்தால் இந்தக் கவிதாலயத்துடன் நீங்களும் அழிந்து விடும் அபாயம் இருக்கிறது.”

கிராந்தி சிரித்தாள்.

அந்த ஒலியைக் கேட்டு அலமாரிகளில் அமைதியாக தூங்கிக் கொண்டிருந்த பல்லிகள் அச்சமடைந்து எட்டிப் பார்த்தன.

"இதுவே கவிதையின் புதிய தலைப்பாகும்..." என்று நசீர் எண்ணமிட்டான்.

பிறகு மெதுவாகக் கவிதாலயத்தின் வாயில் வழியே வெளியே சென்றுவிட்டான். கிளையில் உட்கார்ந்திருந்த குருவியின் சீழ்க்கை அவனுக்குப் பின்னால் ஒலித்துக் கொண்டு இருந்தது.

ஷு... ஷுன்... ஷு... ஷுன்...

Lasertypeset at Capital Creations, New Delhi and
printed at Shivam Offset, New Delhi